# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

# A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

## எட்டாம் மடலம் - மூன்றாம் பாகம்

## (வெ - வௌ)

## Vol. VIII - Part - III


து. இராசேந்திரன், இ.ஆ.ப.
அரசு செயலாளர்,
தமிழ் வளர்ச்சி, அறநிலையம் மற்றும் செய்தித் துறை
மற்றும்
இயக்குநர் (முழுக் கூடுதல் பொறுப்பு)
செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட
இயக்கக வெளியீடு
2007

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

## எட்டாம் மடலம் - மூன்றாம் பாகம்

## (வெ - வெள)

# A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

## VOL. VIII-PART III

து. இராசேந்திரன், இ.ஆ.ப.
அரசு செயலாளர், தமிழ் வளர்ச்சி, அறநிலையம் மற்றும்
செய்தித் துறை
மற்றும்
இயக்குநர் (முழுக் கூடுதல் பொறுப்பு)
செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கக வெளியீடு

2007

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்கக வெளியீடு – 24

முதற் பதிப்பு : 2007

A Comprehensive Etymological Dictionary of the Tamil Language, Vol. VIII, Part - III

பதிப்புரிமை : தமிழ்நாட்டரசு
Government of Tamilnadu

விலை : உருபா 400/–

குறியீட்டெண் : Colon No. P.J1-J, 314"K.M4

வெளியிட்டோர் : செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
சி–48, முதல் தளம்,
தமிழ்நாட்டு வீட்டுவசதி வாரிய அலுவலக வளாகம்
அண்ணாநகர், சென்னை – 600 040.

அச்சீடு : உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சி.பி.டி. வளாகம், தரமணி,
சென்னை 600 113.

நூல் கிடைக்குமிடம் : செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
சி–48, முதல் தளம்,
தமிழ்நாட்டு வீட்டுவசதி வாரிய அலுவலக வளாகம்
அண்ணாநகர், சென்னை – 600 040.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சி.பி.டி. வளாகம், தரமணி,
சென்னை – 600 113.

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

# A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

## VOL. VIII- PART III

எட்டாம் மடலம் - மூன்றாம் பாகம்
(வெ - வௌ)

பதிப்புக் குழு


து. இராசேந்திரன், இ.ஆ.ப.
*அரசு செயலாளர், தமிழ் வளர்ச்சி, அறநிலையம் மற்றும்*
*செய்தித் துறை*
மற்றும்
இயக்குநர் (முழுக் கூடுதல் பொறுப்பு)
*செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்*

கூர்ந்தாய்வாளர்
புலவர். இறைக்குருவனார்

தொகுப்பாளர்கள்
திரு.முத்து.பிச்சை
முனைவர் மு.கண்ணன்
முனைவர் பா.வெற்றிச்செல்வன்
முனைவர் ச.செந்திலாண்டவன்
முனைவர் இரா.கு.ஆல்துரை
திரு.கா.இளமுருகு (பகுதிப் பொறுப்பாளர்)
திரு.ச.கி.கணேசன் (ஓவியர்)
*செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்*

மு. கருணாநிதி
முதலமைச்சர்



தலைமைச் செயலகம்
சென்னை - 600 009

நாள் 20.4.2007

## அணிந்துரை

அகரமுதலி திட்டத்தின் ஏழு மற்றும் எட்டாம் மடலங்கள் இதழ்களை விரிப்பது கண்டு என் இதயம் பெருமிதம் எய்துகிறது. ஒவ்வொரு மொழியிலும் அதன் சொற்களுக்கு வேர் மூலம் காண முற்படும்போது, பெரும்பாலான சொற்களின் வேர்மூலங்கள் அடுத்த மொழிகளில் சென்று நிற்கும். ஆனால், தமிழில் உள்ள சொற்களின் மூலங்கள் அனைத்தும் தமிழிலேயே அமைந்துள்ளன. இப்போது நடைமுறையில் வழங்குகிற தமிழ்ச் சொற்களும், உருவாகி வருகின்ற கலைச் சொற்களும், தொழில்நுட்பச் சொற்களும் ஏற்கனவே வழங்கிய வேர் மூலங்களிலிருந்து விரிந்தும் பெருகியும் வந்தனவும் வருவனவும் ஆகும்.

அறிவியல் வளர்ச்சி மிகுந்துள்ள இந்நாளில், செய்தித் தொடர்பாலும் தொழில் நுட்ப வளர்ச்சியாலும் உலகம் சுருங்கிவிட்ட நிலையில், ஒரு மொழியில் அண்டையயல் மொழிச் சொற்களெல்லாம் கலந்து விடுவது இயல்பு. இத்தகைய சூழ்நிலையிலும் தமிழ் தனித்தியங்க வல்லதாக நெடுங்காலமாக இயங்கிக் கொண்டு இருக்கிறது. இதைத்தான் பாவேந்தர் பாரதிதாசனார் 'தனித்தியங்கும் தன்மை தமிழினுக்கு உண்டு; தமிழே ஞாலத்தில் தாய்மொழி பண்டு' என்று ஆணித்தரமாகப் பாடி வைத்தார்.

அவ்வாறு, தமிழ், தான் தனித்தியங்குவது மட்டுமல்லாமல், பிற மொழிகளுக்கும் சொற்களை வாரி வழங்கிக் கொண்டுள்ளது. தமிழகத்திற்கு அப்பால் தனித்தனியே பிரிந்து வழங்கிவரும் திராவிட மொழிகளுக்கெல்லாம் தமிழ்மொழி வேர் மூலங்களை வழங்கியுள்ளதால், அவற்றின் அடிப்படையிலேயே அம்மொழிகளில் சொற்கள் பெருகியுள்ளமையைக் காண்கிறோம். அதனாலேயே, 'தமிழ் திரவிடத்திற்குத் தாய்' என்று தேவநேயப் பாவாணர் பறை சாற்றினார்.

இன்னும் பல மொழிகளிலுமுள்ள சொற்களின் வேர் மூலங்களும் தமிழிலேயே இருப்பதைக் காண நேர்கிறது. இது மொழியியல் உலகின் ஆய்வுப் போக்கைப் பல திருப்பங்களுக்கு உள்ளடக்குகின்றது. நெடுங்காலமாக வழக்கத்தில் இருப்பதும், தனித்தியங்க வல்லதும், பிறமொழிகளுக்குச் சொற்களை வழங்கவல்லதுமான மொழியே 'செம்மொழி' எனச் செம்மொழி இலக்கணம் வரையறுக்கப்படுகின்றது. தமிழின் இலக்கண இலக்கிய நூல்கள் இருட்டடிப்புச் செய்யப்பட்டு மறைக்கப்பட்டிருந்த காலமான கி.பி. 1857 அளவில் தமிழகம் வந்திருந்த கால்டுவெல் பெருமகனார் தமிழ், மலையாளம், தெலுங்கு, கன்னடம் ஆகிய மொழிகளில் ஓர் ஒப்புமையைக் கண்டறிந்து, "திராவிட மொழிகளின் ஒப்பிலக்கணம்" (The comparative grammar of Dravidian Languages) என்ற நூலை வெளியிட்டார். அதன் வழி அவர் தன் ஆராய்ச்சியில் கண்ட முடிவுதான், "தமிழ் ஒரு செம்மொழி" என்பதாகும்.

அதன்பின், ஆங்கில அறிஞர்களான, "மெக்ளின்" போன்றவர்கள் தமிழ்மொழியில் உள்ள பதிவுகளையும், தமிழர்களின் பண்பாடு, நாகரிகம் ஆகியவற்றையும் அறிவியல், வானியல் போன்றவற்றில் அவர்கள் பெற்றிருந்த அறிவாற்றலையும் ஆராய முற்பட்டனர். அவற்றின்வழி அந்த அறிஞர் பெருமக்கள் எல்லாம், 'தமிழ் ஓர் உயர் தனிச் செம்மொழி' (Primary Classical) என்று வழிமொழிந்து சென்றனர்.

இவற்றின் தொடர்ச்சியாகத் தமிழை ஒரு செம்மொழி என அரசே அறிவிக்க வேண்டுமென்று பரிதிமாற் கலைஞர் தன் கோரிக்கையை முதன்முதலில் அரசின் முன்வைத்து வலியுறுத்தினார்.

ஆனால், இதை முழுவதுமாக அறிவியல் வழியாக மொழியியலில் நிறுவுவதற்குச் சொற்களுக்கு உரிய வேர் மூலம் காணும் சொற்பிறப்பியல் பணியே துணை நிற்கும் என்று, தன் வாழ்நாளையே சொல்லாய்வுக்கென ஒப்புவித்துக் கொண்டவர் 'மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர்'. இத்தகைய பலரது தொடர்ச்சியான சிந்தனைகளின், செயல்பாடுகளின் மூலமாகத்தான் தமிழ் ஒரு செம்மொழி என்பதற்கான அங்கீகாரத்தை இன்று நாம் வென்றெடுத்துள்ளோம்; வெற்றிவாகை சூடியுள்ளோம்.

தமிழ்மொழியில் வழங்கும் சொற்களுக்கெல்லாம் வேர்மூலம் காண்பது என்பது ஆழ்கடலில் முத்தெடுக்கும் பணியினும் கடினமானது; இந்தப் பணியொன்றே தமிழ் செம்மொழி என்பதை ஏற்கச் செய்யும் முதன்மைப் பணியாகும். இப்பணியில் மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர் பல ஆண்டுகள் உழைத்து ஆராய்ச்சி நூல்கள் பலவற்றை உருவாக்கி வெளியிட்டுள்ளார்; 'உயர்தனிச்செம்மொழி' (The Primary Classical Language of the World) என்ற நூலைப் பல ஆண்டுகளுக்கு முன்னமேயே வெளியிட்டுள்ளார்.

தேவநேயப் பாவாணரின் இந்தச் சொல்லாராய்ச்சித் திறனை அறிந்து, அவர்தம் பணி தமிழ் உலகிற்குத் தேவை என்று நான் கருதியதால் 8.5.1974 அன்று, 'செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி இயக்ககம்' என்னும் ஒரு துறையைப் புதிதாக நிறுவி, அதற்குப் பாவாணர் அவர்களையே இயக்குநராகவும் நியமனம் செய்து அகர முதலித் தொகுதிகள் வெளிவர ஆவன செய்ததை இவ்வேளையில் மகிழ்வுடன் நினைவு கூர்கிறேன். அதன் பயனாக, பணிகள் சிறப்பாக நிகழ்ந்து முதல் தொகுதி அணியமாகிக் கொண்டிருக்கும் நிலையில் பாவாணர் அவர்கள் திடீரென மறைந்தார்கள். அதற்குப்பின் அவர்தம் நூல்களை அடிப்படையாகக் கொண்டு, அவரின் அணுகுமுறையிலேயே தொடர்ந்து அகர முதலித்திட்டத்தின் அடுத்தடுத்தத் தொகுதிகள் வெளிவரலாயின.

பாவாணர் மறைவுக்குப் பின்னும், ஒவ்வொரு முறையும் அரசுப்பொறுப்பு ஏற்கிற போதும் இந்தத் துறையின் வளர்ச்சியில் நான் மிகுந்த அக்கறை செலுத்தி வந்துள்ளேன். 1996ஆம் ஆண்டில் தமிழ் ஆட்சி மொழி, தமிழ்ப் பண்பாட்டுக்கு எனத் தனி அமைச்சகம் உருவாக்கப்பட்டுச் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககத்திற்குத் தேவையான கூடுதல் பணியாளர்கள், கணிப்பொறியமைப்பு போன்ற வசதிகள் செய்து கொடுக்கப்பட்டன.

இதுவரை, மும்மூன்று தொகுதிகள் கொண்ட ஆறு மடலங்களாக மொத்தம் 18 தொகுதிகள் சென்ற ஆண்டுவரை வெளிவந்து முடிந்துள்ளன. இப்போது 'ம', 'ய', 'வ' வரிசையில் ஆறு பகுதிகள் வெளிவருவது கண்டு மகிழ்ச்சியடைகிறேன். எஞ்சிய பகுதிகளும் விரைந்து வெளிவர வேண்டும் என்பது என் அவா. இந்த அகரமுதலிப் பகுதிகள் வெளிவர உறுதுணையாய் நின்ற தமிழ் வளர்ச்சி–பண்பாடு (ம) அறநிலையத் துறை சிறப்பு ஆணையர் மற்றும் அரசுச் செயலாளர் மற்றும் அகரமுதலித் திட்ட இயக்கத்தின் பொறுப்பு இயக்குநர் திரு. து. இராசேந்திரன், இ.ஆ.ப. அவர்களுக்கும், நூல்களை உருவாக்கியுள்ள அகரமுதலித் திட்டத்தின் ஆசிரியர், பணியாளர் குழுக்களுக்கும் எனது உளமார்ந்த பாராட்டுகள் உரித்தாகுக.

என்றும்,
அன்புடன்

(மு. கருணாநிதி)



மாண்புமிகு தமிழக முதலமைச்சர்
"முத்தமிழறிஞர்"
**கலைஞர் மு. கருணாநிதி**

து. இராசேந்திரன், இ.ஆ.ப.,
அரசு செயலாளர்,
தமிழ் வளர்ச்சி, அறநிலையம் (ம) செய்தித் துறை
மற்றும்
இயக்குநர் (முழுக் கூடுதல் பொறுப்பு)



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல்
அகரமுதலித் திட்ட இயக்ககம்,

# பதிப்புரை

உலக அரங்கில் தொன்மையும் வளமையும் மிக்க தொல்காப்பியம், சங்க இலக்கியம் போன்ற இலக்கண–இலக்கிய மரபுச் செல்வங்களையும், உலக மாந்தர் அனைவருக்கும் வாழ்வியல் அறநெறி வகுத்தளித்த திருக்குறளையும் பெற்றுள்ள செவ்வியல் மொழி அன்னைத் தமிழாகும்.

'மொழிப் பொருட் காரணம் விழிப்பத்தோன்றா' என்ற தொல்காப்பியத்தின் மெய்யியல் உண்மையை உலகுக்கு உணர்த்திடவும், ஞாலத் தமிழ்மொழியே உலகின் முதன்மொழி என்று நிறுவிடவும், செந்தமிழ் மீட்பர் பாவாணரின் வேர்ச்சொல்லாய்வு தமிழ் மொழியின் சிறப்புக்கு மேலுமொரு அணிகலனாகும்.

செந்தமிழ் வளர்ச்சிக்கு அடிப்படையானப் பணிகளில் முதன்மையானது அகரமுதலி உருவாக்கம் எனில் அது மிகையன்று. சொற்பொருள் தெளிவு, இலக்கண வரையறை, புதிய கலைச் சொல்படைப்பு ஆகிய மொழியின் இன்றியமையாத விளக்கங்களை மொழி ஆர்வலர்களுக்கும், மொழியாராய்ச்சியில் ஈடுபடும் வல்லுநர்களுக்கும் ஆற்றுப்படுத்தும் முனைப்பில் சொற்பிறப்பு அகரமுதலிகள் (Etymology Dictionaries) பெரிதும் துணை புரிகின்றன. உலகின் பல மொழிகளிலும் வெளிவந்துள்ள அகரமுதலிகளைப் போல், தமிழிலும் சொற்பிறப்பு அகரமுதலிகள் வெளியிடும் நோக்கில் தமிழ்நாடு அரசால் உருவாக்கப்பட்ட செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம் பேரகரமுதலி வெளியீடுகள் வரிசையில் எட்டாம் மடலம் – மூன்றாம் பாகத்தை (வெ–வௌ) வெளியிடுகின்றது.

பேச்சு வழக்கு, இலக்கிய வழக்கு, வட்டார வழக்கு, மீட்டுருவாக்கம், ஆணிவேர், பக்கவேர், சல்லிவேர் என்று சிறப்புற விளக்கும் பாவாணரின் பல்துறை ஆய்விற்குச் சான்றாக சில சொற்களை இப்பகுதியில் காணலாம்.

வெக்கை = 1. வெப்பம், 2. புழுக்கம்.
*[வெள் → வெள்கை → வெட்கை → வெக்கை]*

வெங்கம் = மிக்க வறுமை
*[வெள் → வெண்கு → வெங்கு → வெங்கம்]*

வெஞ்சனம் = சமைத்த கறியுணவு; குழம்பு, வேகவைத்த கூட்டு.
*[வெந்த + ஆணம் வெஞ்சணம் → வெஞ்சனம்]*

வெண்டுதல் = இல்லாத பொருளுக்கு ஆசைப்படுதல்.
*[விள் → வெள் → வெண்டு → வெண்டுதல்]*

வேட்கை = 1. பற்றுள்ளம், 2. காம விருப்பம்
*[வெள் → வேள் → வேட்பு → வேட்கை]*

வேர் = மரத்தின் அடிவேர், 2. சொல்லின் அடிப்பகுதி
*[விள் → விளர் → வியர் → வேர்]*

வேற்றுமை = 1. வேறுபாடு, 2. ஒப்புமையின்மை, 3. முரண்.
*[வெறு → வேறு → வேற்றுமை]*

வையம் = 1. நிலப்பகுதி, 2. குதிரை பூட்டிய தேர், 3. பல்லக்கு.
*[வள் → வய் → வை → வையம்]*

தமிழ் வரலாற்றையும், செந்தமிழ்ச் சிறப்பையும் தோய்ந்து ஆராய்ந்து ஞாலத் தமிழே உலகின் முதன்மொழி என்று நிறுவிக் காட்டிய பாவாணரின் தமிழ்த்தொண்டு நின்று நீடுபுகழ் நல்கும் என்பது திண்ணம்.

தமிழ் வளர்ச்சிக்குப் பல்லாற்றானும் ஊக்கம் அளித்து வரும் நம் மாண்புமிகு **முதலமைச்சர்** அவர்களுக்கு எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூல் வெளிவர அயராதுழைத்த அலுவலர்கள், ப்திப்பாசிரியர்கள், உதவிப் பதிப்பாசிரியர்கள், பகுதிப் பொறுப்பாளர் மற்றும் தொகுப்பாளர்கள் அனைவருக்கும் எனது பாராட்டினையும், நன்றியையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

7/3/2000

**து. இராசேந்திரன்**

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

# A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

## வெ

வெ *ve,* பெ.(n.) தமிழ் நெடுங்கணக்கில் 'வ்' என்ற மெய்யெழுத்தும் 'எ' என்ற உயிரெழுத்தும் சேர்ந்து உருவான உயிர் மெய் எழுத்து; the compound of 'v' and 'a'.

*[வ் + எ = வெ]*

வெஃகல் *vekkal,* பெ.(n.) 1. மிக விருப்பம்; excessive disire. 2. பேராசை (சது.); avarice.

*[வெள் → வெள்கு → வெஃகு → வெஃகல். (வேக.பக்.120) (சது.)]*

வெஃகா *vekkā,* பெ.(n.) 1. காஞ்சிபுரத் தருகில் ஓடும் வேகவதி ஆறு; vekavati, a river near conjeevaram. *"சேயாற்றாலும் வெஃகாவினாலும் ........................ நீரிழிந்தவழி" (S.I.I. 352, 115).* 2. திருமால் திருப்பதிகளுளொன்று (திவ். இயற். 3, 62); a *visnu* shrine.

வெஃகாமை *vekkāmai,* பெ.(n.) 1. அவாவின்மை; absence of desire. 2. பிறர் பொருளை அடையக் கருதாமை; absence of cupidity. *"வெஃகாமை வேண்டும் பிறன்கைப் பொருள்" (குறள், 178).* 3. வெறுப்பு; dislike. (w.).

*[வெஃகு + ஆ + மை. 'ஆ' எ.ம.இ.நி. "வெள் → வெள்கு → வெஃகு + ஆ + மை. வெஃகாமை = அவாவின்மை.] (வே.க.பக்.120).*

வெஃகு-தல் *vekku-,* செ.குன்றாவி.(v.t.) 1. மிக விரும்புதல்; to desire. *"அருள் வெஃகி" (குறள், 176).* 2. பிறர் பொருளை இச்சித்தல்; to covet. *"இலமென்று வெஃகுதல் செய்யார்" (குறள், 174).*

*[வெள் → வெள்கு → வெஃகு → வெஃகுதல். வெஃகுதல் = விரும்புதல். (வே.க.பக்.120)]*

வெக்கடுப்பு *vekkaḍuppu,* பெ.(n.) 1. கடுகடுப்பு; sternness of countenance. 2. கண்ணோய் வகை; sore-eyes without inflammation (w.).

*[வெம்-மை + கடுப்பு → வெக்கடுப்பு]*

வெக்கம் *vekkam,* பெ.(n.) வெட்கம் பார்க்க; see *veṭkam.*

*[வெள் → வெள்கு → வெட்கு → வெட்கம் → வெக்கம். (வே.க.பக்.140)]*

வெக்களி-த்தல் *vekkali-,* செ.கு.வி.(v.i.) வானந் தெளிவாதல்; to clear up, as the weather; to be bright with sunshine.

*[வெக்காளி → வெக்களி → வெக்களித்தல். (வே.க.பக்.133)]*

வெக்கறை *vekkaṟai,* பெ.(n.) கூச்சப்படுபவன் (இலங்.); shy person.

*[வெக்கம் → வெக்கறை]*

வெக்காயம் *vekkāyam,* பெ.(n.) சூடு; heat. *"சம்சார வெக்காயந் தட்டாதபடி போய்" (ஈடு. 5, 9, 5).*

*[வெம்மை + காய் → வெக்காய் → வெக்காயம்]*

வெக்காலி[1] *vekkāli,* பெ.(n.) 1. வெள்ளி நாகை; a tree-anogeissus latifolia. 2. வெண் கருங்காலி அல்லது வெண்காலி;

*[வெண்–மை + கால் → வெட்காலி → வெக்காலி]*

வெக்காலி[2] *vekkāli,* பெ.(n.) கருங்காலி மரவகை; a kind of button tree.

*[வெட்காலி → வெக்காலி]*

வெக்காளம் *vekkāḷam,* பெ.(n.) 1. மழையின்றி இனிதாயிருக்குங்காலம்; fair weather without rain (w.). 2. புழுக்கம்; sultriness. 3. துயரம்; grief (யாழ்.அக.).

*[வே → வேக்காளம் → வெக்காளம். (வே.க.பக்.133)]*

வெக்காளி–த்தல் *vekkāḷi-,* செ.கு.வி.(v.i.) 1. வானந் தெளிவாதல்; to clear up. as the weather. to be bright with sunshine. 2. மனத்துயர்படுதல் (யாழ்.அக.); to be grieved at heart.

*[வெக்காளம் → வெக்காளி → வெக்காளித்தல். (வே.க.பக்.133)]*

வெக்காளிப்பு *vekkāḷippu,* பெ.(n.) மழையின்றி இனிதாயிருக்குங் காலம்; fair weather without rain (w.).

*[வெக்காளம் → வெக்காளி → வெக்காளிப்பு. (வே.க.பக்.133)]*

வெக்கை *vekkai,* பெ.(n.) 1. சூடு; heat. *"பூவில் வெக்கை தட்டும்" (ஈடு. 5, 9, 2).* 2. புழுக்கம்; sultriness. 3. சூடான பகுதியிலிருந்து வீசும் அனல்; radiated heat, as from a hot place radiated heat, as from a hot place. 4. வெக்கைச் சூடு பார்க்க; see *vekkai-c-cūḍu.* 5. வைசூரி நோய்; por-small-box (w.). 6. மாட்டு நோய் வகை; cattle plague. 7. கடா விடுங்களம்; threshing-floor. *"வெக்கைப் பருஉப்பகடுதர்த்த..... நெல்லின்" (பதிற்றுப். 71, 3).*

*[வெள் → வெள்கை → வெட்கை → வெக்கை. (வே.க.பக்.131)]*

வெக்கைச்சூடு *vekkai-c-cūḍu,* பெ.(n.) 1. கணைச்சூடு பார்க்க; see *kaṇai-c-cūḍu.*

*[வெள் → வெள்கை → வெட்கை → வெக்கை + சூடு]*

வெக்கைதட்டு–தல் *vekkai-taṭṭu-,* செ.கு.வி. (v.i.) 1. சூடு உண்டாதல்; to be affected with heat. *"பூவில் இழியில் அதில் வெக்கை தட்டுமென்று" (ஈடு. 1. 4. 7).* 2. வெட்டைநோயால் வருந்துதல்; to suffer from leucorrhea.

*[வெள் → வெள்கை → வெட்கை → வெக்கை + தட்டு. (வே.க.பக்.131)]*

வெக்கைநோய் *vekkai-nōy,* பெ.(n.) 1. வைசூரி நோய்; por small-pox (w.). 2. மாட்டு நோய் வகை; cuttle plague.

*[வெள் → வெள்கை → வெட்கை → வெக்கை + நோய்]*

வெகிச்சீமை *veki-c-cīmai,* பெ.(n.) வெளியெல்லை; outer limit. *'புறப்பாட்டெல்லை யென்னும் வெகிச் சீமைக்கண் வருவது அபாதானம்' (பி.வி. 11, உரை).*

*[வெகி + சீமை]*

**வெகிர்முகம்** *vegir-mugam,* பெ.(n.) வெளிமுகம்; outer or external side. *"மகரிகை நிறைய வெகிர்முக மாக்கி" (பெருங். மகத. 17, 161).*

*[வெகிர் + முகம்]*

**வெகு[1]** *vegu,* பெ.எ.(adj.) 1. பல; many. 2. அதிகமான; much. *"வெகுகனக வொளி குலவும்" (திருப்பு. 20).*

*[மிகு → வெகு]*

**வெகு[2]–த்தல்** *vegu-,* செ.குன்றாவி.(v.t.) மிகுத்தல்; to be excessive, abundant (யாழ்.அக.).

*[வெகு → வெகு–த்தல்]*

**வெகு[3]** *vegu,* இடை.(part.) 1. குறிப்பிடப்படும் தன்மையின் மிகுதியைக் காட்டுவது (வினையடையின் முன்) தன்மையை வலியுறுத்திக் கூறுவது; an intensifier, very. *'காய்கறிவிலை வெகு மலிவு, கதையின் ஆரம்பமே வெகு ஜோர், குதிரை வெகு வேகமாக ஓடத் தொடங்கியது'.* 2. (தூரத்தைக் குறிக்கையில்) சராசரி அளவைவிட அதிகமான, (காலத்தைக் குறிக்கையில்) நீண்ட; (of distance) away or off, (of time) long. *'இந்த ஊருக்குத் தண்ணீர் வெகு தொலைவிலிருந்து கொண்டுவரப் படுகிறது'. 'நாங்கள் வெகு நாட்களாக நண்பர்கள்'.*

*[மிகு → வெகு]*

**வெகுகாமி** *vekukāmi,* பெ.(n.) 1. பொன்னிமிளை; yellow bismuth. 2. தொழுகண்ணி பார்க்க; see *tho|u-kaṇṇi.*

**வெகுகொடுமை** *vegu-koḍumai,* பெ.(n.) கொடிய நஞ்சு; a kind of arsenic.

*[வெகு + கொடுமை]*

**வெகுச்சுரு** *vegu-c-curu,* பெ.(n.) வெகுசுரதம் 1, 2 (பொருட். நி.) பார்க்க; see *vegu-curadam 1, 2.*

*[வெகு + சுரு]*

**வெகுச்சுருதம்** *vegu-c-curudam,* பெ.(n.) வெகுசுருதம் 1, 2 பார்க்க; see *vegu-c-curutam 1, 2.*(w.).

*[வெகு + சுருதம்]*

**வெகுசனம்** *vegu-caṉam,* பெ.(n.) மக்கள் கூட்டம்; crowd of people.

*[வெகு + **Skt.** Jana > த. சனம்]*

**வெகுசனவாக்கு** *vegucaṉa-vākku,* பெ.(n.) பொதுமக்களின் கருத்து; popular voice or opinion.

*[வெகு + **Skt.** Jana > த. சனம் + வாக்கு]*

**வெகுசாய்** *vegu-šāy,* வி.எ.(adv.) 1. பெரும்பாலும்; almost, most probably. *'வெகுசாய் இன்று மழை பெய்யும்'.* 2. வெகுவாய் பார்க்க; see *veguvāy.*

**வெகுசு** *vekucu,* பெ.(n.) மிகுதி (யாழ்.அக.); plenty.

**வெகுசுருதம்** *vegu-curudam,* பெ.(n.) 1. மிகுந்த கேள்வி; wide information. 2. பரந்த கல்வி; extensive knowledge. 3. சிற்பநூல் முப்பத்திரண்டனுள் ஒன்று (இரு சமய உலக வழக். சிற்பசாத். 3); a treatise on architecture, one of 32 *ciṟ-pa-nūl,*q.v.

*[வெகு + **Skt.** suruta > த. சுருதம்]*

**வெகுட்சி[1]** *veguṭci,* பெ.(n.) பூவரசு; portia tree.



வெகுட்சி[2] *vekuṭci,* பெ.(n.) சினம்; wrath, rage. *“கடையிடை தெரியார் தம்முட் டாக்கிய விம்ம வெகுட்சியுள்” (பெருங். இலாவாண. 2, 83–84).*

*[வெகுள் → வெகுட்சி]*

வெகுட்டல் *vekuṭṭal,* பெ.(n.) அச்சுறுத்தல்; to threaten.

*[வெகு → வெகுட்டல்]*

வெகுடு *vekuḍu,* பெ.(n.) நாணல்; reed.

*[வெள்கு → வெகுடு]*

வெகுண்டம் *vekuṇḍam,* பெ.(n.) கரும்பு (மூ.அ.); sugancane.

*[வெகு + கண்டம் → வெகுண்டம்]*

வெகுணோக்கு *veku-nōkku,* பெ.(n.) சீற்றப்பார்வை; angry look. *"வெருக்கு விடையன்ன வெகுணோக்கு" (புறநா. 324).*

*[வெகுளி + நோக்கு]*

வெகுதாவம் *veku-tāvam,* பெ.(n.) விடத்தேர் பார்க்க; see *viḍa-t-tēr.*

வெகுதூரமோடல் *veku-dūra-mōḍal,* பெ.(n.) பொன்னுக்கு மாற்றுயர்தல்; in alchemy to increase the quality of gold.

வெகுநாயகம் *veku-nāyagam,* பெ.(n.) பலருடைய ஆட்சி; government, rule or leadership in the hands of many. *“மொழியும் வெகுநாயகஞ் சேரிடமும்” (அறப். சத. 57).*

*[வெகு + தூரம் + ஓடல்]*

வெகுநியாயம் *veku-niyāyam,* பெ.(n.) வெளியரங்கபூசை; external worship (w.).

*[வெகு + **Skt.** nyāya > த. நியாயம்]*

வெகுபத்திரி *veku-pattiri,* பெ.(n.) **1.** கத்தரிக்காய்; brinjal. **2.** சிறுநெல்லி; otaheite gooseberry. **3.** முள்ளுள்ள செடி; thorny plant. **4.** வற்றியபொருள்; that which is dry.

*[வெகு + **Skt.** patra > த. பத்திரி]*

வெகுபரணி *veku-baraṇi,* பெ.(n.) சிறு செடிவகை; stemless plant.

வெகுபிட்டம் *vegu-piṭṭam,* பெ.(n.) விரிவு (யாழ்.அக.); expanse.

*[வெகு + பிட்டம்]*

வெகுபுத்திரி *vegu-puttiri,* பெ.(n.) **1.** கீழா நெல்லி (தைலவ.); a small plant. **2.** துளசி (சங்.அக.); sacred basil.



**வெகுபுத்திரிகை** *vegu-puttirigai,* பெ.(n.) நரிப்பயறு; dew gram-phaseolus aconitifolius.

**வெகுமஞ்சரி** *vegu-mañjari,* பெ.(n.) துளசிச்செடி (இலக். அக.); sacred basil.

**வெகுமதி¹** *vegumati,* பெ.(n.) நன்கொடை; reward, present.

*[வெகு + மதி]*

**வெகுமதி²-த்தல்** *vegumati-,* செ.குன்றாவி. (v.t.) 1. மேலாக மதித்தல்; to consider to be of great value, to estimate highly. 2. கண்ணியம் பண்ணுதல்; to treat with respect.

*[வெகுமதி → வெகுமதித்தல்]*

**வெகுமாரி** *vegu-māri,* பெ.(n.) 1. பெருமழை; heavy rain. 2. மிகுதி; increase.

*[வெகு + மாரி]*

**வெகுமானக்காரன்** *vegumāṉa-k-kāraṉ,* பெ.(n.) பாசாங்குக்காரன்; man of pretensions (w.).

*[வெகுமானம் + காரன்]*

**வெகுமானம்** *vegumāṉam,* பெ.(n.) 1. நன்கொடை; present. 2. பெருமதிப்பு; great respect. *"வெகுமான மாகிலு மவமானமாகிலும் மேன்மையோர் செய்யி லழகாம்" (அறப். சத. 45).* 3. பாசாங்கு; pretension.(w.). 4. பண்புநயம்; civility (w.).

*[வெகு + மானம்]*

**வெகுமானி¹-த்தல்** *vegu-māṉi-,* செ. குன்றாவி.(v.t.) 1. கண்ணியம் செய்தல்; to treat with respect. 2. பண்நயம் காட்டுதல்; to treat with civility (w.). 3. இனாங் கொடுத்தல்; to make presents.

**வெகுமானி²-த்தல்** *vegu-māṉi-,* செ.கு.வி (v.i). பெருமை பாராட்டுதல்; to pretend to greatness (w.).

*[வெகுமானம் → வெகுமானித்தல்]*

**வெகுமுகம்** *vegu-mugam,* பெ.(n.) பலவாறாகக் கிளைப்பது (யாழ்.அக.); that which divides in to several branches in many directions.

*[வெகு + முகம்]*

**வெகுமூத்திரம்¹** *vegu-mūttiram,* பெ.(n.) அடிக்கடி நீரிறங்கும் நோய், அதிமூத்திரம், இதைத் தண்ணீர் விட்டான் கிழங்கு நிறுத்தும்; polyurea, this is cured by water root.

*[வெகு + மூத்திரம்]*

**வெகுமூத்திரம்²** *vegu-mūttiram,* பெ.(n.) நீரழிவு நோய்; diabetes.

*[வெகு + மூத்திரம்]*

**வெகுமூலம்¹** *vegu-mūlam,* பெ.(n.) வெட்டி வேர்; khus-khus-vetiveria zizanioides.

**வெகுமூலம்²** *vegu-mūlam,* பெ.(n.) முருங்கை மரவகை (இலக்.அக.); horse-radish tree.



வெகுர் *vegur,* பெ.(n.) 1. சூட்டினால் வரும் பரு; a wort caused by heat. 2. வேர்க்குரு; rash due to prickly heat.

வெகுரகாலி *vegura-kāli,* பெ.(n.) வெக்காளி; a tree.

வெகுரசம் *vegu-racam,* பெ.(n.) கரும்பு (மலை.); sugarcane.

*[வெகு +* **Skt.** *rāsa > த. இரசம்]*

வெகுரூபன் *vegu-rūpaṉ,* பெ.(n.) 1. அனைத்து விதமான வடிவங்களை எடுக்கும் பச்சை ஓணான்; chamelion. 2. திருமால் (யாழ்.அக.); *viṣṇu.* 3. சிவன்; siva. 4. மன்மதன் (யாழ்.அக.); *kāma.* 5. பிரமன்; *brahmā.*



வெகுலாங்கம் *vegulāṅgam,* பெ.(n.) ஆடு தின்னாப் பாளை (மலை.); worm killer.

வெகுலாதி *vegulādi,* பெ.(n.) வெகுலாலி பார்க்க (சங்.அக.); see *vekulāli.*

வெகுலாதிகம் *vegulādigam,* பெ.(n.) 1. வெட்டுப்பாக்கு; cut arecanut. 2. சிற்றேலம்; small cardamum.

வெகுலாலி *vegulāli,* பெ.(n.) சிற்றேலம் (மலை.); a species of cardamom.

வெகுவசனம் *vegu-vacaṉam,* பெ.(n.) பன்மை எண்ணிக்கை (பி.வி. 24, உரை, பக். 44); plural number.

*[வெகு +* **Skt.** *vasaṉa > த. வசனம்]*

வெகுவாக *veguvāga,* வி.எ.(adv.) மிகவும்; very much. *'புயல் தென் மாநிலங்களை வெகுவாகப் பாதித்தது, மருந்து நோயை வெகுவாக ஊறுபடுத்தியது'.*

*[மிகு → வெகு → வெகுவாக]*

வெகுவாசமுடையோகி *veguvāsa-muḍai-yōgi,* பெ.(n.) வசம்பு; sweet flag-acorus calamas.

வெகுவாதகம் *vegu-vādakam,* பெ.(n.) வெட்டிவேர்; khus-khus-vetiveria zizanoides.

வெகுவாய் *vegu-vāy,* வி.எ.(adv.) மிகுதியாக; very much, greatly.

*[வெகு → வெகுவாய்]*

வெகுவாய்ச்சொல்(லு)-தல் *veguvāy-c-col(lu)-,* செ.குன்றாவி. (v.t.) 1. விளத்தமாகச் சொல்லுதல்; to speak at great length. 2. வற்புறுத்திக் கூறுதல்; to speak with great insistence (w.).

*[வெகுவாய் + சொல்]*

வெகுவிதம் *veku-vidam,* பெ.(n.) நானா வகை (சூடா.); multiplicity.

*[வெகு* **Skt.** *vita > த. விதம்]*

வெகுவிரீகி *veku-viriki,* பெ.(n.) அன்மொழித்தொகை (பி.வி. 20, உரை); an elliptical compound word.

**வெகுள்** *vegul,* பெ.(n.) கூரை வேய்வதற்குப் பயன்படும் ஒருவகைப்புல் (செங்கை. வழ.); a grass used for thatched roof.

**வெகுள்(ளு)-தல்** *vekul(lu)-,* செ.குன்றாவி. (v.t.) & செ.கு.வி.(v.i.) 1. கோபித்தல்; to be angry. *"வேர்த்து வெகுளார் விழுமியோர்" (நாலடி, 64).* 2. பகைத்தல்; to hate, dislike. *"கல்லான் வெகுளுஞ் சிறுபொருள்" (குறள், 870).*

*[வே → வேகு → வெகுள் → வெகுள்தல். (வே.க.பக். 135)]*

**வெகுள்வு** *vekulvu,* பெ.(n.) முக்குற்றங்களுள் ஒன்றான கோபம்; anger (w.).

*[வேகு → வெகுள் + உ → வெகுள்வு. (வே.க.பக். 135)]*

**வெகுளல்** *vegulal,* பெ.(n.) வெகுளுதல்; choler, anger.

*[வேகு → வெகுள் + அல் → வெகுளல். (வே.க.பக். 135)]*

**வெகுளாமை** *vekulāmai,* பெ.(n.) கோபியாமை; absence of anger. *"புணரின் வெகுளாமை நன்று" (குறள், 308).*

*[வெகுள் + ஆ + மை]*

**வெகுளி** *veguli,* பெ.(n.) 1. முக்குற்றங்களுள் ஒன்றான கோபம்; anger, one of *mu-k-kurram.* q.v. *"வெகுளி கணமேனுங் காத்த லரிது" (குறள், 29).* 2. வெறுப்பு; dislike. *"ஒரு பொருளிடத்தும் விழைவொடு வெகுளியுறாது" (திருப்போ. சந். குறுங்கழி 5, 3).* 3. கபடமற்றவ-ன்-ள்; simple-minded person.

*[வேகு → வெகுள் + இ → வெகுளி. (வே.க.பக். 135)]*

**வெகுளிப்பு** *vekulippu,* பெ.(n.) 1. கோபம்; anger. (திவ். இயற். திருவிருத். 17, வ்யா. பக். 117).

*[வேகு → வெகுள் → வெகுளி + இ → வெகுளிப்பு. (வே.க.பக். 135)]*

**வெகுளிவிலக்கு** *vekuli-vilakku,* பெ.(n.) ஓரலங்காரம், அது வெகுளி தோன்றக்கூறி விலக்குவது; avoid anger.

*[வெகுளி + விலக்கு]*

**வெங்கடுப்பு** *veṅ-kaḍuppu,* பெ.(n.) 1. அழற்சியின்றி வரும் கண்ணோய்; sore eyes without inflammation. 2. வெண் கடுப்பு பார்க்க; see *veṇ-kaḍuppu.*

*[வெம்மை + கடுப்பு → வெங்கடுப்பு]*

**வெங்கண்**[1] *veṅkaṇ,* பெ.(n.) 1. வெங்காயம்; onion-alliumcepa. 2. மீன்வகை; a fish with protruburent eyes.

*[வெம்மை + கண் → வெங்கண்]*

**வெங்கண்**[2] *veṅkaṇ,* பெ.(n.) 1. அழலெடி விழிக்குங்கண்; fried eye. *"வெங்கட் புள்ளூர்ந்து வந்து" (திவ். திருவாய். 6, 8, 5).* 2. கொடுமை; cruelty. *"வெங்கண் வேந்தர்" (பெருங். வத்தவ. 6, 32).* 3. பொறாமை; jealousy (w.). 4. பகைமை; enmity, spite (w.). 5. கண்ணூறு; evil eye. 6. குத்துவா பார்க்க; see *kuttuvā.* *'தன் கண்ணைக் கொடுத்து வெங்கண்ணை வாங்க வேண்டும்'.*

*[வெம்மை + கண் → வெங்கண்]*

**வெங்கண்டல்** *veṅ-kaṇḍal,* பெ.(n.) மரவகை; a kind of tree.

*[வெண்மை + கண்டல் → வெங்கண்டல்]*

வெங்கண்ணன் *veṅ-kaṇṇaṉ,* பெ.(n.) குழந்தை நோய்வகை; a kind of children disease.

வெங்கண்ணனார் *veṉkaṇṇaṉār,* பெ.(n.) கழகக் காலப் புலவர்; a sangam poet. இவர் நற்றிணையில் 232–ஆம் பாடலைப் பாடியுள்ளார்.

வெங்கணன் *veṅ-kaṇaṉ,* பெ.(n.) கொடியவன்; cruel man.

*[வெம்மை + கண்ணன் → கணன்]*

வெங்கணாத்தி *veṅkaṇātti,* பெ.(n.) வெங்கிணாத்தி பார்க்க; see *veṅkiṇātti.*

வெங்கதிர் *veṅ-katir,* பெ.(n.) வெங்கதிர்ச் செல்வன் பார்க்க; see *veṅkatir-c-celvaṉ.*

*[வெம்(மை) + கதிர்]*

வெங்கதிர்ச்செல்வன் *veṅkatir-c-celvaṉ,* பெ.(n.) சூரியன்; sun. *"விசும்பி னுரி ருளகற்றும் வெங்கதிர்ச்செல்வன் போல" (புறநா. 56).*

*[வெங்கதிர் + செல்வன்]*



வெங்கதிர்மதலை *veṅkatir-madalai,* பெ.(n.) கர்னன் (பிங்.); karna.

*[வெங்கதிர் + மதலை]*

வெங்கதிரோன் *veṅ-katirōṉ,* பெ.(n.) வெங்கதிர்ச்செல்வன் பார்க்க; see *veṅkadir-c-celvaṉ. "வெங்கதிரோன் குலத்துக்கோர் விளக்காய்த் தோன்றி" (திவ். பெருமாள். 10, 1).*

*[வெம்மை + கதிரோன்]*

வெங்கம் *veṅgam,* பெ.(n.) மிக்கவறுமை; extreme poverty. *'வெங்கம் பரந்த அம்மையார்க்கு திருவிளக்கெண்ணெய் அழுதுபடி'.*

*[வெள் → வெண்கு → வெங்கு → வெங்கம். (வே.க.பக். 155)]*

வெங்கருது *veṅgarudu,* பெ.(n.) விளைவில்லாத கதிர், நன்கு விளைந்த வயலிலும் ஊடூடே இந்த மாதிரி வெண் நிறக் கதிர் பறிந்திருக்கும்; chaff, empty ears of grain.

*[வெம்மை + கதிர் → வெங்கதிர்]*

வெங்கல் *veṅgal,* பெ.(n.) பூச்சு வேலைகளில் பூச்சு பளபளப்பாக இருக்க பூசப் பயன்படும் கல் சுவரில் சுண்ணாம்புப் பூச்சு பளபளப்பாக இருக்க இக்கல்லால் நன்றாகத் தேய்ப்ப துண்டு (கோ. வழக்.) (தஞ். வழ.); a kind of stone used for shining on plastering in the wall. It is also used to rub on whitewash to glitter.

*[வெள் → வெண்கு → வெங்கு → வெங்கல். (வே.க.பக். 155)]*

வெங்கலக்கல்வம் *veṅkala-k-kalvam,* பெ.(n.) மருந்துகள் உலோகக் களிம்பேறாதபடி வெங்கலத்தினால் செய்த மருந்தரைக்கும் கல்வம், கண் நோய் மருந்துகள் அரைக்குங் கருவி; mortar for grinding medicines made of bell-metal.

*[வெங்கலம் + கல்வம்]*

**வெங்கலக்கல்வம்செப்புக்குழவி** *veṅkala-k-kalvam-ceppu-k-kuḻavi,* பெ.(n.) உலோகக் களிம்பேறாதபடி வெங்கலத்தினால் செய்த மருந்தரைக்கும் கருவி, கண் நோய் மருந்து தயாரிக்கப் பயன்படுவது; bell metal mortar and copper pestle to grind medicines for the eyes.

*[வெங்கலம் + கல்வம் + செப்புக்குழவி]*

**வெங்கலக்கும்பா** *veṅgala-k-kumbā,* பெ.(n.) வெண்கலத்தால் ஆன சாப்பிடும் கும்பா உயரமாக இருக்கும். குடவம் (பித்தளை) போல் களிம்பூறாது. ஓசைக்குப் பெயர் போனது வெங்கலம்; a bronze fowl not rusty as brass famous for sowed.

*[வெங்கலம் + கும்பா]*



**வெங்கலச்சிலை** *veṅgala-c-cilai,* பெ.(n.) ஒரு வகை கடைப் பொருள்; a mineral stone- one of the 120 kinds of nature substance referred to in tamil siddha medicine.

*[வெண்கலம் + சிலை]*

**வெங்கலத்தாலம்** *veṅgala-t-tālam,* பெ.(n.) வெங்கலத்தட்டு, தாம்பாளம்; plate or dish made of bell - metal.

*[வெங்கலம் + தாலம்]*

**வெங்கலபாத்திரம்** *veṅkala-pāttiram,* பெ.(n.) வீட்டுக்குரிய வெண்கலத்தாற் செய்த ஏனம்; bronze vessel for domestie use.

*[வெங்கலம் +* ***Skt.*** *pātra > த. பாத்திரம்]*

**வெங்கலம்[1]** *veṅkalam,* பெ.(n.) 1. இரண்டு பாகம் செம்பும் ஒரு பாகம் வெள்ளியமும் சேர்த்து உருக்கி வார்த்து, கிண்ணி முதலிய ஏனங்கள் செய்யுமோர் மாழை; alloy of 2 parts copper and one part of tin (pewter). 2. வெண்கலம் பார்க்க; see *veṇkalam.*

*[வெண்கலம் → வெங்கலம்]*

**வெங்கலம்[2]** *veṅgalam,* பெ.(n.) வெண்கலம் பார்க்க; see *veṇ-kalam.*

**வெங்கலம்[3]** *veṅgalam,* பெ.(n.) செம்பும் வெள்ளீயமும் கலந்து உருக்கி உண்டாக்கும் கலப்பு உலோகம்; bell-metal, bronze an alloy of copper and tin.

*[வெண்கலம் → வெங்கலம்]*

**வெங்கலாமை** *veṅkalāmai,* பெ.(n.) ஆமைவகை; a kind of tortoise.

*[வெங்கலம் + ஆமை]*

**வெங்கள்** *veṅgaḷ,* பெ.(n.) கடுக மயக்குங் கள்; highly intoxicating liquor. *"வெங்கட் டொலைச்சிய விருந்திற் பாணி" (சிலப். 10, 131).*

*[வெம் (மை) + கள்]*

**வெங்களம்** *veṅgaḷam,* பெ.(n.) போர்க்களம்; battle field. *"மறமன்னர் வெங்களத்து வேலுயர்த்த வேந்து" (பு.வெ. 9, 11).*

*[வெம் (மை) + களம்]*

வெங்கன் *veṅkaṉ,* பெ.(n.) வறுமையாளன்; pauper.

*[வெங்கம் → வெங்கன்]*

வெங்கனை *veṅgaṉai,* பெ.(n.) கடல்மீன் (முகவை. மீனவர்); sea fish.



வெங்காக்கணம் *veṅkākkaṇam,* பெ.(n.) வெள்ளைக்காக்கணம் பார்க்க (பரி.அக.); sea *veḻḻai-k-kākkaṇam.*

*[வெண்–மை + காக்கணம்]*

வெங்காய்ச்சல் *veṅ-kāyccal,* பெ.(n.) உப்பிடப்படாமல் வெறுமனே வெயிலிற் காயும் மீன் காய்ச்சல் (முகவை. மீன.); drying of unsalted fish.

*[வெறுமை + காய்ச்சல் → வெங்காய்ச்சல்]*

வெங்காயக்கிழங்கு *veṅkāya-k-kiḻaṅgu,* பெ.(n.) நாக்கு அச்சரத்தைப் போக்கக்கூடிய வெங்காயத்தின் அடி மூலம்; bulb of onion capable of removing ulcers on the tongue. it is vegetable of all round value it assists digestion and gives tone to the stomach and is a good septic for indigestion it increases the healthy action of kidneys and produces proper sleep. it is long used for ulcer stomach. the syrup of onion is specific for colds and cough even for colds in the chest and throat. the gas from the well crused onion heals chronic ulcers when they are exposed to it.

*[வெங்காயம் + கிழங்கு]*

வெங்காயக்கோரை *veṅkāya-k-kōrai,* பெ.(n.) புல்வகை; a kind of grass.

*[வெங்காயம் + கோரை]*

வெங்காயத்தழை *veṅkāya-t-taḻai,* பெ.(n.) வெங்காயத்தினிலை; leaf of onion.

*[வெங்காயம் + தழை]*

வெங்காயத்தாமரை *veṅkāya-t-tāmarai,* பெ.(n.) நீர்ப்பூடுவகை; a parasitic water-plant.

*[வெங்காயம் + தாமரை]*

வெங்காயத்தாமரைப்பாசி *veṅkāya-t-tāmarai-p-pāsi,* பெ.(n.) ஒருவகைக் கடற்பாசி; a kind of ceylon moss. (தஞ்சை. மீன.).

*[வெங்காயம் + தாமரை + பாசி]*

வெங்காயப்பூ *veṅkāya-p-pū,* பெ.(n.) வெங்காயத்தைப் போன்று மடல்களைக் கொண்ட பூ, குன்மம் குடல் ஊதை நோய் அறவே போம்; onion flower.

*[வெங்காயம் + பூ]*

வெங்காயப்பூக்கோரை *veṅgāya-p-pūkkōrai,* பெ.(n.) கோரைவகை; a kind of sedge.

*[வெங்காயம் + பூ + கோரை]*

**வெங்காயப்பூண்டு** *veṅgāya-p-pūṇḍu,* பெ.(n.) கடற்கரையோரங்களில் வளரும் செடி; a coasted plant or shrub. (தஞ்சை. மின.).

*[வெங்காயம் + பூண்டு]*

**வெங்காயம்**[1] *veṅgāyam,* பெ.(n.) ஈருள்ளி; onion-allium cepa. 1. வெங்காயம். 2. ஈர வெங்காயம். 3. நரிவெங்காயம். 4. வெள்ளை வெங்காயம். 5. சிறு வெங்காயம்.

*[வெண் (மை) + காயம்]*



**வெங்காயம்**[2] *veṅgāyam,* பெ.(n.) இதில் 2 வகையுண்டு, சிவப்பு, வெள்ளை. இதன் சாற்றை மூக்கினால் உறிஞ்ச மூச்சு அழற்சியைத் தடுக்கடும். வயிற்று வலி குன்மம் குடலைப் பற்றிய இழுப்பு நோய் இவைகளைக் குணப்படுத்தும்; it is used as condiment. it acts as refeingent stimulent and diuretic. it is capable of healing chronic ulcers.

**வெங்காயம்**[3] *veṅgāyam,* பெ.(n.) உரிக்க உரிக்க தனித் தனியாக வந்துவிடக் கூடிய தோல் அடுக்குகளால் ஆன, காரச்சுவை கொண்ட ஒரு வகை பூண்டு; onion.

*[வெண்–மை + காயம் → வெங்காயம்]*

**வெங்காயம்**[4] *veṅgāyam,* பெ.(n.) வெண்காயம் பார்க்க (பதார்த்த. 445); see *veṇ-kāyam.*

**வெங்காயவடகம்** *veṅkāya-vaḍagam,* பெ.(n.) நறுக்கிய வெங்காயத்துடன் உளுத்தம் பருப்பு, கடுகு முதலியவை சேர்த்துச் சிறு உருண்டையாக உருட்டிக் காயவைத்து எடுத்துப் பொரித்துப் பயன்படுத்தும் துணை உணவுப் பொருள்; a kind of onion preparation dried in the sun and fried before use.

*[வெங்காயம் + வடகம்]*

**வெங்காயவெடி** *veṅkāya-veḍi,* பெ.(n.) சிறுவெடி; small fireworks.

*[வெங்காயம் + வெடி]*

**வெங்கார்**[1] *veṅ-kār,* பெ.(n.) வெப்பம் (யாழ்.அக.); heat.

*[வெம் (மை) + கார்]*

**வெங்கார்**[2] *veṅ-kār,* பெ.(n.) நெல்வகை; a kind of paddy.

*[வெம் (மை) + கார்]*

**வெங்கார்நாற்றம்** *veṅkār-nāṟṟam,* பெ.(n.) தலைப்பெயன் மழையாற் சாய்ந்த மண்ணினின்று எழும் ஆவிநாற்றம்; odour caused by rain falling on hot, dry ground. *"காடுகள் தரும் வெங்கார் நாற்றமும்" (பரிபா. 20, 10, உரை).*

*[வெங்கார் + நாற்றம்]*

**வெங்கார்மண்** *veṅkār-maṇ,* பெ.(n.) கதிரவன் வெப்பத்தாற் சூடேறிய நிலம் (சீவக. 250, உரை); soil hot with sun's heat.

*[வெங்கார் + மண்]*

வெங்காரப்பொடி *veṅkāra-p-poḍi,* பெ.(n.) புண்களுக்குப் போடும் மருந்து; borax powder.

மறுவ. வெண்காரம், பொரிகாரம், டங்கணம்.

*[வெண்காரம் + பொடி]*

வெங்காரம்[1] *veṅ-kāram,* பெ.(n.) மருந்துச் சரக்குவகை (பதார்த்த. 1103); borax. *“வெங்காரம் வெய்தெனினும் நோய்தீர்க்கும்” (நீதிநெறி. 59).*

வெங்காரம்[2] *veṅ-kāram,* பெ.(n.) புண்ணுக்கு இடும் ஒருவகைக் காரம்; a kind of caustic.

வெங்காரிப்பு *veṅ-kārippu,* பெ.(n.) வயல்நிலம் அதிகவெப்பத்தால் வெடிக்கை; cracking of agricultural land by excessive heat.

*[வெங்கார் → வெங்காரிப்பு]*

வெங்காரிப்புவெட்டு-தல் *veṅkārippu-veṭṭu-,* செ.குன்றாவி.(v.t.) அறுவடைக்குப் பிறகு வயலுக்கு நீர்விட வரப்பு வெட்டுதல்; to open the ridge for watering a field for the first time after harvest.

*[வெங்காரிப்பு + வெட்டுதல்]*

வெங்காருடைப்பு *veṅkār-uṭaippu,* பெ.(n.) கதிரவன் வெப்பத்தால் வயல்வரப்பு பிளந்திருக்கை; cracking of ridges in wet lands owing to venkar.

*[வெங்கார் + உடைப்பு]*

வெங்கான்வெளி *veṅkāṉ-veḷi,* பெ.(n.) நீரற்ற நிலப்பகுதி (யாழ்.அக.); desert, arid land.

*[வெம்(மை) + கான் + வெளி]*

வெங்கிங்கல் *veṅgiṅkal,* பெ.(n.) கண்ணாடி போன்று பளபளப்பாக உள்ள சிக்கிமுக்கிக்கல். கோலப்பொடி செய்யப் பயன்படுகிறது (வ.ஆ.வழ.).

*[வெண் → வெண்கு → வெங்கு → வெங்கி + கல்]*

வெங்கிணாத்தி *veṅkiṇātti,* பெ.(n.) பெரிய மலைப்பாம்பு வகை; a huge, mountain snake (w.).



வெங்கியம் *veṅkiyam,* பெ.(n.) 1. குறிப்புப் பொருள் (நன். 269, விருத்.); suggested sense, meaning hinted at. 2. குத்தலான சொல்; wit, sarcasm (w.). 3. எல்லை வரம்பு (யாழ்.அக.); line of demarcation.

வெங்கிராயன்வெளி *veṅkirāyaṉ-veḷi,* பெ.(n.) வெங்கான்வெளி பார்க்க; see *veṅkāṉ-veḷi.*

*[வெங்கான் → வெங்கிரான் → வெங்கிராயன் + வெளி]*

வெங்குசம்பா *veṅku-campā,* பெ.(n.) சம்பா நெல்வகை; a kind of campa paddy.

*[வெண் → வெண்கு → வெங்கு + சம்பா]*

வெங்குமரிப்பூடு *veṅkumari-p-pūḍu,* பெ.(n.) பேராமணக்கு; castor plant producing large seeds-ricinus communis.

*[வெங்குமரி + பூடு]*

வெங்குரு[1] *veṅkuru,* பெ.(n.) 1. சீர்காழி; *sīrkāḻi.* *"சோலைகள் சூழ்ந்த வெங்குரு மேவியுள் வீற்றிருந்தாரே" (தேவா. 85, 1).*

*[வெம் (மை) + குரு]*

வெங்குரு[2] *veṅkuru,* பெ.(n.) 1. கூற்றுவன்; yama. *"கடுந்தூதர்........... பற்றித்தம் வெங்குருவின் பாற்காட்ட" (போற்றிப் பஃறொடை).* 2. தோல் அழற்சி; sun burn.

*[வெம் (மை) + குரு]*

வெங்குருவேந்தர் *veṅguru-vēndar,* பெ.(n.) வெங்குரு என்பது சீர்காழியின் பெயர்களில் ஒன்று; *veṅguru* is a one name of *śīgāḻi.*

அசுரர்கள் வழிபட்டமையால் இப்பெயர் உண்டாக்கியது. திருஞான சம்பந்தர் இவ்வூரில் தோன்றிச் சிறந்து விளங்கியமையின் திருஞான சம்பந்தர் வெங்குரு வேந்தர் என்று சிறப்புப் பெயரை அடைந்தார்.

*[வெங்குரு + வேந்தர்]*

வெங்கெடுத்தை *veṅkeḍuttai,* பெ.(n.) நச்சுத் தன்மையுள்ள வெண்ணிறக் கெடுத்தை மீன் (தஞ்சை. மீன.); poisonous white *keḍuttai* fish.

வெங்கைக்கலம்பகம் *veṅkai-k-kalam-pakam,* பெ.(n.) சிவபிரான் மீது சிவப்பிரகாசர் பாடிய திருவெங்கைக் கலம்பகம் என்னும் நூல்; a kalampakam poem on siva at venkai by *civa-p-pirakācar.*

*[வெங்கை + கலம்பகம்]*

வெங்கைக்கோவை *veṅkai-k-kōvai,* பெ.(n.) வெங்கைச் சிவபிரான் மீது சிவப்பிரகாசர் இயற்றிய கோவைச் சிற்றிலக்கியம்; a *kōvai* poem on siva at venkai, by civappirakasar.

*[வெங்கை + கோவை]*

வெங்கைபடுகனி *veṅkaipaḍukaṉi,* பெ.(n.) சீந்திற் கொடி; moon creeper-tinospora cordifolia.

*[வெங்கை + படுகனி]*



வெங்கையலங்காரம் *veṅkai-y-alaṅ-kāram,* பெ.(n.) வெங்கை சிவபிரான் மீது சிவப்பிரகாசர் பாடிய சிற்றிலக்கியங்களுள் ஒன்று; a work on siva at *veṅkai,* by *civappirakācar.*

*[வெங்கை + அலங்காரம்]*

வெங்கையுலா *veṅkai-y-ulā,* பெ.(n.) வெங்கைச் சிவபிரான் மீது சிவப்பிரகாசர் இயற்றிய உலாநூல்; a ula poem on siva at *veṅkai,* by *civappiakācar.*

*[வெங்கை + உலா]*

வெங்கொதிப்பு *veṅkodippu,* பெ.(n.) பெருங்கொதிப்பு; great heat.

*[வெம்-மை + கொதிப்பு → வெங்கொதிப்பு]*

வெங்கோல் *veṅ-kōl,* பெ.(n.) வெங்கோன்மை பார்க்க; see *veṅkōṉmai.*

*[வெம்மை + கோல்]*

வெங்கோலன் *veṅkōlaṉ,* பெ.(n.) கொடுங் கோலையுடைய மன்னன்; tyran, cruel ruler. *"வெருவந்த செய்தொழுகும் வெங்கோலன்" (குறள், 563).*

*[வெங்கோல் + அன்]*

வெங்கோன்மை *veṅkōṉmai,* பெ.(n.) கொடுங்கோல்; cruel government.

*[வெங்கோல் + மை]*

வெச்சம் *veccam,* பெ.(n.) மாணிக்கக் குற்றவகை; a defect in rubies. *"வெச்சம் பொரிவு" (கல்லா. 98).*

வெச்சமுது *veccamudu,* பெ.(n.) சமைத்த உணவு; cooked food. *"வெச்சமுது மண்டபமும்" (T.A.s.i,100).*

*[வெச்சு + அமுது]*

வெச்சு *veccu,* பெ.(n.) வெம்மை; heat.

*[வெய்து → வெச்சு]*

வெச்சுவெச்செனல் *veccu-veccenal,* பெ.(n.) வெச்செனல் பார்க்க; see *veccenal.* (w.)

*[வெச்சு + வெச்சு + எனல்]*

வெச்சுவெந்நீர் *veccu-vennīr,* பெ.(n.) சுடுநீர் (யாழ்.அக.); hot water.

*[வெச்சு + வெந்நீர்]*

வெச்செனல் *veccenal,* பெ.(n.) 1. வெம்மைக் குறிப்பு; being hot, becoming heated. *"தண்ணென்று வெச்சென்று" (குமர. பிர. மீனாட்பிள்ளைத். 1).* 2. கடுமையாதற்குறிப்பு; being harsh. *"தமதீஞ் சொல் வெச் சென்றிடச் சொல்லி" (சீவக. 2015).*

*[வெச்சு + எனல்]*

வெச்செனவு *veccenavu,* பெ.(n.) சூடு; heat. *"தண்ணெனவும் வெச்செனவுந் தந்து" (சேதுபு. கடவுள். 3).*

*[வெச்செனல் → வெச்செனவு]*

வெசவி *vecavi,* பெ.(n.) வெப்பகாலம்; hot weather.

*[வெச்சு → வெசவி]*

வெஞ்சம்[1] *veñcam,* பெ.(n.) வஞ்சம்[1] பார்க்க; see *vañjam*[1].

*[வஞ்சம் → வெஞ்சம்]*

வெஞ்சம்[2] *veñcam,* பெ.(n.) கோபம் (யாழ்.அக.); anger.

*[வஞ்சம் → வெஞ்சம்]*

வெஞ்சமம்[1] *veñ-camam,* பெ.(n.) பாலைப் பண்வகை (நம்பியகப்.); a melody-type of the *pālai* class.

*[வெம்மை + சமம்]*

வெஞ்சமம்[2] *veñ-camam,* பெ.(n.) கொடுமையான போர்; war, battle. *"விளிந்தா ரொழிந்தார் வெஞ்சமத்தில்" (பாரத. பன்னிரண்டாம். 73).*

*[வெம் (மை) + சமம்]*

**வெஞ்சமன்** *veñ-camaṉ,* பெ.(n.) இயமன்; yaman (w.).

*[வெம்மை + சமன்]*

**வெஞ்சனபண்டாரம்** *veñcaṉa-paṇḍāram,* பெ.(n.) வெஞ்சனம்[1] பார்க்க; see *veñcaṉam.*

*[வெஞ்சனம் + பண்டாரம்]*

**வெஞ்சனம்** *veṉ-caṉam,* பெ.(n.) 1. சமைத்த கறியுணவு; vegetable relish. 2. கறிக்குதவும் பண்டம்; condiment. 3. குழம்பு; sauce (w.). 4. மெய்யெழுத்து; consonant (w.).

ஆணம் - வெஞ்சணம் என்னும் இரு சொற்களும் பெரும்பாலும் கீழ்வகுப்பாரிடையே வழங்குகின்றன. ஆணம் என்னும் சொல்லே வெந்த குழம்பைத்தான் குறிக்கும். ஆயினும் பச்சடியினின்று தெளிவாய் வேறுபடுத்திக் காட்டற்கு வெந்த என்னும் அடை பெற்றது. "நண்டாணமுங் களியும் தின்றாலோ தெரியும்" என்பது பழமொழி. இதில் ஆணம் என்பது சமைத்த குழம்பைக் குறித்தல். காண்க. (வ.மொ.வ. பக். 267).

*[வெந்த + ஆணம் → வெஞ்சணம் → வெஞ்சனம்]*

**வெஞ்சிலைச்செல்வன்** *veñ-cilai-c-celvaṉ,* பெ.(n.) வீரபத்திரன்; virabhadra (w.).

*[வெம்(மை) + சிலை + செல்வன்]*

**வெஞ்சினக்காரன்** *veñ-ciṉa-k-kāraṉ,* பெ.(n.) கடுங்கோவக்காரன்; man of strong feeling of anger.

*[வெஞ்சினம் + காரன்]*

**வெஞ்சினம்[1]** *veñ-ciṉam,* பெ.(n.) கடுங்கோபம்; extreme anger. *"வெஞ்சின மின்மையும்" (சிறுபாண். 210).*

*[வெம்மை + சினம்]*

**வெஞ்சினம்[2]** *veñ-ciṉam,* பெ.(n.) வெஞ்சனம் 1, 2, 3 பார்க்க; see *veñ-caṉam 1,2,3. "வெஞ்சினங்களென்றும் விரும்பாளே" (தனிப்பா. 1, 304, 25).*

*[வெஞ்சனம் → வெஞ்சினம்]*

**வெஞ்சுடர்** *veñ-cuḍar,* பெ.(n.) சூரியன்; sun. *"வெஞ்சுடரொளியுநீ" (பரிபா. 3, 6, 7).*

*[வெம்மை + சுடர்]*

**வெஞ்சொல்** *veñ-col,* பெ.(n.) கடுஞ்சொல்; harsh word. *"கருமன நச்சு வெஞ்சொற் கட்டியங்காரன்" (சீவக. 744).*

*[வெம்-மை + சொல்]*

**வெஞ்சோறு[1]** *veñ-cōṟu,* பெ.(n.) சுடுசோறு; cooked rice, as hot. *"எயிற்றிய ரட்ட வின்புளி வெஞ்சோறு" (சிறுபாண். 175).*

*[வெம்(மை) + சோறு]*

**வெஞ்சோறு[2]** *veñ-cōṟu,* பெ.(n.) கறி சேர்க்கப்படாத சோறு; plain rice, without curry.

*[வெண்(மை) + சோறு]*

**வெட்கக்கேடு** *veṭka-k-kēḍu,* பெ.(n.) வெட்கம் பார்க்க; see *veṭkam.*

*[வெட்கம் + கேடு]*

**வெட்கங்கெட்டவன்** *veṭkaṅ-keṭṭavaṉ,* பெ.(n.) இழிவானவன்; shameless fellow.

*[வெட்கம் + கெட்டவன்]*

**வெட்கம்கெடு-த்தல்** *veṭkam-keḍu-,* செ.குன்றாவி. (v.t.) இழிவு படுத்துதல்; to disgrace (w.).

*[வெட்கம் + கெடு]*

வெட்கஞ்சிக்கி *vetkañ-cikki,* பெ.(n.) நாணமின்மை; want of modestry (w.).

*[வெட்கம் + சிக்கி]*

வெட்கப்படு-தல் *vetka-p-padu-,* செ.கு.வி. (v.i.) 1. நாணமடைதல்; to be ashamed. 2. கூச்சமடைதல்; to be bashful. *'அந்தப் பெண் புருடர் முன் வர வெட்கப்படுகிறாள்'.*

*[வெட்கம் + படு-]*

வெட்கப்படுத்து-தல் *vetka-p-paduttu-,* செ.கு.வி. (v.i.) இழிவு படுத்துதல்; to put to shame (w.).

*[வெட்கம் + படுத்து-,]*

வெட்கம் *vetkam,* பெ.(n.) 1. அவமானம் (சூடா.); shame. *"வெட்கத்துக்குக் காடிளனி நானோ" (இராம. யுத்த. 32).* 2. கூச்சம்; coyness, bashfulness.

*[வெட்கு → வெட்கம்]*

வெட்கறை *vet-karai,* பெ.(n.) வெட்கங்கெட்டவன் பார்க்க; see *vetkan-kettavan.*(w.)

*[வெட்கு + அறு → வெட்கறை]*

வெட்காலி *vet-kāli,* பெ.(n.) மரவகை; a kind of button tree.

*[வெண்-மை + கால் → வெட்காலி]*

வெட்கிளுவை *vet-kiluvai,* பெ.(n.) காட்டுக்கிளுவை; hill balsam tree. (w.)

*[வெண்-மை + கிளுவை → வெட்கிளுவை]*

வெட்கு *vetku,* வி.(v.) அவமானம் அடைதல்; feel disgraced. *'நாங்கள் வெட்கித் தலைகுனியும்படி ஒரு செயலைச் செய்து விட்டாயே, மனைவியை அடித்தது வெட்கும்படியான செயல் இல்லையா'.*

*[வெள்கு → வெட்கு]*

வெட்கு-தல் *vetku-,* செ.கு.வி. (v.i.) 1. நாணப் படுதல்; to be ashamed. 2. கூச்சப்படுதல்; to be bashful. 3. அஞ்சுதல்; to be afraid (w.).

*[வெள்கு → வெட்கு]*

வெட்குவெட்கெனல் *vetku-vetkenal,* பெ.(n.) வெட்கக்குறிப்பு (யாழ்.அக.); expr. of shame.

*[வெட்கு + வெட்கு + எனல்]*

வெட்கெனல் *vetkenal,* பெ.(n.) வெள்ளறி வினனாதற்குறிப்பு; expr. of shallowness, empty-headedness. *"வெட்கென்றார் வெஞ்சொலா விண்புறுவார்" (நான்மணி. 73).*

*[வெட்கு + எனல்]*

வெட்சி *vetci,* பெ.(n.) 1. செடிவகை; scarlet ixora.m.sh. *"செங்கால் வெட்சிச் சீறிதழ்" (திருமுரு. 21).* 2. போர்த் தொடக்கமாக வெட்சிப் பூ அணிந்து பகைவர் நிரையைக் கவர்தலைக் கூறும் புறத்துறை (தொல். பொ. 57); theme describing a king's follower wearing *vetci* flowers and capturing the cows of the enemy.



**வெட்சிக்கரந்தை** *vetci-k-karandai,* பெ.(n.) பகைவர் கவர்ந்து கொண்ட ஆனிரையை மீட்பதைக் கூறும் புறத்துறை (தொல். பொ. 57, உரை); theme-describing had captured them.

*[வெட்சி + கரந்தை]*

**வெட்சிப்பூ** *vetci-p-pū,* பெ.(n.) நறுமணப் பூ வகை; a fragrant white flower of Ixora coccinea.

*[வெட்சி + பூ]*

**வெட்சிமறவர்** *vetci-maravar,* பெ.(n.) பகைவர் நிரையைக் கவரச் செல்லும் மறவர் (தொல். பொ. 58, உரை); soldiers who captue the cows of the enemy.

*[வெட்சி + மறவர்]*

**வெட்சிமாலையன்** *vetci-mālaiyan,* பெ.(n.) குமரன்; god of *kumaran.*

*[வெட்சி + மாலையன்]*

**வெட்சியரவம்** *vetci-y-aravam,* பெ.(n.) பகைமுனையிடத்து நிரைகவரப்போகும் போது உண்டாம் ஆரவாரத்தைக் கூறும் புறத்துறை (பு.வெ. 1, 3); theme describing the tumult of warriors making preparation to go forth to capture enemy's cows.

*[வெட்சி + அரவம்]*

**வெட்ட** *vetta,* பெ.எ. (adj.) 1. அதிகமான; much. 2. தெளிவான; clear (w.).

*[வெள் → வெட்ட]*

**வெட்டத்தண்ணீர்** *vetta-t-tannīr,* பெ.(n.) இருட்பொழுதில் பளபளக்கும் கடல்நீர் (நெல்லை.மீன.); shining or glittering sea at dark night-sea-water.

*[வெட்ட + தண்ணீர்]*

**வெட்டதிராமூலி** *vetta-tirā-mūli,* பெ.(n.) யானைநெருஞ்சில் பார்க்க; see *yānai-neruñcil.*

**வெட்டம்** *vettam,* பெ.(n.) வெளிச்சம்; light.

*[வெள் → வெட்டம்]*

**வெட்டரிவாள்** *vettarivāl,* பெ.(n.) அரிவாள் வகை; billhook.

*[வெட்டு + அரிவாள்]*



**வெட்டல்** *vettal,* பெ.(n.) 1. வெட்டுதல்; cutting. 2. கொல்லுதல்; killing.

*[வெட்டு → வெட்டல்]*

**வெட்டவழி** *vetta-vali,* பெ.(n.) பலர் செல்லும் நெறி; beaten track (w.).

*[வெட்ட + வழி]*

**வெட்டவிடி** *vetta-vidi,* பெ.(n.) அதிகாலை (திவ். திருப்பா. 29, வ்யா. பக். 248).

*[வெட்ட + விடி]*

வெட்டவெடி-த்தல் *veṭṭa-veḍi-*, செ.கு.வி. (v.i.) அதிகக் கோபங்கொள்ளுதல்; to be wild with anger. *"வெட்ட வெடித்தார்க்கோர் வெவ்வழலன் காண்" (தேவா. 1143, 9).*

*[வெட்ட + வெடி]*

வெட்டவெளி *veṭṭa-veḷi,* பெ.(n.) 1. திறந்த வெளியிடம்; open plain. *"வெட்ட வெளியாக விளங்கும் பராபரமே" (தாயு. பராபர. 362).* 2. வெளிப்படையானது; that which is clearly evident (w.)

*[வெட்ட + வெளி]*

வெட்டவெளிச்சம் *veṭṭa-veḷiccam,* பெ.(n.) 1. பெரும் பிரங்கொளி; broad day light. 2. வெளிப்படையானது; that which is clearly evident. (w.)

*[வெட்ட + வெளிச்சம்]*

வெட்டவெளியாக *veṭṭa-veḷi-y-āka,* வி.எச்.(adv.) வெளிப்படையாக; publicity. (w.)

*[வெட்டவெளி + ஆக]*

வெட்டவெளிவிமலன் *veṭṭa-veḷi-vimalaṉ,* பெ.(n.) கல்லுப்பு; rock salt.

வெட்டறாமூலி *veṭṭaṟā-mūli,* பெ.(n.) நத்தைச் சூரி (யாழ்.அக.); bristly button weed.

வெட்டனம் *veṭṭṉam,* பெ.(n.) வெட்டெனம் பார்க்க (யாழ்.அக.); see *veṭṭeṉam.*

வெட்டனவு *veṭṭaṉavu,* பெ.(n.) 1. கடுமை (யாழ்.அக.); cruelty. 2. கெட்டியாயிருக்கை; hardness. 3. வெடுக்குத்தனம்; being cut and dry. 4. மனவுறுதி (வலிமை); force.

*[வெட்டெனல் → வெட்டனவு]*

வெட்டாங்கிளி *veṭṭāṅ-kiḷi,* பெ.(n.) வெட்டுக்கிளி; large locust (w.).

*[வெட்டு → வெட்டாம் + கிளி]*

வெட்டாட்டம் *veṭṭāṭṭam,* பெ.(n.) தாய ஆட்டவகை; a game of dice.

*[வெட்டு + ஆட்டம்]*



வெட்டாந்தரை[1] *veṭṭāṉ-tarai,* பெ.(n.) காய்ந்திறுகிய நிலம் (யாழ்.அக.); dry hard ground, without vegetation.

*[வெட்டை + ஆ + தரை]*

வெட்டாந்தரை[2] *veṭṭāṉ-tarai,* பெ.(n.) கடலடிப்பரப்பு (தஞ்சை. மீன.); undepth sea.

வெட்டி[1] *veṭṭi,* பெ.(n.) 1. மண்வெட்டி; spade (w.). 2. வழி (சது.); path, road, way. *"ஒளியெலா நிரம்பிய நிலைக்கோர் வெட்டியே" (அருட்பா. vi, ஆற்றாமை கூறல், ii, 2).* 3. பழைய வரிவகை; 4. வெட்டியான் 1, 2 பார்க்க; see *veṭṭiyāṉ1, 2.*

*[வெட்டு → வெட்டி]*



**வெட்டி[2]** *veṭṭi,* பெ.(n.) பயனின்மை; uselessness. *'என்னை வெட்டிக்குப் பெற்று வேலிக்காலிற் போட்டிருக்கிறதா'?*

*[வெற்று → வெட்டு → வெட்டி]*

**வெட்டி[3]-த்தல்** *veṭṭi-,* செ.கு.வி.(v.i.) கடுகடுப்பாதல்; to be harsh. *"இத்தனை போது படுத்தின சிறுமையாலே வெட்டித்து" (திவ். திருநெடுந். 21, வ்யா. பக். 188).*

*[வெட்டு → வெட்டி]*

**வெட்டி[4]** *veṭṭi,* பெ.(n.) வெட்டிவேர் பார்க்க (யாழ்.அக.); see *veṭṭi-vēr.*

**வெட்டி[5]** *veṭṭi,* பெ.(n.) வேலை என்பதோடு இணைந்து வரும் சொல்; a word which occurs in combination with *vēlai.*

*[வெற்று → வெட்டு → வெட்டி]*

வெற்றுவேலை → வெட்டுவேலை

**வெட்டிக்காசு** *veṭṭi-k-kāšu,* பெ.(n.) பழைய வரிவகை; an ancient tax. (I.M.p.cg. 1068).

*[விள் → வெள் → வெட்டு → வெட்டி + காசு → வெட்டிக்காசு. (வே.க.பக்.151)]*

**வெட்டிக்கால்நண்டு** *veṭṭi-k-kāl-naṇḍu,* பெ.(n.) வலையை வெட்டுங் கடல் நண்டு (குமரி. மீன.); a sea crab that cuts net.

*[வெட்டு → வெட்டி + கால் + நண்டு]*



**வெட்டிக்குப்பெறு-தல்** *veṭṭikku-p-peṟu-,* செ.குன்றாவி.(v.t.) இலவசமாகக் கிடைத்தல்; to get grat is or for nothing.

*[வெற்றுக்குப் பெறுதல் → வெட்டிக்குப் பெறுதல்]*

**வெட்டிக்கொட்டு-தல்** *veṭṭi-k-koṭṭu-,* செ.குன்றாவி. (v.t.) 1. மண் முதலியன தோண்டி அப்புறப்படுத்துதல்; to dig and remove, as earth. 2. வெட்டிச்சாய்[3] பார்க்க; see *veṭṭi-c-cāy. 'அவன் வெட்டிக் கொட்டினானோ'?* 3. வெட்டிக்கொடு பார்க்க; see *veṭṭi-k-koḍu.*

*[விள் → வெள் → வெட்டு → வெட்டி + கொட்டு-தல்]*

**வெட்டிக்கொடு-த்தல்** *veṭṭi-k-koḍu-,* செ.குன்றாவி. (v.t.) 1. தாராளமாகக் கொடுத்தல்; to give liberally. 2. உதவுதல்; to help one with.

*[விள் → வெள் → வெட்டு → வெட்டி + கொடு]*

வெட்டிச்சாய்–த்தல் *veṭṭi-c-cāy-,* செ. குன்றாவி.(v.t.) 1. மரம் முதலியன முறித்து வீழ்த்துதல்; to cut down. 2. கொல்லுதல்; to kill out right. 3. பெருங்காரியெங்களைச் செய்தல்; to accomplish, as great things. 4. வெட்டிக்கொடு பார்க்க; see *veṭṭi-k-koḍu.*

*[விள் → வெள் → வெட்டு → வெட்டி + சாய்த்தல்]*

வெட்டிச்சோறு[1] *veṭṭi-c-cōṟu,* பெ.(n.) பழைய வரிவகை; an ancient tax (Insc.).

*[வெட்டி + சோறு]*

வெட்டிச்சோறு[2] *veṭṭi-c-cōṟu,* பெ.(n.) தண்டச்சோறு; food given to a useless mouth.

*[வெற்று + சோறு]*

வெட்டிது *veṭṭidu,* பெ.(n.) கடுமையானது; that which is harsh. *"வெட்டிதாக வார்த்தை சொல்ல" (ஈடு. 3, 5, 7).*

*[வெட்டி–மை → வெட்டிது]*

வெட்டிநிலம் *veṭṭi-nilam,* பெ.(n.) தரிசுநிலம்; waste land, as lying waste.

*[வெற்று + நிலம்]*

வெட்டிப்பயல் *veṭṭi-p-payal,* பெ.(n.) பயனற்றவன்; worthless fellow (w.).

*[வெட்டி + பயல்]*

வெட்டிப்பாட்டம் *veṭṭi-p-pāṭṭam,* பெ.(n.) பழைய வரி வகை; an ancient tax. *"வெட்டிப் பாட்டமும் ........ எப்பேர்ப்பட்ட இறைகளு முட்பட" (Insc).*

*[வெட்டி + பாட்டம்]*

வெட்டிப்பாடு–தல் *veṭṭi-p-pāḍu-,* செ.கு.வி. (v.i.) ஒரு புலவன் தன்னைப் பழித்துக் கூறிய சொற்களாலன்றிப் பிறவாறு அவனைப் பழித்துப்பாடுதல்; to compose a poem in retort, without using the opponent's qhraseology.

*[வெட்டி + பாடு]*

வெட்டிப்புடவை *veṭṭi-p-puḍavai,* பெ.(n.) பழையவரிவகை; an ancient tax. (S.I.I.i, 91).

*[வெட்டி + புடவை]*

வெட்டிப்புரட்டு–தல் *veṭṭi-p-puraṭṭu-,* செ.கு.வி.(v.i.) கடுமையாக வேலை செய்தல்; to work hard.

*[வெட்டு + புரட்டு → வெட்டிப்புரட்டு]*

வெட்டிப்பேச்சு *veṭṭi-p-pēccu,* பெ.(n.) வீணான பேச்சு; vain talk, useless speech. *'வெட்டிப்பேச்சுப் பேசாதே காரியத்தை முடி'.*

*[வெட்டி + பேச்சு]*

வெட்டிப்பேசு[1]–தல் *veṭṭi-p-pēcu-,* செ. குன்றாவி.(v.t.) 1. எதிர்த்துச் சொல்லுதல்; to retort. 2. கண்டித்துச் சொல்லுதல் (சங்.அக.); to rebuke.

*[வெட்டு பேசு → வெட்டிப்பேசு]*

வெட்டிப்பேசு[1]–தல் *veṭṭi-p-pēcu-,* செ.கு.வி. (v.i.) கடுமையாகப் பேசுதல்; to speak harshly.

*[வெட்டு பேசு → வெட்டிப்பேசு]*

வெட்டிமுறி[1]–த்தல் *veṭṭi-muṟi-,* செ.கு.வி. (v.i.) (இகழ்ச்சி தொனியில் கூறுகையில்)

பெரிதாகச் செய்தல்; do wonderful job. *'நீ வீட்டில் வெட்டி முறித்தது போதும் கடைக்குப் போய் இந்தச் சாமான்களை வாங்கி வா'.*

*[வெட்டி + முறி-,]*

**வெட்டிமுறி²-த்தல்** *vetti-muri-,* செ. குன்றாவி.(v.t.) வெட்டிச்சாய் 1,2,3 பார்க்க; see *vetti-c-cāy 1,2,3.*

*[வெட்டு + சாய் → வெட்டிமுறி]*

**வெட்டிமை** *vettimai,* பெ.(n.) 1. கொடுமை; harshless. 2. வன்பேச்சு; harshless of speech. *"உறவற்ற சொல்லாலே வெட்டிமை யெல்லாம் சொல்லவில்லை" (திவ்.திருப்பா. 15, வ்யா. பக். 149).* 3. சினம் (சங்.அக.); anger. 4. வெட்டியானூழியம்; service of vettiyan.

*[வெட்டு → வெட்டிமை]*

**வெட்டியார்பறையர்** *vettiyār-paraiyar,* பெ.(n.) சில விழா நிகழ்ச்சிக் காலங்களில் பறை கொட்டல் புரியும் பறையர்வகையார்; a sub-division of the paraiyas, who act as drummers on certain ceremonial occasions (M.M.655).

*[வெட்டியான் + பறையர் → வெட்டியார்பறையர்]*

**வெட்டியான்** *vettiyān,* பெ.(n.) 1. ஒரு வகைச் சிற்றூர் ஊழியக்காரன்; a village menial servant. 2. பிணஞ்சுடுவோன் (யாழ்.அக.); one who exemates corpres. 3. பயிர்களை வெட்டியழிக்கும் பூச்சிவகை; an insect that cuts off the leaves of crops (w.).

*[வெட்டு → வெட்டியான்]*

**வெட்டிரம்** *vettiram,* பெ.(n.) இலந்தை; indian plum-zizyphus jujuba.



**வெட்டிரும்பு** *vettirumbu,* பெ.(n.) இரும்பு வெட்டும் உளி (யாழ்.அக.); cold chisel.

*[வெட்டு + இரும்பு]*



**வெட்டிவரி** *vetti-vari,* பெ.(n.) பழைய வரிவகை; an ancient tax.

*[வெட்டி + வரி]*

**வெட்டிவார்த்தை** *vetti-vārttai,* பெ.(n.) வெட்டிப்பேச்சு பார்க்க; see *vetti-p-pēccu.*

*[வெட்டி + **Skt.** vārtta > த. வார்த்தை]*

**வெட்டிவீரன்** *vetti-viran,* பெ.(n.) சிறந்த வீரன் (யாழ்.அக.); man of supreme heroism.

*[வெற்றி → வெட்டி + வீரன்]*

**வெட்டிவேதினை** *vetti-vētinai,* பெ.(n.) பழைய வரிவகை; an ancient tax (I.M.p.Tj. 94).

*[வெட்டி + வேதினை]*

**வெட்டிவேர்¹** *vetti-vēr,* பெ.(n.) ஒரு வகைப் புல்லின் அடிவேர்; khus-khus whitish yellow root-vetiveria zizaniodes. it contains a resin and volatilc oil. it is a stimulent, diaphoretic and aromatic.

மறுவ. விழல்வேர், குறுவேர், விலாமிச்சை வேர், கஸ்கஸ்.

*[வெட்டு → வெட்டி + வேர்]*

**வெட்டிவேர்²** *vetti-vēr,* பெ.(n.) இலாமிச்சைப் புல் (பதார்த்த. 477); cuscus-grass. 2. கருப்பு இலாமிச்சை; black cuscus-grass.

*[வெட்டு → வெட்டி + வேர்]*

**வெட்டிவேலை** *vetti-vēlai,* பெ.(n.) பயனற்ற செயல்; futile enterprise.

*[வெற்றுவேலை → வெட்டிவேலை]*

**வெட்டிவை** *vetti-vai,* பெ.(n.) வெட்டிமை 1,2,3 பார்க்க (யாழ்.அக.); see *vettimai 1,2,3.*

*[வெட்டிமை → வெட்டிவை]*

**வெட்டு¹-தல்** *vettu-,* செ.குன்றாவி. (v.t.) 1. வாள் முதலியவற்றால் பிளவுபட எறிதல்; to cut, as with a sword or axe. *"அரியயன்றலை வெட்டி வட்டாடினார்" (தேவா. 369, 2).* 2. எழுத்து முதலியன பொறித்தல்; to engrave. 3. தோண்டுதல்; to dig, as a well. *'கிணறு வெட்ட பூதம் புறப்பட்டது'.* 4. தவச அளவில் தலை வழித்தல்; to strike of, as the top of a measure, in measuring grain. *'தலை வெட்டி அள'.* 5. தலைமுடியைக் கத்தரித்தல்; to crop, as the head. 6. துணி முதலியன துண்டித்தல்; to cut, as a cloth. 7. ஆட்டக் காயைப் பயனற்றதாக நீக்குதல்; to take away, as a piece in chess and other games. 8. புழுக்கடித்தல்; to injure, as insects. 9. அழித்தல்; to destroy. 10. மறுத்துரைத்தல்; retort, refute. *'எப்போதும் வெட்டியே பேசுகிறான்'.* 11. கடிந்து பேசுதல்; to speak harshly.

*[விள் → வெள் → வெட்டு-தல்]*

**வெட்டு²-தல்** *vettu-,* செ.கு.வி. (v.i.) 1. பளிச்சென மின்னுதல்; to flash suddenly, as light ring. 2. கடுமையாதல்; to be harsh. *"வெட்டிய மொழியினன்" (கம்பரா. குகப். 9).* 3. திடீரென்று நற்பேறு உண்டாதல்; to have a sudden stoke of fortune.

*[விள் → வெள் → வெட்டு-தல்]*

**வெட்டு³** *vettu,* பெ.(n.) 1. துண்டிப்பு; cutting. *'ஒரு வெட்டில் அந்த மரம் விழும்'.* 2. வெட்டுதலா லுண்டாம் புண் முதலியன; wound, cut. 3. எழுத்து முதலியன பொறிக்கை; engraving. *'கல்வெட்டுச் சாசனம்'.* 4. ஒருவகைப் பழைய சிறு காசு; an ancient small coin. *"தன்னுடைய வெட்டென்றும்" (பணவிடு. 143).* 5. தையல் துணி வெட்டுகை; cutting by tailor. 6. தலை முடி கத்திரிக்கை; cropping the hair. 7. ஆட்டக்காயை நீக்குகை; removing a piece in chess and other games. 8. தீடீரென வரும் நற்பேறு; stroke of fortune. *'அவனுக்குத் திடீரென ஒரு வெட்டு வெட்டிற்று'. 'இரண்டாயிர உருபா கிடைத்தது'.* 9. பாட்டு; ostentation. 10. வஞ்சனை; cunning. 11. நாயை ஓட்டும் போது கூறும் சொல்; an expression used

in driving away dogs.

*[விள் → வெள் → வெட்டு. (வே.க.பக்.151)]*

**வெட்டுக்கட்டை** *vettu-k-kattai,* பெ.(n.) கிளையற்ற அடிமரம்; stump.

*[விள் → வெள் → வெட்டு + கட்டை → வெட்டுக்கட்டை. (வே.க.பக்.151)]*

**வெட்டுக்கத்தி** *vettu-k-katti,* பெ.(n.) கத்திவகை; cleaver, chopper.

*[விள் → வெள் → வெட்டு + கத்தி → வெட்டுக்கத்தி. (வே.க.பக்.151)]*



**வெட்டுக்கல்** *vettu-k-kal,* பெ.(n.) சொறிக்கல்; laterite.

*[வெட்டு + கல்]*

**வெட்டுக்கன்று** *vettu-k-kanru,* பெ.(n.) பால் மறந்த கன்று (யாழ்.அக.); weaned calf.

*[விட்ட → வெட்ட → வெட்டு + கன்று]*

**வெட்டுக்காடு** *vettu-k-kādu,* பெ.(n.) திருத்தியமைத்த காட்டு நிலம்; jungle land cleared and brought under cultivation.

*[வெட்டு + காடு]*

**வெட்டுக்காயப்பச்சிலை** *vettu-k-kāya-p-paccilai,* பெ.(n.) செடிவகை; a plant-clitoria ternata.

*[வெட்டு + காயம் + பச்சிலை]*

**வெட்டுக்காயம்** *vettu-k-kāyam,* பெ.(n.) வெட்டினாலுண்டாம்புண்; cut, incised wond.

*[விள் → வெள் → வெட்டு + காயம் → வெட்டுக்காயம்]*

**வெட்டுக்கால்** *vettu-k-kāl,* பெ.(n.) மாட்டின் தீச்சுழிவகை (பெ.மாட்.); an inauspicious sign or mark in cattle.

*[வெட்டு + கால்]*

**வெட்டுக்கிளி** *vettu-k-kili,* பெ.(n.) ஒருவகைப் பூச்சி; grass hopper. (w.)

*[வெட்டு + கிளி]*



**வெட்டுக்குத்து** *vettu-k-kuttu,* பெ.(n.) கத்தி முதலிய கூரான படைக்கலங்களைக் கொண்டு செய்யுஞ் சண்டை; fighting with sharp weapons.

*[வெட்டு + குத்து]*

**வெட்டுக்குத்துப்பழி** *vettu-k-kuttu-p-pali,* பெ.(n.) வெட்டுப்பழி பார்க்க; see *vettu-p-pali.*

*[வெட்டுக்குத்து + பழி]*

வெட்டுக்குருத்து *veṭṭu-k-kuruttu,* பெ.(n.) வெட்டுப்பட்ட இடத்தில் தோன்றும் குருத்து (திவா.); shoot sprouting in a lopped tree.

*[வெட்டு + குருத்து]*

வெட்டுக்குருந்து *veṭṭu-k-kurundu,* பெ.(n.) செடிகளின் இளங்குருத்து அல்லது தண்டு; newly sprouted part of a plant.

*[வெட்டு + குருந்து]*

வெட்டுக்குளம்பு *veṭṭu-k-kuḷambu,* பெ.(n.) கால்நடையின் பிளவுற்ற குளம்பு (அபி.சிந்.); cloven hoofed.

*[வெட்டு + குளம்பு]*

வெட்டுக்கூர் *veṭṭu-k-kūr,* பெ.(n.) கூராணி; pointed nail.

*[வெட்டு + கூர்]*

வெட்டுக்கை *veṭṭu-k-kai,* பெ.(n.) குறுக்கு வடிவாக இணைக்கப்பட்ட கைமர அமைப்பு; a wooden instrument jointed horizontally.

*[வெட்டு + கை]*

வெட்டுகிற *veṭṭukiṟa,* பெ.எ. (adj.) கூரிய, ஊடுருவிச் செல்லுந் தன்மையுடையது; trenchant.

வெட்டுச்சட்டை *veṭṭu-c-caṭṭai,* பெ.(n.) பெண்கள் அணியும் ஒருவகை அங்கி; a kind of jacket for girls.

*[வெட்டு + சட்டை]*

வெட்டுச்சந்தம் *veṭṭu-c-candam,* பெ.(n.) சந்தனச் சிராய்; pieces of sandal wood.

*[வெட்டு + சந்தம்]*

வெட்டுடையாதி *veṭṭuḍaiyāti,* பெ.(n.) காட்டெருமை; wild buffalo.



வெட்டுண்டபுண் *veṭṭuṇḍa-puṇ,* பெ.(n.) வெட்டுக்காயம் பார்க்க; see *veṭṭu-k-kāyam.*

*[வெட்டுண்ட + புண்]*

வெட்டுண்(ணு)-தல் *veṭṭuṇ(ṇu)-,* செ.கு.வி. (v.i.) முற்படுதல்; to be cut.

*[வெட்டு + உண்]*

வெட்டுணி[1] *veṭṭuṇi,* பெ.(n.) திப்பிலி மூலம் (சா.அ.); root of long pepper-piper longum.

வெட்டுணி[2] *veṭṭuṇi,* பெ.(n.) 1. கீழ்ப்படியாத பிள்ளை; disobedient child. 2. கொடூரன்; villain.

*[வெட்டுண் + இ]*

வெட்டுத்தட்டு *veṭṭu-t-taṭṭu,* பெ.(n.) பறையின் வாய்வார்; ear of a drum (w.).

*[வெட்டு + தட்டு]*

வெட்டுத்தாக்கு *veṭṭu-t-tākku,* பெ.(n.) மண்ணெடுத்த குழி; excavated pit.

*[வெட்டு + தாக்கு]*

**வெட்டுத்தாவு** *vettu-t-tāvu,* பெ.(n.) குளம் ஏரி முதலியவற்றில் வெட்டப்பட்ட ஆழமான பகுதி; tank pit, deep portion of a tank.

*[வெட்டு + தாவு]*

**வெட்டுப்பகை** *vettu-p-pagai,* பெ.(n.) *வெட்டுப்பழி* பார்க்க; see *vettu-p-pali.* *'இட்டவன் இராவிட்டால் வெட்டுப்பகை'.*

*[வெட்டு + பகை]*

**வெட்டுப்படு-தல்** *vettu-p-padu-,* செ.கு.வி.(v.i.) *வெட்டுண்* பார்க்க; see *vettun.* *'வெட்டுப்பட்டாய் மகனே தலை நாளின் விதிப்படியே' (தனிப்பா. 1, 149, 54).*

*[வெட்டு + படு-,]*

**வெட்டுப்படை** *vettu-p-padai,* பெ.(n.) வாட்படை; army of swordsmen (w.).

*[வெட்டு + படை]*

**வெட்டுப்பழி** *vettu-p-pali,* பெ.(n.) தீராப்பகை; martal feud. *'அவனுக்கும் இவனுக்கும் வெட்டுப்பழி குத்துப்பழியாக இருக்கிறது'.*

*[வெட்டு + பழி]*

**வெட்டுப்பாக்கு** *vettu-p-pākku,* பெ.(n.) இரண்டாகப் பிளக்கப்பட்ட மட்டமான பாக்கு; split arecanut of inferior greality.

*[வெட்டு + பாக்கு]*

**வெட்டுப்பாக்குவெட்டி** *vettu-p-pākku-vetti,* பெ.(n.) பாக்குவெட்டிவகை; a kind of arecanut cracker.

*[வெட்டு + பாக்கு + வெட்டி]*



**வெட்டுப்பாய்ச்சி** *vettu-p-pāycci,* பெ.(n.) கருத்த கடல் மீன் (தஞ்சை.மீன.); a black-ish sea fish.

*[வெட்டு + பாய்ச்சி]*

**வெட்டுப்பூச்சி** *vettu-p-pūcci,* பெ.(n.) வெட்டுக்கிளி பார்க்க; see *vettu-k-kili.*

*[வெட்டு + பூச்சி]*

**வெட்டுமரம்** *vettu-maram,* பெ.(n.) கட்டடப் பணிகளுக்குப் பயன்படும் மரங்கள்; woods used for building activities.

*[வெட்டு + மரம்]*

**வெட்டுமருந்து** *vettu-maruntu,* பெ.(n.) வெட்டிக் கொள்ளப்படும் மருந்து வகை; medicinal herbs, roots, barks, etc., as obtained by cutting.

*[வெட்டு + மருந்து]*

**வெட்டுமாலை** *vettu-mālai,* பெ.(n.) வெட்டுத்தாக்கு பார்க்க; see *vettu-t-tākku.*

*[வெட்டு + மாலை]*

**வெட்டுமாறன்** *vettu-māran,* பெ.(n.) வெறிதரும் ஒருவகைப் பண்டம் (யாழ்.அக.); an intoxicant.

*[வெட்டு + மாறு → வெட்டுமாறன்]*

வெட்டுமுளை *veṭṭu-muḷai,* பெ.(n.) புதிதாக அடிக்கப்பட்ட காசு; money recently minted (w.).

*[வெட்டு + முளை]*

வெட்டுமுனை *veṭṭu-muṉai,* பெ.(n.) உளி, வாள் போன்ற தச்சுக்கருவிகளின் வெட்டும் கூர்மைப் பகுதி (தச்.பொறி.); sharp end of carpentry instiverts like saw, chisel etc.

*[வெட்டு + முனை]*

வெட்டுருக்கு *veṭṭurukku,* பெ.(n.) ஒன்பானுலகில் ஒன்று, அதாவது கருவங்கம்; one of nine metals lead.

*[வெட்டு + உருக்கு]*

வெட்டுரை[1] *veṭṭurai,* பெ.(n.) வெடு வெடுப்பான பேச்சு (யாழ்.அக.); cutting word, harsh speech.

*[வெட்டு + உரை]*

வெட்டுரை[2] *veṭṭurai,* பெ.(n.) வெட்டுரைப் பணம் பார்க்க; see *veṭṭurai-p-paṇam* (w.).

*[வெட்டு + உரை]*

வெட்டுரைப்பணம் *veṭṭurai-p-paṇam,* பெ.(n.) கள்ள நாணயம் (யாழ்.அக.); bad coin.

*[வெட்டுரை + பணம்]*

வெட்டுவாய் *veṭṭu-vāy,* பெ.(n.) 1. அறுபட்ட புண்வாய்; gash, opening of a cut. 2. பொருத்து; joining(w.).

*[வெட்டு + வாய்]*

வெட்டுவாலி *veṭṭu-vāli,* பெ.(n.) வெட்டுக்கிளி பார்க்க; see *veṭṭu-k-kiḷi.*(w.).

*[வெட்டுக்கிளி → வெட்டுவாளி → வெட்டுவாலி]*

வெட்டுவாள் *veṭṭu-vāḷ,* பெ.(n.) வெட்டுக் கத்திவகை (யாழ்.அக.); a kind of chopper.

*[வெட்டு + வாள்]*

வெட்டுவெட்டெனல் *veṭṭu-veṭṭeṉal,* பெ.(n.) 1. இனக்குறிப்பு; being angry. 2. கடுமைக் குறிப்பு (யாழ்.அக.); being harsh. 3. அச்சக் குறிப்பு; being frightened. 4. ஒளி விடற் குறிப்பு; dazzling (w.). *'வெயில் வெட்டுவெட்டென்றெறிக்கிறது'.*

*[வெட்டு + வெட்டு + எனல்]*

வெட்டுவேர் *veṭṭu-vēr,* பெ.(n.) வெட்டிவேர்[1] பார்க்க (பிங்.); see *veṭṭivēr*[1].

*[வெட்டு + வேர்]*

வெட்டுவேளாண்மை *veṭṭu-vēḷāṇmai,* பெ.(n.) அறுவடை; harvest (w.).

*[வெட்டு + வேளாண்மை]*

வெட்டுளி *veṭṭuḷi,* பெ.(n.) வெட்டிரும்பு பார்க்க; see *veṭṭirumbu.*

*[வெட்டு + உளி]*

வெட்டெனல்[1] *veṭṭeṉal,* பெ.(n.) கடுமைக் குறிப்பு; expr. of harshness. *'வெட்டெனப் பேசன்மின் (தேவா. 1241, 3).*

*[வெட்டை + எனல்]*

வெட்டெனல்[2] *veṭṭeṉal,* பெ.(n.) மௌனமாய் இசைத்தற்குறிப்பு; expr. of giving consent by silence. *"ஆய்ச்சி........... குறுங் கயிற்றாற் கட்ட வெட்டென் றிருந்தான்" (திவ். பெரியதி. 5, 9, 7).*

[வெற்றெனல் → வெட்டெனல்]

வெட்டெனவு veṭṭeṉavu, பெ.(n.) 1. கடுமை; severity, harshness. 2. வன்மை; hardness. 3. வன்மையானது; that which in severe or hard. *"வெட்டெனவு மெத்தெனவை வெல்லாவாம்" (மூதுரை. 33).*

[வெட்டெனல் → வெட்டெனவு]

வெட்டேறு veṭṭēṟu, பெ.(n.) போர்க் கருவிகள் (யாழ்.அக.); a weapon.

[விட்டேறு → வெட்டேறு]

வெட்டை[1] veṭṭai, பெ.(n.) 1. வெப்பம்; heat. *"அனல் வெட்டையாற் சுருண்டு" (இராமநா. உயுத். 14).* 2. நிலக்கொதி; heat of the ground (w.). 3. காமவிச்சை; passion, lust. *"காம வேட்டையிலே மதிமயங்கி" (தனிப்பா. i, 195, 10).* 4. நோய்வகை; gonorrhoea.

[வெட்கை → வெட்டை]

வெட்டை[2] veṭṭai, பெ.(n.) 1. வெறுமை; emptiness. 2. பயனின்மை; uselessness. *'தங்கம் வெட்டையாய்ப் போய்விட்டது'.* 3. காய்ந்திறுகிய நிலம்; hard ground. 4. அழிவு; ruin. *'அவன் தொட்டவிடவெல்லாம் வெட்டை தான்'.* 4. கடினத்தன்மை; hardness (w.).

[வெட்டி → வெட்டை]

வெட்டை[3] veṭṭai, பெ.(n.) வெளி (சங்.அக.); open land.

[வெளி → வெட்டை]

வெட்டைக்கிரந்தி veṭṭai-k-kiranti, பெ.(n.) வெட்டைச் சூட்டினாலேற்பட்ட கரப்பான்புண்; rashes caused by venereal disease.

[வெட்டை + கிரந்தி]

வெட்டைச்சுரம் veṭṭai-c-curam, பெ.(n.) உடம்பின் அதிக சூட்டினால் வந்த காய்ச்சல்; fever due to venereal heat.

[வெட்டை + சுரம்]

வெட்டைச்சூடு veṭṭai-c-cūḍu, பெ.(n.) பெண்ணின்பத்தினாலேற் பட்ட சூடு; heat caused by inter course-venereal heat.

[வெட்டை + சூடு]

வெட்டைநாள் veṭṭai-nāḷ, பெ.(n.) மிகுந்த சூடான தட்பவெட்பம்; very hot weather.

[வெட்டை + நாள்]

வெட்டைப்பிடிப்பு veṭṭai-p-piḍippu, பெ.(n.) 1. வளிப்பிடிப்பு நோய்வகை; rheumatism. 2. விதை வீக்கம்; inflammation of the testicles, orchitis.

[வெட்டை + பிடிப்பு]

வெட்டைமுடிதல் veṭṭai-muḍital, பெ.(n.) மேக வேட்டை தீர்தல்; cure of venereal affection.

[வெட்டை + முடிதல்]

வெட்டையனல் veṭṭai-yaṉal, பெ.(n.) வெட்டைச்சூடு; congenital heat.

[வெட்டை + அனல்]

வெட்டையாய்ப்போதல் veṭṭaiyāy-p-pōdal, பெ.(n.) தீய்ந்து போதல்; over heated not malleable, becoming brittle.

[வெட்டையாய் + போதல்]

வெட்டையிருமல் veṭṭai-yirumal, பெ.(n.) சூட்டினால் உண்டாகும் இருமல்; cough due

to excess heat.

*[வெட்டை + இருமல்]*

வெட்டைவாள்கூடு *veṭṭai-vāḷ-kūḍu,* பெ.(n.) 1. விட்டில் கட்டுகிற அரக்கு; lac taken from the wasp nest built in houses. 2. குழவிக்கூடு; waspnest.

*[வெட்டை + வாள் + கூடு]*

வெட்டைவெளி *veṭṭai-veḷi,* பெ.(n.) வெட்டவெளி [1] (சங்.அக.) பார்க்க; see *veṭṭa-veḷi* [1].

*[வெட்டை + வெளி]*

வெட்டொழிவு *veṭṭoḻivu,* பெ.(n.) நிலத்தைப் பயன்படுத்திய செலவிற்குக் கொடுக்கும் தொகை; allowance for improvements made on land by the tenant.

*[வெட்டு + ஒழிவு]*

வெட்பகடம் *veṭpa-kaṭam,* பெ.(n.) வெளிப்பகட்டு; outward show.

*[வெள் + பகடம்]*

வெட்பலாவிகம் *veṭpala-vikam,* பெ.(n.) வெள்வேல்; white babool.

*[வெட்பலா + விகம்]*

வெட்பாடம் *veṭ-pāḍam,* பெ.(n.) வாய்ப்பாடம்; lesson learnt merely by rote.

*[வெள் + பாடம் ]*

வெட்பாலை *veṭ-pālai,* பெ.(n.) 1. மரவகை (பிங்.); dyeing rosebay. 2. குடசப் பாலை; connesibark.

*[வெள் + பாலை]*

வெட்பாலையரிசி *veṭpālai-y-arisi,* பெ.(n.) மருந்துச் சரக்குவகை; a medicinal druk.

*[வெட்பாலை + அரிசி]*

வெட்பாலைவிதை *veṭpālai-vidai,* பெ.(n.) வெட்பாலரிசி பார்க்க; see *veṭpālarisi.*

*[வெட்பாலை + விதை]*

வெட்பாவட்டை *veṭpā-vaṭṭai,* பெ.(n.) 1. பாவட்டைவகை(வின்.); a species of pavattai plant. 2. ஆடாதோடை; a shrub adhathoda vesica.

*[வெள் + பாவட்டை]*



வெட்புகார் *veṭ-pugār,* பெ.(n.) மழை நீரற்ற மேகம் (யாழ்.அக.); rainless cloud.

*[வெள் + புகார்]*

வெட்புலம் *veṭ-pulam,* பெ.(n.) வெற்றிடம்; bare ground. *'வெட்புலந் தன்னிற் சோகமிஞ்சவே' (பாரத. நுச்சுப். 33).*

*[வெள் + புலம்]*

வெட்பூண்டு *veṭ-pūṇḍu,* பெ.(n.) வெள்ளைப் பூண்டு; garlic-allium satirum.

*[வெள் + பூண்டு]*



**வெட்பூல்**[1] *veṭ-pūl,* பெ.(n.) சாம்பல் நிறப் பூலா; a variety of poola.

*[வெள் + பூல்]*

**வெட்பூல்**[2] *veṭ-pūl²,* பெ.(n.) வெள்ளைப்பூலா பார்க்க; see *veḷḷi-p-pūlā.*

*[வெள் + பூல்]*

**வெட்பூலா** *veṭ-pūlā,* பெ.(n.) சாம்பல் நிறப் பூலா; a variety of poola.

*[வெள் + பூலா]*

**வெடங்குறுணி** *veḍaṅ-kuṟuṇi,* பெ.(n.) மர வகை; stag's-horn trumpet-flower tree.

**வெடவெட–த்தல்** *veḍa-veḍa-,* செ. குன்றாவி.(v.t.) (உடல்) அதிக அளவில் வேகத்துடன் நடுங்குதல்; shiver (markedly). *'அதிகாலையில் ஆற்றில் குளித்து விட்டு ஈர வேட்டியுடன் வெடவெடத்தபடி நின்றான்'. 'சிறு வயதில் அவரைப் பார்க்கும் போது எனக்கு கைகாலெல்லாம் வெட வெடக்கும்'.*

*[வெட + வெட–,]*

**வெடி**[1]**–த்தல்** *veḍi-,* செ.கு.வி. (v.i.) 1. பிள வடைதல்; to crack, to split. *"வெடிக்கின்ற விப்பியுணித்திலம்" (தஞ்சைவா. 232).* 2. ஓசையெழப் பிளவுறுதல்; to burst with a noise. 3. அதிர் வேட்டு முதலியன எழுதல்; to explode. 4. வெடியோசை யுண்டாதல்; to make an explosive noise. *"வெடித்த வேலை" (கம்பரா. இலங்கையெரி. 10).* 5. மலர்தல்; to blossom. *"வெடித்த போதெல்லாம் .. .. .. .. .. .. .. .. கொய்தான்" (செவ்வந்திப்பு. உறையூரழி. 47).* 6. வெளிக் கிளம்புதல்; to shoor forth, as tender leaves. *'இந்தச் செடியில் மூன்றிலை வெடித்திருக்கிறது'.* 7. விறைத்து மேலே கிளம்புதல்; to stiffen and stand upright, to be raised. *"வெடித்தவாற் சிறு கன்று" (அரிச்பு. விவாக. 267).* 8. பொறாமையால் துடித்தல்; to burst with envy.

*[விள் → வெள் → வெடி] (வ.மொ.வ. 259).*

**வெடி**[2] *veḍi,* பெ.(n.) 1. வேட்டு; explosion, as of a gun. 2. ஓசை; noise. *"மடிவிடு வீளையர் வெடிபடுத் தெதிர" (குறிஞ்சி. 161).* 3. இடி (சூடா.); thunder. 4. வேட்டெஃகம்; gun. 5. வாணம்; fire works. 6. வெடியுப்பு பார்க்க; see *veḍi-y-uppu.* 7. சிற்றேலம் (மூ.அ.); a kind of cardamom. 8. பிளவு; split, cleft. *"வெடியோடும் வெங்காணம்" (ஐந். ஐம். 36).* 9. பகை; hate. *"வெடிபடு போர்த்தொழில் காண" (சீவக. 776).* 10. கேடு; ruin. *"வெடிபடக் கடந்து" (மதுரைக். 233).* 11. அச்சம் (பிங்.); fear. 12. நிமிர்ந் தெழுகை; shooting up. *"வெடிவேய் கொள்வதுபோல" (புறநா. 302).* 13. தாவுகை; leaping. *"வெடிபோன பருவவாளை" (அரிச்.பு. விவாக. 218).* 14. நறும்புகை (பிங்.); fragrant incense. 15. தீய நாற்றம்; bad smell. *"வெடிதரு தலையினர்" (தேவா. 912, 6).* 16. நறுமணம்; good smell (w.). 17. கள் (சூடா.) ; boddy.

18. கவறாட்டத்து வழங்கும் ஒரு குழூஉக்குறி; a cant term, in dice-play. *"விஞ்சிய மகிழ்வொடு வெடியென் றோதுவார்" (கந்தபு. கயமுகனுற். 167).* 19. பெரும்பொய்; big lie.

*[விள் → வெள் → வெடி] (வ.மொ.வ. 259).*

வெடி³–தல் *veḍi-,* செ.கு.வி.(v.i.) 1. விடிதல்; to dawn, to break. *"சூபாதெல்லா மென்றூழ் வெடியாத போதிற் கொய்தான்" (செவ்வந்திப்பு. உறையூரழி. 47).* 2. நற்காலத்தால் துன்பம் நீங்கி துன்புறுதல்; to see better days. 3. முடிவு பெறுதல்; to come to an end.

*[விடி → வெடி]*

வெடி⁴ *veḍi,* பெ.(n.) விடிவெள்ளி (பிங்.); venus, as the morning star.

*[விடி → வெடி]*

வெடி⁵ *veḍi,* பெ.(n.) வெளி (பிங்.); open plain.

*[வெளி → வெடி]*

வெடிக்கச்செய்–தல் *veḍikka-c-cey-,* செ.கு.வி. (v.i.) முழக்கத்துடன் வெடிக்கச் செய்தல்; detonate.

*[வெடிக்க + செய்–,]*

வெடிக்கயிறு *veḍi-k-kayiṟu,* பெ.(n.) வெடி மருந்திலிடுந் திரிக்கயிறு; quick-match.

*[வெடி + கயிறு]*

வெடிக்குதல் *veḍikkutal,* பெ.(n.) வெடித்தல்; sprout.

*[வெடி → வெடிக்குதல்]*

வெடிகாரம் *veḍi-kāram,* பெ.(n.) உப்பு வகை (மூ.அ.); a kind of salt.

*[வெடி + காரம்]*

வெடிகிரந்தி *veḍi-kiranti,* பெ.(n.) மேகப் புண்வகை; venereal ulcer (w.).

*[வெடி + கிரந்தி]*

வெடிகுரல் *veḍi-kural,* பெ.(n.) 1. இயல்பு மாறிய குரல்; hoarse voice. 2. இசைக்கு மாறுபட்ட ஓசை; discordant note or voice. *"காகுளி கீழோசை வெடிகுரனாசி" (திருவிளை. விறகுவிற்ற. 30).*

*[வெடி + குரல்]*

வெடிசன்னி *veḍi-saṉṉi,* பெ.(n.) சன்னி வகை (யாழ்.அக.); a kind of canni.

*[வெடி + சன்னி]*

வெடிசிரிப்பு *veḍi-sirippu,* பெ.(n.) பெருஞ் சிரிப்பு (சிலப். 15, 64, உரை); loud laugh, boisterous laugh.

*[வெடி + சிரிப்பு]*

வெடிசூலை *veḍi-cūlai,* பெ.(n.) சூலை நோய்வகை; a kind of colic.

*[வெடி + சூலை]*

வெடித்தகுரல் *veḍitta-kural,* பெ.(n.) 1. ஓரத்த குரல்; loud voice (w.). 2. வெடி குரல் 1, 2 பார்க்க; see *veḍi-kural 1, 2.*

*[வெடித்த + குரல்]*

வெடித்தசொல் *veḍitta-col,* பெ.(n.) வெடுவெடுப்பான பேச்சு (யாழ்.அக.); harsh speech.

*[வெடித்த + சொல்]*

வெடித்துக்கிளம்பு–தல் *veḍittu-k-kiḷambu-,* செ.குன்றாவி.(v.t.) பல்வகையில் ஈற்றினை ஊடுருவி வெளிப்படுதல்; erupt.

[வெடித்து + கிளம்பு-,]

வெடிதீர்—தல் veḍi-tīr-, செ.கு.வி. (v.i.) குண்டு போடுதல்; to fire a shot (w.).

[வெடி + தீர்-,]

வெடிநாற்றம் veḍi-nāṟṟam, பெ.(n.) 1. தீ நாற்றம் (இராமநா. உயுத். 74); bad smell. 2. வெடிமருந்து சுட்ட நாற்றம்; smell of gun-powder when it explodes.

[வெடி + நாற்றம்]

வெடிப்பஞ்சு veḍi-p-pañju, பெ.(n.) வெடி மருந்தாகச் செய்த பஞ்சு; gun cotton.

[வெடி + பஞ்சு]

வெடிப்பட்டடை veḍi-p-paṭṭaḍai, பெ.(n.) பொட்டில் பார்க்க; see poṭṭil (w.).

[வெடி + பட்டடை]

வெடிப்படி—த்தல் veḍi-p-paḍi-, செ.கு.வி. (v.i.) 1. நாற்றம் வீசுதல்; to emit bad ordour. 2. வாந்திக் குணமுண்டாதல்; to be gualmish, as from a bad odour. 3. வெறுப்பாதல்; to be disgusting (w.).

[வெடிப்பு + அடி]

வெடிப்பந்துச்செண்டு veḍi-p-pandu-c-cendu, பெ.(n.) ஒருவகைப் பூச்செண்டு; a ball of flowers.

[வெடி + பந்து + செண்டு]

வெடிப்பந்துப்பூ veḍi-p-pandu-p-pū, பெ.(n.) வெடிப்பந்துச்செண்டு பார்க்க; see veḍi-p-pandu-c-cendu.

[வெடி + பந்து + பூ]

வெடிப்பரங்கி veḍi-p-paraṅgi, பெ.(n.) ஒரு வகை பரங்கிப் புண்; a venereal sore.

[வெடி + பரங்கி]

வெடிப்பலா veḍi-p-palā, பெ.(n.) ஆனைப் பலா; wild durian-cullenia excelsa.

[வெடி + பலா]

வெடிப்பாய்ப்பேசல் veḍippāy-p-pēšal, செ.குன்றாவி. (v.t.) வெறுப்பாய்ப் பேசல்; revolting speech, talk offensively.

[வெடிப்பாய் + பேசல்]

வெடிப்பில்லி veḍi-p-pilli, பெ.(n.) வெறுமையினால் உடம்பில் வெடித்து புண் உண்டாகச் செய்யும் ஒரு வகை நோய்; dis-ease caused by sorcery or witch craft, and it is marked by fissures and ulcers all over the body.

[வெடி + பில்லி]

வெடிப்பிளந்தகால் veḍi-p-piḷanda-kāl, பெ.(n.) வெடிப்புள்ள குதிகால்; fissured heel.

[வெடி + பிளந்த + கால்]

வெடிப்பு veḍippu, பெ.(n.) 1. ஓசையோடு வெடித்து எழுகை; explosion. 2. பிளப்பு (சங்.அக.); chin, gap. 3. தீ நாற்றம்; bad smell. 4. வெறுப்பு; disgust (w.). 5. குற்றமான சொல்; objectionable lan-guage. "பிறிதோர் வெடிப்பு முரைத் தறியேன்" (அருட்பா. vi, திருவருட்பெருமை. 10). 6. கண்டிப்பு; strictness. 7. சிறப்பு; splendour. 'காரியம் வெடிப்பாய் நடந்தது'. 8. அழிவு; ruin. "வெடிப்பு நின்பசுநிரை மேய்க்கப் போக்கு" (திவ். திருவாய். 10, 3, 6).

[வெடி → வெடிப்பு]

வெடுப்புக்காட்டுதல் *veḍuppu-k-kāṭṭutal,* பெ.(n.) சினப்புக் கொள்ளுதல்; exasperation.

*[வெடுப்பு + காட்டுதல்]*

வெடிப்புண்டகால் *veḍi-p-puṇḍa-kāl,* பெ.(n.) பித்தத்தினால் வெடிப்பாகி வலியைத் தரும் குதிகால்; fissured heel.

*[வெடிப்புண்ட + கால்]*

வெடிப்புபாண்டுக்கல் *veḍippu-pāṇḍu-k-kal,* பெ.(n.) சுவர் வெடிப்பிற் பொருத்தப் படுங்கல் சுவர்களில் வெடிப்பு அல்லது விரிசல் ஏற்படும்போது சுவர் அகலத்திற்கு சுமார் 1/2 அடி கணத்தில் வெடிப்பு வாக்கில் இரண்டு அல்லது மூன்று பாண்டுக்கற்கள் சுவரில் பொருத்தப்படும். சுவரில் பொருத்தப்படும் இக்கற்கள் சுவரில் மேலும் வெடிப்புகள் விழாமல் காக்கும் (பொ.வழ.); a stone inserted to thwart or arrest crakes.

*[வெடிப்பு + பாண்டுக்கல்]*

வெடிபடு-தல் *veḍi-paḍu-,* செ.கு.வி. (v.i.) 1. பேராசையுண்டாதல்; to explode with a loud noise. *"வெடிபட முழங்குஞ்சொல் லான்" (சீவக. 265).* 2. சிதறுதல்; to scatter. *"மாற்றார் வெடிபட் டோடல்" (புறநா. 93).* 3. அச்சமுறுதல்; to fear. *"வெடிபட்டு வீற்று வீற்றோடு மயிலினம் போல்" (கவைழி. 29).*

*[வெடி + படு-,]*

வெடிபலவன்[1] *veḍi-palavan,* பெ.(n.) பூடுவகை; a kind of plant whose seed-pods burst with noise(w.).

*[வெடி + பலவம் → வெடிபலவன்]*

வெடிபலவன்[2] *veḍi-palavan,* பெ.(n.) படுவங்கீரை (மலை.); a kind of greens.

*[வெடி + பலவன்]*

வெடிபாணவுப்பு *veḍi-pāṇa-vuppu,* பெ.(n.) வெடியுப்பு பார்க்க (விறலிவிடு. 619); see *veḍi-y-uppu.* *"இந்துப்பு வெடிபாணவுப்பு" (விறலிவிடு. 619).*

*[வெடி + பாணம் + உப்பு]*

வெடிபோடு-தல் *veḍi-pōḍu-,* செ.கு.வி. (v.i.) வெடிதீர் பார்க்க; see *veḍi-tīr.*

*[வெடி + போடு-,]*

வெடிமருந்து *veḍi-marundu,* பெ.(n.) வெடிப்பதாற் குண்டு முதலியவற்றை வெளிக் கிளப்பும் வாண மருந்து; gun powder (w.).

*[வெடி + மருந்து]*

வெடியல்[1] *veḍiyal,* பெ.(n.) வெடி[2] பார்க்க; see *veḍi*[2] (w.).

*[வெடி → வெடியல்]*

வெடியல்[2] *veḍiyal,* பெ.(n.) விடியல்; dawn.

*[வெடி → வெடியல்]*

வெடியாதி *veḍiyāti,* பெ.(n.) சீந்திற் கொடி; moon-creeper-menispermum cordifolium.



**வெடியுப்பீயம்** *veḍi-yuppīyam,* பெ.(n.) ஈயவுப்பு வகை; nitrate of lead.

[வெடியுப்பு + ஈயம்]

**வெடியுப்பு**[1] *veḍi-y-uppu,* பெ.(n.) 1. ஓர் உப்பு; salt petre-potassium nitrade. 2. பூநீரில் காய்ச்சும் ஐந்தாம் காய்ச்சலுப்பு; a salt which is prepared after fire process from fuller's earth. 3. பொட்டிலுப்பு; salt petre. 4. தலை முடியுப்பு; salt prepared from the human skull.

[வெடி + உப்பு]

**வெடியுப்பு**[2] *veḍi-uppu,* பெ.(n.) வெடி மருந்துக்கு உதவும் உப்பு (பதார்த்த. 1092); nitre, saltpeter.

[வெடி + உப்பு]

**வெடியுப்புக்கட்டி** *veḍiyuppu-k-kaṭṭi,* பெ.(n.) 1. கொறுக்காய்ப் புளி; a thorny tree-pithecolobium dulce. 2. சுரம்புன்னையின் வேர்ச்சாறு; juice of the root of *surappunnai.*

[வெடியுப்பு + கட்டி]

**வெடியுப்புக்கட்டு**[1] *veḍiyuppu-k-kaṭṭu,* பெ.(n.) 1. அம்பளங்காய்; a plant-spondias mangifera, consolidated petre. 2. தலையோட்டின் மாவு மேல் கீழ் வைத்து எரிக்க மேற்படி உப்பு கட்டும்; a single piece of salt petre is placed in the midst of cranial bone powder and heated it gets consolidated.

[வெடியுப்பு + கட்டு]

**வெடியுப்புக்கட்டு**[2] *veḍiyuppu-k-kaṭṭu,* பெ.(n.) வெடியுப்பை வேங்கை செய நீரில் போட்டுக் காயவைத்து எடுக்கக் கட்டிவிடும், கட்டியபின் கரிநெருப்பில் வைத்து உருக்கிட இளகி உருகும், இந்த வெடியுப்பு கட்டு மாந்தை அரிசி எடை 3 நாள் சாப்பிட குன்மம் போம்; the method of preparing consolidated salt-petre, and its alchemical use and medicinal use are mentioned above.

[வெடியுப்பு + கட்டு]

**வெடியுப்புக்கிரந்தி** *veḍi-yuppu-k-kiranti,* பெ.(n.) ஒரு வகை கழலை நோய்; a kind of tumour.

[வெடியுப்பு + கிரந்தி]

**வெடியுப்புச்சுண்ணம்** *veḍiyuppu-c-cuṇṇam,* பெ.(n.) ஒருவகை சுன்ன மருந்து; a kind of calcined medicine with basic property of calcium prepared out of salt-petre.

இதை இரண்டு மண்டலம் சாப்பிட இதனால் நரப்பணைப்பு போகும், சதை வலுத்திடும், தேகம் மெத்த நாளிருக்கும், வாசி திறப்படும், நரை திரை பறக்கும்.

[வெடியுப்பு + சுண்ணம்]

**வெடியுப்புத்தம்பி** *veḍiyuppu-t-tambi,* பெ.(n.) புளி நறளைக் கிழங்கு; root of a plantcissuc acida.

[வெடியுப்பு + தம்பி]

**வெடியுப்புத்திராவகம்**[1] *veḍiyuppu-t-tirāvagam,* பெ.(n.) 1. வெடியுப்பினால் இறக்கிய திராவகம்; nitric acid. 2. வாலை நீர்; a medicinal liquid obtained by distillation. 3. வாய் நீர்; saliva. 4. குமரி நீர்; urine of a female.

[வெடியுப்பு + **Skt.** *drdvaka* > த. திராவகம்]

வெடியுப்புத்திராவகம்[2] *vediyuppu-t-tirāvagam,* பெ.(n.) வெடியுப்பினின்றும் எடுக்கப்படும் வெடிய அமிலம்; nitric acid (w.).

*[வெடியுப்பு +* **Skt.** *drdvaka > த. திராவகம்]*

வெடியுப்புமண் *vediyuppu-man,* பெ.(n.) வெடியுப்புச் சத்துள்ள மண்; soil containing salt petre or potash.

*[வெடியுப்பு + மண்]*

வெடியுப்பைக்கண்டவர் *vediyuppai-k-kandavar,* பெ.(n.) வெடியுப்பைக் கட்டியவர்; one who has consolidated salt-petre.

வெடியோசைக்காரி *vediyōšai-k-kāri,* பெ.(n.) அண்டக்கல் பார்க்க; see *anda-k-kal.*

*[வெடியோசை + காரி]*

வெடிரசம் *vedi-rašam,* பெ.(n.) ஒரு வகை சாறு; fulminating mercury.

*[வெடி +* **Skt.** *rasa > த. இரசம்]*

வெடில் *vedil,* பெ.(n.) 1. வேட்டு; explosion, as of a gun. 2. தீய நாற்றம் (யாழ். அக.); foul smell.

*[வெடி → வெடில்]*

வெடிலுப்பு *vedil-uppu,* பெ.(n.) வெடியுப்பு பார்க்க; see *vedi-yuppu.*

*[வெடில் + உப்பு]*

வெடிவத்தை *vedi-vattai,* பெ.(n.) வெடி வைத்து மீன் பிடித்தற்குரியதோர் மரக்கலம் (முகவை. மீன.); a catamaran with deternators or explosives.

*[வெடி + வத்தை]*

வெடிவால் *vedi-vāl,* பெ.(n.) மாட்டுக் குற்றவகை (மாட்டுவை.சிந்.); to an inauspicious mark in the tail of cattle.

*[வெடி + வால்]*

வெடிவு *vedivu,* பெ.(n.) 1. விடிகை; dawning. 2. நற்காலம் வருகை; dawning of better days. *"வெடிவு காலம் வாராதா".* 3. விடியற்காலம்; dawn.

*[வெடி → வெடிவு]*

வெடிவை[1]–த்தல் *vedi-vai-,* செ.குன்றாவி. (v.t.) 1. துப்பாக்கியாற் சுடுதல்; to shoot with a gun. 2. கெடுக்கப் பார்த்தல்; to seek an opportunity to destroy or injure.

வெடிவை[2]–த்தல் *vedi-vai-,* செ.கு.வி. (v.i). 1. திகைக்கும்படி பொய்ச் சொற்கள் சொல்லுதல்; to make a surprisingly false statement. 2. சண்டைமூட்டுதல்; to foment or start a gwarrel. *'இல்லாவற்றை யெல்லாஞ் சொல்லி அவன் வெடிவைத்து விட்டான்'.*

*[வெடி + வை–,]*

வெடிவை[3]–த்தல் *vedi-vai-,* செ.கு.வி.(v.i.) திட்டம் போட்டுக் கெடுத்தல்; உலை வைத்தல்; to everthing to undermine ruin (S.O.). *'அதிகாரியிடம் ஏதோ சொல்லி என் வேலைக்கு வெடி வைத்து விட்டான்'.*

*[வெடி + வை–,]*

வெடுக்–என்று *veduk-enru,* வி.எ. (adv.) 1. எதிர்பாராத முறையில், திடீரென்று; unexpectedly, suddenly. *'பின்னால் வந்து கொண்டிருந்த நாய் வெடுக்கென்று காலைக் கடித்து விட்டது'.* 2. ஓரிரு சொற்களில் மனத்தை வருத்தும் படியான; sharply,

curtly. *'என்னால் முடியாது என்று வெடுக்கென்று பதில் சொன்னான்'.*

*[வெடுக் + என்று]*

வெடுக்கன் *vedu-k-kaṉ,* பெ.(n.) 1. கடுகடுப் புள்ளவன்; crabbed person (w.). 2. சினங் கொள்பவன் (யாழ்.அக.); angry person.

*[வெடுக்கு → வெடுக்கன்]*

வெடுக்கு[1] *vedukku,* பெ.(n.) 1. வெடு வெடுப்பு பார்க்க; see *vedu-veduppu.* 2. வெட்டெனவு பார்க்க (யாழ்.அக.); see *veṭṭeṉavu.*

*[வெடுக்கெனல் → வெடுக்கு]*

வெடுக்கு[2] *vedukku,* பெ.(n.) புலால் நாற்றம் (இலங்.), தீய நாற்றம்; foul odour.

வெடுக்குச்சொடுக்கு *vedukku-c-codukku,* பெ.(n.) வெடுவெடுப்பு பார்க்க; see *vedu-veduppu.*

*[வெடுக்கு + சொடுக்கு]*

வெடுக்குவெடுக்கெனல் *vedukku-vedukkeṉal,* பெ.(n.) வெடுக்கெனல் பார்க்க; see *vedu-k-keṉal.*

*[வெடுக்கு + வெடுக்கு + எனல்]*

வெடுக்குனுசொல்லுதல் *vedukkuṉu-collu-,* பெ.(n.) முகத்தை முறித்துக் கொண்டு சினத்துடன் பேசுவதை வெடுக் கென்று சொல்வார்கள்; an expression of wrath or anger. *'புள்ளெரிய எதுக் கெடுத்தாலும் இப்படியா வெடுக்கு வெடுக்குனு சொல்றது?'* என்பார்கள்.

*[வெடுக்குனு + சொல்லுதல்]*

வெடுக்கெனல் *vedu-k-keṉal,* பெ.(n.) 1. ஒடிதலின் ஓசைக்குறிப்பு; noise of breaking. *"அஷ்டதிக்கெச தந்தங்களை வெடுக்கென் றொடித்த" (இராமநா. ஆரணி. 20).* 2. திடீரெனக் குறிப்பு; suddenness and unexpectedness. 3. விரைவுக் குறிப்பு; quickness. *"காலின் முட்டைக்கவும் வெடுக் கென்றசைத் தெடுத்தால்" (தாயு. சுகவாரி. 5).* 4. பேச்சிற் கடுகடுப்பாயிருத்தற் குறிப்பு; churlishness in talk. *'வெடுக்கென்று பேசுகிறான்'.* 5. குத்து நோவுக் குறிப்பு; shooting pain.

*[வெடுக்கு + எனல்]*

வெடுத்தலாம் *veduttalām,* பெ.(n.) விடத்தேரை (இலத்.); ashy babool.

வெடுப்பு *veduppu,* பெ.(n.) வெடுவெடுப்பு பார்க்க (யாழ்.அக.); see *vedu-veduppu.* *'வெடுவெடுப்பு காட்டுதல்' (உ.வ.).*

*[வெடிப்பு → வெடுப்பு]*

வெடுபாலை *vedu-pālai,* பெ.(n.) பாலை– மரவகை; a tree.

வெடுவெடு–த்தல் *vedu-vedu-,* செ.கு.வி. (v.i.) 1. சினத்தாற்கோபத்தாற் படபடத்தல்; to quiver with rage. *"வெடுவெடுத் தெழுந்தவன் றனாற்றலை யழிக்கவல்லார்" (தேவா. 776).* 2. கடுகடுப்பாய்ப் பேசுதல்; to speak roughly.

*[வெடுவெடெனல் → வெடுவெடு–,]*

வெடுவெடுத்தசொல்லி *vedu-vedutta-colli,* பெ.(n.) கடுஞ்சொற் கூறுபவ–ன்–ள் (வின்.); one who is churlish in speech.

*[வெடுவெடு + சொல் → சொல்லி → வெடுவெடுத்தசொல்லி. 'இ' உடைமைப் பொருளீறு.]*

வெடுவெடுத்தவன் *veḍu-veḍuttavaṉ,* பெ.(n.) வெடுக்கன் பார்க்க (வின்.); see *veḍukkaṉ.*

*[வெடுவெடு + அன் → வெடுவெடுத்தவன்]*

வெடுவெடுப்பு *veḍu-veḍuppu,* பெ.(n.) கடுகடுப்பு (வின்.); crabbedness.

*[வெடுவெடு + பு → வெடுவெடுப்பு]*

வெடுவெடெனல் *veḍu-veḍeṉal,* பெ.(n.) 1. பெருஞ்சிரிப்பின் ஒலிக்குறிப்பு (பிங்.); laughing loudly. *"வெடுவெடென்ன நக்கு" (பதினொ. திருவாலங்கா. மூத்த. 2).* 2. நடுக்கக் குறிப்பு; shivering with cold. *'குளிர் வெடுவெடென்றாட்டுகிறது'.* 3. விரைவுக் குறிப்பு; being quick. 4. சினக் குறிப்பு; being angry, petulant. *'வெடுவெடென்று பேசுகிறான்'.* 5. ஒல்லியா யிருத்தல் குறிப்பு; being thin or slender.

*[வெடுவெடு + எனல்]*

வெண்அல்லி *veṇ-alli,* பெ.(n.) வெண்மை நிற நீர் அல்லி; white water lily.

*[வெண் (மை) + அல்லி]*

வெண்கட்டுக்கொடி *veṇ-kaṭṭu-k-koḍi,* பெ.(n.) சிறு கட்டுக் கொடி; small variety of coagulating creeper-cocculus villosus.

*[வெண் (மை) + கட்டு + கொடி]*

வெண்கடம்பு *veṇ-kaḍambu,* பெ.(n.) மரவகை; a kind of tree. *"வெண்கடம்பு பந்தணிந்தவே" (சீவக. 1650).*

*[வெண் (மை) + கடம்பு]*

வெண்கடல் *veṇ-kaḍal,* பெ.(n.) பாற்கடல் (பெருங். உஞ்சைக். 57, 113, அரும்.); sea of milk.

*[வெண் (மை) + கடல் → வெண்கடல்]*

வெண்கடலி *veṇ-kaḍali,* பெ.(n.) வெண் தேக்கு; white teak-lager-lroemia lanceolata.

*[வெண் (மை) + கடலி]*

வெண்கடலை *veṇ-kaḍalai,* பெ.(n.) ஒரு வகை கொண்டைக் கடலை; white bengal gram-cicer arietinum.

*[வெண் (மை) + கடலை]*

வெண்கடவன் *veṇ-kaḍavaṉ,* பெ.(n.) வெண்கொட்டை பார்க்க; see *veṇ-koṭṭai.*

*[வெண் (மை) + கடவன்]*

வெண்கடன் *veṇ-kaḍaṉ,* பெ.(n.) வெண்ணிலைக்கடன் பார்க்க (இ.வ.); see *veṇṇilai-k-kaḍaṉ.*

*[வெண் (மை) + கடன் → வெண்கடன்]*

வெண்கடிகம் *veṇ-kaḍigam,* பெ.(n.) வெப்பாலை பார்க்க; see *veppālai.*

*[வெண் (மை) + கடிகம்]*

வெண்கடுகு *veṇ-kaḍugu,* பெ.(n.) கடுகுவகை (பிங்.); white mustard.

*[வெண் (மை) + கடுகு → வெண்கடுகு]*

வெண்கடுப்பு *veṇ-kaḍuppu,* பெ.(n.) கண்ணோய் வகை; (M.L.) inflammation of the conjunctival membrane of the eye.

*[வெண் (மை) + கடுப்பு → வெண்கடுப்பு]*

வெண்கண் *veṇ-kaṇ,* பெ.(n.) வெங்கண் 6 பார்க்க (வின்.); see *veṅgaṇ.*

*[வெண் (மை) + கண் → வெங்கண்]*

**வெண்கண்டங்கத்தரி** *veṇ-kaṇḍaṅ-kattari,* பெ.(n.) வெள்ளைக் கண்டங் கத்திரி; thorny plant bearing white flowers and fruits-solanumjacquini.

*[வெண் (மை) + கண்டங்கத்தரி]*



**வெண்கண்டர்** *veṇ-kaṇḍar,* பெ.(n.) வெள்ளைத் துரிசி, பால் துத்தம்; white vitriol-zinc sulphate country.

*[வெண் (மை) + கண்டர் → வெண்கண்டர்]*

**வெண்கண்டல்** *veṇ-kaṇḍal,* பெ.(n.) 1. சிறு மரவகை (இலத்.); white mangrove, s.tr. 2. மரவகை; papery-barked obtuse-leaved mangrove,m.tr.

*[வெண் (மை) + கண்டல் → வெண்கண்டல்]*

**வெண்கண்ணன்** *veṇ-kaṇṇaṉ,* பெ.(n.) கழகக்காலப் புலவர், இவர் பெயர் பொதும்பில் கிழான் வெண்கண்ணனார் எனவும் காணப்படும்; a sangam poet another name was called *podumbil-kiḻāṉ-veṇkaṇṇaṉār.* இவர் அகநானூற்றில் 130–192–ஆம் பாக்களைப் பாடியுள்ளார்.

**வெண்கதிர்** *veṇ-kadir,* பெ.(n.) வெங்கதிரோன் பார்க்க (இலக்.அக.); see *veṅkadirōṉ.*

*[வெண் (மை) + கதிர்]*

**வெண்கதிரோன்** *veṇ-kadirōṉ,* பெ.(n.) கதிரவன் (வின்.); the sun.

*[வெங்கதிரோன் → வெண்கதிரோன்]*

**வெண்கமலம்** *veṇ-kamalam,* பெ.(n.) 1. வெண்டாமரை; white lotus. 2. நிரைய வகை (சிவதரு. சுவர்க்க நரக.114); a hall.

*[வெண் (மை) + கமலம்]*

**Skt.** Kamalam > த. கமலம்

**வெண்கமலை** *veṇ-kamalai,* பெ.(n.) கலைமகள் (இலக்.அக.); sarasvati.

*[வெண் (மை) + கமலை]*

**Skt.** Kamala > த. கமலை

**வெண்கயல்** *veṇ-kayal,* பெ.(n.) வெள்ளியைப் போலிருக்கும் ஒரு வெண்ணிறக்கெண்டை மீன் (சங்.நூல. மீன்கள்.); silvery kendai fish.

*[வெண் (மை) + கயல்]*



**வெண்கரப்பான்** *veṇ-karappāṉ,* பெ.(n.) பாற்கரப்பான் பார்க்க; see *pār-karappāṉ.*

*[வெண் (மை) + கரப்பான்]*

வெண்கரு *veṇ-karu,* பெ.(n.) முட்டையின் வெள்ளைக்கரு; the white of egg.

*[வெண் (மை) + கரு]*

வெண்கருங்காலி *veṇ-karuṅkāli,* பெ.(n.) 1. வெக்கால் பார்க்க; see *vekkāl.* 2. வெள்ளைக்கருங்காலி பார்க்க; see *vellai-k-karuṅkāli.*

*[வெண் (மை) + கருங்காலி]*

வெண்கருங்குழல் *veṭṭai-nāl,* பெ.(n.) தாமரைக் கிழங்கு; root of lotus.

*[வெண் (மை) + கருங்குழல்]*

வெண்கருச்சத்து *veṇ-karu-c-cattu,* பெ.(n.) முட்டையின் வெள்ளைக் கருவைப் போன்ற புரதம்; protein or albuminoids.

*[வெண் (மை) + கருச்சத்து]*

**Skt.** Sakthi > *த. சத்து.*

வெண்கருநீர் *veṇ-karunīr,* பெ.(n.) முட்டையின் வெண்கரு; white of an egg.

*[வெண் (மை) + கருநீர்]*

வெண்கரும்பு *veṇ-karumbu,* பெ.(n.) ஆலைக் கரும்பு; white sugancane-saccharum officinarum.

*[வெண் (மை) + கரும்பு]*

வெண்கருவிளை[1] *veṇ-karuviḷai,* பெ.(n.) வெள்ளைக் காக்கணம்; a twiner bearing white flowers-chitoria ternalia.

*[வெண் (மை) + கருவிளை]*

வெண்கருவிளை[2] *veṇ-karuviḷai,* பெ.(n.) வெண்காக்கணம் பார்க்க (சங்.அக.); see *veṇ-kākkaṇam.*

*[வெண்–மை + கருவிளை]*

வெண்கல் *veṇ-kal,* பெ.(n.) 1. வெள்ளைக் கல்; (C.E.M.) quartz. 2. சலவைக்கல் (வின்.); white marble.

*[வெண் (மை) + கல்]*

வெண்கல்கொட்டை *veṇkal-koṭṭai,* பெ.(n.) மலை வெண் கொட்டை; a hill tree-loptopetallum wightianum.

*[வெண் (மை) + கல் + கொட்டை]*

வெண்கல்லு *veṇ-kallu,* பெ.(n.) சலவைக் கல்; white stone-marble stone-cilabluster.

*[வெண் (மை) + கல் → கல்லு]*

வெண்கலக்குரல் *veṇkala-k-kural,* பெ.(n.) வெண்கலக் குழல் போன்று கணீரென ஒலிக்கும் குரல்; resounding voice, full throated voice.

*[வெண்கலம் + குரல்]*

வெண்கலநிமிளை[1] *veṇkala-nimiḷai,* பெ.(n.) நிமிளை; bismuth pyrites.

*[வெண்கலம் + நிமிளை]*

வெண்கலநிமிளை[2] *veṇkala-nimiḷai,* பெ.(n.) அம்பாரை; bismuth, a tonic.

*[வெண்கலம் + நிமிளை]*

வெண்கலப்பட்சி *veṇkala-p-paṭci,* பெ.(n.) பறவை வகை (இ.வ.); a bird.

*[வெண்கலம் + பட்சி]*

வெண்கலப்பாத்திரம் *veṇkala-p-pāttiram,* பெ.(n.) பொருட்கலங்களிலொன்று; vessel made of bell metal.

*[வெண்கலம் +* **Skt.** *pātra > த. பாத்திரம்]*

**வெண்கலப்பானை** *veṇkala-p-pāṉai,* பெ.(n.) வெண்கலத்தால் செய்யப்பட்ட பாத்திர வகை; pot of bronze.

*[வெண்கலம் + பானை]*

**வெண்கலபற்பம்** *veṇkala-paṟpam,* பெ.(n.) வெண்கலமாகிய உலோகத்தைப் புடமிட்டப் பொடி; white calcined powder of bell metal.

*[வெண்கலம் + பற்பம்]*

**வெண்கலம்**[1] *veṇ-kalam,* பெ.(n.) செம்பும் வெள்ளியமும் கலந்து உருக்கி உண்டாக்கும் கலப்பு உலோகம் (பிங்.); bell-metal, bronze, an alloy of copper and tin. *“வெண்கலப் பத்திரங் கட்டி விளையாடி” (திவ். பெரியாழ். 1, 9, 8).*

*[வெண் (மை) + கலம் ]*

**வெண்கலம்**[2] *veṇ-kalam,* பெ.(n.) நாள் (அக.நி.); day.

**வெண்கலி**[1] *veṇ-kali,* பெ.(n.) வெண்கடுகு; white mustard-brassica alba.

**வெண்கலி**[2] *veṇ-kali,* பெ.(n.) வெண் கலிப்பா பார்க்க (வின்.); see *veṇkalippā.*

*[வெண் (மை) + கலி]*

**வெண்கலிப்பா** *veṇkali-p-pā,* பெ.(n.) வெண்டளை பெற்றுவரும் கலிப்பாவகை; a kind of kali verse with *veṇ-ḍaḷai.*

*[வெண்கலி + பா]*

**வெண்கவி** *veṇ-kavi,* பெ.(n.) 1. வெண்பா; veṇpā verse. 2. பொருளாழமற்ற கவி; verse, not pregnant with ideas.

*[வெண் (மை) + கவி]*

**Skt.** kavi > த. கவி

**வெண்கழற்சி** *veṇ-kaḻaṟci,* பெ.(n.) வெள்ளைக் கழற்சிக் கொடி; thorny creeper bearing white bonduc nut-caesalpinia bonducella (alba.).

*[வெண் (மை) + சுழற்சி]*



**வெண்களமர்** *veṇ-kaḷamar,* பெ.(n.) 1. மருதநில மாக்கள் (தொல். சொல். 16, உரை); inhabitants of the agricultural tract. 2. வேளாளர் (அக.நி.); *vēlālas.*

*[வெண் (மை) + களமர்]*

**வெண்களி** *veṇ-kaḷi,* பெ.(n.) வெள்ளைக் கரும்பு; white sugarcane-saccharum officinarum.

*[வெண் (மை) + களி]*

**வெண்களிமண்** *veṇ-kaḷimaṇ,* பெ.(n.) வெள்ளைக் களிமண்; white clay-claymarl.

*[வெண் (மை) + களிமண்]*

**வெண்களிற்றரசு** *veṇ-kaḷiṟṟaraśu,* பெ.(n.) வேந்தனின் வெள்ளை யானை (ஐராவதம்); indra's elephant. *“வால் வெண்களிற்றரசு வயங்கிய கோட்டத்து” (சிலப். 5, 143).*

*[வெண் (மை) + களிறு + அரசு]*

வெண்கற்றாழை *veṇ-kaṟṟāḻai,* பெ.(n.) ஒரு வகைக் கடல் மீன். சாம்பல் நிறம் படர்ந்த இம்மீனின் முதுகுப் பரப்பு பச்சை நிறத்தினால் மேலும் கருமையாய்க் காணப்படும். உடலின் பக்கப் பகுதிகளும் வயிற்றுப் பரப்பும் வெண்ணிற முடனிருக்கும் (மீன. பொ.வ.); a kind of sea fish with dark colour on its back, because of combination of green and ash colours. It sides and lower portion are white in colour.

*[வெண் (மை) + கற்றாழை]*

வெண்கற்றுகள் *veṇ-kaṟṟukaḷ,* பெ.(n.) சலவைகற்பொடி; marble dust.

*[வெண் (மை) + கற்றுகள்]*

வெண்கற்றை *veṇ-kaṟṟai,* பெ.(n.) சவரிக் காரம் பார்க்க; see *cavari-k-kāram.*

*[வெண் (மை) + கற்றை]*

வெண்கன்னான் *veṇ-kaṉṉāṉ,* பெ.(n.) வெண்கல வேலை செய்யும் கன்னான்; smith working in bell-metal. *"வெண் கன்னானுக்குக் கைங்கர்யம்................. எல்லாம் வார்ப்பித்துப் புதிதாகப் பண்ணுகிறது" (கோயிலொ. 94).*

*[வெண் (மை) + கன்னான்]*

வெண்காக்கட்டான் *veṇ-kākkaṭṭāṉ,* பெ.(n.) வெள்ளைக்காட்டான்; a twining plant-clitoria ternatea (albiflora).

*[வெண் (மை) + காக்கட்டான்]*

வெண்காக்கணம் *veṇ-kākkaṇam,* பெ.(n.) வெள்ளைக்காக்கணம் (குறிஞ்சிப். 68, உரை); white-flowered-shell creeper.

*[வெண் (மை) + காக்கணம்]*

வெண்காக்கியம் *veṇ-kākkiyam,* பெ.(n.) வெள்ளை மிளகு; white pepper-piper nigrum.

*[வெண் + காக்கியம்]*

வெண்காக்கை *veṇ-kākkai,* பெ.(n.) வெண்காக்கணம் பார்க்க; see *veṇ-kākkaṇam.*

*[வெண் (மை) + காக்கை]*

வெண்காகம் *veṇ-kāgam,* பெ.(n.) வெள்ளைக் காக்கை; white crow.

*[வெண் (மை) + காகம்]*

வெண்காசம் *veṇ-kāšam,* பெ.(n.) கண்நோய்வகை (யாழ்.அக.); sore-eyes.

*[வெண் (மை) + காசம்]*

வெண்காசுக்கட்டி *veṇ-kāšu-k-kaṭṭi,* பெ.(n.) வெண்ணிறமான காசுக்கட்டி; white catachew-palladium.

*[வெண் (மை) + காசுக்கட்டி]*

வெண்காட்டுநங்கை *veṇ-kāṭṭu-naṅgai,* பெ.(n.) திருவெண்காட்டு நங்கை (அபி.சிந்.), திருத்தொண்டருடைய மனைவி; wife of *ciṟu-t-toṇḍar.* *'சிறுத்தொண்டருடைய தொண்டுகட்கு உடந்தையாயிருந்து மகனாகிய சீராளனை அறுத்துக் கறி சமைத்தாள்'.*

*[வெண் (மை) + காடு + நங்கை]*

வெண்காடு¹ *veṇ-kāḍu,* பெ.(n.) திருவெண்காடு என நாகை மாவட்டத்தில் உள்ள ஊர்; a village *tiruveṇkāḍu* in *Nāgai* district.

சீர்காழிக்குத் தென் கிழக்கே ஏழு – எட்டு கல் தொலைவில் இருக்கும் இடம் இது, முக்குளம். ஆல், வில்வம், கொன்றை என்ற மூன்று கோயில் மரங்கள் இக்கோயிலின் சிறப்பு. திருநாவுக்கரசர், *“பாகிடுவான் சென்றேனைப் பற்றி நோக்கிப் பரிசறித் தென் வளைகவர்ந்தார் பாவியேனை மேக முகிலரிஞ்சும் சோலை சூழ்ந்த வெண்காடு மேவிய விகிர்தனாரே” (249–4) எனப் பாடுகின்றார்.*

**வெண்காடு²** *veṇ-kāḍu,* பெ.(n.) ஒரு சிவதலம்; siva temple.

**வெண்காந்தள்¹** *veṇ-kāntaḷ,* பெ.(n.) வெள்ளைப் பூவுடைய காந்தள்; november flower plant bearing white flowers-gloriosa superba-opposite of *cheṅkāntaḷ.*

*[வெண் (மை) + காந்தள்]*

**வெண்காந்தள்²** *veṇ-kāntaḷ,* பெ.(n.) செடிவகை (புறநா. 90, உரை); white species of malabar glory lily.

*[வெண் (மை) + காந்தள்]*

**வெண்காமாலை** *veṇ-kāmālai,* பெ.(n.) ஒரு வகைக் காமாலை நோய்; a variety of jaundice.

*[வெண் (மை) + காமாலை]*

**வெண்காய்ச்சல்** *veṇ-kāyccal,* பெ.(n.) சிறு சுரம்; (M.L.)low fever.

*[வெண் (மை) + காய்ச்சல்]*

**வெண்காய்வேளை** *veṇ-kāy-vēḷai,* பெ.(n.) வெள்ளைக் கொள்ளுக் காய் வேளை; white species of *veḷḷai-koḷḷu-k-kāy-vēḷai,* a plant tephrosia purpurea.

*[வெண் (மை) + காய் + வேளை]*

**வெண்காயத்தாள்** *veṇ-kāyattāḷ,* பெ.(n.) வெங்காய இலை; onion leaves.

*[வெண்காயம் + தாள்]*

**வெண்காயம்** *veṇ-kāyam,* பெ.(n.)
1. பூடுவகை (வின்.); onion, allium cepa.
2. உள்ளி (யாழ்.அக.); garlic.

*[வெண் (மை) + காயம்]*

**வெண்காரக்களிம்பு** *veṇkāra-k-kaḷimbu,* பெ.(n.) களிம்பு மருந்து வகை; boric ointment.

*[வெண்காரம் + களிம்பு]*

**வெண்காரக்குடோரி** *veṇkāra-k-kuḍori,* பெ.(n.) பொன்னாக்கம் செய்யும் போது உருக்கு முகத்தில் பயன்படுத்துவது; a mixture of borax (act as a catalatic agent) added to aid quick melting of substances in alchemy.

**வெண்காரச்சுண்ணம்** *veṇkāra-c-cuṇṇam,* பெ.(n.) 1. முப்பூச் சுண்ணம்; a king like medicine prepared of the three salts. 2. வெங்காரத்தினின்றும் புடமிட்டெடுக்கும் ஒரு வகைச்சுண்ண மருந்து; a calcined powder prepared of borax.

*[வெண்காரம் + சுண்ணம்]*

**வெண்காரசிகம்** *veṇ-kārašigam,* பெ.(n.) வெப்பாலை; a tree.

*[வெண்காரம் + சிகம்]*

**வெண்காரசுத்தி** *veṇ-kāra-šutti,* பெ.(n.) பொரித்த வெண்காரம், பொரிகாரம்; purification of borax.

*[வெண்காரம் + சுத்தி]*

**வெண்காரத்தூள்** *veṇkāra-t-tūḷ,* பெ.(n.) களிம்புத் தூள்; powder of borax, boric powder.

*[வெண்காரம் + தூள்]*

**வெண்காரப்பதங்கம்** *veṇkāra-p-pataṅgam,* பெ.(n.) ஒரு விதப் பதங்கம்; boric acid.

*[வெண்காரம் + பதங்கம்]*

**வெண்காரம்**[1] *veṇ-kāram,* பெ.(n.) வெங்காரம்; borax. *"ஏலம் வெண்காரம்" (விறலிவிடு. 616).*

*[வெண்–மை + காரம் → வெண்காரம்]*

**வெண்காரம்**[2] *veṇ-kāram,* பெ.(n.) 1. பொரிகாரம்; borax-barborate of soda-sodium biboras. இது வாய்ப்புண் உதடு வெடிப்பு முலைக்காம்பு வெடிப்புகளுக்கு மேல் தடவலாம். 2. 3 மாதத்திய இருப்பிண்டம்; foetus of third month.

*[வெண் (மை) + காரம் → வெண்காரம்]*

**வெண்காரமது** *veṇkāra-madu,* பெ.(n.) வெண்காரத்தினின்று உருவாக்கிய தேன்; borax honey.

*[வெண்காரம் + மது]*

**வெண்காரலவணம்** *veṇkāra-lavaṇam,* பெ.(n.) சாறு வராத் தழைகளில் சாறு வரச் செய்யும் ஒரு வகை தயாரித்த வுப்பு; a prepared salt which is capable of extracting juice from brittle leaves which ordinarily don't yield juice.

*[வெண்காரம் + இலவணம்]*

**வெண்காரவுள்ளி** *veṇkāra-vuḷḷi,* பெ.(n.) வெள்ளை வெங்காயம்; white onion-allium cepe (alba).

*[வெண் (மை) + காரம் + உள்ளி]*

**வெண்காரி** *veṇkāri,* பெ.(n.) சினக்காரம்; alum.

**வெண்காரை**[1] *veṇ-kārai,* பெ.(n.) அரைத்த சுண்ணாம்பு (யாழ்.அக.); pounded chunam.

*[வெண் (மை) + காரை → வெண்காரை]*

**வெண்காரை**[2] *veṇ-kārai,* பெ.(n.) சீமைக்கொஞ்சி; micro-nuton extoca.

*[வெண் (மை) + காரை]*

**வெண்கால்** *veṇ-kāl,* பெ.(n.) யானை மருப்பினால் செய்த கட்டில் முதலியவற்றின் கால் (பெருங். உஞ்சைக். 33, 63); leg made of ivory, as of cot, etc.

*[வெண் (மை) + கால்]*

**வெண்காலி**[1] *veṇ-kāli,* பெ.(n.) வெட்காலி பார்க்க (பதார்த்த. 457); see *veṭ-kāli.*

*[வெண் (மை) + காலி]*

**வெண்காலி**[2] *veṇ-kāli,* பெ.(n.) மரவகை; a tree.

கருங்காலியை ஒத்தது. இதனால் பித்தம் அரத்த குற்றம் தினவு, குட்டம் கபம் போகும்.

**வெண்காலி**[3] *veṇ-kāli,* பெ.(n.) ஒருவகை மரம்; a kind of button tree.

*[வெண் (மை) + காலி]*

**வெண்காவல்** *veṇ-kāval,* பெ.(n.) வெறுங் காவல் (இ.வ.); simple imprisonment.

*[வெண் (மை) + காவல்]*

**வெண்காவளி** *veṇ-kāvaḷi,* பெ.(n.) வெள்ளைப் பூடு; garlic-allium sativum.

*[வெண் (மை) + காவளி]*

**வெண்காவிளை** *veṇ-kāviḷai,* பெ.(n.) கொடிவகை; white-flowered.

*[வெண்–மை + காவிளை]*

**வெண்காவெளி** *veṇ-kāveḷi,* பெ.(n.) வெள்ளைப்பூண்டு பார்க்க (மூ.அ.); see *veḷḷai-p-pūṇḍu.*

*[வெண் (மை) + காய் + உள்ளி]*

**வெண்காவேளை** *veṇ-kāvēḷai,* பெ.(n.) வெண்காவிளை பார்க்க (மூ.அ.); see *veṇ-kāviḷai.*

*[வெண் (மை) + காய்வேளை]*

**வெண்காழ்** *veṇ-kāḻ,* பெ.(n.) 1. மரத்தின் உள்ளீடு; core of tree. 2. முயலெறியுந் தடிவகை (ஐங்குறு. 421); a small stick, used in hunting rabbits.

*[வெண் (மை) + காழ்]*

**வெண்கிடை** *veṇ-kiḍai,* பெ.(n.) நெட்டிவகை; white-flowered sola. *"சிறுகோல் வெண்கிடை" (புறநா. 75).*

*[வெண் (மை) + கிடை]*

**வெண்கிடைச்சி** *veṇ-kiḍaicci,* பெ.(n.) வெண்கிடை பார்க்க (வின்.); see *veṇ-kiḍai.*

*[வெண் (மை) + கிடைச்சி]*

**வெண்கிலுகிலுப்பை** *veṇ-kilu-kiluppai,* பெ.(n.) பேய்மிரட்டு பார்க்க; see *pēy-mirattu.*

*[வெண் (மை) + கிலுகிலுப்பை]*



**வெண்கிழமை** *veṇ-kiḻamai,* பெ.(n.) வெள்ளிக்கிழமை; friday. *"வெண்கிழமை யம்பிகை தரும் வரத்தால்" (உபதேசகா. சிவவிரத. 322).*

*[வெண் (மை) + கிழமை]*

**வெண்கிளி** *veṇ-kiḷi,* பெ.(n.) வெள்ளைக் கிளி; white parrot.

*[வெண் (மை) + கிளி]*

**வெண்கிளுவை** *veṇ-kiḷuvai,* பெ.(n.) முள்ளில்லாக் கிளுவை மரவகை (வின்.); a species of thornless balsam.

*[வெண் (மை) + கிளுவை]*

**வெண்கிளுவைப்பட்டை** *veṇ-kiḷuvai-p-paṭṭai,* பெ.(n.) கிளுவைமரப்பட்டை; bark of balsa modeoran caudatum.

*[வெண் (மை) + கிளுவைப்பட்டை]*

**வெண்கீரி** *veṇ-kīri,* பெ.(n.) வெள்ளைக்கீரி பார்க்க (வின்.); see *veḷḷai-k-kīri.*

*[வெண் (மை) + கீரி]*

**வெண்கீரைத்தண்டு** *veṇ-kīrai-t-taṇḍu,* பெ.(n.) வெள்ளைக் கீரைத்தண்டு; amaranth stem.

*[வெண் (மை) + கீரை + தண்டு]*

**வெண்குகம்** *veṇ-kugam,* பெ.(n.) வெண்கடலை; சிறு கடலை; white bengal gram-cicer arietinum.

*[வெண் (மை) + குகம்]*

**வெண்குங்கிலியம்** *veṇ-kuṅgiliyam,* பெ.(n.) வெள்ளைக் குங்கிலியம்; conkany resin, boswellia serrata (glabra).

*[வெண் (மை) + குங்கிலியம்]*

**வெண்குஞ்சம்** *veṇ-kuñjam,* பெ.(n.) வெள்ளைக் குன்றி மணி; white jeweller's bead.

*[வெண் (மை) + குஞ்சம்]*

**வெண்குட்டசாந்தி** *veṇ-kuṭṭa-śānti,* பெ.(n.) வெண்குட்டத்தைப் போக்கும் மருந்து; வெள்ளைப் பூண்டை ஒன்பான்சாரத்துடன் அரைத்து வெண் குட்டத்தின் மேல் தடவ மாறும்; a remedy for leucoderma, sal ammoniac, and garlic are made into a paste and applied over the affected part.

*[வெண்குட்டம் + சாந்தி. சமந்தி → சாந்தி.]*

**வெண்குட்டம்** *veṇ-kuṭṭam,* பெ.(n.) உடலில் வெள்ளையாகப் படரும் குட்ட நோய்வகை (கடம்ப. பு. இல்லா. 118); white leprosy.

*[வெண் (மை) + குட்டம் → வெண்குட்டம்]*

**வெண்குட்டம்போக்கி** *veṇkuṭṭam-pōkki,* பெ.(n.) இலந்தைக்கட்டைத்தைலம் பார்க்க; see *ilandai-k-kaṭṭai-t-tailam.*

**வெண்குடக்கு** *veṇ-kuḍakku,* பெ.(n.) வெண்தேக்கு; white teak-lageristro-emia lanceslata.

*[வெண் (மை) + குடக்கு]*

**வெண்குடை** *veṇ-kuḍai,* பெ.(n.) வெண்கொற்றக்குடை பார்க்க; see *veṇ-korra-k-kuḍai.* *"மண்டலமின்செய் வெண்குடை" (சீவக. 860).*

*[வெண் (மை) + குடை]*

**வெண்குண்டுமணி** *veṇ-kuṇḍu-maṇi,* பெ.(n.) வெள்ளைக்குண்டுமணி; white jeweller's bead.

*[வெண் (மை) + குண்டுமணி]*

**வெண்குந்தி** *veṇ-kundi,* பெ.(n.) வெள்ளைக் குங்கிலியம்; conkany resin boswellia serrata (glabra.).

*[வெண் (மை) + குந்தி]*

**வெண்குந்திரிக்கபற்பம்** *veṇ-kundiri-k-ka tparpam,* பெ.(n.) பல் நோயைப் போக்கும் வெள்ளைக் குங்கிலிய பற்பம்; purified resin of boswellia serrata (glabra.) is powdered and used as baspam, it is purified by boiling with tender cocoanut-water.

*[வெண் (மை) + குந்திரிக்கற்பம்]*

**வெண்குப்பைமேனி** *veṇ-kuppai-mēni,* பெ.(n.) குப்பைமேனி; rubbish plant - acalypha indica.

*[வெண் (மை) + குப்பைமேனி]*



**வெண்குமுதம்**[1] *veṇ-kumudam,* பெ.(n.) வெண்ணெய்தல் (யாழ்.அக.) பார்க்க; see *veṇṇeydal.*

*[வெண் (மை) + குமுதம்]*

**வெண்குமுதம்**[2] *veṇ-kumudam,* பெ.(n.) 1. கண்களில் பஞ்சு போல் வெண்புள்ளி யுடைத்தாய்ப் பரவிக் குத்தலுடன் பார்வை மழுங்கி வலியை உண்டாக்கும் ஒரு வகைக் கண்ணோய்; disease of the pupil of the eye, marked by pain and which dots on the black of the eyes. 2. வெள்ளாம்பல்; flower-white lily white nymphane.

*[வெண் (மை) + குமுதம்]*

**வெண்குருக்குச்செடி** *veṇ-kurukku-c-ceḍi,* பெ.(n.) குருக்கு பார்க்க; see *kurukku.*

*[வெண் (மை) + குருக்குச்செடி]*

**வெண்குருகடம்** *veṇ-kurukaḍam,* பெ.(n.) உடம்பின் அரத்தத்தில் பரவியிருக்கும் அணுக்கிருமி; white corpuscle.

*[வெண் (மை) + குருகடம்]*

**வெண்குருதி** *veṇ-kurudi,* பெ.(n.) புண் முதலியவற்றிலிருந்து கசியும் ஊனீர், நிணநீர்; lymph.

*[வெண் (மை) + குருதி]*

**வெண்குருவை** *veṇ-kuruvai,* பெ.(n.) வெண்ணிறமான ஒரு குருவை நெல்; a variety of paddy.

*[வெண் (மை) + குருவை]*

**வெண்குவளை** *veṇ-kuvaḷai,* பெ.(n.) வெள்ளை அல்லி; indian white water lily.

*[வெண் (மை) + குவளை]*

**வெண்குறண்டி** *veṇ-kuṟaṇḍi,* பெ.(n.) வெள்ளைக் குறண்டி; a white variety of thorny shrub.

மறுவ. வெண் கொறண்டி.

*[வெண் (மை) + குறண்டி]*

**வெண்குறிஞ்சி** *veṇ-kuṟiñji,* பெ.(n.) பூநிறு; efflorescence grown on the soil of fuller's earth.

*[வெண் (மை) + குறிஞ்சி]*

**வெண்குன்றி** *veṇ-kuṉṟi,* பெ.(n.) 1. வெள்ளைக்குன்றி பார்க்க (வின்.); see *veḷḷai-k-kuṉṟi.* 2. அதிமதுரம்[2], 1 பார்க்க (மலை.); see *adimaduram.*

*[வெண் (மை) + குன்றி]*

**வெண்குன்று** *veṇ-kuṉṟu,* பெ.(n.) முருகன் எழுந்தருளியுள்ள இடங்களுள் ஒன்று (சுவாமிமலை) (சிலப்.குன்றக்குரவை. பாட்டுமடை. 1); a shrine sacred to skanda.

*[வெண் (மை) + குன்று]*

**வெண்கூதாளம்**[1] *veṇ-kūdāḷam,* பெ.(n.) நீர்த்தாளி; a plant. 2. தாளி; a creeper of convolrulus order.

*[வெண் (மை) + கூதாளம்]*

**வெண்கூதாளம்²** *ven-kūdāḷam,* பெ.(n.) வெண்டாளி [1] பார்க்க; see *vendāḷi.* *"வெண்கூதாளத்துத் தண்பூங் கோதையர்" (பட்டினப். 85).*

*[வெண் (மை) + கூதாளம்]*

**வெண்கூளி** *ven-kūḷi,* பெ.(n.) வெண்ணிறப் பருந்து; white eagle.

*[வெண் (மை) + கூளி]*

**வெண்கெண்டை** *ven-kendai,* பெ.(n.) வெண்மை நிறமுடையதும் 12 அங்குலம் வளர்வதுமான கெண்டை மீன் வகை; white carp, silvery, attaining 12 in. length.

*[வெண் (மை) + கெண்டை]*

**வெண்கை** *venkai,* பெ.(n.) 1. தொழில் செய்து பழகாத கை; hand unused to work. *"வெண்கை மகளிர்" (பதிற்றுப். 29, 6).* 2. சங்கு வளை யணிந்த கை (பதிற்றுப். 29, உரை); hand wearing conch bangles. 3. நளிநயம் செய்யாது தாளத்திற்கு இசைவிடும் கை; hand that beats time, without being engaged in gesticulation. *"முடிவிற் போக்கிய வெண்கை" (பதிற்றுப். 61, 7).* 4. வெள்ளிய கைப்பிடி; white-coloured handle. *"வெண்கை யொள்வாள்" (பெரும்பாண். 71).*

*[வெண் (மை) + கை]*

**வெண்கொக்கு** *ven-kokku,* பெ.(n.) வெள்ளைக்கொக்கு; white stork.

*[வெண் (மை) + கொக்கு]*



**வெண்கொடி** *ven-kodi,* பெ.(n.) 1. வெற்றிக் கொடி; flag of victory. *"விசய வெண்கொடி" (புறநா. 362).* 2. சரசுவதி (பெரியபு. தடுத்தாட். 97); sarasvadi.

*[வெண் (மை) + கொடி]*

**வெண்கொடிமூலம்** *ven-kodi-mūlam,* பெ.(n.) வெள்ளைபடமூலம்; root of leadwort bearing white flowers plumbage geylanica.

*[வெண் (மை) + கொடிமூலம்]*

**வெண்கொடிவேலி¹** *ven-kodivēli,* பெ.(n.) வெண்படமூலம்; keadwirt bearing white flowers-plumbago zeylanica.

*[வெண் (மை) + கொடிவேலி]*

**வெண்கொடிவேலி²** *ven-kodivēli,* பெ.(n.) கொடுவேலி வகை (சங்.அக.); a species of ceylon lead-wort.

*[வெண் (மை) + கொடிவேலி]*

**வெண்கொம்பன்பாகல்** *ven-kombaṉ-pāgal,* பெ.(n.) பாகல் கொடிவகை; a creeper bearing white long carilla fruits-momordica charantia.

*[வெண் (மை) + கொடி]*



வெண்கொம்புப்புல் *veṇ-kombu-p-pul*, பெ.(n.) பேய்ப்புடல் பார்க்க; see *pēy-p-puḍal*.

*[வெண் (மை) + கொம்புப்புல்]*

வெண்கொல் *veṇ-kol*, பெ.(n.) வெள்ளி (இலக்.அக.); silver, as the white metal.

*[வெண் (மை) + கொல்]*

வெண்கொள்ளு *veṇ-koḷḷu*, பெ.(n.) நரைக்கொள்ளு; white horse gram-dolichos biflorus.

*[வெண் (மை) + கொள்ளு]*

வெண்கொளுஞ்சி *veṇ-koḷuñji*, பெ.(n.) வெள்ளைக் கொழுஞ்சி; wild indigo bearing white flowers-tephrosia-purpurea.

*[வெண் (மை) + கொளுஞ்சி]*

வெண்கொற்றக்குடை *veṇ-koṟṟa-k-kuḍai*, பெ.(n.) அரசனது வெற்றி குறிக்கும் வெண்ணிறக் குடை (சிலப். 5, 173, உரை); white umbrella of victory, one of the theinsignia of royalty.

*[வெண் (மை) + கொற்றம் + குடை]*

வெண்கொற்றன் *veṇ-koṟṟaṉ*, பெ.(n.) கழகக் காலப் புலவர்; a sangam poet.

தன்னை வருத்தும் ஈயின் குரலோசையைக் கேட்ட அளவிலேயே ஆவு (பசு) நடுங்க அதன் கழுத்திலுள்ள மணி ஒலிக்கும் என்று இவர் ஈயின்பால் ஆவுக்குள்ள அச்சத்தைப் புலப்படுத்தி அம்மணியோசை தலைவிக்குக் காமநோயை மிகுப்பதை இந்த ஒரு குறுந்தொகைப் பாட்டில் காட்டியுள்ளார். *"சிறைபனி யுடைந்த சேயரி மழைக்கட் பொறையரு நோயொடு புலம்பலைக் கலங்கிப் பிறருங் கேட்குநர் உளர்கொல் உறை சிறந்து ஊதை தூற்றும் கூதிர் யாமத்து ஆனுளம் புலம்புதொ றுளம்பும் நாநவில் கொடுமணி நல்கூர் குரலே" (குறுந். 86).*

வெண்கோட்டம்[1] *veṇ-kōṭṭam*, பெ.(n.) 1. ஓமாலிகை முப்பத்திரண்டனுளொன்றான நறும்பண்டம் (சிலப். 4, 77, உரை); a fragrant substance one of 32 *ōmalikai*. g.v. 2. செடிவகை; Arabian costum. *"பால்வெண் கோட்டமும்" (பெருங். உஞ்சைக். 50, 29).* 3. சுற்று மதிற்சுவர்; pellitory root.

*[வெண் (மை) + கோட்டம்]*

வெண்கோட்டம்[2] *veṇ-kōṭṭam*, பெ.(n.) கோட்டம் பார்க்க; see *kōṭṭam*.

*[வெண் (மை) + கோட்டம்]*

வெண்கோடல் *veṇ-kōḍal*, பெ.(n.) வெண்காந்தள் பார்க்க; see *veṇ-kāntaḷ*. *"வெண்கோட விலைச்சுருளில்" (பெரியபு. ஆனாய. 16).*

*[வெண் (மை) + கோடல்]*

வெண்கோல் *veṇ-kōl*, பெ.(n.) வெள்ளி; silver.

*[வெண் (மை) + கோல்]*

**வெண்கோழி** *veṇ-kōḻi,* பெ.(n.) வெண்ணிறமான கோழி; white bowl.

*[வெண் (மை) + கோழி]*

**வெண்சங்கு** *veṇ-šaṅgu,* பெ.(n.) ஒரு மூலி, வெண் காக்கட்டான், வெண் காக்கணம்; a twining plant bearing white flowers.

*[வெண் (மை) + சங்கு]*

**வெண்சதைவிழியுந்தல்** *veṇ-šadai-viḻiyundal,* பெ.(n.) கண்களில் வெள்ளைச் சதையைப், படரச்செய்து வலியை உண்டாக்கும் ஒரு வகைக் கண்நோய்; appearance of white film over the black part of the eye, slowly shrounding it entirely and attended with acute pain.

*[வெண் (மை) + சதை + விழியுந்தல்]*

**வெண்சந்தனச்சிராய்** *veṇšandaṉa-c-cirāy,* பெ.(n.) வெள்ளைச் சந்தனக் கட்டையினின்று பிளந்த சிறு துண்டுகள்; small pieces of white sandal-shaving or scraping of white sandal.

*[வெண் (மை) + சந்தனச்சிராய்]*

**வெண்சந்தனம்** *veṇ-šandaṉam,* பெ.(n.) வெள்ளைச் சந்தனம்; white sandal tree-santanum album.

*[வெண் (மை) + சந்தனம்]*

**வெண்சலசம்** *veṇ-šalašam,* பெ.(n.) வெண்டாமரை; white lotus.

*[வெண் (மை) + சலசம்]*

**Skt.** salasa > த. சலசம்.

**வெண்சலசை** *veṇ-šalašai,* பெ.(n.) கலைமகள்; *šarašvati.*

**Skt.** *salasa* > த. சலசம்.



**வெண்சாந்து** *veṇ-šāndu,* பெ.(n.) சுண்ணாம்புச்சாந்து; lime mortar, as white.

*[வெண் (மை) + சாந்து]*

**வெண்சாமரம்** *veṇ-šāmaram,* பெ.(n.) வெண்சாமரை பார்க்க; see *veṇ-šāmarai.*

*[வெண் (மை) + சாமரம்]*

**வெண்சாமரை** *veṇ-šāmarai,* பெ.(n.) அரசச் சின்னமாகக் கொள்ளப்படும் கவுரி மானின் மயிர்க்கற்றை (பதார்த்த. 1475); white hair of the yak, used as fly-whisk and reckoned as one of the insignia of royalty.

*[வெண் (மை) + சாமரை]*

**வெண்சாய்மரை** *veṇ-šāy-marai,* பெ.(n.) வெண்சாமரை பார்க்க; see *veṇ-šāmarai.*

*[வெண்சாமரை → வெண்சாய்மரை]*

**வெண்சாயத்தான்** *veṇ-šāyattāṉ,* பெ.(n.) ஒருவகைக் கொடிய நஞ்சு; a kind arsenic.

**வெண்சாரணை** *veṇ-šāraṇai,* பெ.(n.) வெள்ளைச் சாரணை; it is useful for rejuvenation.

*[வெண் (மை) + சாரணை]*

**வெண்சாரை[1]** *veṇ-šārai,* பெ.(n.) சாரைப்பாம்பு; white rat-snake (w.).

*[வெண் (மை) + சாரை]*



**வெண்சாரை[2]** *veṇ-šārai,* பெ.(n.) 1. வழலை பார்க்க; see *valalai.* 2. சுக்கிலம்; semen. 3. அரியதாய் அகப்படும் வெள்ளைச் சாரைப்பாம்பு; white ral snake found rarely. 4. நஞ்சுக்கொடி; placental cord. 5. மருத்துவ உப்பு; the three universal salt.

*[வெண் (மை) + சாரை]*

**வெண்சாரைக்கொழுப்பு** *veṇ-šārai-k-koluppu,* பெ.(n.) 1. வழலை நாதவுப்பு; a kind of prepared salt. 2. வெள்ளைச் சாரைப் பாம்பின் கொழுப்பு; fat of white rat snake.

**வெண்சாரைச்சுன்னம்** *veṇ-šārai-c-cuṇṇam,* பெ.(n.) 1. நஞ்சக் கொடிச் சுன்னம், குடற் சுன்னம்; calcined navel cord.

**வெண்சாறடை** *veṇ-šāradai,* பெ.(n.) வெள்ளைச் சாரணை பார்க்க; see *vellai-c-cāraṇai.*

*[வெண் (மை) + சாறடை]*

**வெண்சித்தகத்தி** *veṇ-šitta-katti,* பெ.(n.) வெண்சிற்றகத்தி பார்க்க; see *veṇ-širra-katti.*

*[வெண் (மை) + சித்தகத்தி]*

**வெண்சித்திரமூலம்** *veṇ-šittira-mūlam,* பெ.(n.) வெண்கொடிவேலி பார்க்க; see *veṇ-kodi-veli.*

*[வெண் (மை) + சித்திரமூலம்]*

**வெண்சிவதை[1]** *veṇ-šivadai,* பெ.(n.) பூடுவகை (பதார்த்த. 1061); white bindweed.

*[வெண் (மை) + சிவதை]*

**வெண்சிவதை[2]** *veṇ-šivadai,* பெ.(n.) சிவதை வேர், கைப்பு துவர்ப்பு பித்தம் வயிற்றுப் பூச்சி போகும்; root of a plant ipomaea trupenthum. it is purgative the black variety is a drastic purgative.

**வெண்சிறுகடுகு[1]** *veṇ-širu-kadugu,* பெ.(n.) வெண்கடுகு; white mustard. *"நெய்யோடே வெண்சிறுகடுகையும் அப்பி" (திருமுரு. 228, உரை).*

*[வெண் (மை) + சிறு (மை) + கடுகு]*

**வெண்சிறுகடுகு[2]** *veṇ-širu-kadugu,* பெ.(n.) கதவுகளில் பூசப்படும், பேய்க்குப் பகையானது (சிலப்.); painted in doors to anest evil spirit.

*[வெண் (மை) + சிறு (மை) + கடுகு]*

வெண்சிவப்பு *veṇ-šivappu,* பெ.(n.) ஒரு நிறம்; russet.

*[வெண் (மை) + சிவப்பு]*

வெண்சிற்றகத்தி *veṇ-šiṯṯgatti,* பெ.(n.) வெண்செம்பை; a plant bearing white flower-cassia cupidata.

*[வெண் (மை) + சிற்றகத்தி]*

வெண்சிறுமா *veṇ-šiṟumā,* பெ.(n.) கண்ணோய்க்குப் பயன்படுத்தப்படும் ஒரு மருந்து; a medicine used for the diseases of the eye.

வெண்சீடம் *veṇ-šīḍam,* பெ.(n.) கொட்டைக் கரந்தை பார்க்க; see *koṭṭai-k-karandai.*

வெண்சீந்தில் *veṇ-šīndil,* பெ.(n.) அமுதவல்லிக் கொடி; moon creeper-tinosper-mum cordifolia.

வெண்சீர் *veṇ-šīr,* பெ.(n.) வெண்பாவுரிச்சீர் (இலக். வி. 718); a metrical foot.

*[வெண் (மை) + சீர்]*

வெண்சீர்வெண்டளை *veṇšīr-veṇḍaḷai,* பெ.(n.) வெண்பாவுரிச் சீர் முன் நேர் வந்து ஒன்றுந் தளைவகை (காரிகை. உறுப். 10); a kind of talai in which a *veṇpā-v-uri-c-cīr* foot succeeds another foot beginning with *nēr.*

*[வெண்சீர் + வெண்டளை]*

வெண்சீரகம் *veṇ-šīragam,* பெ.(n.) சீரகம்; cumin seed.

*[வெண் (மை) + சீரசம்]*



வெண்சுக்கான் *veṇ-šukkāṉ,* பெ.(n.) வெள்ளைச் சுக்கான்கல், இது ஒரு துணைச்சாறு பொருள்; white lime stone, one of the 120 natural substances.

*[வெண் (மை) + சுக்கான்]*

வெண்சுக்கான்கல் *veṇ-cukkāṉ-kal,* பெ.(n.) சுக்கான் கல்வகை; a kind of kunkar, a lime-stone (w.).

*[வெண் (மை) + சுக்கான் + கல்]*

வெண்சுக்கிரன் *veṇ-cūkkiraṉ,* பெ.(n.) குழந்தைகளின் கருவிழியைச் சுற்றிலும் நெருப்பு நிறத்தையுண்டாக்கும் ஒரு கண்ணோய்; an eye disease in children causing redness around the black of the eye.

வெண்சுடர் *veṇ-šuḍar,* பெ.(n.) வெண்கதிரோன் பார்க்க; see *veṇ-kadirōṉ* (w.).

*[வெண் (மை) + சுடர்]*

வெண்சுண்டை *veṇ-šuṇḍai,* பெ.(n.) வெண்மைநிறமுள்ள சுண்டை; white variety of solanum torvum.

*[வெண் (மை) + சுண்டை]*

**வெண்சுண்ணத்தி** *veṇ-cuṇṇatti,* பெ.(n.) சீனக்காரம்; alum.

**வெண்சுதை** *veṇ-cudai,* பெ.(n.) சுவர்களிலும் மேற்கட்டியிலும் உருவங்கள் செய்யப் பயன்படும் அரைத்த சுண்ணாம்பு; hime mortar used for shaping figures on walls and outer structure.

*[வெண் (மை) + சுதை]*

**வெண்சுதைக்குன்று** *veṇ-šudai-k-kuṉṟu,* பெ.(n.) செய்குன்று வகை; a kind of artificial mound. *"தலைத்தோன் றருவிய வெண்சுதைக் குன்றொடு வேண்டுவ பிறவும்"* (பெருங். உஞ்சைக். 33, 5).

*[வெண் (மை) + சுதை + குன்று]*

**வெண்சுரம்** *veṇ-šuram,* பெ.(n.) ஒரு வகைச் சுரநோய்; a variety of fever.

*[வெண் (மை) + சுரம்]*

**வெண்சுருமாக்கல்** *veṇ-šurumākkal,* பெ.(n.) ஒரு வகை மருந்துக்கல்; white antimony.

**வெண்செந்துறை** *veṇ-šenduṟai,* பெ.(n.) இரண்டடிகள் தம்முள் அளவொத்து வருஞ் செய்யுள் வகை (வீரசோ. யாப். 14); couplet of lines of equal feet.

*[வெண் (மை) + செந்துறை]*

**வெண்செம்பை** *veṇ-šembai,* பெ.(n.) வெண்சிற்றகத்தி பார்க்க; see *veṇ-šiṟṟakatti.*

*[வெண் (மை) + செம்பை]*

**வெண்செவ்வந்தி** *veṇ-ševvanti,* பெ.(n.) வெள்ளை சாமந்திப்பூ; white clarysanthemum flower.

*[வெண் (மை) + செவ்வந்தி]*

**வெண்சேல்** *veṇ-šēl,* பெ.(n.) வெண்ணிற முடையதோர் ஆற்று மீன் (தஞ்சை. மீன.); a whitish river fish.

*[வெண் (மை) + சேல்]*



**வெண்சோளம்** *veṇ-šōḷam,* பெ.(n.) சோளவகை; species of great millet.

*[வெண் (மை) + சோளம்]*



**வெண்சோறு** *veṇ-šōṟu,* பெ.(n.) வெள்ளரிசியாற் சமைத்த வெறுஞ் சோறு; white rice looked but unmixed with sauce or condiment. *"வெண்சோற்றுப் புக்கடகு வைக்க"* (தனிப்பா. 1, 273, 14).

*[வெண் (மை) + சோறு]*

வெண்டகரை[1] *veṇḍakarai,* பெ.(n.) வெள்ளைப் பூவுடைய தகரை; white flowered cassia tora.

*[வெண் (மை) + தகரை]*

வெண்டகரை[2] *veṇḍakarai,* பெ.(n.) மரவகை; a kin of tree, cassia glauca.

*[வெண் (மை) + தகரை]*

வெண்டணக்கு *veṇḍaṇakku,* பெ.(n.) வெள்ளைத்தணக்கு; white catamaran tree.

*[வெண் (மை) + தணக்கு]*

வெண்டயம் *veṇḍayam,* பெ.(n.) வெண்டையம் பார்க்க; see *veṇḍayam.* *"துரோகரைக்காய் வெண்டயத்தாற் சூபெனை"* *(விறலிவிடு. 30).*

*[வெண்டையம் → வெண்டயம்]*

வெண்டரளமேனி *veṇḍaraḷa-mēṉi,* பெ.(n.) வெள்ளை நஞ்சுவகை; a kind of arsenic.

வெண்டலை *veṇḍalai,* பெ.(n.) 1. தசைநீங்கி எலும்பு மாத்திரமாகியதலை; fleshless, bony head. *"வெண்டலையுட்கச் சிரித்து"* *(நாலடி, 50).* 2. தலையோடு; skull. *"படுவெண்டலையிற் பலிகொண்டுடில்வீர்"* *(தேவா. 946, 3).* 3. வெண்டலைக்கடன் பார்க்க; see *veṇḍalai-k-kaḍaṉ.*

*[வெண் (மை) + தலை]*

வெண்டலைக்கடன் *veṇḍalai-k-kaḍaṉ,* பெ.(n.) வெண்ணிலைக்கடன் பார்க்க; see *veṇṇilai-k-kaḍaṉ.*

*[வெண்ணிலை → வெண்டலை + கடன்]*

வெண்டளை *veṇḍaḷai,* பெ.(n.) வெண்பாவுக்குரிய தளை; a kind of *taḷai* peculiar to *veṇpā* verse.

*[வெண் (மை) + தளை]*

வெண்டன் *veṇḍaṉ,* பெ.(n.) வெண்டேக்கு; white teak-legerstramiq lancealata.

*[வெண் (மை) → வெண்டன்]*

வெண்டாது *veṇḍādu,* பெ.(n.) 1. திருநீறு (பிங்.); sacred ashes. 2. வெள்ளி (இலக். அக.); silver.

*[வெண் (மை) + தாது]*

வெண்டாமரை *veṇḍāmarai,* பெ.(n.) வெண்மை நிறமான தாமரைப்பூ; white lotus. *"செந்தாமரை வெண்டாமரை" (தக்கயாகப். 319).*

*[வெண் (மை) + தாமரை]*

வெண்டாமரைமகள் *veṇḍāmarai-magaḷ,* பெ.(n.) நாமகள் (பிங்.); sarasvati.

*[வெண்டாமரை + மகள்]*

வெண்டாமரையாள் *veṇḍāmarai-y-āḷ,* பெ.(n.) வெண்டாமரைமகள் பார்க்க (திவா.); see *veṇḍāmarai-magaḷ.*

*[வெண்டாமரை + ஆள்]*

வெண்டாவி *veṇḍāvi,* பெ.(n.) பட்டினி கிடந்து பின் உண்கையாலுண்டாம் அசதி; drowsiness caused by taking food after a fast (w.).

*[வெண்டு + ஆவி]*

வெண்டாவியத்துவருதல் *veṇḍāviyattu-varudal,* பெ.(n.) மிகவும் களைத்துச் சோர்வடைந்த நிலை; extreme tiredness.

*[வெண்டாவியுற்று → வெண்டாவியத்து + வருதல்]*

**வெண்டாழிசை** *veṇḍāḻišai,* பெ.(n.) மூன்றடியாய் வேற்றுத்தளை விரவி ஈற்றடி முச்சீரான் இறுவதாகவேனும் சிந்தியல் வெண்பா ஒரு பொருண் மேல் மூன்றடுக்கி வருவதாக வேனுமுள்ள வெண்பாவின் இனம் (யாப்.வி. 66, உரை); a kind of stanza which either consists of a single triplet of which the first two lines are of four each and the last line is of three feet or forms one of a set of three *cintiyal-veṇpa* bearing on a single theme.

*[வெண் (மை) + தாழிசை]*

**வெண்டாழை[1]** *veṇḍāḻai,* பெ.(n.) வெள்ளைத் தாழை மரம்; white pandanus or screw pine-pandanus odoratissimus its white flower has no smell.

*[வெண் (மை) + தாழை]*

**வெண்டாழை[2]** *veṇḍāḻai,* பெ.(n.) தாழை வகை; a kind of *tāḻai.* *"வெண்டாழை பூத்து விளக்கெரிய" (தனிப்பா. 1, 153, 62).*

*[வெண் (மை) + தாழை]*

**வெண்டாளி[1]** *veṇḍāḷi,* பெ.(n.) தாளிவகை (திருமுருகு. 192, உரை); white catamaran tree.

*[வெண் (மை) + தாளி]*

**வெண்டாளி[2]** *veṇḍāḷai,* பெ.(n.) இறந்துபட்ட கடைக்கழக நூல்களுள் ஒன்று (இறை, 1, உரை, பக். 5); a poem of the middle sangam, not now extent.

**வெண்டான்** *veṇḍāṉ,* பெ.(n.) வெண்டேக்கு பார்க்க; see *veṇḍēkku.*

*[வெண்டன் → வெண்டான்]*

**வெண்டி[1]** *veṇḍi,* பெ.(n.) 1. இன்மையால் வருந்துபவன்; one who is in great want. 2. வீண்; useless.

*[வெண்டு → வெண்டி]*

**வெண்டி[2]** *veṇḍi,* பெ.(n.) ஆடை நெய்யும் பாவகை; warp after it has been sized.

*[வெண்டு → வெண்டி]*

**வெண்டி[3]** *veṇḍi,* பெ.(n.) வெண்டை பார்க்க; see *veṇḍai* (w.).

*[வெண்டு → வெண்டி]*

**வெண்டி[4]** *veṇḍi,* பெ.(n.) வெண்டிக்காய்; a vegetable fruit, ladies finger-hibiscus esculentus.

*[வெடி → வெண்டி. ஒ.நோ. கடி → கண்டி.]*

**வெண்டிக்காய்[1]** *veṇḍi-k-kāy,* பெ.(n.) வெண்டை பார்க்க; see *veṇḍai.*

*[வெண்டி + காய்]*

**வெண்டிக்காய்[2]** *veṇḍi-k-kāy,* பெ.(n.) வெண்டிச் செடியின் காய்; ladies finger.

*[வெண்டி + காய்]*

**வெண்டிரை** *veṇḍirai,* பெ.(n.) கடல்; sea. *"தகைபெற்ற வெண்டிரை" (கலித். 124).*

*[வெண் (மை) + திரை]*

**வெண்டு[1]-தல்** *veṇḍu-,* செ.கு.வி. (v.i.) 1. வற்றிப் போதல்; to dry, as in the sun. *"வெண்டிப் பழுத்தெழும்பிய முதுகும்" (திருப்பு. 802).* 2. களைத்தல்; to be exhausted (w.). *'வெண்டி வெறித்து வந்தான்'.* 3. இல்லாததற்கு ஆசைப்படுதல்; to be in great want, to hanker. *'அவன்*

*சோற்றுக்கு வெண்டிக்கிடக்கிறான்'. (உ.வ.).*

*[விள் → வெள் → வெண்டு → வெண்டுதல். (இ.வ.) (வே.க.பக்.120). வெண்டுதல் = இளைத்துப்போதல்.]*

வெண்டு² *veṇḍu,* பெ.(n.) 1. உட்டுளை; hollowness, as of a pipe (w.). 2. மரங்களின் உள்ளீட்டைப் போக்கும் நோய்வகை; a disease which causes hollowness in trees. *"உயிரை வெண்டார் குழலாக்க வேண்டுமோ" (திருக்காளத். உலா, 567).* 3. கரும்பு (மலை.); sugarcane. 4. நெட்டி; sola pith. 5. கடுக்கன்புரி (யாழ்.அக.); twist of an ear-ring.

*[விள் → வெள் → வெண்டு]*

வெண்டுக்காய் *veṇḍu-k-kāy,* பெ.(n.) வெண்டை பார்க்க; see *veṇḍai* (w.).

*[வெண்டி + காய் → வெண்டுக்காய்]*

வெண்டுகில் *veṇḍ-ugil,* பெ.(n.) வெள்ளைத்துணி; white cloth (w.).

*[வெண் (மை) + துகில்]*

வெண்டுத்தம்¹ *veṇḍuttam,* பெ.(n.) மயிற்றுத்தம் (யாழ்.அக.); suphate of copper.

*[வெண் (மை) + துத்தம்]*

வெண்டுத்தம்² *veṇḍuttam,* பெ.(n.) வெள்ளைத் துத்தம், பால் துத்தம்; white vitroil-sulphate of zinc.

*[வெண் (மை) + துத்தம்]*

வெண்டுமிளகாய் *veṇḍu-milagāy,* பெ.(n.) காய்ந்துலர்ந்த ஒரு வகைக் குண்டு மிளகாய், குடமிளகாய்; a variety of dried chilly which is round.

*[விள் → வெள் → வெண்டு + மிளகாய்]*

வெண்டுளசி *veṇḍuḷaśi,* பெ.(n.) 1. திருநீற்றுப் பச்சை; sweet basil. 2. துளசி வகை; ocimumgratissimum.

*[வெண் (மை) + துளசி]*

வெண்டுறை¹ *veṇḍuṟai,* பெ.(n.) மூன்றடி முதல் ஏழடியீறாக அடிகளைப் பெற்றுச் சீர் குறைந்தும் மிக்கும் வருதலையுடைய வெண்பாவின் வகை (காரிகை) (யாப். வி. பக். 537); a kind of stanza consisting of three to seven lines of unequal length.

*[வெண் (மை) + துறை]*

வெண்டுறை² *veṇḍuṟai,* பெ.(n.) திருவண்டு துறை என இன்று தஞ்சாவூர் மாவட்டத்தில் உள்ள ஊர்; now, in *tañjāvūr* district a village as called *tiru-vaṇḍu-duṟai.*

சேக்கிழார் இதனைத் *திருமலி வெண்டுறை* என்பார் (34–574). சம்பந்தர் பதிகம் இறைவன் விரும்புமிடம் வெண்டுறை என்பதை எல்லாப் பாடல்களிலும் குறிக்கிறது (319). துறை என்பது ஆற்றுத் துறையாக இருக்கலாம். வெண்ணிலம் என்பதற்கு வெறுந்தரை, மணற்பாங்கான தரை என்று தமிழ் சென்னை அகராதி பொருள் உரைப்பதை நோக்க, *மணற்பாங்கான துறை* என்ற நிலையில் வெண்டுறை என்ற பெயர் அமைந்திருக்கலாம் எனத் தோன்றுகிறது.

*[வெள் → வெண் + துறை]*

வெண்டுறைச்செந்துறைப்பாட்டு *veṇḍuṟai-c-cenduṟai-p-pāṭṭu,* பெ.(n.)

கலிவரி சிற்றிசை பேரிசை சிற்றிசைச் சிற்றிசை என்ற பகுதிகளையுடை இன்னிசைப் பாட்டு வகை (யாப். வி. பக். 538);

*[வெண்டுறை + செந்துறை + பாட்டு]*

**வெண்டுகிக்கரும்பு** *veṇḍūki-k-karumbu,* பெ.(n.) வெள்ளைக் கரும்பு; white sugancane saccharum officinarum.

*[வெண் (மை) + தோகை + கரும்பு]*

**வெண்டேக்கு** *veṇḍēkku,* பெ.(n.) நீண்ட மரவகை; a kind of lager tree.

*[வெண் (மை) + தேக்கு]*

**வெண்டேர்** *veṇḍēr,* பெ.(n.) கானல்; mirage. *"வெண்டே ரோடுங் கடங்காய் மருங்கில்" (அகநா. 179).*

*[வெண் (மை) + தேர்]*

**வெண்டேர்ச்செழியன்** *veṇḍēr-c-ceḻiyaṉ,* பெ.(n.) இடைக் கழகத் தொடக்கத்தில் இருந்தவனாகக் கூறப்படும் பாண்டியன் (இறை.1, உரை, பக். 5); a pandya king who is said to have reigned at the beginning of the middle sangam.

*[வெண் (மை) + தேர் + செழியன்]*

**வெண்டை** *veṇḍai,* பெ.(n.) 1. செடிவகை; okra, s.sh. 2. வெண்டைக்காய்; ladies finger.

*[விள் → வெள் → வெண்டு → வெண்டை]*

**வெண்டைக்காய்** *veṇḍai-k-kāy,* பெ.(n.) வெண்டிக்காய் பார்க்க; see *veṇḍi-k-kāy.*

*[விள் → வெள் → வெண்டு → வெண்டை + காய்]*



**வெண்டையம்** *veṇḍaiyam,* பெ.(n.) 1. வீரர் காலனி; warriors anklet. *"வீரவெண்டைய முழங்க" (திருப்பு. 750).* 2. குதிரை முதலியவற்றின் காற்சதங்கை; hollow ring with pebbles inside, tied to the feet of horses or elephants. *"வெண்டையங் கவடி" (அரிச். பு. வேட்டந். 13).* 3. கட்டை விரல்; thumb-ring.

*[வெண்டு → வெண்டையம்]*

**வெண்டொழுநோய்** *veṇḍoḻu-nōy,* பெ.(n.) வெண்குட்டம் பார்க்க; see *veṇ-kuṭṭam.* *"கருஞ் சிரங்கு வெண்டொழுநோய்" (ஏலாதி. 57).*

*[வெண் (மை) + தொழுநோய்]*

**வெண்டோடு** *veṇṭōḍu,* பெ.(n.) பனந்தோடு; calyx-leaf of palmyra. *"வெண்டோடு நிரைஇய வேந்துடை யருஞ்சமம்" (பதிற்றுப். 40, 10).*

*[வெண் (மை) + தோடு]*

**வெண்டோன்றி[1]** *veṇḍōṉṟi,* பெ.(n.) வெள்ளைத் தோன்றி மலர்; white november flower-gloriosa superba.

*[வெண் (மை) + தோன்றி]*

**வெண்டோன்றி**[2] *veṇḍōṉṟi,* பெ.(n.) வெண் காந்தள் பார்க்க; see *veṇkāntaḷ.* (w.).

*[வெண் (மை) + தோன்றி]*

**வெண்டோன்றித்தைலம்** *veṇḍōṉṟi-t-tailam,* பெ.(n.) குட்டத்திற்குப் பயன்படுத்துவதும் கிழங்கினின்றும் வடிக்கப்பட்டதுமான நெய்மம் (தைலம்); medicated oil extracted from the plough root by the process of *kuḻi-t-tailam.* it is used for leprosy.

**வெண்ணகரு** *veṇṇa-karu,* பெ.(n.) வெள்ளை அகிற் கட்டை; aquila or eagle-wood-aquilaria agalocha.

*[வெண் (மை) + அகில் → அகிர் + அகிரு]*

**வெண்ணகில்** *veṇṇakil,* பெ.(n.) வெள்ளை அகில்-மரவகை; white cedar-dysaxylum malabaricum.

*[வெண் (மை) + அகில்]*

**வெண்ணகை** *veṇṇagai,* பெ.(n.) 1. வெள்ளிய பல்; clean, white tooth. *"முத்தன்ன வெண்ணகையாய்" (திருவாச. 7, 3).* 2. புன்னகை; smile. *"அல்லமன் வெண்ணகை செய்து வெப்பும்" (பிரபு. லிங். சித்தரா. 36).*

*[வெண் (மை) + நகை]*

**வெண்ணஞ்சு** *veṇṇañju,* பெ.(n.) 1. ஊன்விசேடம்; a kind of fleshy substance. *"விழுக்கொடு வெண்ணெஞ்சு" (சீவக. 1584).* 2. நிணம் (சீவக. 1584, உரை); marrow in the bone.

*[வெண் (மை) + நஞ்சு]*

**வெண்ணடம்பு** *veṇṇaḍambu,* பெ.(n.) வெள்ளையடப்பங்கொடி பார்க்க; see *veḷḷai-yaḍappaṅ-koḍi.*

*[வெண் (மை) + அடம்பு]*

**வெண்ணத்தை** *veṇṇattai,* பெ.(n.) நத்தைவகை; a kind of snail.

*[வெண் (மை) + நத்தை]*

**வெண்ணரி** *veṇṇari,* பெ.(n.) நரிவகை; a kind of fox. *"விளகிக் கொட்பின் வெண்ணரி கடிகுலென்" (புறநா. 291).*

*[வெண் (மை) + நரி]*



**வெண்ணலாத்தி** *veṇṇalātti,* பெ.(n.) ஒரு வகைப் பாம்பு; a kind of snake.

*[வெண் (மை) + ஆத்தி]*

**வெண்ணலாந்தை** *veṇṇalāntai,* பெ.(n.) வெண்ணாந்தை பார்க்க; see *veṇṇāntai.*

*[வெண்ணாந்தை → வெண்ணலாந்தை]*

**வெண்ணலாற்றி** *veṇṇalāṟṟi,* பெ.(n.) மிளகு தக்காளி; a plant good for angular stomatitis-solanum nigrum.

**வெண்ணலை** *veṇṇalai,* பெ.(n.) வெண்ணலை. எவ்வகை ஈடும், பிடிபாடும்



வெண்ணங்கு



வெண் காசினி கீரை



வெண் மந்தாரை



வெண் கொடி வேலி

இல்லாமல் கொடுக்கப்பட்ட கடன். நெல்லை வட்டாரத்தில் நிர்கதியாய் விடப்பட்டவர்; a loan given without any mortgage or security. *'என்னெ இப்படி வெண்ணலையா விட்டிட்டுப் போயிட்டாரே'* என்பார்கள்.

*[வெண்ணிலை → வெண்ணலை]*

**வெண்ணறிவு** *veṇṇaṟivu,* பெ.(n.) அறிவின்மை; ignorance.

*[வெள் + அறிவு → வெள்ளறிவு → வெண்ணறிவு]*

**வெண்ணறுகு** *veṇṇaṟugu,* பெ.(n.) வெள்ளறுகு; a plant-adenema hyssopifolium-or exacum hyssopifolium.

*[வெண் (மை) + அறுகு]*

**வெண்ணாகம்** *veṇṇāgam,* பெ.(n.) வெள்ளீயம்; tin.

*[வெண்–மை + நாகம் → வெண்ணாகம்]*

**வெண்ணாகனார்** *veṇṇākaṉār,* பெ.(n.) கழகக்காலப் புலவர்; a sangam poet. இவர் அகநானூற்றில் 247–ஆம் பாடலைப் பாடியுள்ளார்.

**வெண்ணாகை** *veṇṇāgai,* பெ.(n.) வெள்ளை நாகை; milling tona hortensis.

*[வெண் (மை) + நாகை]*

**வெண்ணாங்கு** *veṇṇāṅgu,* பெ.(n.) 1. ஓடை செடி; crotolaria-ochlandra travancorica. 2. ஒடைக்கொடி; a creeper com bretum ovalifolium. 3. சிற்றிலைப்புலவு; pterospermum suberi folium alias qacerifolium. 4. மரவகை; creamy-leaved lancewood, m.tr. 5. நீண்ட மரவகை; maple-leaved lance wood, l.tr.

*[வெண் (மை) + நாங்கு]*

**வெண்ணாத்தி** *veṇṇātti,* பெ.(n.) 1. வெள்ளையாத்தி, ஆத்தி; bearing white flowers-bauhinia variegata (candida). 2. ஒரு வகைப் பாம்பு; a snake.

*[வெள் → வெண் + ஆத்தி]*

**வெண்ணாந்தை** *veṇṇāndai,* பெ.(n.) பெரும்பாம்புவகை; python.

(பனை மரம் அல்லது தூணைப் போல் பருத்து உடம்பு வழுவழுப்பாய் வாலுந்தலையும் ஒரே மொத்தமாய் வெள்ளை வரிகளை யுடைத்தாய் ஆடு, கோழி, மாடுகளை விழுங்கும் பாம்பு வகை).

**வெண்ணாயுருவி** *veṇṇāyuruvi,* பெ.(n.) நாயுருவி வகை; white species of indian burr. (w.).

*[வெண் (மை) + நாயுருவி]*



**வெண்ணாரி** *veṇṇāri,* பெ.(n.) பூடுவகை (சங்.அக.); a plant.

**வெண்ணாரை** *veṇṇārai,* பெ.(n.) 1. நாரை வகை (சூடா.); indian crane. 2. மரவகை; a tree.

*[வெண் (மை) + நாரை]*



**வெண்ணாவல்**[1] *veṇṇāval,* பெ.(n.) 1. வெள்ளை நாவல் மரம்; jambo tree yielding white fruits. *'இது அரத்த அணுக்களையும் விந்து அணுக்களையும் உண்டாக்குவதும் உட்சூடு போக்குவதுமான ஒரு மூலிகை'.* 2. ஒருவகைச் செயற்கை உப்பு (சத்தியுப்பு); a kind of prepared salt. 3. மருத்துவ உப்பு; a medicine prepared out of the three salt used for all diseases-kind of medicine. 4. நஞ்சுக் கொடி; navel cord.

*[வெண் (மை) + நாவல்]*

**வெண்ணாவல்** *veṇṇāval,* பெ.(n.) நாவல் வகை; a kind of rose-apple, in tr. *"வீறுயர் வெண்ணாவற் கனியொன்று" (திருவானைக். சம்பு. 5).*

*[வெண் (மை) + நாவல்]*

**வெண்ணாவல்சுரல்** *veṇṇāval-šural,* பெ.(n.) ஏமமலை; the sacred gold mountain one of the eight chief ranges in india.

**வெண்ணாவி** *veṇṇāvi,* பெ.(n.) வெள்ளை ஆவிரை; white bachnang.

*[வெண் (மை) + ஆவிரை → ஆவி]*

**வெண்ணாவிரை** *veṇṇā-virai,* பெ.(n.) வெள்ளை ஆவிரையாகிய ஒரு வகைக் கற்ப மூலி; a kind of cassia auriculate used for longevity.

*[வெண் (மை) + ஆவிரை]*

**வெண்ணி** *veṇṇi,* பெ.(n.) தஞ்சை மாவட்டத்தில் உள்ள ஒரு சிற்றூர்; a village at *Thañjāvūr* Dt.

சோழநாட்டில் நீடாமங்கலத்திற்கு மேற்கேயுள்ள ஒரு ஊர். அது தேவாரம் பெற்ற தலங்களுள் ஒன்று. கோயில் வெண்ணி என இக்காலத்து வழங்கும். அவ்வூரையும், அதனைச் சூழ்ந்துள்ள இடங்களையும் பார்க்கையில் அந்த இடம் பண்டைக்காலத்தில் மிகப்பெரிய நகராக இருந்திருக்க வேண்டுமென்று தோன்றுகின்றது.

**வெண்ணிக்குயத்தியார்** *veṇṇi-k-kuyattiyār,* பெ.(n.) கழகக் காலப் புலவர்; a *šangam* poet.

**வெண்ணிலம்** *veṇṇilam,* பெ.(n.) 1. வெறுந் தரை; bare ground (w.). 2. மணற்பாங்கான தரை (யாழ்.அக.); sandy soil.

*[வெண் (மை) + நிலம்]*

**வெண்ணிலவு** *veṇṇilavu,* பெ.(n.) மதியொளி; moonlight. *"வெண்ணிலவின் பயன்றுய்த்தும்" (பட்டினப். 114).*

*[வெண் (மை) + நிலவு]*

**வெண்ணிலாவொழுகு** *veṇṇilā-voḻugu,* பெ.(n.) நில நஞ்சு வகை; a kind of blue arsenic.

**வெண்ணிலுவை** *veṇṇiluvai,* பெ.(n.) 1. பணக்கடன் மீதி; arrears of cash debt. 2. கைமாற்றுக்கடன் (யாழ்.அக.); temporary loan without security.

*[வெண் (மை) + நிலுவை]*

**வெண்ணிலை** *vennilai,* பெ.(n.) வெண்ணிலைக்கடன் பார்க்க; see *vennilai-k-kadan.*

*[வெண் (மை) + நிலை]*

**வெண்ணிலைக்கடன்** *vennilai-k-kadan,* பெ.(n.) ஈடுகாட்டாது வாங்குங்கடன்; loan obtained wihtout pledge or mortgage.

*[வெண்ணிலை + கடன்]*

**வெண்ணிலைப்பத்திரம்** *vennilai-p-pattiram,* பெ.(n.) 1. ஈடுகாட்டாத கடனைக் குறிக்கும் ஆவணம்; simple bond, without pledge or mortgage. 2. ஈடுகாட்டாது எழுதிக் கொடுக்குங் கைக்குறிப்பு; note.of.hand, as without security (w.).

*[வெண்ணிலை + **Skt.** patra > த. பத்திரம்]*

**வெண்ணிறம்** *venniram,* பெ.(n.) சங்க நஞ்சு; a kind of white arsenic.

**வெண்ணீர்** *vennir,* பெ.(n.) வெண்மையான நீர்; semen. *"வெண்ணீர் வாயுவினான் மாதர் செந்நீரோடு கூடி.......... கருவாகும்" (சூத. ஞான. 10, 9).*

*[வெண் (மை) + நீர்]*

**வெண்ணீர்த்தெளிவு** *vennir-t-telivu,* பெ.(n.) தேத்தான் கொட்டை; clearing nut-strychnos potatorum.

*[வெண்ணீர் + தெளிவு]*

**வெண்ணீலம்** *vennilam,* பெ.(n.) நிறம்; slate blue, blush.

*[வெண் (மை) + நீலம்]*

**வெண்ணீறு**[1] *venniru,* பெ.(n.) திருநீறு; sacred ashes. *"விடிவதுமே வெண்ணீற்றை மெய்யிற்பூசி" (தேவா. 811, 2).*

*[வெண் (மை) + நீறு]*

**வெண்ணீறு**[2] *venniru,* பெ.(n.) 1. கற்சுண்ணாம்பு நீறு; slaked lime.

*[வெண் (மை) + நீறு]*

**வெண்ணுருட்டி** *vennu-rutti,* பெ.(n.) விட்ணுகாந்தி; a prostate plant-sphoeranthus indicus.

**வெண்ணுரை** *vennurai,* பெ.(n.) 1. மீன் நீரில் இரைதலினாலுண்டாகும் நுரை; fishing movement escaped foam. 2. கடலடிப் பாறையில் மோதுதலால் உண்டாகும் நுரை (செங்கை.மீன.); foam bubbles due to dashing in the rocky area under the sea.

*[வெண் (மை) + நுரை]*

**வெண்ணூமத்தை** *vennumattai,* பெ.(n.) வெள்ளுமத்தை; dhatura bearing white flowers-dhatura alba.

*[வெண் (மை) + ஊமத்தை]*

**வெண்ணெட்டி** *vennetti,* பெ.(n.) வெண்கிடை பார்க்க (புறநா. அரும்.); see *ven-kidai.*

*[வெண் (மை) + நெட்டி]*

**வெண்ணெய்** *venney,* பெ.(n.) 1. தயிரிலிருந்து கடைந்தெடுக்கப்படும் சத்து; butter. *"சேதாநறு மோர் வெண்ணெயின்" (பெரும்பாண். 306).* 2. வெண்ணெய்ப்பதம் பார்க்க; see *venney-p-padam.*

*[வெண் (மை) + நெய்]*

வெண்ணெய்க்கல் *veṇṇey-k-kal,* பெ.(n.) மலையின் ஒட்டில் நிற்கும் பெரிய குண்டுக்கல்; ball of rock standing on a hill.

*[வெண்ணெய் + கல்]*

வெண்ணெய்ச்சுறா *veṇṇey-c-cuṟā,* பெ.(n.) 1. வெண்மையும் சிவப்பும் கலந்த நிறமுடையதும் 18 அங்குலம் வளர்வதுமான மீன்வகை; batten fish, silvery shot with purple, attaining 18 in. in length.

*[வெண்ணெய் + சுறா]*

வெண்ணெய்த்தாழி *veṇṇey-t-tāḻi,* பெ.(n.) 1. வெண்ணெய் வைக்குஞ் சட்டி; butter-storing pot. 2. வெண்ணெய்தாழிதிருவிழா பார்க்க; see *veṇṇey-t-tāḻi-tiruviḻā.*

*[வெண்ணெய் + தாழி]*

வெண்ணெய்த்தாழிதிருவிழா *veṇṇey-t-tāḻi-tiruviḻā,* பெ.(n.) கண்ணன் வெண்ணெய் திருடிய நிகழ்வுத் தொடர்பாக நடத்தப்பெறும் பெருமாள் கோயில் திருவிழா; a *Perumāḷ* temple festival in which *kaṇṇan`s* of stealing butter is represented.

*[வெண்ணெய் + தாழி + திருவிழா]*

வெண்ணெய்த்தெழி *veṇṇey-t-teḻi,* பெ.(n.) கடைந்த மோரைக் கையால் அலைக்கும் ஓசை; sound produed in shaking the churned butter-milk with the hand. *"வெண்ணெய்த் தெழி கேட்கு மண்மையால்" (கலித். 108).*

*[வெண்ணெய் + தெழி]*

வெண்ணெய்தல் *veṇṇeytal,* பெ.(n.) ஆம்பல் வகை (பிங்.); white indian water-lily.

*[வெண் (மை) + நெய்தல்]*

வெண்ணெய்நல்லூர் *veṇṇey-nallūr,* பெ.(n.) 1. நம்பியாரூரரைச் சிவபிரான் தடுத்தாட் கொண்டதும் மெய்கண்ட தேவர் பிறந்ததும் கடலூர் மாவட்டத்தினுள்ளதுமான சிவத் தலம்; a siva shirine in the south arcot district, where saint suntarar was claimed by lord siva as his salve and devotee and where *meykaṇḍa-tēvar* was born. 2. கம்பருக்குப் புரந்த சடையப்ப வள்ளல் வாழ்ந்ததும் தஞ்சை மாவட்டத்தி லுள்ளதுமான ஓர் ஊர்; a place in the Tanjore district where cataiyan the patron of the poet kamqar, lived.

*[வெண்ணெய் + நல்லூர்]*

வெண்ணெய்ப்பதம் *veṇṇey-p-padam,* பெ.(n.) நெய்ம (தைல) மருந்து காய்ச்சும் பக்குவ வகை; a stage in the pereparation of midicinal oil, when it is in the form of a pulqy mass.

*[வெண்ணெய் + பதம்]*

வெண்ணெய்ப்பாரை *veṇṇei-p-pārai,* பெ.(n.) சாம்பல் நிறமுள்ளதும் ஓர் அடி நீளம் வளர்வதுமான மீன் வகை; horse-mackerel, greyish, attaining 1 ft. in length, caranyire.

*[வெண்ணெய் + பாரை]*



**வெண்ணெய்ப்புளி** *veṇṇey-p-puḷi,* பெ.(n.) வேர்வையில் கலந்துள்ள ஒரு வகைப் புளிப்புப் பொருள்; a sour substance mixed in perpiration.

*[வெண்ணெய் + புளி]*

**வெண்ணெய்மதுரம்** *veṇṇey-maduram,* பெ.(n.) கண்டில்வெண்ணெய் பார்க்க; see *kaṇḍilveṇṇey.*

*[வெண்ணெய் + மதுரம்]*

**வெண்ணெய்விரை** *veṇṇey-virai,* பெ.(n.) சாப்பிராவிரை; arnotto seed.

*[வெண்ணெய் + விரை]*

**வெண்ணெய்வெட்டி** *veṇṇey-veṭṭi,* பெ.(n.) 1. கூர் மழுங்கியது; anything blunt. 2. பயனற்றவன்; worthless fellow. 3. வீரமில்லாதவன்; coward. *'அவன் வெண்ணெய் வெட்டி வீரன்'.*

*[வெண்ணெய் + வெட்டி]*

**வெண்ணெல்** *veṇṇel,* பெ.(n.) ஒருவகை மலைநெல்; mountain paddy. *"அடுமகண் முகந்த வளவா வெண்ணெல்"* (புறநா. 399).

*[வெண் (மை) + நெல்]*

**வெண்ணை** *veṇṇai,* பெ.(n.) 1. வெண்ணெய் நல்லூர் 1 பார்க்க (சி.சி.சுப. பாயி. 2); see *veṇṇey-nallūr.* 2. வெண்ணெய்நல்லூர் 2 பார்க்க (கம்பரா. நூகபள். 263); see *veṇṇey-nallūr.*

**வெண்ணையூர்** *veṇṇaiyūr,* பெ.(n.) வெண்ணெய்நல்லூர் 2 பார்க்க (கம்பரா. திருமுடி. 38); see *veṇṇey-nallūr.*

*[வெண்ணை + ஊர்]*

**வெண்ணொச்சி** *veṇṇocci,* பெ.(n.) மரவகை (பதார்த்த. 528); five leaved chaste tree.

*[வெண் (மை) + நொச்சி]*

**வெண்ணொச்சில்விரை** *veṇṇoccil-virai,* பெ.(n.) வாய்விளங்கம்; berries-emblica ribes.

**வெண்ணோ**[1] *veṇṇō,* பெ.(n.) ஒரு கண்ணோய் வகை; an eye disease.

**வெண்ணோ**[2] *veṇṇō,* பெ.(n.) வெண்ணோவு 1 பார்க்க (யாழ்.அக.); see *veṇṇōvu.*

*[வெண் (மை) + நோ]*

**வெண்ணோக்காடு**[1] *veṇṇōkkāḍu,* பெ.(n.) கண் கூசி கடுத்து நீர் வடிந்து உடம்பில் எரிச்சல் கண்டு கண் சீறு சிவப்பாகி நிலவு வெளிச்சத்தில் விழிக்க முடியாது கண்ணொலி குன்றி நடக்க முடியாமற் செய்யுமோர் கண்ணோய்; an eye disease.

*[வெண் (மை) + நோக்காடு]*

**வெண்யோக்காடு**[2] *veṇṇōkkāḍu,* பெ.(n.) குழந்தை பிறப்புக்கு முன் உண்டாகும் வேதனை; false labour pains (w.).

*[வெண் (மை) + நோக்காடு]*

**வெண்ணோவு** *veṇṇōvu,* பெ.(n.) 1. வெக்கடுப்பு பார்க்க; see *vekkaḍuppu.* 2. வெண்ணோக்காடு பார்க்க; see *veṇṇōkkāḍu.*

*[வெண் (மை) + நோவு]*

**வெண்தகரை** *veṇ-tagarai,* பெ.(n.) வெண்டகரை பார்க்க; see *veṇḍakarai.*

*[வெண் (மை) + தகரை]*

வெண்தகர் *veṇ-tagar,* பெ.(n.) வெள்ளாடு; goat.

*[வெண் (மை) + தகர்]*



வெண்தணக்கு *veṇ-taṇakku,* பெ.(n.) சாம்பல்தணக்கு; white catamaran tree, girrtia rottleriformis.

*[வெண் (மை) + தணக்கு]*

வெண்தாது *veṇ-tādu,* பெ.(n.) வெள்ளி; silver.

*[வெண் (மை) + தாது]*

வெண்தாழை *veṇ-tāḻai,* பெ.(n.) வெண்டாழை பார்க்க; see *veṇḍāḻai.*

*[வெண் (மை) + தாழை]*

வெண்தீவிரம் *veṇ-tīviram,* பெ.(n.) 1. வெள்ளைக்காக்கணங்கொடி பார்க்க; see *veḷḷai-k-kākkaṇaṅ-koḍi.*

*[வெண் (மை) +* **Skt.** *tīvra > த. தீவிரம்]*

வெண்துத்தம் *veṇ-tuttam,* பெ.(n.) வெள்ளைத்துத்தம் பார்க்க; see *veḷḷai-t-tuttam.*

*[வெண் (மை) + துத்தம்]*

வெண்துத்தி *veṇ-tutti,* பெ.(n.) பால்துத்தி பார்க்க; see *pāl-tutti.*

*[வெண் (மை) + துத்தி]*

வெண்துருசி *veṇ-turuši,* பெ.(n.) வெள்ளைத் துருசு; white vitriol-sulphate of zinc.

*[வெண் (மை) + துருசி]*

வெண்துவரை *veṇ-tuvarai,* பெ.(n.) வெள்ளைத்துவரை; white red-gram-cajanus cajan.

*[வெண் (மை) + துவரை]*

வெண்துளசி *veṇ-tuḷaši,* பெ.(n.) வெண்டுளசி பார்க்க (மலை.); see *veṇḍuḷaši.*

*[வெண் (மை) + துளசி]*

வெண்தூதகி *veṇ-tūtaki,* பெ.(n.) வெண் சாரணை பார்க்க; see *veṇ-šāraṇai.*

வெண்தூதுவளை *veṇ-tūdu-vaḷai,* பெ.(n.) வெள்ளைத்தூதுவளைச்செடி; a thorny climber-solanum trilobatum.

*[வெண் (மை) + தூதுவளை]*



வெண்தேக்கு[1] *veṇ-tēkku,* பெ.(n.) மரவகை; a tree-lager slroemia lanceolata.

*[வெண் (மை) + தேக்கு]*

**வெண்தேக்கு**[2] *veṇ-tēkku,* பெ.(n.) வெண்டேக்கு பார்க்க; see *veṇ-ḍēkku.*

*[வெண் (மை) + தேக்கு]*

**வெண்தேமல்** *veṇ-tēmal,* பெ.(n.) தேமல் நோய் வகை; a fungus, disease of the skin.

*[வெண் (மை) + தேமல்]*

**வெண்தொயிலி** *veṇ-toyili,* பெ.(n.) துயிலிக்கீரை; agreens.

*[வெண் (மை) + தொயிலி]*

**வெண்நொச்சி** *veṇ-nocci,* பெ.(n.) வெண்ணொச்சி பார்க்க; see *veṇṇocci.*

*[வெண் (மை) + நொச்சி]*

**வெண்பச்சைக்கடலை** *veṇ-paccai-k-kaḍalai,* பெ.(n.) பசுமைக்கடலை; green bengal gram.

*[வெண் (மை) + பச்சை + கடலை]*

**வெண்பசலி** *veṇ-paśali,* பெ.(n.) வெள்ளைப் பசலைக் கீரை; a creeper-basella alba.

*[வெண் (மை) + பசலி]*

**வெண்பசும்பால்** *veṇ-paśum-pāl,* பெ.(n.) வெண்ணிறமான பசுவின் பால்; milk of white cow.

*[வெண் (மை) + பசு + பால்]*

**வெண்பட்டு** *veṇ-paṭṭu,* பெ.(n.) வெள்ளை நிறமுள்ள பட்டு; white silk. *வெண்பட்டுடுத்து (சீவக. 2358).*

*[வெண் (மை) + பட்டு]*

**வெண்படலம்** *veṇ-paḍalam,* பெ.(n.) கண்ணிற் படரும் நோய் வகை; an eye disease.

*[வெண் (மை) + படலம்]*

**வெண்படலிகை** *veṇ-paḍaligai,* பெ.(n.) வெள்ளித்தட்டு; silver tray. *"மணிக்குஞ்சி வெண்படலிகைக் குமரனீப்பது" (சீவக. 3031).*

*[வெண் (மை) + படலிகை]*

**வெண்படி** *veṇ-paḍi,* பெ.(n.) வெண்சோறு பார்க்க; see *veṇ-śōṟu.* *'இன்று கோவிலுக்கு நாழியரிசி வெண்படிக்காகக் கொடுத்திருக்கிறேன்' (உ.வ.).*

*[வெண் (மை) + படி]*

**வெண்படை** *veṇ-paḍai,* பெ.(n.) நெய்தற்கரிய நூற்பா; warp, in weaving. *"ஒன்றேற்றி வெண்படைக்கோ ளொன்று" (பழமொழி. 125).*

*[வெண் (மை) + படை]*

**வெண்பதம்** *veṇ-padam,* பெ.(n.) இளம்பதம்; condition of being heated slightly (w.).

*[வெண் (மை) + பதம்]*

**வெண்பயறு** *veṇ-payaṟu,* பெ.(n.) கரும்பயறு; black pulse.

*[வெண் (மை) + பயறு]*

**வெண்பருத்தி** *veṇ-parutti,* பெ.(n.) வெள்ளைப் பருத்திப் பஞ்சு; white cotton.

*[வெண் (மை) + பருத்தி]*



வெண்பலகறை *veṇ-pala-kaṟai,* பெ.(n.) கவடி; cowry white.

*[வெண் (மை) + பலகறை]*

வெண்பலி *veṇ-pali,* பெ.(n.) சாம்பல் (பிங்.); ash.

*[வெண் (மை) + பலி]*

வெண்பா *veṇpā,* பெ.(n.) நால்வகைப் பாக்களுள் ஒன்று (தொல். பொ. 417); one of the four principal kinds of stanzaforms.

*[வெண் (மை) + பா]*

வெண்பாக்கம் *veṇ-pākkam,* பெ.(n.) சென்னை மாவட்டத்தில் இருந்த ஓர் ஊர்; a village once existed in chennai District.

சென்னைக்கருகில் உள்ள பூண்டி நீர்த் தேக்கத்துள் மூழ்கியது. நீர்த் தேக்கக் கரையில் புதிய கோயிலொன்று கட்டப்பட்டுள்ளது என்ற எண்ணம் இதனைக் குறித்து அமைகிறது. நம்பியாரூரர் பதிகம் இதனைக் குறித்தமைகிறது. *ஏராரும் பொழினிலவு வெண்பாக்கம் இடம் கொண்ட காராரு மிடற்றான்* எனப் பாடுகின்றார் இவர் (99–41).

வெண்பாசி *veṇ-pāśi,* பெ.(n.) பாசிமணி வகை; a kind of white bead. *"வெண்பாசி பூண்டு" (திருவாலவா. 52, 3).*

*[வெண் (மை) + பாசி]*

வெண்பாட்டம் *veṇ-pāṭṭam,* பெ.(n.) 1. கோடையிற் பெய்யும் மழை; summer shower. *"வெண்பாட்டம் வெள்ளம் தரும்" (பழமொழி. 300).* 2. முன் பணமின்றி விடுங் குத்தகை; lease in which no premium is paid, dist. Fr.

*[வெண் (மை) + பாட்டம்]*

வெண்பாட்டு *veṇ-pāṭṭu,* பெ.(n.) வெண்பா; one of the four principal kinds of poetic forms, vemba verse.

*[வெண் (மை) + பாட்டு]*

வெண்பாண்டம் *veṇ-pāṇḍam,* பெ.(n.) அரத்த மில்லாத வெளுத்த உடம்பு; pale, anemic body.

*[வெண் (மை) + பாண்டம்]*

வெண்பாண்டு *veṇ-pāṇḍu,* பெ.(n.) பிறந்தது முதல் மீந்தோல் வெண்மை ஆவதற்குக் காரணமான நோய்வகை; albinism.

*[வெண் (மை) + பாண்டு]*

வெண்பாதிரை *veṇ-pādirai,* பெ.(n.) 1. பொன்னிறமுள்ள பூவுடைய மரவகை; yellow-flowered fragrant trumpt flower tree. 2. வெள்ளைப் பூவுடைய மரவகை; white-flowered trumpet-flower tree.

*[வெண் (மை) + பாதிரை]*

வெண்பாப்பாட்டியல் *veṇpā-p-pāṭṭiyal,* பெ.(n.) குணவீரப் பண்டிதர் வெண்பாவினால் இயற்றிய பாட்டியல் நூல்; a work on poetics in *veṇpā* verse, by *kunavira-pāntitar.*

*[வெண்பா + பாட்டியல்]*

வெண்பாப்புலி *veṇpā-p-puli,* பெ.(n.) 1. வெண்பா பாடுவதில் வல்லவன்; title of poets who are experts in composing *veṇpā* verse (w.).

*[வெண்பா + புலி]*

வெண்பாமாலை *veṇpā-mālai,* பெ.(n.) புறப்பொருள் வெண்பா மாலை; a treatise on the topic of puṟamin *veṇpā*verse. *"புறப்பொருள் விழாவின்று விளங்க வெண் பாமாலை யெனப் பெயர்நி றிஇ" (பு. வெ. சிறப்.).*

*[வெண்பா + மாலை]*

வெண்பார்க்கல் *veṇ-pārkkal,* பெ.(n.) சுக்கான்கல்; calcareous earth.

*[வெண் (மை) + பார் + கல்]*

வெண்பாவுரிச்சீர் *veṇpā-v-uri-c-cīr,* பெ.(n.) நேர்நேர்நேர், நிரைநேர்நேர், நேர்நிரைநேர், நிரைநிரைநேர் என வெண்பாவுக்கு உரியவவையாக வரும் நேரீற்று மூவசைச் சீர் (யாப். வி. 12, 61); a metrical foot of three acai. i.e. of the value of three long syllables, chiefly found in veMpA, of four varieties, viz, *nēr-nēr-nēr (---), nirai-nirai-nēr (uu--), nēr-nirai-nēr(-uu-), nirai-nirai-nēr(uuuu).*

*[வெண்பா + உரிச்சீர்]*

வெண்பாவை *veṇ-pāvai,* பெ.(n.) நாமகள்; sarasvati. *"திருப்பூவணர்மேல் வெண்பாவையுலாம் பூவையுலாப் பாடலே" (பூவண. உலா. காப்பு).*

*[வெண் (மை) + பாவை]*

வெண்பித்தளை *veṇ-pittaḷai,* பெ.(n.) வெள்ளைப்பித்தளை பார்க்க; see *veḷḷai-p-pittaḷai.*

*[வெண் (மை) +* ***Skt.*** *pittala > த. பித்தளை]*

வெண்பிறப்பு *veṇ-piṟappu,* பெ.(n.) வெள்ளியுயிர் (மணி. 27, 152); a kind of birth.

*[வெண் (மை) + பிறப்பு]*

வெண்பிறை *veṇ-piṟai,* பெ.(n.) வெள்ளிய பிறைத் திங்கள்; the bright crescent moon. *"அந்தி வானத்து வெண்பிறை தோன்றி" (சிலப். 4, 23).*

*[வெண் (மை) + பிறை]*

வெண்பீலி *veṇ-pīli,* பெ.(n.) சீனக்காரம்; alum.

*[வெண் (மை) + பீலி]*

வெண்பு *veṇ-pu,* பெ.(n.) வெண்ணிலம்; plain land.

*[வெண் (மை) + பூ.* ***Skt.*** *bhu > த. பூ]*

வெண்புகைச்சல் *veṇ-pugaiccal,* பெ.(n.) கண் விழியில் சதை வளர்ந்து கருத்த பாவை வெளுப்பேறி வலியுண்டாகி அரிப்பெடுத்து பீளைக் கட்டி பார்வை பலவிதமாய்க் காட்டுமோர் வகைக் கண்ணோய்; an eye disease.

*[வெண் (மை) + புகைச்சல்]*

வெண்புடலை *veṇ-puḍalai,* பெ.(n.) வெள்ளைப்புடலை பார்க்க; see *veḷḷai-p-puḍalai.*

*[வெண் (மை) + புடலை]*

வெண்புணர்ச்சிமாலை *veṇ-puṇarcci-mālai,* பெ.(n.) முந்நூறு வெண்பாக்கள் கொண்ட சிற்றிலக்கிய வகை; a poem of three hundred stanzas in *veṇpā* metre (w.).

*[வெண் + புணர்ச்சி + மாலை]*

வெண்புரசு *veṇ-puraśu,* பெ.(n.) புண்ணாற்றுதல் வேண்டி சித்தருண்ணும் மூலிகை; butea bearing white flowers-butea frondosa.

வெண்புழுக்கல் *veṇ-puḻukkal,* பெ.(n.) 1. இளம்புழுக்கல்; under boiling. 2. இளம் புழுக்கலரிசி; rice obtained by husking par-boiled paddy.

*[வெண் (மை) + புழுக்கல்]*

**வெண்புழுக்கு** *ven-pulukku,* பெ.(n.) வெண்புழுக்கல் பார்க்க (யாழ்.அக.); see *ven-pulukkal.*

*[வெண் (மை) + புழுக்கு]*

**வெண்புழுங்கல்** *ven-pulungal,* பெ.(n.) வெண்புழுக்கல் பார்க்க; see *ven-pulukkal.*

*[வெண் (மை) + புழுங்கல்]*

**வெண்புறா** *ven-purā,* பெ.(n.) வெள்ளைபுறா; white dove. இதன் கறி பத்தியத்திற்குதவும், வெண்குட்டம் கரப்பான் சொறி போகும்.

*[வெண் (மை) + புறா]*



**வெண்பூகன்** *ven-pūgan,* பெ.(n.) கழகக்காலப் புலவர்; a sangam poet.

இவர் குறுந்தொகை 83-ஆம் பாடலைப் பாடியுள்ளார்.

**வெண்பூசனை** *ven-pūšanai,* பெ.(n.) திருமணப் பூசினி; ashpumpkin-benincasa cerifera.

*[வெண் (மை) + பூசுனை → பூசனை]*

**வெண்பூசினி** *ven-pūšini,* பெ.(n.) மணப் பூசினி; ash pumpkin-benincasa cerifera.

*[வெண் (மை) + பூசுனை → பூசினி]*

**வெண்பூதச்சி** *ven-pūtacci,* பெ.(n.) இரசித நஞ்சு; a kind of arsenic.

**வெண்பூதனார்** *ven-pūdanār,* பெ.(n.) கழகக் காலப்புலவர்; a sangam poet.

இவர் குறுந்தொகையின் 83-ஆம் பாடலை உவமை நயத்துடன் பாடி சங்க இலக்கியத்திற்குச் சிறப்புச் சேர்த்துள்ளார்.

**வெண்பூதியார்** *ven-pūdiyār,* பெ.(n.) கழகக் காலப் புலவர், வெள்ளூர் கிழார் மகனார் வெண்பூதியார் எனவும் இவர் பெயர் காணப்படும்; a sangam poet, another name was called *vellur-kilān-maganār-venpūdiyan.*

இவர் குறுந்தொகையில் 97, 174, 219-ஆம் பாடல்களைச் சிறப்பாகப் பாடி புகழ் சேர்த்துள்ளார்.

**வெண்பூபூத்தல்** *ven-pū-pūttal,* பெ.(n.) bearing white flowers-albiflora.

*[வெண் (மை) + பூ + பூத்தல்]*

**வெண்பூம்பட்டு** *ven-pūm-pattu,* பெ.(n.) வெண்பட்டாடைவகை; a kind of cloth of white silk. *"வெண்பூம்பட்டிற்றிண் பிணியமைந்த பள்ளிக் கட்டில்" (பெருங். இலாவாண. 3, 136).*

*[வெண் (மை) + பூ + பட்டு]*

**வெண்பூமான்** *ven-pū-mān,* பெ.(n.) நாமகள் (நாமதீப. 56); sarasvati.

*[வெண் (மை) + பூமகள் → பூமாள் → பூமான்]*

**வெண்பூலி** *ven-pūli,* பெ.(n.) மரவகை; a tree.

*[வெண் (மை) + பூலி]*

**வெண்பூனைக்காஞ்சொறி** *veṇ-pūṉai-k-kāñ-coṟi,* பெ.(n.) பூனைக்காஞ்சொறி; bearing white seeds.

*[வெண் (மை) + பூனை + காஞ்சொறி].*



**வெண்பெருமான்** *veṇ-perumāṉ,* பெ.(n.) கடமை என்ற விலங்கு; nilghau, the great antelope.

*[வெண் (மை) + பெரு-மை + மான்]*

**வெண்பொங்கல்** *veṇ-poṅgal,* பெ.(n.) பருப்பு, நெய் முதலியன சேர்த்துச் செய்த பொங்கல் வகை; a preperation of rice boiled with dhal, ghee, etc.

*[வெண் (மை) + பொங்கல்]*

**வெண்பொடி** *veṇ-poḍi,* பெ.(n.) திருநீறு; sacred ash. *"வெண்பொடியும்.......... அக்கமாமணிகளுமே............ வனைந்தார்" (பிரமோத். 20, 17).*

*[வெண் (மை) + பொடி]*

**வெண்பொத்தி** *veṇ-potti,* பெ.(n.) துகில்வகை (சிலப். 14, 108, உரை); a kind of garment.

*[வெண் (மை) + பொத்தி]*

**வெண்பொன்** *veṇ-poṉ,* பெ.(n.) 1. வெள்ளி; silver. *"வெண்பொற் கட்டின்மேல்" (சீவக. 2421).* 2. சுக்கிரன்; venus. *"மேலா வெண்பொன் போருறு காலை" (புறநா. 389).*

*[வெண் (மை) + பொன்]*

**வெண்பொன்மலை** *veṇ-poṉ-malai,* பெ.(n.) கயிலைமலை; mount kailash.

*[வெண் (மை) + பொன் + மலை]*

**வெண்மட்டக்கருத்து** *veṇ-maṭṭa-k-karuttu,* பெ.(n.) மேலெழுந்த வாரித் தீர்மானம்; superficial judgement (w.).

*[வெண்மட்டம் + கருத்து]*

**வெண்மட்டம்** *veṇ-maṭṭam,* பெ.(n.) 1. மேலெழுந்த வாரி; superficiality (w.). 2. நுணுக்க வேலைபாடில்லாத சாதாரண வேலை (யாழ்.அக.); plain work.

*[வெண் (மை) + மட்டம்]*

**வெண்மட்டவேலை** *veṇ-maṭṭa-vēlai,* பெ.(n.) 1. பொதுவகை வேலை; plain work. 2. மேலெழுந்த வாரியாகச் செய்யும் வேலை; superficial work (w.).

*[வெண்மட்டம் + வேலை]*

**வெண்மண்டலம்** *veṇ-maṇḍalam,* பெ.(n.) வெள்ளை விழி; white of the eye-sclera.

*[வெண் (மை) + மண்டலம்]*

**வெண்மண்டை** *veṇ-maṇḍai,* பெ.(n.) இரப்போர் கைக்கொள்ளும் உண்கலவகை; a kind of beggar's bowl. *"ஊன் கொண்ட வெண்மண்டை" (புறநா. 386).*

*[வெண் (மை) + மண்டை]*

**வெண்மணல்** *veṇ-maṇal,* பெ.(n.) வெள்ளை மணல்; white sand.

*[வெண் (மை) + மணல்]*

**வெண்மணி** *veṉ-maṇi,* பெ.(n.) 1. முத்து; pearl (w.). 2. கருவிழியைச் சுற்றியுள்ள வெள்ளை வட்டம்; the white ring round the pupil of the eye, the white eye.

*[வெண் (மை) + மணிபொடி]*



**வெண்மணிப்பூதி** *veṉ-maṇi-p-pūdi,* பெ.(n.) கழகக் காலப் பெண் புலவர்; a female sangam poet.

இவர் குறுந்தொகையின் 299–ஆம் பாடலில் தலைவியின் காதல் ஏக்கத்தை அழகு நயத்துடன் பாடியுள்ளார்.

**வெண்மத்தன்** *veṉ-mattaṉ,* பெ.(n.) வெள்ளுமத்தை; dhatura bearing white flowers-datura alba.

*[வெள் + உன்மத்தன்]*



**வெண்மதி** *veṉ-mati,* பெ.(n.) 1. சந்திரன்; the moon (w.). 2. வெள்ளைச்சேம்பு (சங்.அக.); indian kales.

*[வெண் (மை) + மதி]*

**வெண்மயிர்** *veṉ-mayir,* பெ.(n.) 1. நரைத்த மயிர்; grey hair (w.). 2. வெண்சாமரை (சது.) பார்க்க; see *veṉ-šāmarai.*

*[வெண் (மை) + மயிர்]*

**வெண்மருது** *veṉ-marudu,* பெ.(n.) பிள்ளை மருது; a tree-terminalia paniculata.

*[வெண் (மை) + மருது]*

**வெண்மலக்கழிச்சல்** *veṉ-mala-k-kaḻiccal,* பெ.(n.) இதுவே குழந்தைகளுக்குக் காணும் வெள்ளுடைப்புக் கழிச்சல்; white faeces or excrements as a sign of indigestion in children.

*[வெண் (மை) + மலம் + கழிச்சல்]*

**வெண்மலம்** *veṉ-malam,* பெ.(n.) வெள்ளை நிறமாக மலம் வெளிப்படல்; white faeces a sign of jaundice.

*[வெண் (மை) + மலம்]*

**வெண்மலர்நாயகம்** *veṉ-malar-nāyagam,* பெ.(n.) கருவண்டு; black beetle.

*[வெண் (மை) + மலர் + நாயகம்]*

**வெண்மலை** *veṉ-malai,* பெ.(n.) வெள்ளி மலை பார்க்க; see *veḷḷi-malai* (w.).

*[வெண் (மை) + மலை]*

**வெண்மழை** *veṉ-maḻai,* பெ.(n.) வெண்முகில் 1 பார்க்க; see *veṉ-mugil.* *"வெண்மழை போலாச் சென்றா லியரோ" (பதிற்றுப். 55).*

*[வெண் (மை) + மழை]*

**வெண்மறி** *veṇ-maṟi,* பெ.(n.) வெள்ளாடு; goat.

*[வெண் (மை) + மறி]*

**வெண்மாசுபடலம்** *veṇ-māšu-paḍalam,* பெ.(n.) கண்ணில் வெள்ளை மாசு படர்ந்து கரகரத்து வலி உண்டாக்கும் ஒரு வகைக் கண்ணோய்; an eye disease-albugineaoculi.

*[வெண் (மை) + மாசு + படலம்]*

**வெண்மாடம்** *veṇ-māḍam,* பெ.(n.) ஒருவகை ஊர்தி; a kind of vehicle. *"வையமுந் தேரும் வகை வெண்மாடமும்" (பெருங். உஞ்சைக். 42, 18).*

*[வெண் (மை) + மாடம்]*

**வெண்மாதுளை** *veṇ-māduḷai,* பெ.(n.) வெள்ளை மாதுளஞ் செடி; po megranate tree bearing fruits which remain colourless.

*[வெண் (மை) + மாதுளை]*

**வெண்மாழை** *veṇ-māḻai,* பெ.(n.) வெள்ளிப் பொருள்; things made of silver.

*[வெண் (மை) + மாழை]*

**வெண்மிளகாய்** *veṇ-miḷagāy,* பெ.(n.) வெள்ளை மிளகாய்; white chilly.

*[வெண் (மை) + மிளகாய்]*

**வெண்மிளகி** *veṇ-miḷagi,* பெ.(n.) நெல்வகை; a kind of paddy.

*[வெண் (மை) + மிளகு → மிளகி]*

**வெண்மிளகு** *veṇ-miḷagu,* பெ.(n.) வெள்ளை மிளகு; white pepper.

*[வெண் (மை) + மிளகு]*

**வெண்மிளகுதக்காளி** *veṇ-miḷagu-takkāḷi,* பெ.(n.) வெள்ளை மிளகுத் தக்காளி, மிளகுத் தக்காளி; solanum nigrum.

*[வெண் (மை) + மிளகு + தக்காளி]*

**வெண்மீன்** *veṇ-mīṉ,* பெ.(n.) விடிவெள்ளி; venus. *"வெண்மீன் திசை திரிந்து தெற்கேகினும்" (பட்டினப். 14).*

*[வெண் (மை) + மீன்]*

**வெண்முகில்** *veṇ-mugkil,* பெ.(n.) 1. மழை பெய்யும் நிலையை அடையாத வெற்று மஞ்சு; white, rainless cloud, *"வெண்முகிற் பொடிக்கும் வெய்யோன் போல" (பெருங். உஞ்சைக். 47, 198).* 2. மழை மிகுதியாய்ப் பெய்யும் வெண்ணிறமான மஞ்சு; a mythical white cloud believed to rain heavily. *"ஒளிகொள் வெண்முகிலாய்ப் பரந்தெங்கும் பெய்யுமாமழை" (தேவா. 176, 2).*

*[வெண் (மை) + முகில்]*

**வெண்முருக்கம்** *veṇ-murukkam,* பெ.(n.) வெள்ளை மண முருக்கம்; thorny indian coral tree bearing white flowers-erythrina indica (alba).

மறுவ. வெண் முருங்கை.

*[வெண் (மை) + முருக்கம்]*

**வெண்முள்ளி** *veṇ-muḷḷi,* பெ.(n.) வெள்ளை முள்ளிக் கீரை; a thorny plant-barleria cuspilata.

*[வெண் (மை) + முள்ளி]*

வெண்மெழுகு *veṇ-meḻugu,* பெ.(n.) வெள்ளை மெழுகு; white wax-cera alba.

*[வெண் (மை) + மெழுகு]*

வெண்மேகப்படுவன் *veṇ-mēga-p-paḍuvaṉ,* பெ.(n.) தோல் நோய் வகை; a skin disease.

*[வெண்மேகம் + படுவன்]*

வெண்மேகம் *veṇ-mēgam,* பெ.(n.) வெள்ளை மேகம்; gonorrhoea.

*[வெண் (மை) + மேகம்]*

வெண்மை[1] *veṇmai,* பெ.(n.) 1. வெள்ளை நிறம்; whiteness. 2. ஒளி; brightness. 3. இளமை (சூடா.); tender age. 4. மனக் கவடின்மை; simplicity. 5. அறிவின்மை; ignorance. *"வெண்மையுடையார் விழுச் செல்ல மெய்தியக்கால்" (நாலடி, 2).* 6. புல்லறி வுடைமை; self-conceit. *"வெண்மை யெனப் படுவதியாதெனின்" (குறள், 844).*

*[வெள் → (வெள்மை) → வெண்மை]*

வெண்மை[2] *veṇmai,* பெ.(n.) 1. நீர்க்கடம்பு; a tree-stephegyne parviflora. 2. வேளை; a plant-cleome pentaphylla.

*[வெள் → (வெள்மை) → வெண்மை]*

வெண்மைப்புரட்சி *veṇmai-p-puraṭci,* பெ.(n.) நாட்டில் பெருமளவில் பால் பண்ணைகளைப் பெருக்கும் திட்டம்; scheme for increasing milk production (in India) white revolution.

*[வெண்மை + புரட்சி]*

வெண்மையறிவு *veṇmai-y-aṟivu,* பெ.(n.) அறிவின்மை; Ignorance.

*[வெண்மை + அறிவு]*

வெண்மொச்சை *veṇmoccai,* பெ.(n.) மொச்சை; field bean which is white-dalichos lab lab (typicus.).

*[வெண் (மை) + மொச்சை]*

வெண்மொந்தன் *veṇ-montaṉ,* பெ.(n.) வாழை வகை; a kind of plantain.

*[வெண் (மை) + மொந்தன்]*

வெண்வங்கம் *veṇ-vaṅgam,* பெ.(n.) வெள்ளீயம்; white lead-tin.

*[வெண் (மை) + வங்கம்]*

வெண்வெளியங்கம் *veṇ-veḷiyaṅgam,* பெ.(n.) வெண்கூளி; a large white eagle.

*[வெண் (மை) + வெளியங்கம்]*

வெண்வெயிலா *veṇ-veyilā,* பெ.(n.) வெண்டேக்கு பார்க்க; see *veṇṭēkku.*

*[வெண்வேயிலை → வெண்வெயிலா]*

வெண்வேயிலை *veṇ-vēyilai,* பெ.(n.) வெண்தேக்கு; a tree-lagerstromia lancealata.

*[வெண் (மை) + வேய் + இலை]*

வெண்வேல் *veṇ- vēl,* பெ.(n.) வெள்வேல் பார்க்க; see *veḷ-vēl.*

*[வெண் (மை) + வேல்]*

வெண்வேலன் *veṇ-vēlaṉ,* பெ.(n.) வெள்வேல் 2 பார்க்க; see *veḷ-vēl.*

*[வெண் (மை) + வேலம் → வேலன்]*

**வெத்தம்** *vettam,* பெ.(n.) தெளிவு; clearness.

*[வெற்று → வெத்து → வெத்தம்]*

**வெத்தாக்குக்கூடு** *vettākku-k-kūḍu,* பெ.(n.) கப்பலில் திசைகாட்டும் கருவி வைக்கும் பெட்டி; binnacle.

*[வளி → வெளி + தாக்கு + கூடு]*

**வெத்திலை** *vettilai,* பெ.(n.) வெற்றிலை; betel leaf, piper betel.

*[வெற்று → வெத்து + இலை]*



**வெத்திலைப்பட்டை** *vettilai-p-paṭṭai,* பெ.(n.) வெற்றிலைப்பட்டை பார்க்க; see *verrilai-p-paṭṭai.*

*[வெத்திலை + பட்டை]*

**வெதரி** *vetari,* பெ.(n.) இலந்தை 1 பார்க்க; see *ilantai1*. *"வெதரி வனத்துறை வாதராயணன்" (சேதுபு. அசுவற். 66).*

**வெதரிவனம்** *vetari-vaṉam,* பெ.(n.) இமயச்சாரலில் உள்ள சிவதலம்; a hermitage sacred to *visṇu.*

*[வெதரி + வனம்]*

**Skt.** *vaṉa* > த. வனம்.

**வெதிர்**[1] *vetir,* பெ.(n.) மூங்கில்; bamboo.

*[வெடி → வெடில் → வெதில் → வெதிர்]*

**வெதிர்த்தல்**[2] *vetirttal,* பெ.(n.) அஞ்சுதல், சினத்தல், நடுங்குதல்; fear, angry, trembling.

*[விதிர் → வெதிர் → வெதிர்த்தல்]*

**வெதிர்**[3]**-த்தல்** *vetir-,* செ.கு.வி.(v.i.) நடுங்குதல்; to tremble. *"வெதிர்க்கு நரகமே" (தணிகைப்பு. வீராட்ட. 50).*

*[விதிர் → வெதிர்]*

**வெதிர்**[4] *vetir,* பெ.(n.) 1. நடுக்கம்; trembling. *"வடலை குமட்டி வெதிரெழுத்து" (காசிக. வயிர. 22).* 2. வெதிரம் பார்க்க; see *vetiram. "சிறியிலை வெதிரினெல் விளையும்மே" (புறநா. 109).* 3. விரிமலர் (பிங்.); open flower.

*[விதிர் → வெதிர்]*

**வெதிர்**[5] *vetir,* பெ.(n.) செவிடு (பிங்.); deafness. *"வெதிரெனுங்கொ லென்னு மாறு ...... வைகினான்" (பாரத. சூது. 187).*

*[வயிர் → வெதிர்]*

**வெதிர்ங்கோல்** *vetir-ṅ-kōl,* பெ.(n.) மூங்கிற்கோல்; bamboo rod. *"ஒரு வெதிர்ங் கோலை முறித்து நீட்ட" (தொல். பாயி. உரை).*

*[வெதிரங்கோல் → வெதிர்ங்கோல்]*

**வெதிர்ப்பு** *vetirppu,* பெ.(n.) 1. அச்சம்; fear (w.). 2. நடுக்கம் (சது.); trembling. 3. கலக்கம் (திவா.); confusion. 4. ஓர் சினக் குறிப்பு; a symptom of anger (w.).

*[விதிர் → வெதிர் → வெதிர்ப்பு]*

வெதிரம்[1] *vetiram,* பெ.(n.) செவிடு; deafness.

*[வயிர் → வெதிர் → வெதிரம்]*

வெதிரம்[2] *vetiram,* பெ.(n.) மூங்கில்; bamboo. *"குடசமும் வெதிரமும்" (சிலப். 13, 157).*

*[வெதிர் → வெதிரம்]*

வெதிரன் *vetiraṉ,* பெ.(n.) செவிடன்; deaf person. *"மகர் வெதிரர்" (சேதுபு. 2–வது சக்கர. 14).*

*[வெதிர் → வெதிரன்]*

வெதிரி *vetiri,* பெ.(n.) வெதிரம் பார்க்க (மலை.); see *vetiram.*

*[வெதிர் → வெதிரி]*

வெதிரேகம் *vetirēkam,* பெ.(n.) 1. வேறுபாடு; difference. 2. எதிர்மறை; negation. 3. மரபு வழி (மேருமந். 697, உரை); transformation.

வெதுக்கல் *vedukkal,* பெ.(n.) வெதுப்பல், வெதும்பலன்; whisper, murmur.

*[வெதுக்கு → வெதுக்கல்]*

வெதுக்கலன் *vedukkalaṉ,* பெ.(n.) துன்பம் முதலியவற்றால் உடல் இளைத்தவன் (யாழ்.அக.); person emaciated by grief.

*[வெதுக்கு → வெதக்கலன்]*

வெதுக்கு–தல் *vetukku-,* செ.குன்றாவி. (v.t.) வெதுப்பு பார்க்க; see *vetuppu.*

வெதுப்பச்சூரி *veduppa-c-cūri,* பெ.(n.) நத்தைச்சூரி பார்க்க; see *nattai-c-cūri.*

*[வெதுப்பம் + சூரி]*

வெதுப்படக்கி[1] *vedu-p-paḍakki,* பெ.(n.) 1. எரு முட்டைப் பீநாறி, இதுவே பேய் மிரட்டி; a plant-ballota disticha. 2. வெப்பத்தை ஆற்றி; cooler. 3. வெளுத்த கழிச்சல், வளிக்காய்ச்சல் போகும்; it cures white diarrhoea and fever.

*[வெதுப்பு + அடக்கி]*

வெதுப்படக்கி[2] *vetuppaṭakki,* பெ.(n.) 1. செடிவகை; false nettle (w.). 2. பேய் மருட்டி (பதார்த்த. 543); malabar catamint.

*[வெதுப்பு + அடக்கி]*

வெதுப்பம் *veduppam,* பெ.(n.) 1. இளஞ்சூடு; warmth, moderate heat. 2. சூட்டால் உண்டாகும் வயிற்றுப் போக்கு; frothy diarrhoea, due to heat in the system (w.).

*[வெதும்பு → வெதுப்பு → வெதுப்பம்]*

வெதுப்பல் *veduppal,* பெ.(n.) வாட்டல், வதக்கல், வெதுப்புதல்; heating gently in small heat. 2. வறுத்தல்; frying.

*[வெதுப்பு → வெதுப்பல்]*

வெதுப்பி *vetuppi,* பெ.(n.) ஒற்றைப் பேய்மிரட்டி (பாலவா. 494); a medicinal herb.

*[வெதுப்பு → வெதுப்பி]*

வெதுப்பு[1]–தல் *vetuppu-,* செ.குன்றாவி.(v.t.) 1. வாட்டுதல்; to warm, heat gently. *"தீயிலே வெதுப்பியுயிரொடுந் தின்ன" (தாயு. சிவன்செயல். 5).* 2. பழுக்கக் காச்சுதல்; to make red-hot. *"மீட்டும் வெதுப்பியதோர் செவ்வேல்" (தஞ்சைவா. 113).*

*[வெதும்பு → வெதுப்பு]*

வெதுப்பு[2] *veduppu,* பெ.(n.) 1. வெதுப்பம் 1 பார்க்க; see *veduppam1.*(w.). 2. மாட்டு நோய் வகை (மாட்டுவை. சிந். 63); a cattle-disease. 3. காய்ச்சல் நோய் வகை (சங்.அக.); a fever.

*[வெதும்பு → வெதுப்பு]*

வெதும்பு-தல் *vetumpu,* செ.கு.வி. (v.i.) 1. இளம் சூடாதல்; to become warm. 2. சிறிது வாடுதல்; to lose freshness (w.). 3. வெம்மையாதல்; to be hot or heated. *"விண்குளிர் கொள்ள வோங்கும் வெண்குடை வெதும்புமாயின்" (சூளா. மந்திர. 26).* 4. கொதித்தல்; to boil. *"விழிநீர்களுற்றென வெதும்பி யூற்ற" (தாயு. கருணாகர. 9).* 5. சினங்கொள்ளுதல் (பிங்.); to be enraged. 6. மனங்கலங்குதல்; to be disturbed in mind. *"வெதும்பி யுள்ளம்" (திருவாச. 5, 1).*

*[வெது → வெதும்பு]*

வெதுப்புக்கழிச்சல் *vetuppu-k-kaliccal,* பெ.(n.) குழந்தைகளுக்கு நுரைக்காணும் ஒரு கழிச்சல்; brothy diarrhoea in children.

*[வெதுப்பு + கழிச்சல்]*

வெதுப்புக்கொள்ளல் *vetuppu-k-kollal,* பெ.(n.) சூடேறல்; to get body heated.

*[வெதுப்பு + கொள்ளல்]*

வெதுப்புண்டாதல் *vedu-p-pundātal,* பெ.(n.) சூடுண்டாதல்; getting heated or warm.

*[வெதுப்பு + உண்டாதல்]*

வெதுப்புதல் *vedu-p-pudal,* பெ.(n.) வாட்டுதல்; heating the medicinal leaf gently in the fire.

*[வெதும்பு → வெதுப்பு → வெதுப்புதல்]*

வெதுப்புவந்துற்றபோது *veduppu-candurra-pōdu,* பெ.(n.) காய்ச்சல் கண்ட போது; when feverish.

*[வெதுப்பு + வந்துற்றபோது]*

வெதுப்பைவிருவித்தல் *veduppai-viruvittal,* பெ.(n.) சூட்டைப் போக்கல்; to abate the heat.

*[வெதுப்பை + வெருவித்தல் → விருவித்தல்]*

வெதும்பக்காய்ச்சல் *vedumpa-k-kāyccal,* பெ.(n.) மருந்து நெய்யைச் சூடுண்டாகும்படி காய்ச்சுதல்; to heat the medicated oil.

*[வெதும்பு → வெதும்ப + காய்ச்சல்]*

வெதும்பல் *vedumpal,* பெ.(n.) 1. வாடல்; withering. 2. ஒரு நோய்; a disease.

*[வெதும்பு → வெதும்பல்]*

வெதும்பா *vedumbā,* பெ.(n.) வெள்ளை யாதளை; a plant.

வெதும்பிக்கொள்ளல் *vedumbi-k-kollal,* பெ.(n.) இடித்துக் கொள்ளல்; pulverising or powdering.

*[வெதுப்பி → வெதும்பி + கொள்ளல்]*

வெதும்புதல் *vedumbutal,* பெ.(n.) வெதும்பல் பார்க்க; see *vedumbal.*

*[வெதும்பு → வெதும்புதல்]*

வெதும்பு-தல் *vedumbu-,* செ.கு.வி.(v.i.) 1. வாடுதல்; be withered, wilt. *'கடுமையான வெயிலால் வெற்றிலைக் கொடி வெதும்பி விட்டது'.* 2. (மனம்) குமைதல், வருந்துதல்; be grieved. *'வீட்டின் அவல நிலையை எண்ணி மனம் வெதும்பினார்'.*

*[வெதும்புதல் → வெதும்புதல்]*

வெதுவெது-த்தல் *vetuvetu-,* செ.கு.வி. (v.i.) 1. அரைகுறையாக வேதல்; half cooked. 2. இளஞ் சூடாயிருத்தல்; to become lukewarm. 3. சிறிது வாடுதல்; to be partially withered (w.).

*[வெதுவெதெனல் → வெதுவெது-த்தல்]*

வெதுவெதுப்பு *vedu-veduppu,* பெ.(n.) இளஞ்சூடு; lukewarmness (w.).

*[வெதுவெது → வெதுவெதுப்பு]*

வெதுவெதெனல் *vedu-vedeṉal,* பெ.(n.) இளஞ்சூடாதற் குறிப்பு; lukewarm.

*[வெதுவெது → வெதுவெதெனல்]*

வெந் *ven,* பெ.(n.) முதுகு (பிங்.); back.

*[வெரிந் → வெந்]*

வெந்தசூடாமணி *venda-šūḍā-maṇi,* பெ.(n.) வெட்பூலா; a plant-caeya arborea.

வெந்தநெல் *venda-nel,* பெ.(n.) புழுங்கல் நெல்; parboiled paddy.

*[வே → வெந்த + நெல்]*

வெந்தபுண் *venda-puṇ,* பெ.(n.) வெந்நீர் பட்டு கொப்பளித்த புண்; scald.

*[வே → வெந்த + புண்]*

வெந்தம் *ventam,* பெ.(n.) பந்தம்; bondage.

*[பந்தம் → பெந்தம் → வெந்தம்]*

வெந்தயக்காடி *ventaya-k-kāḍi,* பெ.(n.) வெந்தயம் உழுந்து அரிசி முதலியன சேர்த்துச் செய்யுங் காடி; a kind of gruel made of Fenugreek seeds, black gram, rice, etc.

*[வெந்தயம் + காடி]*

வெந்தயக்காய் *vendaya-k-kāy,* பெ.(n.) வெந்தயம் சேர்ந்த ஒருவகை ஊறுகாய்; pickle mixed up with seed of fenu-greek.

*[வெந்தயம் + காய்]*

வெந்தயக்கீரை *ventaya-k-kīrai,* பெ.(n.) வெந்தயச் செடியின் இலை; fenugreek plant, which is used as vegetable greens-trigonella foenum graecum. இதனால் வயிற்றுப்பிசம் போகும்.

*[வெந்தயம் + கீரை]*

வெந்தயச்சம்பா *ventaya-c-campā,* பெ.(n.) சம்பா நெல்வகை; a kind of *campā* paddy.

*[வெந்தயம் + சம்பா]*

வெந்தயச்சாறு *ventaya-c-cāṟu,* பெ.(n.) கறிவகை; a kind of sauce.

*[வெந்தயம் + சாறு]*

வெந்தயம் *ventayam,* பெ.(n.) 1. வெந்தய அரிசி; fenugreek seed. 2. செடிவகை (பதார்த்த. 1042); fenu greek, s.sh.

*[மெல் → மெல்து) → மெத்து → மெந்து → மெந்தியம் → வெந்தியம் → வெந்தயம்]*

வெந்தயவம்மை *vendayavammai,* பெ.(n.) 1. வெந்தய விரை போல் கொப்புளங் கண்டு தொண்டை கம்பி 2-3 நாளில் இறங்கும் ஒரு அம்மை நோய்; a variety of small pox in which the pustules are as big as fenugreek which fades in 3 days-scarlatna simplx. 2. காய்ச்சலடித்து 3 நாளில் தலையில் குருதோன்றி 7-ம் நாளில் நிர்க்கட்டி 9-ம் நாளிலிறங்குந் ஒருவகை அம்மைநோய்; a kind of small pox.

*[வெந்தையம் + அம்மை]*

**வெந்தல்**[1] *vental,* பெ.(n.) கருகியது; that which is over-boiled.

*[வே → வெந்தல்]*

**வெந்தல்**[2] *vental,* பெ.(n.) வெந்தயம் பார்க்க (மலை.); see *ventayam.*

*[வெந்தயம் → வெந்தல்]*

**வெந்தலயம்** *vendalayam,* பெ.(n.) வெந்தயம் பார்க்க; see *vendayam.*

*[வெந்தயம் → வெந்தலயம்]*

**வெந்தலையோடு** *ventalaiyōḍu,* பெ.(n.) வெள்ளைத் தலை மண்டையோடு; white skull bone.

*[வெண்டலை → வெந்தலை + ஒடு]*

**வெந்தழல்** *ven-taḻal,* பெ.(n.) சிவந்தெரியும் தீ; glowing fire. *"வெந்தழலின் வீழ்வனிது வேதமொழி யென்றான்" (பாரத. பதின்மூன். 179).*

*[வெம் (மை) + தழல்]*

**வெந்தழலல்** *vendaḻalal,* பெ.(n.) புழுக்கமடைதல்; swelter.

*[வே → வெந்து + அழல் → அழலல்]*

**வெந்தழிவு** *ventaḻivu,* பெ.(n.) பயிர் காய்ந்து கருகிப் போதலால் உண்டாகும் பயிரழிவு; loss of crop due to the withering up of plants.

*[வே→ வெந்து + அழிவு]*

**வெந்தாரைச்சூடு** *ventārai-c-cūḍu,* பெ.(n.) நீர்த்தாரைச்சூடு; heat in the urethra.

*[வெந்தாரை + சூடு]*

**வெந்தி**[1]**-த்தல்** *venti-,* செ.கு.வி. (v.i.) 1. சினங் கொள்ளுதல் (திருப்பு. 136); to get angry. 2. சூடாதல்; to be hot.

*[வே → வெந்தி-த்தல்]*

**வெந்தி**[2]**-த்தல்** *venti-,* செ.கு.வி. (v.i.) ஒற்றுமையாதல்; to be united.

*[வெந்தம் → வெந்தி-த்தல்]*

**வெந்தி**[3]**-த்தல்** *venti-,* செ.குன்றாவி. (v.t.) கட்டுதல்; to bind.

*[வெந்தம் → வெந்தி-த்தல்]*

**வெந்திப்பு**[1] *ventippu,* பெ.(n.) 1. கொதிப்பு; heat. 2. சினம்; anger. *"வெந்திப்புடன் வருமவுணேசனையே" (திருப்பு. 136).*

*[வெந்தி → வெந்திப்பு]*

**வெந்திப்பு**[2] *ventippu,* பெ.(n.) கட்டு (திருப்பு. 136, கீழ்க்குறிப்பு); bond, union.

*[வெந்தி → வெந்திப்பு]*

**வெந்தியம்** *ventiyam,* பெ.(n.) வெந்தயம் பார்க்க; see *ventayam.*

*[மெந்தியம் → வெந்தியம்]*

**வெந்திறல்** *ven-tiṟal,* பெ.(n.) பெருவலிமை; great strength. *"வெந்திறற் றடக்கை வென்வேற் பொறைய" (பதிற்றுப். 86).*

*[வெம் (மை) + திறல்]*

**வெந்து** *ventu,* பெ.(n.) சுற்றம் (யாழ்.அக.); relative.

*[பந்து → பெந்து → வெந்து]*

**வெந்துசனம்** *vendušaṉam,* பெ.(n.) சுற்றத்தார்; relative, kith and kin.

*[வெந்து + **Skt.** jaṉa > த. சனம்]*

**வெந்துப்பு** *ven-tuppu,* பெ.(n.) வெந்திறல் பார்க்க; see *ventiṟal. "வெந்துப்பின் வேந்து செறப்பட்டவர்" (குறள், 895).*

*[வெம் (மை) + துப்பு]*

**வெந்துபோதல்** *vendu-pōdal,* பெ.(n.) வெந்துழலல்; swelter.

*[வே → வெந்து + போதல்]*

**வெந்துயர்** *ventuyar,* பெ.(n.) மிக்கவலி; extreme pain.

*[வெம் (மை) + துயர்]*

**வெந்துயர்க்கண்ணீர்** *ventuyar-k-kaṇṇir,* பெ.(n.) ஆறாத வெந்த புண்ணால் உண்டாகும் துன்பக் கண்ணீர்; teers of deep and bitter grief.

*[வே → வெந்து + துயர் + கண்ணீர்]*

**வெந்துருகல்** *venturugal,* பெ.(n.) பழைய காசு வகை (பணவிடு. 138); an ancient coin.

*[வே + உருகு → உருகல்]*

**வெந்துருதாசை** *vendurutāšai,* பெ.(n.) ஊர்க்கள்ளி பார்க்க; see *ūr-k-kaḷḷi.*

**வெந்துளி** *ventuḷi,* பெ.(n.) துன்பக் கண்ணீர்; tear-drops of sorrow, as hot. *"வீழ்தரு வெந்துளி விரலி னீக்கி" (பெருங். இலாவாண. 10, 63).*

*[வெம் (மை) + துளி]*

**வெந்தேக்கிரி** *ven-tēkkiri,* பெ.(n.) நெருப்பெரிதல்; burning fire.

*[வே → வெந்து → வெந்தேகு + எரி]*

**வெந்தேக்கு** *ventēkku,* பெ.(n.) வெண்தேக்கு; white teak-lager-stroemia lanceolata.

*[வெண்தேக்கு → வெந்தேக்கு]*

**வெந்தேட்கொடுக்கி** *ventēḍ-koḍukki,* பெ.(n.) பெரியதேட்கொடுக்கி பார்க்க; see *periya-tēḍ-koḍukki.*

*[வெம் (மை) + தேள் + கொடுக்கி]*

**வெந்தேளி** *ventēḷi,* பெ.(n.) வெண்ணிறத் தேளிமீன் (தஞ்சை. மீன.); a kind of sea fish.

*[வெண் (மை) + தேளி]*



**வெந்தை** *ventai,* பெ.(n.) 1. நீராவியிலே புழுங்கியது; anything cooked in steam. *"புளிப்பெய்தட்ட வேணை வெந்தை வல்சியாக" (புறநா. 246).* 2. பிட்டு (பிங்.); meal-cake. *"வெந்தை தோசையே" (கந்தபு, தானப்ப, 8),*

*[வே → வெந்தை]*

**வெந்தையம்** *ventaiyam,* பெ.(n.) வெந்தயம் பார்க்க; see *ventayam.*

*[வெந்தியம் → வெந்தயம்]*

**வெந்தோதிகம்** *ventōtikam,* பெ.(n.) அழிஞ்சில்; hill sack tree-alangium acuminatum.

**வெந்தோன்றி**[1] *ven-tōṉṟi,* பெ.(n.) வெண்காந்தன் பார்க்க; see *veṉ-kāntaṉ.*

*[வெண் (மை) + தோன்றி]*

**வெந்தோன்றி**[2] *ven-tōṉṟi,* பெ.(n.) மேல் நோக்கிப் படரும் செடி (மூ.அ.); a climbing shrub.

*[விண் (வெண் → வெம்) + தோன்றி]*

**வெந்தோன்றிகா** *ventōṉṟikā,* பெ.(n.) கண்ணுப்பீளை; waxy deposit in the corners of the eye.

*[வெண் (மை) + தோன்றிகா]*

**வெந்நிடு—தல்** *ven-n-iṭu-,* செ.கு.வி.(v.i.) புறங்காட்டுதல் (பு.வெ. 7, 12, உரை); to retreat, as turning one's back.

*[வெரிந் → வெந் + இடு-,]*

**வெந்நீர்** *ven-nīr,* பெ.(n.) சுடுநீர்; hot water. *"வெந்நீர் ........ இல்லஞ் சுடுகலாவாறு" (பழ. 51).*

*[வெம் (மை) + நீர்]*

**வெந்நீர்காயம்** *vennīr-kāyam,* பெ.(n.) சுடுநீரால் உண்டாகும் புண்; scald caused by boiling water.

*[வெந்நீர் + காயம்]*

**வெந்நீர்க்கொப்புளம்** *vennīr-k-koppuḷam,* பெ.(n.) வெந்நீர் படுவதினாலெழுங் கொப்புளம்; vesicles caused by hot water.

*[வெந்நீர் + கொப்புளம்]*

**வெந்நீர்விரணம்** *vennīr-viraṇam,* பெ.(n.) உடம்பில் வெந்நீர் படுவதினா லேற்பட்ட புண்; ulcer caused by hot water-scald.

*[வெந்நீர் + விரணம்]*

**Skt.** *Raṇam* > த. விரணம்.

**வெந்நீரூறல்** *vennīrūṟal,* பெ.(n.) கருக்குச் சாயம்; decoction.

*[வெந்நீர் + ஊறல்]*

**வெப்பக்கட்டி** *veppa-k-kaṭṭi,* பெ.(n.) வெப்புக்கட்டி பார்க்க; see *veppu-k-kaṭṭi* (w.).

*[வெப்பம் + கட்டி → வெப்புக்கட்டி]*

**வெப்பக்கதிர்ப்புமாணிகள்** *veppa-k-kadirppu-māṉikal,* பெ.(n.) வெப்பநிலை பார்க்க; see *veppa-nilai.*

*[வெப்பம் + கதிர்ப்புமானிகள்]*

**வெப்பக்குடுவை** *veppa-k-kuḍuvai,* பெ.(n.) வெப்பத்தைக் காத்து நிற்கும் குடுவை (அ) சாடி; thermos flask.

*[வெப்பம் + குடுவை]*

**வெப்பகலல்** *veppakalal,* பெ.(n.) உடற்சூடு நீங்கல்; vanishing of heat in the body.

*[வெப்பு + அகலல்]*

**வெப்பகற்றல்** *veppakaṟṟal,* பெ.(n.) உடம்பின் சூடு தணித்தல்; to abate the heat in the body.

*[வெப்பு + அகற்றல்]*

**வெப்பங்கொள்ளல்** *veppaṅ-koḷḷal,* பெ.(n.) வெப்பமுறல்; to get warm or becoming heated.

*[வெப்பம் + கொள்ளல்]*

வெப்பசாரம் *veppa-cāram,* பெ.(n.) 1. மனத்துயர்; grief (w.). 2. சினம்; indignatiion. 3. பொறாமை; spite, spleen.

*[வெப்பம் + சார் → வெப்பசாரம்]*

வெப்பத்தால்திணறல் *veppattāl-tiṇaṟal,* பெ.(n.) கொதிப்பினால் திக்குமுக்காடல்; sweltry.

*[வெப்பம் → வெப்பத்தால் + திணறல்]*

வெப்பத்தி *veppatti,* பெ.(n.) வறட்பூலா (சங்.அக.); Indian snowberry.

*[வெப்பம் → வெப்பத்தி]*

வெப்பந்தணித்தல் *veppan-taṇittal,* பெ.(n.) சூடுதணிதல்; cooling or lowering the temperature.

*[வெப்பம் + தணித்தல்]*

வெப்பநிலை *veppa-nilai,* பெ.(n.) ஒரு பொருளில் வெப்பம் எந்த அளவுக்கு உள்ளது என்பதைக் குறிப்பதாகும்; indication of grade of heat.

*[வெப்பம் + நிலை]*

வெப்பநிலைக்குறைவுவிகிதம் *veppa-nilai-k-kuṟaivu-vigitam,* பெ.(n.) வளி மண்டலத்தில் மேல் நோக்கிச் செல்லும் பொழுது வெப்பநிலை மாறும் கோணம் வெப்பநிலைக் குறைவுக் கோணமாகும்; low rates in the any region.

முகில் உருவாதல், இடி, மழை, வளி மண்டலத்தில் கொந்தளிப்பின் மிகுதி முதலியவற்றை முன்கூட்டியே தெரிந்து கொள்ள வானிலையியலாருக்கு இக்குறைவுக் கோணம் மிகவும் உதவுகிறது.

வெப்பம் *veppam,* பெ.(n.) 1. சூடு; heat. *"நீர்கொண்ட வெப்பம் போற்றானே தணியுமே" (நாலடி, 68).* 2. காய்ச்சல்நோய்; fever. *"மீனவற்சுடு வெப்ப மொழித்து" (திருவாலவா. 37, 1).* 3. கோபம்; indignation. *"வெப்பமுற்றோ னவிநயம் (சிலப். பக். 70).* 4. பொறாமை; spite. 5. ஆசை (சூடா.); desire. 6. துயர்; sorrow. 7. நிரையம் (நரகம்) (இ. போ. பா. 2, 3, பக். 20); a hell.

*[வெம்பு → வெப்பு → வெப்பம். (தே. நே. பக். 103)]*

வெப்பமானி *veppa-māṉi,* பெ.(n.) (இதளியம் விரிவடைவதன் அடிப்படையில்) வெப்ப அளவைக் கண்டறிய உதவும் கருவி; thermometer.

*[வெம்பு → வெப்பு → வெப்பம் + மானி]*

வெப்பர் *veppar,* பெ.(n.) 1. வெப்பம் பார்க்க; see *veppam.* *"அணிமுலைத் தடத்தி னொற்றி வெப்பராற் றட்பமாற்றி" (சீவக. 1746).* 2. சூடான உணவு; hot food. *"புத்தகற் கொண்ட புலிக்கண் வெப்பர்...... உண்ட பிள்ளை" (புறநா. 269, 4).*

*[வெம்பு → வெப்பு → வெப்பர்]*

வெப்பல் *veppal,* பெ.(n.) சாம்பல் நிறங் கலந்த செந்நிறமுள்ளதும் கல்லின்றிக் கட்டி கட்டியாக உள்ளதுமான நிலவகை; an inferior of soil, light greyish brown earth, limpy and free stones.

*[வெம்பு → வெப்பு →வெப்பல். தே.நே.பக்.103)]*

வெப்பாலரிசி *veppālariši,* பெ.(n.) வெட்பாலை அரிசி; seeds of *veḍpālaiariši.*

*[வெப்பால் + அரிசி]*

வெப்பாலை *veppālai,* பெ.(n.) மருந்துப் பூடுவகை; a medicinal tree wrightia tinctoria alias wanti dysenterica.

*[வெம்பு → வெப்பு → வெப்பாலை]*



வெப்பாற்றி *veppāṟṟi,* பெ.(n.) அனலாற்றி; cooler.

*[வெம்பு → வெப்பு → வெப்பாற்றி]*

வெப்பி-த்தல் *veppi-,* செ.குன்றாவி. (v.t.) 1. சூடாக்குதல்; to heat. 2. மனக்கொதிப்பு உண்டாக்குதல்; to make one hot with anger. *"வென்றடுகிற பாரை வெப்பித்து" (பழமொ. 294).*

*[வெப்பு → வெப்பி → வெப்பித்தல்]*

வெப்பிடி *veppiḍi,* பெ.(n.) வெயில் தாக்கல்; sun-stroke.

*[வெப்பு → வெப்பி → வெப்பிடி]*

வெப்பியாரம் *veppiyāram,* பெ.(n.) மனத் துயர் (யாழ்.அக.); grief.

*[வெப்பத்துயரம் → வெப்பியாரம்]*

வெப்பிரத்தம் *veppirattam,* பெ.(n.) இதனால் வாய் நாற்றமுண்டாகும்; blood vitiated with heat and it causes bad smell in the mouth.

*[வெப்பு + ரத்தம்]*

வெப்பிராளம் *veppirāḷam,* பெ.(n.) மனக்குழப்பம்; mental agitation.

*[வெப்பியாரம் → வெப்பிராளம்]*

வெப்பு *veppu,* பெ.(n.) 1. சூடு; heat. 2. காய்ச்சல் நோய்; fever. 3. கோபம்; anger. *"வெப்பமுற்றோனவி நயம்" (சிலப். பக். 70).* 4. சீற்றம்; anger. *"வெப்புடை மெய்யுடை வீரன்" (கம்பரா. அயோமுகி. 62).* 5. பொறாமை; spite. 6. ஆசை (சூடா.); desire. 7. கொடுமை; severity. *"வெப்புடை யாடூஉச் செத்தனென் மன்யான்" (பதிற்றுப். 86, 4).* 8. தொழுநோய் (சிலப். உரைபெறு கட்டுரை. 1, உரை); leprosy.

*[வெம்பு → வெப்பு]*

ம., தெ. வெப்பு; து. பெப்பு (b)

வெப்புக்கட்டி[1] *veppu-k-kaṭṭi,* பெ.(n.) 1. சூட்டினாலேற்பட்ட கட்டி; boils abscess formed due to heat. 2. வெப்பினால் வயிற்றிலுண்டாகும் கட்டி; enlargement due to fever. 3. காய்ச்சற்கட்டி; enlargement of spleen or liver or both.

*[வெப்பு + கட்டி]*

வெப்புக்கட்டி[2] *veppu-k-kaṭṭi,* பெ.(n.) நாட்பட்ட காய்ச்சலினால் உண்டாகும் வயிற்றுக்கட்டிவகை; a smelling in the intestines, accurring after chronic fevers. (w.).

*[வெப்பு + கட்டி → வெப்புக்கட்டி]*

வெப்புக்கழிச்சல் *veppu-k-kaḻiccal,* பெ.(n.) சூட்டினாலுண்டாகும் கழிச்சல்; diarrhoea caused by excessive heat in the system.

*[வெப்பு + கழிச்சல்]*

**வெப்புக்கொதி**[1] *veppu-k-kodi,* பெ.(n.) வெப்பத்தினாலுண்டாகும் ஒரு வகைக் கணச் சூடு; feeling hot due to congenital heat-there may be no rise in temperature.

*[வெப்பு + கொதி]*

**வெப்புக்கொதி** *veppu-k-kodi,* பெ.(n.) காய்ச்சலினால் உண்டாகும் காங்கை; slight fever (w.).

*[வெப்பு + கொதி → வெப்புக்கொதி]*

**வெப்புக்கொதிப்பு** *veppu-k-kodippu,* பெ.(n.) வெப்பத்தினாலுண்டாகும் ஒரு வகைக் கணச்சூடு; feeling hot due to congenital heat.

*[வெப்பு + கொதிப்பு]*

**வெப்புச்சுரம்** *veppu-c-curam,* பெ.(n.) சூட்டுக் காய்ச்சல்; fever caused by heat in the system.

*[வெப்பு + சுரம்]*

**வெப்புசன்னி** *veppu-šanni,* பெ.(n.) சூடு; apoplexy due to sunstroke or long exposure in sun's heat.

*[வெப்பு + சன்னி]*

**வெப்புத்தாகம்** *veppu-t-tāgam,* பெ.(n.) சூடு அல்லது வறட்சியினாற் காணும் தாகவிடாய்; thirst due to heat.

*[வெப்பு + தாகம்]*

**வெப்புத்தீரல்** *veppu-t-tiral,* பெ.(n.) சூடு கழிதல்; being cured of heat in the system.

*[வெப்பு + தீரல்]*

**வெப்புநட்சத்திரம்** *veppu-naṭcattiram,* பெ.(n.) காய்ச்சல் விண்மீன் (விதான. குணாகுண. 40, உரை); the 7th or 9th naksatra from that with which Jupiter is in conjunction.

*[வெப்பு + நட்சத்திரம்]*

**Skt.** Nakshatra > த. நட்சத்திரம்.

**வெப்புநாற்றம்**[1] *veppu-nāṟṟam,* பெ.(n.) முடைநாற்றம்; foul smell (w.).

*[வெப்பு + நாற்றம்]*

**வெப்புநாற்றம்**[2] *veppu-nāṟṟām,* பெ.(n.) 1. கெட்ட நாற்றம்; foetid smell. 2. அழுகல் நாற்றம்; putrid smell.

*[வெப்பு + நாற்றம்]*

**வெப்புநீர்** *veppu-nir,* பெ.(n.) 1. ஆவிநீர்; vapour. 2. நோய்; a disease.

*[வெப்பு + நீர்]*

**வெப்புநோய்** *veppu-nōy,* பெ.(n.) 1. காய்ச்சல் சூடு; slight fever. *"வெப்புநோயர் நீரின் மூழ்கின் வெம்மையாறுமே கொலாம்" (நைடத. கைக்கிளை. 2).* 2. தொழுநோய்; leprosy. *"வெப்பு நோயுங் குருவும்" (விலப். உரைபெறுகட். 1).*

*[வெப்பு + நோய்]*

**வெப்புப்பார்வை** *veppu-p-pārvai,* பெ.(n.) வெப்புப்பாவை பார்க்க; see *veppu-p-pāvai.*

*[வெப்பு + பார்வை]*

**வெப்புப்பாவை**[1] *veppu-p-pāvai,* பெ.(n.) கட்டிவகை; a kind of distemper in the bowels with offensive smell, swelling in the bowels after chronic fever.

*[வெப்பு + பாவை]*

**வெப்புப்பாவை²** *veppu-p-pāvai*, பெ.(n.) வெப்புக்கட்டி பார்க்க (யாழ்.அக.); see *veppu-k-kaṭṭi*.

*[வெப்பு + பாவை]*

**வெப்புப்பாவைக்கட்டு** *veppu-p-pāvai-k-kaṭṭu*, பெ.(n.) வெப்புக்கட்டி பார்க்க; see *veppu-k-kaṭṭi* (w.).

*[வெப்பு + பாவை + கட்டு]*

**வெப்புப்பிணி** *veppu-p-piṇi*, பெ.(n.) காந்தப் பொடியால் தீரும் ஒருவகை நோய்; disease due to heat, the remedy is kantha (load stone) chenduram.

*[வெப்பு + பிணி]*

**வெப்புமிஞ்சல்** *veppu-miñjal*, பெ.(n.) சூடதிகரித்தல்; increase of heat in the body.

*[வெப்பு + மிஞ்சல்]*

**வெப்புவெப்பெனல்** *veppu-veppeṉal*, பெ.(n.) சினக்குறிப்பு, துயர்க்குறிப்பு; fury agony.

*[வெப்பு + வெப்பு + எனல்]*

**வெப்புள்** *veppuḷ*, பெ.(n.) வெம்மை; heat. *"வெப்புள் விளைந்த வெங்கை" (புறநா. 120).*

*[வெம்பு → வெம்புள்]*

**வெப்புறுதல்** *veppuṟutal*, பெ.(n.) சூடுண்டாதல்; growing warm.

*[வெப்பு + உறுதல்]*

**வெப்பூட்டுதல்** *veppūṭṭutal*, பெ.(n.) 1. சூடுண்டாக்கல்; to heat gently. 2. வேக வைத்தல்; to boil.

*[வெப்பு + ஊட்டுதல்]*

**வெம்பகல்** *vem-pakal*, பெ.(n.) நடுப்பகல் (தக்கயாகப். 164, உரை); midday.

*[வெம் (மை) + பகல்]*

**வெம்பசி** *vempasi*, பெ.(n.) வயிற்றைக் கிள்ளும் பசி (பெரும் பசி); pinching hunger.

*[வெம் (மை) + பசி]*

**வெம்பரப்பு** *vem-parappu*, பெ.(n.) 1. வெற்று நிலம்; uncultivated waste. 2. மிகுதியான பரபரப்பு; excessive flurry to.

*[வெறும் + பரப்பு]*

**வெம்பல்¹** *vempal*, பெ.(n.) 1. மிகுவெப்பம்; tropical heat. *"வெயில் வீற்றிருந்த வெம்பலை யருஞ்சுரம்" (நற். 84)*. 2. சீற்றம் (சூடா.); anger. 3. வாடலானது; that which has faded. 4. பிஞ்சிற் பழுத்துக் கெட்ட காய்; prematurely ripe fruit (w.).

*[வெம்பு → வெம்பல்] (மே.க.பக். 130)*

**வெம்பல்²** *vembal*, பெ.(n.) (காய்கறியைக் குறிக்கையில்) வெப்பத்தால் ஊறுபாடுற்றது; (of vegetables) faded and shrivelled.

*[வெம்பு → வெம்பல்]*

**வெம்பளிக்கை** *vempaḷikkai*, பெ.(n.) இறுமாப்பு; pride (w.).

*[வெம்பு → வெம்பளிக்கை]*

**வெம்பற்று** *vempaṟṟu*, பெ.(n.) சூடான பற்று; warm plaster.

*[வெம் (மை) + பற்று]*

**வெம்பறவை** *vem-paṟavai*, பெ.(n.) எண்காற்புள்; fabulous eight-legged bird.

*[வன்பறவை → வெம்பறவை]*



வெம்பா *vempā,* பெ.(n.) மூடபனி; mist. *'வெம்பாப் பெய்தால் சம்பா விளையும்'.*

*[வெண்பு → வெம்பு → வெம்பா]*

வெம்பாடம் *vempāḍam,* பெ.(n.) மரவகை; a kind of tree-ventilago madras patam.

*[வெம்பாடு → வெம்பாடு → வெம்பாடம்]*

வெம்பாடல் *vempāḍal,* பெ.(n.) 1. வாடல்; fading-withering. 2. சினங்கொள்ளல்; to getting angry.

*[வெம்பு + ஆடல் → வெம்பாடல்]*

வெம்பியகாய் *vembiya-kāy,* பெ.(n.) பிஞ்சில் வெம்பிய பழம்; premature fruit.

*[வெம்பு → வெம்பிய + காய்]*

வெம்பிளாந்தி *vempiḷānti,* பெ.(n.) மனங்குழம்பியவன் (யாழ்.அக.); on who is confused.

*[வெம் (மை) + பிராந்தி → பிளாந்தி]*

வெம்பிளிக்கை[1] *vembiḷikkai,* பெ.(n.) செவ்வெருக்கிலை; yellow or riped madar leaf.

வெம்பிளிக்கை[2] *vembilikkai,* பெ.(n.) 1. இறுமாப்பு; pride (w.). 2. புறக்கணிப்பு; disregard. *"தரும்பொருளை வெம்பிளிக்கை பண்ணாதே".*

*[வீம்பளிக்கை → வெம்பிளிக்கை]*

வெம்பு[1]-தல் *vembu,* செ.கு.வி.(v.i.) 1. மிகச் சூடாதல்; to be very hot. *"மலை வெம்ப" (கலி. 13).* 2. வாடுதல்; to fade. *"வேரோடு மரம்வெம்ப" (கலித். 10, 4).* 3. மனம் புழுங்குதல்; to be distressed in mind. *"வெம்பினா ரரக்க ரெல்லாம்" (தேவா. 776, வ.).*

*[வெம் → வெம்பு → வெம்பு-தல்] (வேக.பக். 130)*

வெம்பு[2]-தல் *vembu,* செ.கு.வி. (v.i.) 1. விரும்புதல்; to desire. *"வெம்ப லூர்ந்துலாம் வேனிலானினே" (சீவக. 410).* 2. சினத்தல்; to be angry. 3. பிஞ்சில் பழுத்தல்; to become prematurely ripe. 4. வெஞ்சினம்; violent anger.

*[வெம் → வெம்பு → வெம்புதல்]. (தே.நே.பக்.102.)*

வெம்பு[3]-தல் *vembu,* செ.கு.வி. (v.i.) ஒலித்தல்; to sound. *"பம்பை வெம்பின" (சீவக. 2222).*

வெம்பு[4] *vembu,* பெ.(n.) வாடுதல்; becoming prematurely ripe.

*[வெம் → வெம்பு]*

வெம்புழுங்கல் *vempuḻuṅgal,* பெ.(n.) இளம்புழுக்கலரிசி; rice obtained by husking parboiled paddy.

*[வெம் → வெம்பு → வெம்புழுங்கல்]*

வெம்புறு *vemburu,* பெ.(n.) வெம்மை; heat (w.).

*[வெம் → வெம்பு → வெம்புறு]*

**வெம்புனல்** *vempuṇal,* பெ.(n.) உத்தாமணி; a twining plant hedge cotton-daemia extense.



**வெம்போடு** *vembōḍu,* பெ.(n.) பெரும்போட்டு ஆளுக்கு எதிரிடை வெத்துவேட்டு, ஏமாற்றுக்காரன்; deceirt, crafty person.

**வெம்மணல்**[1] *vemmaṇal,* பெ.(n.) உதவிச்சாறு வகைகளிலொன்று; one of the 120 natural substance.

**வெம்மணல்**[2] *vemmaṇal,* பெ.(n.) நிரையம் (இறந்தோர் உலகு); a hell.

*[வெம் (மை) + மணல்]*

**வெம்மாலி** *vemmāli,* பெ.(n.) வெள்ளூமத்தை; dhature bearing white flowers-dature alba.

*[வெண்மாலி → வெம்மாலி]*

**வெம்மூற்று** *vemmūṟṟu,* பெ.(n.) வெந்நீர் ஊற்று; hot spring, thermal spring.

*[வெம் (மை) + ஊற்று → வெம்மூற்று]*

**வெம்மை** *vemmai,* பெ.(n.) 1. வெப்பம்; heat. *"அழலென்ன வெம்மையால்" (கலித். 11).* 2. கடுமை (சீவக. 744); severity, harshness. 3. சீற்றம்; anger. *"வேகயானை வெம்மையிற் கைகௌ" (சிலப். 15, 47).* 4. விருப்பம் (தொல். சொல். 334); desire. 5. வல்லமை; mightiness, valour. *"உலகமூன்றுமென் வெம்மையி னாண்டது" (கம்பரா. அதிகா. 4).*

ம. வெம்பு; தெ. உம்ம.

*[வெள் → வெய் → வெய்மை → வெம்மை. (தே.நே.பக்.102)]*

**வெம்மைப்பொட்டணம்** *vemmai-p-poṭṭaṇam,* பெ.(n.) ஒற்றிடம்; hot-fomentation.

*[வெம்மை + பொட்டணம்]*

**வெம்மையாற்றல்** *vemmai-yāṟṟal,* பெ.(n.) சூட்டைத் தணித்தல்; cooling the heat in the system.

*[வெம்மை + ஆற்றல்]*

**வெய்து** *veytu,* பெ.(n.) 1. வெப்பமுள்ளது; that which is hot. *"சிறுநெறி வெய்திடை யுறாஅ தெய்தி" (அகநா. 203).* 2. வெப்பம் (மதுரைக். 403, உரை); heat. 3. வெப்பமுள்ள பொருளாலிடும் நற்றடம்; fomentation. 4. துக்கம்; sorrow. *"வெய்துறு பெரும்பயம்" (ஞானா. 35, 3)* வி.எ.(adv.) விரைவில்; speedily. *"வேந்தன் வெருவந்து வெய்துகெடும்" (குறள், 569).*

*[வெய்யது → வெய்து] (வே.க.பக். 130)*

**வெய்துபிடி-த்தல்** *veytu-piḍi-,* செ.கு.வி. (v.i.) 1. ஒற்றடங்கொடுத்தல்; to apply fomentation. 2. நீராவியால் உடலை வேர்க்கச் செய்தல்; to use steam as a sudorific.

*[வெய்து + பிடி]*

வெய்துயிர்–த்தல் *veytuyir-,* செ.கு.வி.(v.i.). வெப்பமாக மூச்சு விடுதல்; to breath hot, as in grief. *"வெய்துயிர்த்துப் பிறைநுதல் வியர்ப்ப" (அகநா. 207).*

*[வெய்து + உயிர்–த்தல்]*

வெய்துரை *veyturai,* பெ.(n.) கடுஞ்சொல்; harsh word.

*[வெய்து + உரை]*

வெய்துறல் *vey-tural,* பெ.(n.) அச்சக்குறிப்பு, சினக் குறிப்பு, துன்பம்; fear, rage, woe, pain.

*[வெய்து + உறல்]*

வெய்துறு–தல் *veyturu-,* செ.கு.வி.(v.i.) 1. மனங்கலங்குதல் (பிங்.); to be perplexed. 2. துன்புறுதல்; to be distressed. 3. சீற்றங் கொள்ளுதல்; to be angry.

*[வெய்து + உறு–தல்]*

வெய்தெனல் *veytenal,* பெ.(n.) 1. வெப்பக் குறிப்பு; being hot. 2. விரைவுக் குறிப்பு (சூடா.); being in haste. 3. கொடுமைக் குறிப்பு; being creel.

*[வெய்து + எனல்]*

வெய்ய *veyya,* பெ.எ.(adj.) 1. வெப்பமான; hot. *"வெய்ய கதிரோன் விளக்காக" (திவ். இயற். 1, 1).* 2. கொடிய; fierce, cruel. 3. விரும்புதற்குரிய; desirable. *"வெய்ய நெய்" (தக்கயாகப். 506).*

*[வெள் → வெய் → வெய்ய]*

வெய்யது *veyyatu,* பெ.(n.) 1. சூடானது (யாழ்.அக.); that which is hot. 2. கொடியது; that which is cruel. 3. தாங்க முடியாதது; that which is unbearable. *"அரும் பெருமூப்பும் வெய்யதாயது" (கம்பரா. மந்திரப். 62).*

*[வெய் → வெய்யது]*

வெய்யநட்சத்திரம் *veyya-natcattiram,* பெ.(n.) 1. அறிவன் கோள் நின்ற நாளுக்குப் பதினெட்டா நாளும், இருபத்து நான்காம் நாளும் (விதான. குணா. 40, உரை); the 18th and 24th naksatra counted from the naksatra occupied by mercury. 2. மகம், பூரம், பரணி நாட்கள் (விதான. பஞ்சாங்க. 20, உரை); the 10th, 11th and the 2nd naksatram.

*[வெய்ய + நட்சத்திரம்]*

**Skt.** natchathra > த. நட்சத்திரம்.

வெய்யநீர் *veyya-nir,* பெ.(n.) வெந்நீர் (யாழ்.அக.); hot water.

*[வெய்ய + நீர்]*

வெய்யமாந்தம் *veyya-mantam,* பெ.(n.) சூட்டினால் ஏற்பட்ட மாந்த நோய்; indigestion caused through excess of heat.

*[வெய்ய + மாந்தம்]*

வெய்யல் *veyyal,* பெ.(n.) வெயில்; sunlight (w.).

*[வெயில் → வெய்யல்]*

வெய்யவன் *veyyavan,* பெ.(n.) 1. வெய்யன் 1, 2 பார்க்க; see *veyyan.* 2. வெய்யோன் 2 பார்க்க; see *veyyon.* *"வெய்யவனூருந் தேரின்" (பெருங். இலாவாண. 8, 172).* 3. தீத் தெய்வம்; fire-god. *"வெய்யவன் படையை விட்டான்" (கம்பரா. அதிகாய. 203).* 4. வெய்யன் 4 பார்க்க; see *veyyan.*

*[வெய் → வெய்யவன்]*

வெய்யன் *veyyaṉ*, பெ.(n.) 1. கொடியவன்; cruel person. *"வெய்யனா யுலகேழுட னலிந்தவன்" (திவ். பெரியதி. 5, 3, 3).* 2. வெய்யவன் 3 பார்க்க; see *veyyavaṉ.* 3. வெய்யோன் 2 பார்க்க; see *veyyōṉ.* 4. விருப்பமுள்ளோன்; one who is desirous or eager. *"நல்லூரன் புதுவோர்ப் புணர்தல் வெய்யனாயின்" (கலித். 75, 10).*

*[வெள் → வெய் → வெய்யன்] (வே.க.பக். 129)*

வெய்யனீர் *veyyaṉīr*, பெ.(n.) கதிரவன் ஒளிக்கதிரால் சூடான நீர்; water heated by the rays of the sun.

*[வெய்யல் + நீர்]*

வெய்யில் *veyyil*, பெ.(n.) வெயில் பார்க்க; see *veyil.* *"நிழல் வெய்யில் சிறுமை பெருமை" (திவ். திருவாய். 6, 3, 10).*

*[வெய் → வெயில் → வெய்யில்]*

வெய்யில்தாழ *veyyil-tāḻa*, வி.எ.(adv.) மாலையில்; in the evening (w.). *'வெய்யில் தாழவா'.*

*[வெயில் → வெய்யில் + தாழ்]*

வெய்யிற்குளிர *veyyiṟ-kuḷira*, வி.எ.(adv.) வெய்யில்தாழ பார்க்க; see *veyyil-tāḻa* (w.). *"வெய்யிற் குளிரவா".*

*[வெயில் → வெய்யில் + குளிர]*

வெய்யிற்சூடு *veyyiṟ-šūḍu*, பெ.(n.) கதிரவன் வெப்பம்; sun's heat.

*[வெயில் → வெய்யில் + சூடு]*

வெய்யோன் *veyyōṉ*, பெ.(n.) 1. வெய்யன் 1 பார்க்க; see *veyyaṉ.* *"ஆர்த்தனர் வெய்யோர்" (கந்தபு. முதனாட்போ. 49).* 2. சூரியன்; sun. *"வெய்யோனொளி" (கம்பரா. கங்கை. 1).* 3. வலது மூக்குத் துளை; right nostril. *"இலகு வெய்யோனிற் பதினாறளவை விடல்" (காசிக. யோக. 23).* 4. வெய்யவன்[3] பார்க்க; see *veyyavaṉ.* 5. வெய்யன் 4 பார்க்க; see *veyyaṉ.* *"பொன்னறைதான் கொடுத்தான் புகழ்வெய்யோன்" (சீவக. 237).*

*[வெய் → வெய்யோன்]*

வெயர்[1]-த்தல் *veyar-*, செ.கு.வி.(v.i.) 1. வேர்வை நீர் உண்டாதல்; to perspire. *"புனைநுதல் வெயர்க்க" (பாரத. பன்னிரண். 47).* 2. சீற்றம் கொள்ளுதல்; to be angry.

*[வியர் → வெயர் → வெயர்-த்தல்] (வே.க. 129)*

வெயர்[2] *veyar*, பெ.(n.) வேர்வை நீர்; sweat. *"வெயர்பொடிப்பச் சினங் கடைஇ" (பு.வெ. 7, 13, கொளு.).*

*[வியர் → வெயர்] (வே.க. 129)*

வெயர்ப்பு *veyarppu*, பெ.(n.) 1. வெயர் 2 பார்க்க; see *veyar.* *"குறுவெயர்ப் பொழுக்கென" (கல்லா. 16, 5).* 2. வேர்வை உண்டாகை; sweating. 3. சீற்றம்; anger. *"வெஞ்சமம் விளைத்தன வெயர்ப்பால் (இரகு. திக்குவி. 112).*

*[வியர் → வெயர் → வெயர்ப்பு]*

வெயர்வு *veyarvu*, பெ.(n.) வெயர் 2 பார்க்க (திவா.); see *veyar.*

*[வியர் → வெயர் → வெயர்வு]*

வெயர்வை *veyarvai*, பெ.(n.) வெயர் 2 பார்க்க; see *veyar.*

*[வியர் → வெயர் → வெயர்வை] வே.க.பக். 129)*

வெயில் *veyil,* பெ.(n.) 1. கதிரவன் வெளிச்சம்; sunlight, sunshine. *"துகில் விரித்தன்ன வெயில விருருப்பின்" (நற். 43).* 2. கதிரவன் வெப்பம்; heat and glare of the sun, as on a tropical day. *"என்பிலதனை வெயில் போலக் காயுமே" (குறள், 77).* 3. கதிரவன்; the sun. *"வெயிலிள நீலவே போல் விரிகதிரிடை வீச" (கம்பரா. வனம்புகு. 2).* 4. ஒளி (சூடா.); brilliance. *"மணியிழையின் வெயில்" (கம்பரா. நாட். 42).*

*[வெள் → வெய் → வெயில்]*

ம. வெயில்; க. பிகில் (b).

வெயில்தடுப்பி *veyil-taduppi,* பெ.(n.) கட்டட வாயில் பலகணிகளில் வெயில் மறைக்கும் சுவரில் அமைந்த தடுப்பு அமைப்பு (பொ. வழக்.); sun shade.

*[வெயில் + தடுப்பி]*

வெயில்தாழ்–தல் *veyil-tāḻ-,* செ.குன்றாவி. (v.t.) மாலை; evening, sunset.

*[வெயில் + தாழ்–,]*

வெயில்நீக்கி *veyil-nīkki,* பெ.(n.) குடை (தக்கயாகப். 257, உரை); unbrells.

*[வெயில் + நீக்கி]*

வெயில்படர்ந்தநீர் *veyil-paḍarnta-nīr,* பெ.(n.) வெயிலினால் சூடு கொண்ட நீர்; water heated by the sun, it is used to give bath to the patients cured of small pox.

*[வெயில் + படர்ந்த + நீர்]*

வெயில்வதக்கம் *veyil-vadakkam,* பெ.(n.) வெயிலிற் காய்தல்; to dry in the sun.

*[வெயில் + வதக்கம்]*

வெயிலடித்தல் *veyil-aḍittal,* பெ.(n.) 1. கதிரவன் வெளிச்சம்; sun light. 2. வெப்பக்கதிர்; sunshine.

*[வெயில் + அடித்தல்]*

வெயிலுந்தரவிந்தம் *veyiluntara-vintam,* பெ.(n.) 1. தாமரை; lotus-which is opens when the sun appears. 2. வெண்டாமரை; white lotus.

*[வெயில் + உந்து அரவிந்தம்]*

**Skt.** Aravinda > த. அரவிந்தம்.



வெயிலுறைத்தல் *veyil-uṟaittal,* பெ.(n.) கதிரவன் ஒளி வீசுதல்; sunshine (w.).

*[வெயில் + உறைத்தல்]*

வெயிலெறித்தல் *veyil-eṟittal,* பெ.(n.) வெயிலடித்தல் பார்க்க; see *veyil-aḍittal.*

*[வெயில் + எறித்தல்]*

வெயிலோன் *veyilōṉ,* பெ.(n.) ஞாயிறு; the sun. *"வெயிலோனு மேல் பாற்குன்றிற் கிட்ட" (பாரத. முதற்போர். 73).*

*[வெயில் + அன் → வெயிலோன்]*

வெயிற்காய்தல் *veyir-kāytal,* பெ.(n.) வெயிலிற் குளித்தல், வெயிலிற் குளிர்த்தலால் மினுமினுப்புப் பெறுதல்; to take sun bath, the sun shining.

*[வெயில் + காய்தல்]*

வெயிற்குளி-த்தல் *veyir-kuli-,* பெ.(n.) 1. வெயிலில் காய்தல்; to be exposed to the sun. 2. கதிரவன் வெப்பத்தில் குளிர் காய்தல்; to bath in the sun.

*[வெயில் + குளி-த்தல்]*

வெயிற்குளிர்-தல் *veyir-kulir-,* செ.கு.வி. (v.i.) மாலையில் கதிரவன் மெல்ல மறைதல் பொருட்டு வெம்மை தணிதல் (யாழ்.அக.); to become mild, as the evening sun.

*[வெயில் + குளிர்-தல்]*

வெயிற்பாழ் *veyir-pāl,* பெ.(n.) மழையின்றி வெயில் காய்வதால் உண்டாகும் பயிர்க்கேடு; loss of crop due to drought, one of *mu-p-pāl.* q.v.

*[வெயில் + பாழ்]*

வெயிற்றுகள் *veyirrukal,* பெ.(n.) வெயிலில் பறக்கும் அணுத்துகள்; mote in a sunbeam. *"வாய்ப்பறியலனே வெயிற்றுக ளனைத்தும்" (பதிற்றுப். 20, 6).*

*[வெயில் + துகள்]*

வெயின்மறை *veyin-marai,* பெ.(n.) வெயிலை மறைக்கும் கருவி; that which protects one from the heat of the sun, as an unbrells. *"கற்பகவல்லி சாதியைத் தமக்கு வெயின்மறையாக" (தக்கயாகப். 11, உரை).*

*[வெயில் + மறை → வெயின்மறை]*

வெயினோ *veyinō,* பெ.(n.) வெயிலின் பாதிப்பால் உண்டாகும் நோய்; sun-stroke.

*[வெயில் + நோ → வெயினோ]*

வெரிக்குது *verikkudu,* பெ.(n.) வெருட்சி கொள்ளுகிறது; bewildening lead or go astray. *'யோவ், குடையை மடக்கு, மாடு வெரிக்குது'.*

வெரிந் *verin,* பெ.(n.) முதுகு; back. *"வெரிஞெனிறுதி" (தொல். எழுத். 300).*

*[வெந் → வெரிந்]*

வெரிமருந்து *veri-marundu,* பெ.(n.) விட மருந்து (மூ.அ.); poisonous drug.

*[எரி + மருந்து → வெரி மருந்து]*

வெரு *veru,* பெ.(n.) எச்சம்; fear. *"வெருவரு நோன்றாள்...... கரிகால் வளவன்" (பொருந. 147).*

*[வெருவு → வெரு]*

வெருக்குவிடை *verukku-vidai,* பெ.(n.) காட்டுப் பூனையின் ஆண்; male of wild ceet. *"வெருக்குவிடை யன்ன வெகணோக்கு" (புறநா. 324).*

*[வெருகு + விடை → வெருக்குவிடை]*

வெருக்கொள்(ளு)-தல் *veru-k-kol(lu)-,* செ.கு.வி.(v.i.) அச்சங்கொள்ளுதல்; to be afraid. *"வெருக்கொண்டு பதைபதைத்து" (குசேலோ. குசேலர்வைகுந்த. 57).*

*[வெரு + கொள்]*

வெருக்கொள்ளி *veru-k-kolli,* பெ.(n.) மனத்திண்மையில்லாதவன்; person who lacks courage, coward.

*[வெருக்கொள் → வெருக்கொள்ளி]*

**வெருக்கோள்** *veru-k-kōl,* பெ.(n.) அச்சங் கொள்ளுகை; fearing. *"வெருக்கோளுற் றதுநீங்க" (பெரியபு. தடுத்தாட். 114).*

*[வெருக்கொள் → வெருக்கொள்ளுகை]*

**வெருகங்கிழங்கு**[1] *verukan-kilangu,* பெ.(n.) வெருகு[1], 4 பார்க்க; see *verugu.*

*[வெருகு → வெருகம் + கிழங்கு]*

**வெருகங்கிழங்கு**[2] *verugan-kilangu,* பெ.(n.) ஒருவகை மூலிகைக் கிழங்கு; a stout long root of the plant-arum macrorhizon.

*[வெருகன் + கிழங்கு]*

**வெருகடி** *verukati,* பெ.(n.) 1. பூனையின் அடி (யாழ்.அக.); cat's paw. 2. மூன்று விரல்களின் நுனிகளால் எடுக்குமளவு; a large pinch, as much as can be taken up with tips of thumb and two fingers (w.). *'அந்தச் சூர்ணத்தில் வெருகடித் தூள் உட்கொண்ண வேண்டும்'.*

*[வெருகு + அடி → வெருகடி]*

**வெருகடித்தூள்** *verukadi-t-tūl,* பெ.(n.) ஒரு சிட்டிகைப் பொடி; one pinch of powder.

**வெருகடு** *veru-kadu,* பெ.(n.) பூனைக்காலி பார்க்க; see *pūnai-k-kāli.*

**வெருகம்** *verukam,* பெ.(n.) வாலின் கீழிடம் (பிங்.); the under side of tail.

**வெருகா** *verugā,* பெ.(n.) நீர் முள்ளி; a thorny weed used as medicine-hygrophila auriculate alias astercantha longifolia.

**வெருகு**[1] *veruku,* பெ.(n.) 1. ஆண்பூனை (திவா.); tom-cat. 2. காட்டுப்பூனை (பிங்.); wild cat. *"வெருக்கு விடை யன்ன" (புறநா. 324).* 3. மரநாய்; toddy cat. 4. வெண்கிடை (பிங்.); white-flowered sola.

*[மெருகு → வெருகு]*



**வெருகு**[2] *verugu,* பெ.(n.) மெருகு (யாழ்.அக.); polish.

*[மெருகு → வெருகு]*

**வெருட்சி**[1] *veritci,* பெ.(n.) 1. மருட்சி; bewiderment. 2. மருளுகை; shyness. 3. அச்சம்; fear.

*[வெருள் → வெருட்சி]*

**வெருட்சி**[2] *verutci,* பெ.(n.) மயக்கம்; giddiness.

*[வெருள் → வெருட்சி]*

**வெருட்டல்** *veruttal,* பெ.(n.) அச்சமுறுத்தல், மயக்கல்; fear, allurement.

*[வெருள் → வெருட்டு → வெருட்டல்]*

**வெருட்டி** *verutti,* பெ.(n.) வெருட்டுவது; that which frightens. *"வேழவெண்டிரட டக்கை வெருட்டி" (சீவக. 174).*

*[வெருட்டு → வெருட்டி]*

**வெருட்டு–தல்** *veruṭṭu-,* செ.குன்றாவி.(v.t.) 1. அச்சமுறுத்துதல்; to terrify, frighten. *"பாம்பினொடு படர்சடைக வைகாட்டி வெருட்டி" (தேவா. 676, 2).* 2. மலைக்கச் செய்தல்; to confuse, stupefy. *"வடிவழகாலே நாட்டை வெருட்டித் திரிகிற காமன்" (ஈடு. 2, 7, 8).* 3. விலங்குகள் முதலியவற்றை ஓட்டுதல்; to drive away an animals. 4. வேகமாகச் செல்லத் தூண்டுதல்; to drive fast. *'வண்டி மாட்டை வெருட்டு' (உ.வ.).*

*[வெருள் → வெருட்டு]*

**வெருட்டு**[2] *veruṭṭui,* பெ.(n.) 1. கூச்சமுண்டாக்குகை; causing shyness (w.). 2. அச்சமுண்டாக்குகை; causing fear. 3. ஓட்டுகை; driving away. 4. வேகமாகச் செல்லத் தூண்டுகை; driving fast.

*[வெருள் → வெருட்டு]*

**வெருணி** *veruṇi,* பெ.(n.) ஆடு தீண்டாப் பாளை; a bitter worm killer - an ash coloured prostate plant aristolochia bracteata.



**வெருணை**[1] *veruṇai,* பெ.(n.) 1. செடிவகை (பதார்த்த. 534); pavetta. 2. ஒருவகைச் சிறு மரம் (மூ.அ.); common bottle flower, s.tr.

*[வெருணை → வெருணை]*

**வெருணை**[2] *veruṇai,* பெ.(n.) பாவட்டை; a small tree-pavata indica.

**வெருப்பறை** *veru-p-paṟai,* பெ.(n.) போர் முரசு; war-drum. *"வென்றி யெய்துதல் வேண்டு நாமென வெருப்பறை கொட்டி" (பெருங். மகத. 24, 29).*

*[வெரு + பறை]*

**வெருவந்தம்**[1] *veru-vantam,* பெ.(n.) அச்சம்; fear (w.).

*[வெருவா → வெருவந்தம்]*

**வெருவந்தம்**[2] *veru-vantam,* பெ.(n.) ஒரு வகைக் கொடி; a kind of creeper.

**வெருவருநிலை** *veru-varu-nilai,* பெ.(n.) அம்பு தன் மார்பைப் பிளப்பவும் நிலத்தில் விழாமல் நின்ற வீரனது நிலையைக் கூறும் புறத்துறை (பு.வெ. 7, 23, கொளு.); theme describing the attitude of a warrior who does not fall down even when his breast is pierced through and through by the arrows of his enemies.

*[வெருவரு + நிலை]*

**வெருவல்** *veruval,* பெ.(n.) வெருவுதல்; to be alarmed.

*[வெரு → வெருவல்]*

**வெருவயிறு** *veru-vayiṟu,* பெ.(n.) வெறும் வயிறு; empty stomach.

*[வெறுவயிறு → வெருவயிறு]*

**வெருவலர்** *veru-valar,* பெ.(n.) பகைவர்; enemies. *"வெருவலர் புரந்தீய" (உபதேசகா. சூராதி. 3).*

*[வெரு + அல் + அர் → வெருவலர்]*

வெருவா–தல் (வெருவருதல்) *veruvā-*, செ.கு.வி.(v.i.) 1. அச்சந்தருதல்; to be fearful. *"வெருவெரு தானைகொடு செருப்பல கடந்து" (பதிற்றுப். 70, பதி.).* 2. அஞ்சுதல்; to be afraid. *"வெருவந்த செய்தொழுகும் வெங்கோல னாயின்" (குறள், 599).*

*[வெரு + வா → வெருவா]*

வெருவு¹–தல் *veruvu-*, செ.குன்றாவி.(v.t.) & செ.கு.வி.(v.i) 1. அஞ்சுதல்; to be afraid of, to be alarmed. *"யானை வெரூஉம் புலிதாக் குறின்" (குறள், 599).*

*[வெருள் → வெருவு]*

வெருவு² *veruvu*, பெ.(n.) அச்சம்; fear. *"வெறியாட்டிடத்து வெருவின் கண்ணும்" (தொல். பொ. 111).*

*[வெருள் → வெருவு]*

வெருவெரு–த்தல் *veru-veru-*, செ.கு.வி. (v.i.) அஞ்சுதல்; to be afraid. *"உயிர் நடுங்கி.......... வெருவெருத்து நின்ற னரால்" (உபதேசகா. சூராதி. 49).*

*[வெருள் → வெருவு → வெருவெரு–த்தல்]*

வெருள்¹(ளு)–தல் *veru!(!u)-*, செ.கு.வி.(v.i.) 1. மருளுதல்; to be startled, perplexed. *"எனைக் கண்டார் வெருளா வண்ணம் மெய்யன்பை யுடையாய் பெறநான் வேண்டுமே" (திருவாச. 32, 3).* 2. அஞ்சுதல்; to be frightened. *"பெருங்குடியாக்கம் பீடற வெகுளி" (பெருங். மகத. 24, 84).* 3. குதிரை முதலியன மருளுதல்; to shy, to be skittish.

*[வெருள் → வெருள்(ளு)–தல்]*

வெருள்² *veru!*, பெ.(n.) 1. மனக்கலக்கம் (சூடா.); per plexity. 2. பயம்; fear. 3. அஞ்சத்தக்கது; that which is fearful. *"நின்புகழிகழ்வார் வெருளே" (திருவாச. 6, 17).*

*[வெரு → வெருள்]*

வெருள்வு¹ *veru!vu*, பெ.(n.) வெருட்சி; skittishness.

*[வெரு → வெருள் → வெருள்வு]*

வெருள்வு² *veru!vu*, பெ.(n.) மயக்கம்; vertigo.

*[வெரு → வெருள் → வெருள்வு]*

வெருளல் *veru!al*, பெ.(n.) மயங்கல்; to be infatuated. 2. பயப்படல், மருளல்; fearing.

*[வெரு → வெருள் → வெருளல்]*

வெருளார்–த்தல் *veru!ār-*, செ.கு.வி.(v.i.) 1. திகைத்தல்; to be startled. 2. மயங்குதல் (யாழ்.அக.); to be confused.

*[வெருள் + ஆர் → வெருளார்–த்தல்]*

வெருளி¹ *veru!i*, பெ.(n.) 1. வெருட்சி; bewilderment. *"வெகுளி மாடங்கள்" (சீவக. 532).* 2. வெருளச் செய்யும் புல்லுரு முதலியன; scare-crow, that which causes terror. 3. செல்வச் செருக்கு; pride of riches. *"வெருளி மாந்தர்" (சீவக. 73).*

*[வெருள் → வெருளி]*

வெருளி² *veru!i*, பெ.(n.) சோளக்கொல்லைப் பொம்மை; scarecrow.

*[வெரு → வெருள் → வெருளி]*



**வெருளிப்பிணை** *veruḷi-p-piṇai,* பெ.(n.) பெண்மான் வகை (பெருங். இலாவாண. 15, 31); a kind of doe.

*[வெருளி + பிணை → வெருளிப்பிணை]*

**வெருளுதல்** *veruḷutal,* பெ.(n.) வெருளல் பார்க்க; see *veruḷal.*

*[வெரு → வெருள் → வெருளுதல்]*

**வெர்ப்பேந்தி** *ver-p-pēnti,* பெ.(n.) மலைதாங்கி; a plant.

*[வெர்ப்பு + ஏந்தி]*

**வெருனை** *veruṉai,* பெ.(n.) 1. செடிவகை (பதார்த்த. 534); pavetta indica. 2. ஒருவகைச் சிறுமரம்; common bottle flower, s.tr.

*[வெருணை → வெருனை]*

**வெரூஉ** *verūu,* பெ.(n.) வெருவு பார்க்க; see *veruvu.* *"வெரூஉப்பறை" (பொருந. 171).*

*[வெருவு → வெரூஉ]*

**வெரூஉதல்** *verūutal,* பெ.(n.) மருண்டஞ்சுகை; being afraid. *"அலமார லரயிடை வெரூஉத லஞ்சி" (குறிஞ்சிப். 137).*

*[வெருவு → வெரூஉதல்]*

**வெல்(லு)-தல்** *vel(lu)-,* செ.குன்றாவி.(v.t.) 1. வெற்றி கொள்ளுதல்; to conquer, over come. *"எறிநீர் வையகம் வெலீஇய செல்வோய்" (முல்லைப். 57).* 2. ஒழித்தல்; to destroy, romove. *"வல்வினை வெல்லவன்" (திருநூற். 99).* 3. ஒத்தல்; to resemble. *"வேங்கை வென்ற சுணங்கு" (ஐங்குறு. 324).* செ.கு.வி.(v.i). 4. மேம்படுதல்; to excel. *"விதிமுறை யுலகினில் விளங்கி வெல்கவே" (பெரியபு. பாயி. 4).*

*[வெல் → வெல்(லு)-தல்]*

**வெல்புகழ்** *vel-pugaḻ,* பெ.(n.) போர்க்கண் வெற்றியினால் உண்டாகும் புகழ்ச்சி; fame due to victory in war. *"பாடினார் வெல்புகழைப் பல்புலவர்" (பு.வெ. 8, 1).*

*[வெல் + புகழ்]*

**வெல்லச்சாராயம்** *vella-c-cārāyam,* பெ.(n.) வெல்லப் பாகினின்று காய்ச்சும் சாராயம்; liquor from jaggery.

*[வெல்லம் + சாராயம்]*

**வெல்லச்சீடை** *vella-c-cīḍai,* பெ.(n.) அரிசிமாவும் வெல்லமும் சேர்த்துச் செய்த சீடைப் பணியாரம்; ball-cake of rice-flour made with coarse cane-sugar.

*[வெல்லம் + சீடை]*

**வெல்லடி** *velladi,* பெ.(n.) வலைவகை; a kind of net.

*[வல் → வெல் → வெல்லடி]*

**வெல்லந்தி** *vellanti,* பெ.(n.) விடத்தேர்; a plant-mint-mentha crispa.

**வெல்லப்பாகு**[1] *vella-p-pāku,* பெ.(n.) கருப்பஞ்சாற்றைக் காய்ச்சி உண்டாக்கும் குழம்பு; treacle.

*[வெல்லம் + பாகு]*

**வெல்லப்பாகு**[2] *vella-p-pāku,* பெ.(n.) 1. இன்தேன்பாகு நீர்; syrup. 2. வெல்லப் பருகை; solution of jaggery.

*[வெல்லம் + பாகு]*

**வெல்லப்பாணி** *vella-p-pāṇi,* பெ.(n.) வெல்லம் கரைத்த நீர்; solution of jaggery.

*[வெல்லம் + பாணி]*

**வெல்லம்**[1] *vellam,* பெ.(n.) கருப்பஞ்சாற்றுக் கட்டி; jaggery, unrefined cane-sugar. *"வெல்லச்சொ ணாவலர்க்கு" (தனிப்பா. i,* 305, 1).

**வெல்லம்**[2] *vellam,* பெ.(n.) 1. கரும்பு வெல்லம்; sugarcane jaggery. 2. பனைவெல்லம்; palmyra jaggery.

வகைகள் :
1. நல்ல வெல்லம்.
2. பனை வெல்லம்.
3. ஈச்ச வெல்லம் ; date jaggery
4. தெங்கின் வெல்லம்; jaggery from cocoanut toddy.

*[வெல் → வெல்லம்]*

**வெல்லல்** *vellal,* பெ.(n.) கொடிவகை; small elliptic-cuspidate leaved windberry.

**வெல்லவட்டு** *vella-vaṭṭu,* பெ.(n.) வெல்லத்தைக் காய்ச்சிச் சக்கரமாக ஊற்றிய துண்டு; circular piece of juggery. *"வெல்லவட்டுப் போல் வார்த்தை சொல்லி" (கவிகுஞ். 10).*

*[வெல்லம் + வட்டு]*

**வெல்லவல்** *vellaval,* பெ.(n.) வெல்லஞ் சேர்த்துப் பிசறிய அவல்; a sweet preparation of aval or parched rice.

*[வெல்லம் + அவல் → வெல்லவல்]*

**வெல்லி**[1] *velli,* பெ.(n.) சிற்றேலம் (மலை.); a species of cardamom.

**வெல்லி**[2] *velli,* பெ.(n.) திறமை சாலிப்பெண்; clever woman.

*[வெல் → வெல்லி]*

**வெல்லுமா** *vellumā,* பெ.(n.) புலி; tiger (w.).

*[வெல் + மா → வெல்லுமா]*



**வெல்லை** *vellai,* பெ.(n.) வெள்ளை நிறம்; whiteness. *"வெல்லை யறுவை நீக்கி" (சிவதரு. சிவஞானதான. 36).*

*[வெள்ளை → வெல்லை]*

**வெல்வி** *velvi,* பெ.(n.) வெற்றி; victory.

*[வெல் → வெல்வி]*

**வெலங்கப்பாறை** *velaṅga-p-pāṟai,* பெ.(n.) தொலைதூரக் கடலடிப் பாறை (மீன.பொ.வ.); rock in the deepest ocean.

*[விலகு → விலங்கம் → வெலங்கம் + பாறை]*



வெலங்கப்போதல் *velaṅga-p-pōdal,* பெ.(n.) தொலைவாய்க் கடல் மேற்செல்லுதல் (முகவை. மீன.); sailing for a long distance.

*[விலகு → விலங்கு → வெலங்கம் + போதல்]*

வெலத்தி *velatti,* பெ.(n.) வெலித்தி[2] பார்க்க; see *velitti.*

வெலவெல–த்தல் *velavela-,* செ.கு.வி.(v.i.) 1. களைத்தல்; to be faint with fatigue. *'பசியால் வெலவெலத்துப் போனான்'.* 2. கைகால் உதறுதல்; to guake, temble, as one's limbs. *"குளிரால் கைகால்கள் வெலவெலக்கின்றன".* 3. மலைத்தல்; to be dazed, astonished. *'அவன் பேச்சைக் கேட்டு வெலவெலத்துப் போனான்'.*

*[வெலவெல → வெலவெல–த்தல்]*

வெலவெலப்பு *vela-velappu,* பெ.(n.) 1. சோர்வடைதல்; fainting by fatigue. 2. களைப்பு; weariness. 3. கைகால் உதறல்; shivering of the limbs. 4. வலுக்குறைவால் நோதல்; convulsion due to weakness.

*[வெலவெல → வெலவெலப்பு]*

வெலி *veli,* பெ.(n.) 1. புறம்பாக்குகை; banishment. 2. எழுத்தினின்றும் தவறான பகுதியை விலக்குகை; expunging.

*[வலி → வெலி]*

வெலிகம் *velikam,* பெ.(n.) கற்றாழை (மலை.); aloe.

*[வெலி → வெலிகம்]*



வெலிகயம் *velikayam,* பெ.(n.) சுக்காக் கீரை; country sorrel-rumex vesicarius.

வெலிசாத்து *veli-cāttu,* பெ.(n.) ஆளைப் பிடிக்கவும், சொத்தைக் கட்டுப் படுத்தவும் இடுங் கட்டளை; warrant, as of arrest or attachment. *'வெலிச்சாத்து விட்டு வீட்டைத் தடைப்படுத்தியிருக்கிறேன்'.*

*[வலி → வெலி + சாற்று → சாத்து]*

வெலித்தி *velitti,* பெ.(n.) 1. ஒல்லி; lean person. 2. ஆடை முதலியன கடுத்தமின்றி யிருக்கை; being lose in texture. 3. வெள்ளோசை 1, 2 பார்க்க; see *veḷḷōśai.*

*[வெலி → வெலுத்தி]*

வெலீஇயோன் *velīiyōṉ,* பெ.(n.) வெல்வித்தோன்; on who caused victory. *"நிற்கூறும்மே வெலீஇயோ னிவனென" (புறநா. 125).*

*[வெல் → வெலீஇ → வெலீஇயோன்]*

வெலுப்பி *veluppi,* பெ.(n.) ஒற்றைப் பேய் மருட்டி; a plant-phlomis zeylanica.

வெலுமசந்தி *velumasanti,* பெ.(n.) மூலிகை, உத்தாமணி; a twining plant, hedge cotton-daemia extensa.



வெவ்வர் *vevvar,* பெ.(n.) வெம்மை; heat. *"வெவ்வ ரோச்சம் பெருக" (பதிற்றுப். 41, 20).*

*[வெம்–மை → வெவ்வர்]*

வெவ்விடாய் *vev-viḍāy,* பெ.(n.) கடுந்தாகம்; intense thirst. *"வெவ்விடாய் தளிவுற" (பாரத. நூலாம்போர். 46).*

*[வெம் (மை) + இடாய்]*

வெவ்விது *vevvitu,* பெ.(n.) 1. சூடானது; that which is hot. 2. கொடியது; that which is harsh or cruel. *"சினமிக்கு வெவ்விதா யெழுந்து" (கலித். 102, 20, உரை).*

*[வெம் (மை) → வெவ் + து → வெவ்விது]*

வெவ்வியன் *vevviyaṉ,* பெ.(n.) கோபி, வெப்பமுடையோன்; quick-tempered man, man of angry mood.

*[வெம் (மை) → வெவ்வன் → வெவ்வியன்]*

வெவ்வினை *vevviṉai,* பெ.(n.) 1. கொடிய வினை; relehtless karma. 2. போர் (யாழ்.அக.); battle.

*[வெம் (மை) + வினை]*

வெவ்வுயிர்–த்தல் *vev-v-uyir-,* செ.கு.வி. (v.i.) வெய்துயிர் பார்க்க; see *vey-tuyir. "உள்ள மலங்க....... வெவ்வுயிர்க்கும்" (திவ். திருவாய். 2, 4, 6).*

*[வே + உயிர்–த்தல்]*

வெவ்வுயிர்த்தல் *vev-vuyirttal,* பெ.(n.) பெருமூச்செறிதல்; sighing.

*[வே + உயிர்–த்தல்]*

வெவ்வுயிர்க்கொள்(ளு)–தல் *vevvuyir-k-koḷ(ḷu)-,* செ.கு.வி. (v.i.) வெய்துயிர் பார்க்க; see *vey-tuyir. "வெவ்வுயிர்க் கொண்டு" (திவ். திருவாய். 10, 3, 3).*

*[வெவ்வுயிர் + கொள்(ளு)–தல்]*

வெவ்வுரை *vevvurai,* பெ.(n.) கடுஞ்சொல்; harsh language. *"வெவ்வுரை யெங்கட்கு விளம்பினிர்" (மணி. 25, 53).*

*[வெம் (மை) + உரை]*

வெவ்வுழவு *vev-v-uḻavu,* பெ.(n.) மேலுழவு; superticial ploughing.

*[மே → வே + உழவு]*

வெவ்வெஞ்செல்வன் *vev-veñ-celvaṉ,* பெ.(n.) வெம்மையுடையதும் விரும்பப் படுவதுமாகிய இளஞாயிறு; the rising sun, as one whose warmth is welcome or pleasing. *"வெவ்வெஞ்செல்வன் விசும்பு படர்ந்தாங்கு" (பொருந. 136).*

*[வெம் (மை) + வெம் (மை) + செல்வன்]*

வெவ்வேகம் *ve-v-vēgam,* பெ.(n.) கொடிய நஞ்சு; virulent poison. *"வெவ்வேகங் கொதித்தெழுந்து" (திருக்காளத். பு. காளன்.7).*

*[வெம் (மை) + வேகம்]*

வெவ்வேறு *vevvēṟu,* பெ.(n.) தனித்தனி; separateness.

*[வேறு + வேறு → வெவ்வேறு]*

வெவிச்சைக்கெண்டை *veviccai-k-keṇḍai,* பெ.(n.) வெண்மை நிறமுடையதும் ஆறு விரலம் வளர்வதுமான மீன்வகை; carb, silvery, attaining 6 in. in length, cheta argentea.

*[வெளிச்சைக்கெண்டை → வெவிச்சைக் கெண்டை]*



வெழுமூட்டு-தல் *veḻu-mūṭṭu-,* செ. குன்றாவி.(v.t.) 1. வழுவழுப்பாக்குதல்; to polish. *"தீற்றிய சுண்ணாம்பை வெழுமட்டு".* 2. குற்றம் மறைத்துப் பேசுதல்; to smooth over, as a fault. செ.கு.வி.(v.i). 3. தோலுரிதல்; wear off. as the skin.

*[வழுமூட்டு → வெழுமூட்டு-தல்]*

வெழுமுண்டகாயம் *veḻu-muṇḍa-kāyam,* பெ.(n.) தோலுரிந்த புண்; abrasion.

*[வழுவுண்ட → வெழுமுண்ட + காயம்]*

வெழுமூள்(ளு)-தல் *veḻu-mūḷ(ḷu)-,* செ.கு.வி. (v.i.) 1. தோள் மூடுதல்; to be covered with skin. 2. வழுவழுப்பாதல்; to be smooth or soft. 3. அமைதியாயிருத்தல்; to be silent. 4. வெழமூட்டு பார்க்க; see *veḻa-mūṭṭu.*

*[வழு + மூள் → வெழுமூள்(ளு)-தல்]*

வெழுமெனல் *veḻum-eṉal,* பெ.(n.) வழுவழுப்புக்குறிப்பு; expr. of being smooth to the touch.

*[வெழுமூள் → வெழுமெனல்]*

வெள்[1] *veḷ,* பெ.எ.(adj.) 1. வெண்மையான; white. *"வெள்ளரைக் கொளீஇ" (மலைபடு. 562).* 2. உள்ளீடற்ற; empty, blank. 3. கலப்பில்லாத; pure, unadulterated. 4. ஒளி பொருந்திய; shining bright. *"வெள்வேல் விடலை" (அகநா.).*

*[வெண்-மை → வெள்]*

வெள்[2] *veḷ,* பெ.(n.) கூர்மை (நாமதீப. 427); sharpness.

*[வள் → வெள்]*

வெள்கல் *veḷkal,* பெ.(n.) அச்சம், வெட்கம், வெட்குதல்; fear, shame, ashame.

*[வெள் → வெள்கல்]*

வெள்கு-தல் *veḷgu-,* செ.கு.வி.(v.i.) 1. வெட்டுதல்; to be ashamed. *"வெள்கிட மகுடஞ் சாய்க்கும்" (கம்பரா. வாலிவதை. 73).* 2. கூச்சப்படுதல்; to be coy, bashful. *"தான்றன் வென்றியை யுரைப்பவெள்க" (கம்பரா. திருவடி. 9).* 3. அஞ்சுதல்; to fear. *"வெந்தனகள் கொன்டெறிய வெள்கிம் மயிர்க் கவுரிமா விரியுமே" (சீவக. 1897).* 4. மணங்குலைதல் (பிங்.); to shudder, to be perplexed.

[வெள் → வெள்கு-தல்]

வெள்யாடு *veḷ-yāḍu,* பெ.(n.) வெள்ளாடு பார்க்க (தொல். சொல். 17, உரை); see *veḷḷāḍu.*

[வெள் + யாடு]

வெள்வக்கணை *veḷ-vakkaṇai,* பெ.(n.) வெள்ளை வக்கணை; forest gaub-diospyrus montana.

வெள்வங்கப்பற்பம் *veḷ-vaṅka-p-paṟpam,* பெ.(n.) வெள்ளீய பற்பம்; calcined tin cures skin diseases especially in the generative organs.

[வெள் + வங்கம் + பற்பம்]

வெள்வங்கம்[1] *veḷ-vaṅgam,* பெ.(n.) மருந்துவகை (இராசவைத். 102, உரை); a kind of medicine.

[வெள் + வங்கம்]

வெள்வங்கம்[2] *veḷ-vaṅgam,* பெ.(n.) வெள்ளீயம்; white lead-tin.

[வெள் + வங்கம்]

வெள்வரகு *veḷ-varagu,* பெ.(n.) வரகுவகை; aspecies of millet. *"வெள்வரகுழுத கொள்ளுடைக் கரம்பை" (பதற்றுப். 75, 11).*

[வெள் + வரகு]

வெள்வரி *veḷ-vari,* பெ.(n.) 1. கண்ணோய் வகை (சீவரட். 267); an eye-disease. 2. பலகறை (மூ.அ.); cowry. 3. வெள்ளரி பார்க்க (சிலப். 16, 25, அரும்.); see *veḷḷari.*

[வெள் + வரி]

வெள்வரியங்கம் *veḷ-variyaṅgam,* பெ.(n.) அடுக்கு வாகை பார்க்க; see *aḍukku-vāgai.*

[வெள் + வரியங்கம்]

வெள்வரை-த்தல் *veḷ-varai,* செ.கு.வி. (v.i.) 1. கிழக்கு வெளுத்தல்; to dawn. *"வெள்வரைப் பதன் முன்னந் துறைபடிந்து" (திவ். நாய்ச். 1, 2).*

[வெள் + வரை-த்தல்]

வெள்வரைப்பு *veḷ-varaippu,* பெ.(n.) கிழக்கு வெளுக்கை; break of dawn. *"வெள்வரைப் பின் முன்னெழுந்து" (திவ். பெரியாழ். 3, 8, 9).*

[வெள்வரை + பு → வெள்வரைப்பு]

வெள்வவ்வால் *veḷ-vavvāl,* பெ.(n.) சாம்பல் நிறமுள்ளதும், ஓரடி வளர்வதுமான வவ்வால் மீன் வகை (பதார்த்த. 936); silver pomfret, greyish neutral tint with purplish reflections, attaining 1 ft. in length.

[வெள் + வவ்வால்]



வெள்வளையார் *veḷ-vaḷaiyār,* பெ.(n.) சங்கு வளையல் அணிந்த மகளிர்; women, as wearing white conch bracelets. *"வெம்முரண் வேந்தரும் வெள் வளையார் தோள் விழைந்து" (பு.வெ. 9, 24).*

[வெள் + வளையார்]

வெள்வாகை *veḷ-vākai,* பெ.(n.) வாகை மரவகை; white siris, 1,tr.

*[வெள் + வாகை]*

வெள்வாடை *veḷ-vāḍai,* பெ.(n.) இளந்தென்றல் (யாழ்.அக.); gentle breeze.

*[வெள் + வாடை]*

வெள்வாரி *veḷ-vāri,* பெ.(n.) வெள்ளீய மணல்; tin ore.

*[வெள் + வாரி]*

வெள்வாள் *veḷ-vāḷ,* பெ.(n.) ஒளியுள்ள கூரிய வாள்; shining sword. *"வெள்வாள் வேந்தன்"* (*பு.வெ. 8, 27, கொளு*).

*[வெள் + வாள்]*

வெள்விழி *veḷ-viḻi,* பெ.(n.) வெள்ளை விழி (சீவரட். 265); white of the eye.

*[வெள் + விழி]*

வெள்விளர்–த்தல் *veḷ-viḷar-,* செ.கு.வி.(v.i.) வெள்ளவிளர் பார்க்க (தொல். எழுத். 482, உரை); see *veḷḷa-viḷar.*

*[வெள் + விளர்–.]*

வெள்விளா *veḷ-viḷā,* பெ.(n.) வெண்டேக்கு; ben teak.

*[வெள் + விளா]*

வெள்விளா *veḷ-viḷā,* பெ.(n.) விளாமரவகை; white wood-apple.

*[வெள் + விளா]*

வெள்வீச்சு *veḷ-viccu,* பெ.(n.) தொடக்க நிலைப் பேச்சு; empty boast.

*[வெள் + வீச்சு]*

வெள்வெங்காயம்[1] *veḷ-veṅkāyam.* பெ.(n.) 1. வெங்காயம்; onion. 2. வெள்ளைப்பூண்டு (சங்.அக.); garlic.

*[வெள் + வெங்காயம்]*

வெள்வெங்காயம்[2] *veḷ-veṅkāyam.* பெ.(n.) வெண்மையான ஈருள்ளி; white coloured allium cepa. 2. நரிவெங்காயம்; wild onion.

*[வெள் + வெங்காயம்]*

வெள்வெட்சி[1] *veḷ-veṭcit,* பெ.(n.) 1. பாவட்டை; common bottle flower. 2. வெட்சி பார்க்க; see *veṭci* (w.).

*[வெள் + வெட்சி]*

வெள்வெட்சி[2] *veḷ-veṭci.* பெ.(n.) வெள்ளை வெட்சிப் பூ; white ixora flower.

*[வெள் + வெட்சி]*

வெள்வெட்டிவேர் *veḷ-veṭṭi-vēr,* பெ.(n.) இலாமிச்சை (சங்.அக.); cuscus-grass.

*[வெள் + வெட்டிவேர்]*

வெள்வெட்டை *veḷ-veṭṭai,* பெ.(n.) வெட்டை நோய்; gleet.

*[வெள் + வெட்டை]*

வெள்வெடி *veḷ-veḍi,* பெ.(n.) 1. குண்டு இல்லாத துமுக்கி; blank cartridge. 2. வெள்வீச்சு பார்க்க; see [illegible] 3. வெள்ளடி[3] பார்க்க; see *veḷ*[illegible]

*[வெள் + வெடி]*

வெள்வெள்ளரி *veḷ-veḷḷari,* பெ.(n.) வெள்ளரி வகை; white cucumber.

வெள்வெற்றிலை *veḷ-veṟṟilai,* பெ.(n.) வெள்ளை வெற்றிலைக் கொடி, கற்பூர வெற்றிலை; a creeper yielding whie betel leaf.

*[வெள் + வெற்றிலை]*

வெள்வேங்கை *veḷ-vēṅgai,* பெ.(n.) வேங்கை மரவகை; siris,1. to.

*[வெள் + வேங்கை]*

வெள்வேம்பு[1] *veḷ-vēmpu,* பெ.(n.) வேப்ப மரவகை (பரி.அக.); a kind of margosa.

*[வெள் + வேம்பு]*

வெள்வேல் *veḷ-vēl,* பெ.(n.) 1. பேய்க் கருங்காலி; tamarind-like cutch. 2. வேல்வகை; panicled babool, m.tr.

*[வெள் + வேல்]*

வெள்வேலம் *veḷ-vēlam,* பெ.(n.) வெள்வேல் 2 பார்க்க; see *veḷ-vēl.*

*[வெள் + வேலம்]*

வெள்வேலம்பட்டை *veḷ-vēlam-paṭṭai,* பெ.(n.) வெள்ளை வேலம் பட்டை; bark of the iron coloured mimosa-mimosa ferruginea.

*[வெள் + வேலம் + பட்டை]*

வெள்வேலன்[1] *veḷ-vēlaṉ,* பெ.(n.) வெள்வேல் பார்க்க; see *veḷvēl.*

*[வெள்வேலம் → வெள்வேலன்]*

வெள்வேலன்[2] *veḷ-vēlaṉ,* பெ.(n.) ஒள்ளிய வேல்தாங்கிய வீரன்; warrior armed with a bright spear(w.).

*[வெள் + வேல் + அன்]*

வெள்வேலா *veḷ-vēlā,* பெ.(n.) வெள்வேல் 2 பார்க்க; see *veḷ-vēl.*

*[வெள்வேல் → வெள்வேலா]*

வெள்வேலான் *veḷ-vēlāṉ,* பெ.(n.) வேலமரம்; a tree-acacia arabica.

*[வெள் + வேலான்]*

வெள்வேலிகம் *veḷ-vēligam,* பெ.(n.) வேலிப்பருத்தி; hedge cotton twiner-daemia extense.

*[வெள் + வேலிகம்]*

வெள்வேலோன் *veḷ-vēlōṉ,* பெ.(n.) வெள்வேலன் பார்க்க; see *veḷ-vēlaṉ* (w.).

*[வெள் + வேல் → வேலோன்]*

வெள்வேள் *veḷ-vēḷ,* பெ.(n.) 1. வேலமரம்; acacia leucophlacea. 2. பட்டை சாராய மரம்; a tree arractacacia.

*[வெள் + வேல் → வேள்]*

வெள்வெளவால் *veḷ-vauvāl,* பெ.(n.) ஒரு மீன்வகை; a rhomboid sized white fish.

*[வெள் + வெளவால்]*

வெள்ளக்கட்டுப்பாடு *veḷḷa-k-kaṭṭu-p-pāḍu,* பெ.(n.) வெள்ளத்தடுப்பு; flood control.

வெள்ளக்கட்டுப்பாடு: வெள்ளத்தின் அளவைக் கணக்கிட்ட பின்னர், அடுத்து அதனால் ஏற்படும் சேதங்களைத் தடுப்பதற்கு வேண்டிய வழிகளைக் கையாள வேண்டும். பொதுவாகக் கையாளப்படும் வழிகளாவன: 1. ஆற்றுப்பகுதியைத் துப்புரவாக்கி நீரோட்டத்தைத் விரைவுபடுத்துதல். 2. நீர்த்தேக்கங்கள் (Reservoirs) அமைத்தல். 3. மண்ணாலான கரைகள் (levees) அல்லது

வெள்ளத்தடுப்பு மதில்கள் (flood walls) அமைத்தல்., 4. வெள்ளத் திருப்பு வழிகள் (flood ways) அமைத்தல். 5. நீர்புகா (flood proof) நிறுவனங்கள் அமைத்தல். 6. நில காப்பு முறைகளால் வெள்ளத்தைக் குறைத்தல். 7. வெள்ளப் பகுதியிலிருந்து மக்களை வெளியேற்றல் வெள்ளப் பகுதியின் பயன்பாட்டைக் கட்டுப்படுத்தல் (flood plain zoning).

வெள்ளத்தால் ஏற்படும் சேதம் வெள்ள நீரின் அளவைவிட நீரோட்டத்தில் ஏற்படும் நீர்மட்ட உயரத்தையே பொறுத்திருக்கிறது. எனவே ஆற்றுப் படுகையிலும் அதன் இரு மருங்கிலும் வளரும் களைகளைக் களைவதன் மூலமும் நீரோடும் பகுதியைச் சற்று ஆழமாக்குவதன் மூலமும், துப்புரவாக்குவதன் மூலமும், ஆற்றுப் போக்கில் உள்ள வளைவுகளைக் குறைத்து நேராக்குவதன் மூலமும் நீரோட்டத்தை அதிகப்படுத்தி நீர் மட்டத்தைக் குறைக்கலாம்.

வெள்ளக் கட்டுப்பாட்டிற்கு மிகுதியாகப் பயன்படுபவை நீர்த்தேக்கங்களாகும். வெள்ளத்தைத் தடுத்துத் தேக்கி, அத்தேக்கத்தின் கீழுள்ள நீரோட்டத்தின் இருபுறத்திலும் சேதம் ஏற்படாத அளவில் தண்ணீரைக் கட்டுப்படுத்தி ஓடவிடுவது ஒரு நோக்கமாகும். ஆங்காங்கு வெள்ளக் கட்டுப்பாட்டிற்கென்றே நீர்த்தேக்கங்கள் கட்டப்படுகின்றன வெனினும், பெரும்பாலான நீர்த்தேக்கங்கள் *'பலநோக்கு நீர்த்தேக்க'* வகையைச் சேர்ந்தவை. வெள்ளக் கட்டுப்பாடு மட்டுமின்றி வேளாண்மை, மின்னாக்கம், குடிதண்ணீர் ஆகியவற்றிற்கும் அவை அமைக்கப்படுகின்றன.

வெள்ளத்தால் ஏற்படும் சேதத்தைத் தடுப்பதற்கு முயன்ற நாள் தொடங்கி மண் கரைகள் பயன்படுத்தப்பட்டு வந்திருக்கின்றன. பின்னர் வெள்ளத்தடுப்பு மதில்களும் பயன்படுத்தப்பட்டன. மண் கரைகள் மண்ணாலும், வெள்ளத்தடுப்பு மதில்கள் கற்காரை, கருங்கற்கள் இவற்றாலும் கட்டப்படுகின்றன. மண்ணைப் பயன்படுத்தினால் வெள்ளக் காலத்தில் தீங்கு நேராமல் கண்காணிப்பது இன்றியமையாததாகும். இதற்கென வெள்ளத் தடுப்புப் படைகள் (flood fighting squads) நிறுவப்பட்டுள்ளன.

ஆற்றின் ஒரு பகுதிக்கு வந்து சேர்ந்த வெள்ளத்தைக் கட்டுப்படுத்துவதைவிட, அவ் வெள்ளத்தின் அளவை அதன் தோற்றவாயிலேயே குறைப்பது சிறந்ததாகும். ஒரு நீர்ப்பரப்பில் பெய்யும் மழையின் முழு அளவும் ஆற்றுக்கு வந்து சேருவதில்லை. ஆற்றுக்கு வரும் மழைநீரின் அளவு பல காரணங்களால் குறைகிறது. நீர் வரும் பரப்பின் நிலம் பயன்படுத்தப்படும் முறை அக்காரணங்களில் ஒன்றாகும். செடி கொடி வகைகளும் வயல்களும் நிறைந்திருந்து, நீரோடும் சரிவுகளில் ஆங்காங்கு நீரோட்டத்தைத் தடுக்கும் வரப்புகளும் நிறைந்திருக்குமாயின், ஆற்றை வந்தடையும் மழைநீர் குறைகிறது. இதுபோன்ற முறைகளை நீர் வரும் பரப்பின் முதன்மையான பகுதிகளில் கையாண்டு வெள்ளத்தைக் குறைப்பதும் பயனுள்ளதாகும். வெள்ளத்தைத் தடுப்பதை விட, அதனால் ஊறுபடக்கூடிய பகுதிகளிலிருந்து வெளியேறி விடுவது சில சமயங்களில் எளிதாக இருக்கலாம். வெள்ளத்தைப் பற்றி எச்சரிக்கை செய்ய வசதிகள் இருக்குமாயின், இம் முறையைக் கையாண்டு வெள்ளம் வருமுன் ஊறுபடக் கூடிய பகுதிகளிலிருந்து மக்களையும் கால்நடைகளையும் வெளியேற்றலாம்.

மக்கள் உயிர்ச் சேதத் தடுப்பு, உடல்நலப் பாதுகாப்பு போன்றவை பொருளியல் அடிப்படையில் அளவிடமுடியாத நன்மைகளாகும்.

*[வெள்ளம் + கட்டுப்பாடு]*

**வெள்ளக்காடு** *veḷḷa-k-kāḍu,* பெ.(n.)
**1.** நீரால் நிலப்பரப்பு நிறைகை; inundation by flood. *“புழைக்கடை யெல்லாம் வெள்ளக் காடாய்விட்டது” (பே.வ.).* 2. பெருவெள்ளம்; excessive flood.

*[வெள்ளம் + காடு → வெள்ளக்காடு]*

வெள்ளக்கால் *ve!!a-k-kal,* பெ.(n.) வெள்ளநீர்; great flood. *"கழனியை வெள்ளக்கால் வந்து கோத்ததென" (பரிபா. 7, 33, உரை).*

*[வெள்ளம் + கால்]*

வெள்ளக்குடி *ve!!a-k-kudi,* பெ.(n.) தாகநீர்; drink. *"இன்று காருவா (அமாவாசை) ஆதலால் இரவில் கொஞ்சம் வெள்ளக்குடி இருக்கட்டும்".*

*[வெள்ளம் + குடி]*

வெள்ளக்கேடு *ve!!a-k-kēḍu,* பெ.(n.) வெள்ளப்பாழ் பார்க்க; see *ve!!a-p-pā!.* *"வெள்ளக்கேடும் வறட்கேடு மின்றிக்கே" (திவ். திருப்பா. 3, வ்யா.).*

*[வெள்ளம் + கேடு]*

வெள்ளகத்தி *ve!-!-akatti,* பெ.(n.) அகத்தி வகை (மூ.அ.); west indian pea-tree.

*[வெள் + அகத்தி]*

வெள்ளகில் *ve!!akil,* பெ.(n.) அகில் மரம்; a white species of eagle wood tree-aquilaria agalocha.

*[வெள் + அகில்]*

வெள்ளங்காட்டி *ve!!aṅ-kāṭṭi,* வி.எ.(v.i.) விடியற் காலையில்; early in the morning.

*[வெள்ளெனல் + காட்டி]*

வெள்ளச்சி *ve!!acci,* பெ.(n.) 1. ஒரு வகை தொட்டி நச்சு; a kind of arsenic. 2. சீனக்காரம்; alum.

வெள்ளச்சிப்பி *ve!!a-c-cippi,* பெ.(n.) பொன்னிமிளை; yellow bismuth.

*[வெள்ளம் + சிகுப்பி]*

வெள்ளச்சாவி *ve!!a-c-cāvi,* பெ.(n.) வெள்ளப்பாழ் பார்க்க; see *ve!!a-p-pā!* (Insc. Pudu. 343).

*[வெள்ளம் + சாவி]*

வெள்ளச்சேதம் *ve!!a-c-cēdam,* பெ.(n.) 1. வெள்ளப்பாழ் பார்க்க; see *ve!!a-p-pā!* (w.). *"தமிழ்நாட்டில் வெள்ளச் சேதத்தைப் பார்வையிட நடுவணரசுக் குழு வருகை".*

*[வெள்ளம் + சேதம்]*

வெள்ளஞ்சு *ve!!añju,* பெ.(n.) காட்டுப்பச்சிலை; dal bergia lanceolaria.

வெள்ளட்டை *ve!!aṭṭai,* பெ.(n.) மர அட்டை; wood louse.



வெள்ளடம்பு *ve!-!-aḍambu,* பெ.(n.) கொடி வகை; moon-flower, m,ch.

*[வெள் + அடம்பு]*

வெள்ளடி[1] *ve!!aḍi,* பெ.(n.) 1. வெளிப்படை; openness (w.). 2. விளம்பரப்படுத்துதல்; publicity. 3. உள்ளீடின்மை; emptiness (w.). 4. எளிமை; simplicity. 5. பொதுவிடம்; common place.

*[வெள் → வெள்ளடி]*

**வெள்ளடி**[2] *ve!!adi,* பெ.(n.) 1. வெறுங்கால்; uncovered foot. 2. வெண்பாவுக்குரிய அடி (யாப். வி. 85, உரை); metrical line pertaining to *venpā.*

*[வெள் + அடி]*

**வெள்ளடி**[3] *ve!!adi,* பெ.(n.) வெருட்டு (யாழ்.அக.); Intimidation.

*[வெள் → வெள்ளடி]*

**வெள்ளடிச்சேவல்** *ve!!adi-c-cēval,* பெ.(n.) காலின் முள் செதுக்கப்படாத சண்டைச் சேவல்; fighting cock with spurs uncut (w.).

*[வெள் + அடி + சேவல்]*



**வெள்ளடிவலை** *ve!!adi-valai,* பெ.(n.) மணிவலையில் ஒரு கூறு (தஞ்சை. மீன.); a part of gem studded net.

**வெள்ளடிவெருட்டு** *ve!!adi-veruṭṭu,* பெ.(n.) வெள்வீச்சு பார்க்க; see *ve!-viccu.*

*[வெள்ளடி + வெருட்டு]*

**வெள்ளடை**[1] *ve!!adai,* பெ.(n.) வெற்றிலை; betel. *"வெள்ளடைத் தம்பல்" (கம்பரா. கார்காண். 29).*

*[வெள் + அடை]*

**வெள்ளடை**[2] *ve!!adai,* பெ.(n.) 1. விண்வெளி; the great cosmic space. 2. திருக்குருகாவூரிலுள்ள சிவன் கோயில்; the siva shrine at *Tiru-k-kurukāvūr.* *"விளங்கொளி குருகாவூர் வெள்ளடை யுறைவானே" (தேவா. 61, 10).*

*[வெள் + அடை]*

**வெள்ளணங்காட்டி** *ve!!aṇa-ṅ-kāṭṭi,* செ.கு.வி. (v.i.) வெள்ளங்காட்டி பார்க்க; see *ve!!aṅ-kāṭṭi.*

*[வெள்ளம் + அணங்காட்டி]*

**வெள்ளணி** *ve!!aṇi,* பெ.(n.) தலைவிக்கு மகன் பிறந்த செய்தியைத் தலைமகன் அறிந்து கொள்ளும் பொருட்டுத் தோழி அணிந்து கொள்ளும் வெண்மை நிறமுள்ள ஆடை முதலியன (தஞ்சைவா. 388, தலைப்பு); white dress worn by a maid to signify to her load that her lady is delivered of a son. 2. அரசன் பிறந்தநாள் ஒப்பனை (சீவக. 614, உரை); decorative dress of the king on his birthday. 3. அரசன் பிறந்த நாள் விழா; festival celebrating the king's birthday. *"அடித்தளை நீக்கும் வெள்ளணியாம்" (சிலப். 27, 229).*

*[வெள் + அணி]*

**வெள்ளணிவிழா** *ve!!aṇi-viḻā,* பெ.(n.) வெள்ளணி[3] பார்க்க; see *va!!aṇi*[3]

*[வெள்ளணி + விழா]*

**வெள்ளந்தி**[1] *ve!!andi,* பெ.(n.) வஞ்சகமின்மை, வெள்ளை மனம்; honesty, plain-hearted man.

*[வெள் + அகம் → அகந்தி]*

வெள்ளந்தி[2] *vel̤l̤andi,* பெ.(n.) 1. வெள்ளை மணத்தன்; வெளுத்ததெல்லாம் பாலென்று நினைப்பவன்–நம்புவோன்; white-hearted man, innocent. 2. உலகிய லறிவில்லான் (முகவை. மீன.); ignorant of worldly affairs or knowledge.

*[வெள் + அகம் → அகந்தி]*

வெள்ளப்பகுதி *vel̤l̤a-p-paguti,* பெ.(n.) வெள்ளம் சூழ்ந்த நிலப்பகுதி; tide-land.

*[வெள்ளம் + பகுதி]*

வெள்ளப்பாடு *vel̤l̤a-p-pāḍu,* பெ.(n.) 1. பள்ளமான வயனிலம்; low-lying fields. *'வெள்ளப்பாடான கிராமம்'.* 2. வெள்ளப் பாழ் பார்க்க; see *vel̤l̤a-p-pāl̤.*

*[வெள்ளம் + பாடு]*

வெள்ளப்பாழ் *vel̤l̤a-p-pāl̤,* பெ.(n.) வெள்ளம் மிகுதியால் நேரும் பயிர்க்கேடு; injury to crops by flood, one of *mu-p-pāl̤.*

*[வெள்ளம் + பாழ்]*

வெள்ளப்பிடிப்பு *vel̤l̤a-p-piḍippu,* பெ.(n.) நீரோட்டமின்றிக் காணக்கூடுங் கடல் – நீரின் தன்மை (செங்கை. மீன.); sea bed quality of water.

*[வெள்ளம் + பிடிப்பு]*

வெள்ளப்பூடுச்சங்கு *vel̤l̤a-p-pūḍu-c-caṅgu,* பெ.(n.) ஒரு சிறிய சங்கு; a small conch.

*[வெள்ளம் + பூடுச்சங்கு]*



வெள்ளப்பெருக்கு *vel̤l̤a-p-perukku,* பெ.(n.) பெருமழையால் ஏற்படும் வெள்ளநீர்; heavy fall of rain.

*[வெள்ளம் + பெருக்கு]*

வெள்ளம் *vel̤l̤am,* பெ.(n.) 1. நீர்ப்பெருக்கு (பிங்.); flood, deluge. *"வெள்ளந்தாழ் விரிசடையாய்" (திருவாச. 3, 1).* 2. கடல்; sea. *"மகர வெள்ளத் திறத்தால்" (கம்பரா. கடல்காண். 2).* 3. கடலலை (பிங்.); sea-wave. 4. நீர்; water. *'குடிக்க வெள்ளங் கொண்டுவா'.* 5. ஈரம் (பிங்.); moisture. 6. மிகுதி (சூடா.); abundance. 7. பேரெண் (தொல். எழுத். 393); a large number. 8. உண்மை; truth (w.). *'இது கள்ளமா வெள்ளமா?'. 'தமிழில் வெள்ளமென்பது மிகுதிப் பொருளைக் குறிக்கும் சிறப்புச் சொல்லாகவும், மலையாளத்தில் பொதுப் பொருளைக் குறிக்கும் சொல்லாகவும் வழங்கப்படுகிறது'.*

*[வெண்–மை → வெள்ளம்]*

வெள்ளம்பர் *vel̤l̤ambar,* பெ.(n.) வெண்மை நிறமான ஒரு வகை அம்பர்; white amber.

வெள்ளம்போடு-தல் *vel̤l̤am-pōḍu-,* செ.கு.வி. (v.i.) 1. கட்குடித்தல்; to drink liquor. 2. வெள்ளமெடு பார்க்க; see *vel̤l̤a-meḍu.*

*[வெள்ளம் + போடு–,]*

**வெள்ளமெடு–த்தல்** *veḷḷam-eḍu-,* செ.கு.வி. (v.i.) 1. நீர் பரவுதல்; to be deluged (w.). 2. பெருக்கெடுத்தல்; to be in floods.

*[வெள்ளம் + எடு–த்தல்]*

**வெள்ளர்** *veḷḷar,* பெ.(n.) 1. வெண்ணிற முடையார்; whitemen. 2. கவடமற்றவர்; honest men. *"கள்ளரோ புகுந்தீ ரென்ன ...... வெள்ளரோ மென்று நின்றார்" (தேவா. 1190, 9).*

*[வெள் → வெள்ளர்]*

**வெள்ளரசு** *veḷ-ḷarašu,* பெ.(n.) அரசமரவகை (சங்.அக.); a kind of pipal tree.

*[வெள் + அரசு]*

**வெள்ளரணை** *veḷ-ḷ-araṇai,* பெ.(n.) சீலைப் பேன் (சங்.அக.); lice in clothes.

*[வெள் → அரணை → வெள்ளரணை]*

**வெள்ளரவம்** *veḷḷaravam,* பெ.(n.) விடியற்கால ஓசை. *"வெள்ளரவம் கேட்டிலையோ"* (திருப்பாவை).

*[வெள் + அரவம்]*

**வெள்ளரவவெற்பு** *veḷḷarava-verpu,* பெ.(n.) திருவேங்கடமலை; mount *Tiruvēṅkaḍa-malai.*



**வெள்ளரளி** *veḷḷaraḷi,* பெ.(n.) 1. பழக்கொடி; a creeper cucumis sativus.

*[வெண்–மை + அரளி]*

**வெள்ளரா** *veḷḷarā,* பெ.(n.) நீலநிறமுடையதும் நான்கு அடி வளர்வதுமான கடல் மீன் வகை; sea-fish, bluish, attaining 4 ft. in length.

*[வெள் → வெள்ளரா]*

**வெள்ளராமுள்ளி** *veḷḷarā-muḷḷi,* பெ.(n.) வெள்ளரா மீனைப் பிடிக்க உதவும் தூண்டில் வகை; a fish-hook for catching sea-fish.

*[வெள்ளரா + முள்ளி]*

**வெள்ளரி** *veḷḷari,* பெ.(n.) 1. கொடிவகை (பிங்.); cucumber. 2. புள்ளி முலாம்பழம்; mottled-melon. *"பிட்டு வெள்ளரிப் பழம்" (திருப்பு. விநாயகர்துதி. 3).* 3. கக்கரி; kakkari-melon.

*[வெள் + அரி → வெள்ளரி]*



**வெள்ளரிசி¹** *veḷḷariši,* பெ.(n.) அறுகும் அரிசியும் கூடியது (திவா.); grains of rice used in benediction.

*[வெள் + அரிசி]*

**வெள்ளரிசி²** *veḷḷariši,* பெ.(n.) பச்சரிசி; raw rice.

*[வெள் + அரிசி]*

**வெள்ளரிஞ்சகெண்டை** *veḷḷariñja-keṇḍai,* பெ.(n.) மஞ்சள் நிறமுள்ளதும் ஓரடி வளர்வதுமான ஆற்று மீன் வகை; corp, orange, attaining 1 ft. in length.

*[வெள்வரி + கெண்டை]*

**வெள்ளரிதாரம்** *veḷḷari-tāram,* பெ.(n.) வெள்ளை அரிதாரம்; white realgar.se.

*[வெள் + அரிதாரம்]*

**வெள்ளரிப்பழம்**[1] *veḷḷari-p-paḻam,* பெ.(n.) 1. எளிதில் நோயுறும் தன்மையுள்ளவன்; a person of delicate health. *'பிள்ளை வெள்ளரிப் பழம் தான்'.* 2. நோயுற்றவன்; person of sound health, as fresh and plump as a ripe cucumber.

*[வெள்ளரி + பழம்]*

**வெள்ளரிப்பழம்**[2] *veḷḷari-p-paḻam,* பெ.(n.) பழவகை; musk melon - fruit of cucumber.

*[வெள்ளரி + பழம்]*

**வெள்ளரிப்பிஞ்சு** *veḷḷari-p-piñju,* பெ.(n.) பிஞ்சு வெள்ளரிக்காய்; tender fruit of cucumber diuretic.

*[வெள்ளரி + பிஞ்சு]*

**வெள்ளரிப்பூசணி** *veḷḷari-p-pūšaṇi,* பெ.(n.) பூசணி வகையிலொன்று; cucumis melon- a creeper.

*[வெள்ளரி + பூசணி]*

**வெள்ளரிவிதை** *veḷḷari-vidai,* பெ.(n.) வெள்ளரிப் பழத்தின் விதை; seed of cucumber.

*[வெள்ளரி + விதை]*

**வெள்ளரிவித்து** *veḷḷari-vittu,* பெ.(n.) வெள்ளரிப் பழத்தில் உள்ள விதை; the seed of cucumber fruit.

*[வெள்ளரி + வித்து]*

**வெள்ளரிவிரையெண்ணெய்** *veḷḷari-virai-yeṇṇey,* பெ.(n.) வெள்ளரி விதையினின்று இறக்கும் நெய்மம்; an oil extracted from the seeds of cucumber of musk melon.

*[வெள்ளரி + விரை + எண்ணெய்]*

**வெள்ளரிவேர்** *veḷḷari-vēr,* பெ.(n.) வெள்ளரியின் வேர்; root of cucumber.

*[வெள்ளரி + வேர்]*

**வெள்ளல்லி**[1] *veḷḷalli,* பெ.(n.) வெள்ளாம்பல்[1] பார்க்க (பிங்.); see *veḷḷāmbal.*

*[வெள் + அல்லி → வெள்ளல்லி]*

**வெள்ளல்லி**[2] *veḷḷalli,* பெ.(n.) வெள்ளாம்பல்; white water lily-nymphae slellate bearing white flowers.

**வெள்ளல்லிவிரை** *veḷḷalli-virai,* பெ.(n.) வெள்ளையல்லி விதை; seeds of white water lily.

*[வெள் + அல்லி + விரை]*

**வெள்ளல்லிவேர்** *veḷḷalli-vēr,* பெ.(n.) வெண்மை நிற அல்லி வேர்; root of white water lily.

*[வெள் + அல்லி + வேர்]*

**வெள்ளலத்திப்பட்டை** *veḷḷa-latti-p-paṭṭai,* பெ.(n.) வெள்ளலத்தியின் பட்டை; bark of *veḷḷalatti.*

*[வெள்ளலத்தி + பட்டை]*

**வெள்ளலரி**[1] *ve!!alari,* பெ.(n.) அலரி வகை; linear-leaved oleander.

*[வெள் + அலரி → வெள்ளலரி]*

**வெள்ளலரி**[2] *ve!!alari,* பெ.(n.) 1. அலரிப்பூ மரம்; a tree. 2. வெள்ளரளி; nerium odorum bearing white flowers.

**வெள்ளவரை** *ve!!a-varai,* பெ.(n.) அவரைவகை; country bean.

*[வெள் + அவரை]*

**வெள்ளவாசி** *ve!!a-vāši,* பெ.(n.) அகவிலையின்படி விதிக்கப்படும் தீர்வை; rate of assessment according to the market-price of grain.

*[விலைவாசி → வெள்ளவாசி]*

**வெள்ளவாரி** *ve!!a-vāri,* பெ.(n.) 1. வரத்து வாய்க்கால்; feeder channel. 2. வெள்ளநீர் வடியும் வடிகால்; channel to drain off flood-water.

*[வெள்ளம் + வாரி]*

**வெள்ளவிளர்-த்தல்** *ve!!a-vi!ar-,* செ.கு.வி. (v.i.) மிக வெண்மையாதல்; to become very white, as a washed cloth.

*[வெள் → வெள்ளவிளர்]*

**வெள்ளவெளி** *ve!!a-ve!i,* பெ.(n.) விண்வெளி; the great cosmic space. *"கலந்திடில் வெள்ளவெளி யாம்" (தொல். எழுத். 482, உரை).*

*[வெள் → வெள்ளவெளி]*

**வெள்ளழிஞ்சில்** *ve!!aḻiñjil,* பெ.(n.) வெள்ளை அழிஞ்சில்; white variety of *aliñjil.*

**வெள்ளழுகல்**[1] *ve!!aḻugal,* பெ.(n.) பூஞ்சைக் காளாண் பிடித்தழுகியது (யாழ்.அக.); that which has become putrid and moss-grown.

*[வெள் + அழுகல்]*

**வெள்ளழுகல்**[2] *ve!!aḻukal,* பெ.(n.) அழுகி வெண்ணிறம் பூத்தல்; formation of white coating-fungus growth-after putrefaction.

*[வெள் + அழுகல்]*

**வெள்ளறிவன்** *ve!!arivaṉ,* பெ.(n.) அறிவீனன்; uneducated, fool.

*[வெள் + அறிவன்]*

**வெள்ளறிவு** *ve!!arivu,* பெ.(n.) அறிவின்மை; senselessness. *"விலங்கன்ன வெள்ளறிவினார்" (நாலடி, 375).*

*[வெள் + அறிவு]*

**வெள்ளறுகு** *ve!-!-aṟugu,* பெ.(n.) 1. அறுகம் புல்வகை; whie bermuda grass. 2. புல் வகை; small chiretta (w.).

*[வெள் + அறுகு]*

**வெள்ளறுவை** *ve!!aṟuvai,* பெ.(n.) வெள்ளைத்துளி; white cloth. *"தூவெள் ளறுவை" (புறநா. 286).*

*[வெள் + அறுவை]*

**வெள்ளனி** *ve!!aṉi,* பெ.(n.) வெண் பாதிரி மரம்; a tree-stereos-permum chelonoides.

*[வெள் + அனி]*

**வெள்ளா** *ve!!ā,* பெ.(n.) ஒரு வகை கடல் மீன் (முகவை. மீன.); a kind of sea-fish.



**வெள்ளாங்கம்** *veḷḷāṅgam,* பெ.(n.) வெள்வரியங்கம் பார்க்க; see *veḷ-vari-yaṅkam.*

**வெள்ளாங்கு** *veḷḷāṅgu,* பெ.(n.) வெள்ளாஞ்சு பார்க்க; see *veḷḷāñcu.*

**வெள்ளாங்குடி** *veḷḷāṅ-kuḍi,* பெ.(n.) வேளாளர் வாழும் ஊர்ப்பகுதி; part of a village where *vēḷāḷas* live.

*[வெள்ளான் + குடி]*

**வெள்ளாங்குருகு** *veḷḷāṅ-kurugu,* பெ.(n.) வெண்ணாரை வகை; a species of white crane. *"வெள்ளாங்குருகின் பிள்ளை செத்தன" (ஐங்குறு. 151).*

*[வெள் + ஆ + குருகு → வெள்ளாங்குருகு]*

**வெள்ளாஞ்செட்டி** *veḷḷāṇ-ceṭṭi,* பெ.(n.) வேளாளருள் வாணிபஞ் செய்யும் பிரிவினர்; person belonging to class of *vēlālas* who trade (w.).

*[வெள்ளான் + செட்டி]*

**வெள்ளாட்டி** *veḷ-ḷ-āṭṭi,* பெ.(n.) 1. பணிப் பெண்; maid servant. *"ஒரு வெள்ளாட்டியையும் சம்பாதித்து" (ஈடு. 4, 1, 7).* 2. வைப்பாட்டி; concubine.

*[வெள் → வெள்ளாட்டி]*

**வெள்ளாட்டிறைச்சி** *veḷḷāṭṭiṟaicci,* பெ.(n.) வெள்ளாட்டுக் கறி; mutton.

*[வெள்ளாடு + இறைச்சி]*

**வெள்ளாட்டுக்கண்டம்** *veḷḷāṭṭu-k-kaṇḍam,* பெ.(n.) வெள்ளாட்டு உப்புக் கண்டம்; salted dried meat of goat.

*[வெள்ளாடு + கண்டம்]*

**வெள்ளாட்டுக்குட்டி** *veḷ-ḷāṭṭu-k-kuṭṭi,* பெ.(n.) ஆட்டுக்குட்டி; kid.

*[வெள்ளாடு + குட்டி]*

**வெள்ளாட்டுநீர்** *veḷḷāṭṭu-nīr,* பெ.(n.) வெள்ளாட்டு மூத்திரம்; urine of a goat.

*[வெள்ளாடு + நீர்]*

**வெள்ளாட்டுநெய்** *veḷḷāṭṭu-ney,* பெ.(n.) ஆட்டுப்பால் நெய்; goat's ghee.

*[வெள்ளாடு + நெய்]*

**வெள்ளாட்டுப்பால்** *veḷ-ḷāṭṭu-p-pāl,* பெ.(n.) வெள்ளாட்டின் பால்; goat's milk.

*[வெள்ளாடு + பால்]*

**வெள்ளாட்டுப்பித்து** *veḷḷāṭṭu-p-pittu,* பெ.(n.) வெள்ளாட்டு ஆசை; bile of goat.

*[வெள்ளாடு + பித்து]*

**வெள்ளாட்டுப்புழுக்கை** *veḷḷāṭṭu-p-puḻukkai,* பெ.(n.) வெள்ளாட்டின் மலம்; the dung of goat.

*[வெள்ளாடு + புழுக்கை]*

**வெள்ளாட்டெச்சம்** *veḷḷāṭṭeccam,* பெ.(n.) வெள்ளாட்டுப்புழுக்கை பார்க்க; see *veḷḷāṭṭu-p-puḻukkai.*

*[வெள்ளாடு + எச்சம்]*

**வெள்ளாடிச்சி** *veḷḷāḍicci,* பெ.(n.) **வெள்ளாளச்சி** பார்க்க (இலக். வி. 178); see *veḷḷāḷacci.*

*[வெள்ளாழச்சி → வெள்ளாடிச்சி]*

**வெள்ளாடியனார்** *veḷḷāḍiyaṉār,* பெ.(n.) கழகக்காலப் புலவர்; a sangam poet.

இவர் மதுரை மாவட்டத்திலுள்ள வெள்ளோடு என்னும் ஊரினராக இருக்கலாம். புலி தான் அடித்த யானை இடப்புறமாக வீழின் மிசையாது என்று புலியின் மானத்தினை விளக்குகின்றார். இவர் பாடியதாக அகநானூற்றில் ஒரு செய்யுள் காணப்படுகின்றது. இவர் பாலைத்திணையின் சிறப்பினை விளக்குகின்றார். இவர் வெண்வட்டியார் என்றும் வழங்கப் பெறுவர்.

**வெள்ளாடு** *veḷḷāḍu,* பெ.(n.) ஆடுவகை (நன். 266, உரை); goat. *"மனிதர் காராட்டை வெள்ளாடென்ப தொக்குமால்" (பிரபுலிங். பிரபு தேவர்வந்த. 59).*

*[வெள் + ஆடு → வெள்ளாடு]*

**வெள்ளாண்செட்டி** *veḷḷāṇ-ceṭṭi,* பெ.(n.) **வெள்ளாஞ்செட்டி** பார்க்க; see *veḷḷāñ-ceṭṭi.*

*[வெள்ளான் + செட்டி]*

**வெள்ளாண்பிள்ளை** *veḷḷāṇ-piḷḷai,* பெ.(n.) 1. வேளாளச் சிறுவன் (தொல். எழுத். 338); *vēḷāla* boy. 2. **வேளாளன்** பார்க்க; see *vēḷāḷaṉ.*

*[வெள்ளாண் + பிள்ளை]*

**வெள்ளாண்மரபு** *veḷḷāṇ-marabu,* பெ.(n.) வேளாளர் இனம்; the *vēḷāla* caste. *"வெள்ளாண் மரபுக்கு வேதமென" (நாலடி, தனிப்பா.).*

*[வெள்ளான் + மரபு]*

**வெள்ளாண்மை** *veḷḷāṇmai,* பெ.(n.) வேளாண்மை; cultivation.

*[வேளாண்மை → வெள்ளாண்மை]*

**வெள்ளாண்வாழ்க்கை** *veḷḷāṇ-vāḻkkai,* பெ.(n.) வேளாளனது வாழ்வு; calling of *vēḷāla.*

*[வெள்ளாண்மை + வாழ்க்கை]*

**வெள்ளாத்திபோளம்** *veḷḷātti-pōḷam,* பெ.(n.) **வெள்ளைப்போளம்** பார்க்க (இங்.வை.); see *veḷḷai-p-pōḷam.*

**வெள்ளாந்தை**[1] *veḷḷāntai,* பெ.(n.) மலைப் பாம்பு வகை; a species of rock snake (w.).

*[வெள் → (வெள்ளான்) → வெள்ளாந்தை]*

**வெள்ளாந்தை**[2] *veḷḷāntai,* பெ.(n.) 1. ஆந்தை; a bird-owl. 2. மலைப்பாம்பு; mountain snake.

*[வெள் → (வெள்ளான்) → வெள்ளாந்தை]*

**வெள்ளாப்பு**[1] *veḷḷāppu,* பெ.(n.) வெள்ளை மேற்கட்டி; white awning or canopy.

*[வெள் + ஆப்பு. யாப்பு → ஆப்பு]*

**வெள்ளாப்பு**[2] *veḷḷāppu,* பெ.(n.) வெண்ணுரைக் கடலலை (செங்கை. மீன.); foam sea waves.

*[வெள் + ஆப்பு. அலைப்பு → ஆப்பு]*

**வெள்ளாப்பு**[3] *veḷḷāppu,* பெ.(n.) வைகறை; dawn, early morning.

*[வெள் → வெள்ளாப்பு]*

வெள்ளாப்புத்தொழில் *vellāppu-t-tolil,* பெ.(n.) வைகறைப் பொழுதில் கடல்மேற் சென்று மீன் பிடிக்கும் தொழில் (நெல்லை. மீன.); fishing activities in sea in early morning.

*[வெள்ளாப்பு + தொழில்]*

வெள்ளாம்பல் *vellāmbal,* பெ.(n.) 1. நீர்க் கொடிவகை; esculent white water-lily. *"அளியதாமே சிறுவெள்ளாம்பல்" (புறநா. 248).* 2. வெண்ணெய்தல் பார்க்க (பிங்.); see *venneytal.*

*[வெள் + ஆம்பல்]*

வெள்ளாம்பிள்ளை *vellām-pillai,* பெ.(n.) வெள்ளாண்பிள்ளை1 பார்க்க ; see *vellān-pillai.*

*[வெள்ளாண் + பிள்ளை]*

வெள்ளாமணக்கு *vellā-maṇakku,* பெ.(n.) காட்டாமணக்கு வகை (பதார்த்த. 530); common physic nut.

*[வெள் + ஆமணக்கு]*



வெள்ளாமை¹ *vellāmai,* பெ.(n.) வேளாண்மை; cultivation.

*[வேளாண்மை → வெள்ளாமை]*

வெள்ளாமை² *vellāmai,* பெ.(n.) 1. கடலாமை வகை; white sea turtle. 2. பறையாமை; a fresh-water tortoise.

*[வெள் + ஆமை]*

வெள்ளாரல் *vellāral,* பெ.(n.) மீன்வகை; a kind of fish. *"தகு வெள்ளாரல் தும் பையன்" (பறாளை. பள்ளு. 16).*

*[வெள் + ஆரல்]*

வெள்ளாரை *vellārai,* பெ.(n.) நஞ்சுக்கொடி; umbilical card.

வெள்ளாரைச்சுன்னம் *vellārai-c-cunnam,* பெ.(n.) குடற்சுன்னம்; a medicinal powder prepared out of umbilical card.

வெள்ளால் *vellāl,* பெ.(n.) நீண்ட மரவகை; java fig.l.tr.

வெள்ளாவலை *vellā-valai,* பெ.(n.) கரைக்கடற்பரப்பில் – அண்மைக் கடற்பரப்பில் வலைத்தற்குரிய மீன் வலைகளுளொன்று (தஞ்சை. மீன.); fish net knitted in coastal areas.

வெள்ளாவலைக்காரன் *vellā-valai-k-kāran,* பெ.(n.) வெள்ளாவலை வைத்து மீன்பிடிப்பவர் (தஞ்சை. மீன.); fisherman who uses net prevelant in coastal areas.

*[வெள்ளாவலை + காரன்]*

வெள்ளாவி¹ *vellāvi,* பெ.(n.) ஆடையை வெளுக்க உதவும் நீராவி; steam used for bleaching cloths.

*[வெளு + ஆவி]*

வெள்ளாவி² *vellāvi,* பெ.(n.) துணியினின்று எண்ணெய் கக்கி அழுக்கு நீங்குவதற்கு

வண்ணார் உவர் மண்ணிட்டு வேக வைத்தல்; boiling clothes by washerman in fuller's earth solution.

*[வெளு + ஆவி]*

வெள்ளாவிகட்டு-தல் *vel̤l̤āvi-kaṭṭu-,* செ.குன்றாவி.(v.t.) வெளுத்தற்குரிய ஆடைகளை நீராவியில் இடுதல்; to treat clothes with steam.

*[வெள்ளாவி + கட்டு-,]*

வெள்ளாவிதட்டல் *vel̤l̤ā-vidaṭṭal,* பெ.(n.) ஆவி பிடித்தல்; vapour bath.

*[வெள்ளாவி + தட்டல்]*

வெள்ளாவிநீர் *vel̤l̤āvi-nīr,* பெ.(n.) வண்ணார் வெள்ளாவிக்காக வைத்து எரித்த நீர், இதில் உடம்பு குளித்தால் சொறி போகும்; the liquid that remains after boiling the clothes in fuller's earth solutions.

*[வெள்ளாவி + நீர்]*

வெள்ளாவிபிடி-த்தல் *vel̤l̤āvi-piḍi-,* பெ.(n.) வெள்ளாவிதட்டல் பார்க்க; see *vel̤l̤āvidaṭṭal.*

*[வெள்ளாவி + பிடி-,]*

வெள்ளாவிரை[1] *vel̤l̤ā-virai,* பெ.(n.) சிறு மரவகை; glaucous-leaved eglandular senna, s.tr.

*[வெள்ளா + விரை]*

வெள்ளாவிரை[2] *vel̤l̤ā-virai,* பெ.(n.) ஆவிரை வகை; a kind of plant-cassia auriculata.

வெள்ளாவிவை[1]-த்தல் *vel̤l̤āvi-vai-,* செ. குன்றாவி.(v.t.) 1. நன்றாக அடித்தல்; to beat severely. *"பயலை நன்றாக வெள்ளாவி வைத்தனுப்பி விட்டான்"* (பே.வ.). 2. வெள்ளாவிகட்டு பார்க்க; see *vel̤l̤āvi-kaṭṭu* (w.).

*[வெள்ளாவி + வை-.]*

வெள்ளாவிவைத்தல்[2] *vel̤l̤āvi-vaittal,* பெ.(n.) ஆவிபட வைத்தல்; to keep in the vapour.

*[வெள்ளாவி + வைத்தல்]*

வெள்ளாழச்சி *vel̤l̤āl̤acci,* பெ.(n.) வெள்ளாளச்சி பார்க்க; see *vel̤l̤āl̤acci.*

*[வெள்ளாளச்சி → வெள்ளாழச்சி]*

வெள்ளாழன் *vel̤l̤āl̤an,* பெ.(n.) வெள்ளாளன் பார்க்க; see *vel̤l̤āl̤an* (w.).

*[வேளாளன் → வெள்ளாழன்]*

வெள்ளாளச்சி *vel̤l̤āl̤acci,* பெ.(n.) வேளாள இனப்பெண்; *vel̤āl̤a* woman.

*[வெள்ளாளன் → வெள்ளாளச்சி]*

வெள்ளாளர் *vel̤l̤āl̤ar,* பெ.(n.) பூவைசியர், மருத நிலமாக்கள்; agriculturists, formers, peasants.

*[வேளாளர் → வெள்ளாளர்]*

வெள்ளாளன் *vel̤l̤āl̤an,* பெ.(n.) வேளாள மரபினன் (தொல். எழுத். 338, உரை); man of the *vel̤āl̤a* caste.

*[வேளாளன் → வெள்ளாளன்]*

வெள்ளாறு *vel̤l̤āṟu,* பெ.(n.) புதுக் கோட்டையில் உள்ளதும் சோழ பாண்டிய நாடுகளுக்கு இடையெல்லை ஆனதுமான ஓர் ஆறு (தனிப்பா. 1, 126, 2); a river that flows through the pudukkottah state,

forming the traditional boundary between the *cōḷa* and the *paṇdya* kingdoms.

*[வெள் + ஆறு]*

வெள்ளான் *veḷḷāṉ*, பெ.(n.) *வெள்ளாளன்* பார்க்க; see *veḷḷāḷaṉ*. *"வெள்ளான் நத்தங்கள்" (S.I.I.ii,114)*.

*[வெள்ளாளன் → வெள்ளான்]*

வெள்ளான்குடி *veḷḷāṉ-kuḍi*, பெ.(n.) வெள்ளாங்குடி பார்க்க; see *veḷḷāṅ-kuḍi*.

*[வெள்ளான் + குடி]*

வெள்ளான்செட்டி *veḷḷāṉ-ceṭṭi*, பெ.(n.) வெள்ளாஞ்செட்டி பார்க்க; see *veḷḷāñ-ceṭṭi* (w.).

*[வெள்ளான் + செட்டி]*

வெள்ளான்வகை *veḷḷāṉ-vagai*, பெ.(n.) வேளாளர்க்குரிய ஊர்ப்பங்கு முதலியன; that which belongs to the *vēḷāla* class, as lands in a village. *"வெள்ளான் வகையாய் வருகின்ற நிலம்" (S.I.I.ii,54)*.

*[வெள்ளான் + வகை]*

வெள்ளானை[1] *veḷḷāṉai*, பெ.(n.) 1. இந்திரனது யானை; Indra's elephant. *"வெள்ளானைச் சருக்கம்" (பெரியபு.)*. 2. வெள்ளை யானை; white elephant.

*[வெள் + ஆனை]*

வெள்ளானை[2] *veḷḷāṉai*, பெ.(n.) வாலை சாறு; mercury extracted from virmilion and other mercurial compounds.

வெள்ளானையத்தி *veḷḷāṉai-yatti*, பெ.(n.) சாறு; mercury.

வெள்ளானையுள்ளோன் *veḷḷāṉai-yuḷḷōṉ*, பெ.(n.) அய்யனார் (நாமதீப. 43); *aiyaṉār*.

*[வெள்ளானை + உள்ளோன்]*

வெள்ளானையூர்ந்தோன் *veḷḷāṉai-y-ūrntōṉ*, பெ.(n.) இந்திரன் (நாமதீப. 60); Indra.

*[வெள்ளானை + ஊர்ந்தோன்]*

வெள்ளானைவாழை *veḷḷāṉai-vāḻai*, பெ.(n.) வாழை வகை; a kind of plantain (Insc. Pudu. 929).

*[வெள்ளானை + வாழை]*

வெள்ளி[1] *veḷḷi*, பெ.(n.) 1. வெண்மை; whiteness. *"வெள்ளி நோன்படை" (புறநா. 41)*. 2. வெண்ணிறமுள்ள மாழைவகை (பிங்.); silver. *"விண்ணரு வெள்ளி வெற்பின்" (சீவக. 1646)*. 3. வெள்ளிக் காசு வகை; a silver coin. 4. விண்மீன்; star. *"வானத்திலுள்ள வெள்ளியைக் கணக்கிட முடியுமா?" (உ.வ.)*. 5. வெள்ளிக்கோள்; the planet venus. *"இலங்கு கதிர் வெள்ளி தென்புலம் படரினும்" (புறநா. 35)*. 6. அறிவின்மை; ignorance. *"வெள்ளியை யாதல் விளம்பினை" (கம்பரா. வேள்வி. 29)*. 7. இனப் பெருக்க விந்து; semen virile. *"வெள்ளியுருகியே பொன்வழி யோடாமே" (திருமந். 834)*.

*[வெள் → வெள்ளி. 'இ' உடைமைப் பொருளீறு.]*

வெள்ளி[2] *veḷḷi*, பெ.(n.) 1. மாழை வகை; silver argentum. 2. கருக்கன் வெள்ளி; impure silver. 3. சொக்க வெள்ளி; pure silver.

4. கல்வெள்ளி; hard and inferior with much alloy. 5. சாறு வெள்ளி; silver obtained from mercury.

**வெள்ளிக்கட்டன்** *veḷḷi-k-kaṭṭaṉ,* பெ.(n.) 1. வெள்ளைக் கட்டுகளையுடைய விரியன் பாம்பு; russell's viper. 2. கண்ணாடி விரியன் பார்க்க; see *kaṇṇāḍi-viriyaṉ.*



**வெள்ளிக்கண்** *veḷḷi-k-kaṇ,* பெ.(n.) சுவர்க்கண்; wall eye.

*[வெள்ளி + கண்]*

**வெள்ளிக்கரு** *veḷḷi-k-karu,* பெ.(n.) மருந்துப் புடம் வைப்பதன் முன் அதனை மூடும் மூடிவகையில் ஒன்று (மூ.அ.); a kind of covering for drugs, used in sublimating them.

*[வெள்ளி + கரு]*

**வெள்ளிக்கலியாணம்** *veḷḷi-k-kaliyāṇam,* பெ.(n.) மணமக்கள் திருமணம் முடித்து இருபத்தைந்து ஆண்டுகள் நிறைவுபெறும் நாளன்று கொண்டாடும் விழா; silver wedding.

*[வெள்ளி + கலியாணம்]*

**வெள்ளிக்காசு** *veḷḷi-k-kāšu,* பெ.(n.) 1. வெள்ளித் துட்டு; silver coin. 2. ஒருவகை மீன் (சங்.அக.); a kind of fish.

*[வெள்ளி – காசு]*

**வெள்ளிக்காடிக்காரம்** *veḷḷi-k-kāḍi-k-kāram,* பெ.(n.) 1. காடிக்காரம்; silver nitrate-agno3. 2. இது கண் விளிம்புகள் வீங்கிக் கண்ணில் பூ வளர்ந்திருப்பதைக் கரைக்கும்; lunar caustic-agentina nitrus. useful for eye disease.

*[வெள்ளி + காடிக்காரம்]*

**வெள்ளிக்காரம்** *veḷḷi-k-kāram,* பெ.(n.) நெருப்புக்கல் (மூ.அ.); nitrate of silver.

**வெள்ளிக்காறு** *veḷḷi-k-kāṟu,* பெ.(n.) உருக்கி வார்த்த வெள்ளிக்கட்டி; bar of silver (w.).

*[வெள்ளி + காறு]*

**வெள்ளிக்கிழங்கு** *veḷḷi-k-kiḻaṅgu,* பெ.(n.) வள்ளிக்கிழங்கு; sweet potato.

*[வெள்ளி + கிழங்கு]*

**வெள்ளிக்கிழமை** *veḷḷi-k-kiḻamai,* பெ.(n.) கிழமையின் (வாரம்) ஆறாவது நாள்; Friday.

*[வெள்ளி + கிழமை]*

**வெள்ளிக்குன்றம்** *veḷḷi-k-kuṉṟam,* பெ.(n.) இரசிமலை; silver mountain.

*[வெள்ளி + குன்றம்]*

**வெள்ளிக்கோல்** *veḷḷi-k-kōl,* பெ.(n.) துலாக் கோல்வகை; a kind of steel-yard. *'வெறுநாய் சந்தைக்குப் போனால் வெள்ளி அடிபட்டு வரும்'.*

*[வெள்ளி + கோல்]*



**வெள்ளிக்கோல்வரையன்** *veḷḷi-k-kōl-varaiyaṉ,* பெ.(n.) வெள்ளிக்கோலின் வரைகளைப் போன்ற வரிகளையுடைய பாம்புவகை (சங்.அக.); a snake with white marks resembling those on a *veḷḷi-k-kōl.*

*[வெள்ளிக்கோல் + வரை]*

**வெள்ளிக்கோள்** *veḷḷi-k-kōḷ,* பெ.(n.) கதிரவனைச் சுற்றிச் செல்லும் இரண்டாவது வான்கோள்; the prightest planet second in order of distance from the sun, venus.

*[வெள்ளி + கோல்]*

**வெள்ளிச்சரிகை** *veḷḷi-c-carikai,* பெ.(n.) வெள்ளியால் இழைத்த ஆடைக் கரை; silver lace.

*[வெள்ளி + சரிகை]*

**வெள்ளிச்சி** *veḷḷicci,* பெ.(n.) கழுதைமான் புள்ளி பார்க்க; see *kaḻutai-māṉ-puḷḷi.*

**வெள்ளிச்சுண்ணம்** *veḷḷi-c-cuṇṇam,* பெ.(n.) சுண்ணச்சாந்து; a white calcined powder with properties of calcium.

இதனால் மூலச்சூடு போகும், சிறு பிள்ளை உடல் போல் விசை கொண்டு இருக்கும், நடந்தால் இளைப்புத் தோன்றாது.

*[வெள்ளி + சுண்ணம்]*

**வெள்ளிச்செம்பு** *veḷḷi-c-cembu,* பெ.(n.) வெள்ளிக்கலயம்; silver transmuted into copper.

*[வெள்ளி + செம்பு]*

**வெள்ளிசா** *veḷḷicā,* பெ.(n.) வெண்மையான கடல்மீன்வகை; grey mallet.

*[வெள்ளி + சாய்]*

**வெள்ளிடம்** *veḷḷiḍam,* பெ.(n.) இடைவெளி; vacant space. *"எள்ளிட வெள்ளிட மின்றென வீண்ட" (கந்தபு. அவைபுகு. 25).*

*[வெள் + இடம்]*

**வெள்ளிடி** *veḷḷiḍi,* பெ.(n.) 1. கோடையில் மழை பெய்யாது இடிக்கும் இடி; thunder from summer clouds, as not followed by rain. *"அத்தசையிலே வெள்ளிடி விழுந்தாற் போலே" (திவ். திருநெடுந். 28, வ்யா. பக். 236).* 2. எதிர்பாராது திடீரென வரும் ஆபத்து; sudden stroke of misfortune (w.).

*[வெள் + இடி]*

**வெள்ளிடை** *veḷḷiḍai,* பெ.(n.) 1. வளி மண்டலம்; atmospheric space. *"நெடு வெள்ளிடையாகி நிலனுமாகி" (தேவா. 879, 10).* 2. வெளியிடம்; open space. *"உள்ளுரு வெபதா வெள்ளிடை வாயிலும்" (மணி. 6, 44).* 3. இடைவெளி; space. *"வெள்ளிடை யின்றாய்...... தொகுவார்" (பிரமோத். 20, 25).* 4. தெளிவு; clearness.

*[வெளி + இடை]*

**வெள்ளிடைமலை** *veḷḷiḍai-malai,* பெ.(n.) யாவரும் அறியும்படி தெளிவாயிருப்பது; that which is perfectly clear, as a hill in a plain.

*[வெள்ளிடை + மலை]*

**வெள்ளிடைமன்றம்** *veḷḷiḍai-maṉṟam,* பெ.(n.) காவிரிப்பூம்பட்டினத்தில் முன்னாளில் இருந்த ஒரு மன்றம்; once upon a period were hall at *kāviri-p-pūmpaṭṭiṉam.*

இம் மன்றத்தில் வைக்கப்பட்ட பொருள்களை எவருங் கனவு செய்யத் துணியார்.

*[வெள்ளிடை + மன்றம்]*

**வெள்ளிண்டங்கொடி** *veḷḷiṇḍaṅ-koḍi,* பெ.(n.) வெள்ளிண்டு பார்க்க; see *veḷḷiṇḍu.*

*[வெள்ளிண்டு → வெள்ளிண்டம் + கொடி]*

**வெள்ளிண்டு**[1] *veḷḷiṇḍu,* பெ.(n.) கொடிவகை; shining-leaved soap pod.

*[வெள் + இண்டு]*

**வெள்ளிண்டு**[2] *veḷḷiṇḍu,* பெ.(n.) ஒரு நுரையிண்டு, ஒரு வகை இண்டஞ்செடி; angular stalked acacia-acacia intsia.

**வெள்ளித்தகடு** *veḷḷi-t-tagaḍu,* பெ.(n.) வெள்ளிப்பட்டை; silver sheet.

*[வெள்ளி + தகடு]*

**வெள்ளித்தடி** *veḷḷi-t-taḍi,* பெ.(n.) பெரியோர் முன் எடுத்துச்செல்லும் விருதுகளுள் ஒன்றான வெள்ளி கட்டியதடி; silver rod, an item of paraphernala, carried in procession before great person.

*[வெள்ளி + தடி]*

**வெள்ளித்தடிச்சேவகன்** *veḷḷi-t-taḍi-c-cēvagaṉ,* பெ.(n.) வெள்ளித்தடியைத் தூக்கிச் செல்லும் பணியாளன்; peon who carries a *veḷḷi-t-taḍi.*

*[வெள்ளி + தடி + சேவகன்]*

**வெள்ளித்திரை** *veḷḷi-t-tirai,* பெ.(n.) (திரைப்படம் காட்டுவதற்கான) வெண்ணிறத் திரை; silver screen (for screening films).

*[வெள்ளி + திரை]*

**வெள்ளித்திருமணம்** *veḷḷi-t-tirumaṇam,* பெ.(n.) வெள்ளிக்கலியாணம் பார்க்க; see *veḷḷi-k-kaliyāṇam.*

*[வெள்ளி + திருமணம்]*

**வெள்ளித்தோற்றம்** *veḷḷi-t-tōṟṟam,* பெ.(n.) புதன் கோளின் தோற்றம் (சுக்கிரோதயம்); rising of verrus.

*[வெள்ளி + தோற்றம்]*

**வெள்ளிது** *veḷḷidu,* பெ.(n.) வெளிப்படையானது; that which is plain. *"நுண் பொருட்டாகிய பொருள் கேட்டார்க்கு வெள்ளித் தன்றி உள்ளுடைத்தாகி" (தொல். பொ. 656, உரை).*

*[வெண்-மை + வெள்ளிது]*

**வெள்ளிநகம்** *veḷḷi-nagam,* பெ.(n.) கைலாசம்; celestrial city, sky or heaven.

*[வெள்ளி + நகம்]*

**வெள்ளிநண்டு** *veḷḷi-naṇḍu,* பெ.(n.) வெள்ளிபோற் பளபளத்துக் காணக் கூடுமொரு கடல்நண்டு (செங். மீன.); a silvery sea erab.

*[வெள்ளி + நண்டு]*

**வெள்ளிநாணயம்** *veḷḷi-nāṇayam,* பெ.(n.) வெள்ளியில் அடிக்கப்பட்ட பணம்; silver coin.

*[வெள்ளி + நாணயம்]*

Skt. *Naṇaka* > த. நாணயம்.

**வெள்ளிநிமிளை** *veḷḷi-nimiḷai,* பெ.(n.) 1. நிமிளை வகை; bismuth ore. 2. நிமிளை மருந்துவகை; silver coloured bismuth (w.).

*[வெள்ளி + நிமிளை]*

**வெள்ளிநிலை** *veḷḷi-nilai,* பெ.(n.) துன்பம் நீங்க வான்கோள் மழை பெய்வித்தலைப் புகழ்ந்து கூறும் புறத்துறை (பு.வெ. 9, 16); theme praising the planet on his pavers to cause rain and relieve distress.

*[வெள்ளி + நிலை]*

**வெள்ளிநீதுருசு** *veḷḷi-nī-turušu,* பெ.(n.) காடிக்காரம்; silver nitrate.

*[வெள்ளி + நீதுருசு]*

**வெள்ளிப்பணம்** *veḷḷi-p-paṇam,* பெ.(n.) வெண் பொற்காசு; a silver coin.

*[வெள்ளி + பணம்]*

**வெள்ளிப்பணிதி** *veḷḷi-p-paṇidi,* பெ.(n.) 1. வெள்ளிநகை; silver ornament. 2. வேலைப் பாடமைந்த வெள்ளித்தட்டம்; decorated silver-plate (w.).

*[வெள்ளி + பணிதி]*

**வெள்ளிப்பல்லக்கு** *veḷḷi-p-pallakku,* பெ.(n.) பல்லக்குவகை; a palanguin.

*[வெள்ளி + பல்லக்கு]*

**வெள்ளிப்பாட்டு** *veḷḷi-p-pāṭṭu,* பெ.(n.) வெள்ளிப்பாடல் பார்க்க; see *veḷḷi-p-pāḍal.*

*[வெள்ளி + பாட்டு]*

**வெள்ளிப்பாடல்** *veḷḷi-p-pāḍal,* பெ.(n.) பழைய நூல்களில் வெள்ளி என்ற பாவலரால் புதியனவாகப் பாடிச் செருகப்பட்ட பாடல்; stanzas inter polated in ancient poems by a poet called *veḷḷi.*

*[வெள்ளி + பாடல்]*

**வெள்ளிப்பாளம்** *veḷḷi-p-pāḷam,* பெ.(n.) உருக்கி வார்த்த வெள்ளியின் பாளம்; bar of silver (w.).

*[வெள்ளி + பாளம்]*

**வெள்ளிப்பிரிவு** *veḷḷi-p-pirivu,* பெ.(n.) வெள்ளிக்கோள் மாறுநிலை; declination of the planet venus (w.).

*[வெள்ளி + பிரிவு]*

**வெள்ளிப்பிள்ளையார்** *veḷḷi-piḷḷaiyār,* பெ.(n.) வெள்ளிப்பிள்ளையார்நோன்பு பார்க்க; see *veḷḷi-p-piḷḷaiyār-nōṉbu.*

*[வெள்ளி + பிள்ளையார்]*

**வெள்ளிப்பிள்ளையார்நோன்பு** *veḷḷi-p-piḷḷaiyār-nōṉbu,* பெ.(n.) வேளாளக் கட்டுக் கழுத்திகள் கொண்டாடும் நோன்பு வகை; a fast observed by *vēḷāla* married women.

*[வெள்ளி + பிள்ளையார் + நோன்பு]*

**வெள்ளிப்பொடி** *veḷḷi-p-poḍi,* பெ.(n.) 1. வெள்ளிஅராவிய பொடி; silver fillings. 2. வெள்ளிமணல்; silver ore.

*[வெள்ளி + பொடி]*

**வெள்ளிபழுத்தல்** *veḷḷi-paḻuttal,* பெ.(n.) பொன்னாதல்; silver transmuted into gold.

*[வெள்ளி + பழுத்தல்]*

**வெள்ளிபற்பம்** *veḷḷi-paṟpam,* பெ.(n.) வெள்ளியை நீற்றிச் செய்த மருந்து வகை; block oxide of silver.

*[வெள்ளி + பற்பம்]*

**Skt.** Bhasman > த. பற்பம்.

**வெள்ளிப்பூச்சு** *ve*ḷḷ*i-p-pūccu,* பெ.(n.) வெள்ளி மெருகு; coating with silver.

*[வெள்ளி + பூச்சு]*

**வெள்ளிபூத்தல்** *ve*ḷḷ*i-pūttal,* பெ.(n.) 1. விண்மீன்களின் தோற்றம்; rising of the stars. 2. விடியற்காலை வெள்ளிக்கோள் தோன்றுதல்; rising of the planet venus at early dawn.

*[வெள்ளி + பூத்தல்]*

**வெள்ளிமடந்தாள்** *ve*ḷḷ*i-maḍantāḷ,* பெ.(n.) வெள்ளிமடந்தான்கெண்டை பார்க்க (யாழ்.அக.); *ve*ḷḷ*i-maḍandāṉ-keṇḍai.*

*[வெள்ளி + மடந்தாள்]*

**வெள்ளிமடந்தான்** *ve*ḷḷ*i-maḍandāṉ,* பெ.(n.) சிறிய ஆற்றுக் கெண்டை மீன்; a very small river fish.

*[வெள்ளி + மடந்தான்]*

**வெள்ளிமடந்தான்கெண்டை** *ve*ḷḷ*i-maḍantāṉ-keṇḍai,* பெ.(n.) கெண்டை மீன்வகை; a kind of *keṇḍai* fish (w.).

*[வெள்ளி + மடந்தான் + கெண்டை]*



**வெள்ளிமடந்தை** *ve*ḷḷ*i-maḍantai,* பெ.(n.) நீண்ட செடிவகை; moossanda of ceylon.l.sh.

*[வெள்ளி + மடந்தை]*

**வெள்ளிமண்** *ve*ḷḷ*i-maṇ,* பெ.(n.) இயற்கை மருத்துவத்தில் பயன்படுத்தப்படும் ஒருவகை துணைநீர்மப் பொருள்; one of the natural substances mentioned in siddha medicine.

*[வெள்ளி + மண்]*

**வெள்ளிமணல்** *ve*ḷḷ*i-maṇal,* பெ.(n.) 1. வெள்ளி கலந்த மணல்; silver ore. 2. வெண்மணல்; white sand.

*[வெள்ளி + மணல்]*

**வெள்ளிமதிப்பு** *ve*ḷḷ*i-madippu,* பெ.(n.) விண்மீனை அடையாளங்கண்டு நேரங் காலத்தை மற்றும் திசையையறிதல் (மீன. பொ. வ.); finding of time, period and direction based on stars.

*[வெள்ளி + மதிப்பு]*

**வெள்ளிமயமான** *ve*ḷḷ*i-mayamāṉa,* பெ.(n.) வெண்ணிறமான; argent.

*[வெள்ளி + மயமான]*

**வெள்ளிமயிர்த்தழை** *ve*ḷḷ*i-mayir-t-taḻai,* பெ.(n.) வெள்ளிலை; white leaf plant.

*[வெள்ளி + மயிர்த்தழை]*

**வெள்ளிமலாம்** *ve*ḷḷ*i-maḷām,* பெ.(n.) வெள்ளிமுலாம் பார்க்க (யாழ்.அக.); see *ve*ḷḷ*i-mulām.*

*[வெள்ளி + மலாம்]*

**வெள்ளிமலை** *ve|li-malai,* பெ.(n.) 1. கயிலை மலை; mt. kailas. *"வெள்ளிமலை யெடுத்துலக மூன்றுங் காவலோன்" (கம்பரா. சூர்ப்ப. 39).* 2. ஒருமலை (சூடா.); a mountain.

*[வெள்ளி + மலை]*

**வெள்ளிமன்றம்** *ve|li-manram,* பெ.(n.) வெள்ளியம்பலம் பார்க்க (திருவாலவா. நகரச். 4); see *ve|liyambalam.*

*[வெள்ளி + மன்றம்]*

**வெள்ளிமாடம்** *ve|li-mādam,* பெ.(n.) அரண்மனைவகை (சிலப். 25, 5); sea kind of royal residence.

*[வெள்ளி + மாடம்]*

**வெள்ளிமித்துரு** *ve|li-mitturu,* பெ.(n.) கோடா சூரி; a kind of arsenic.

**வெள்ளிமீன்** *ve|li-mīn,* பெ.(n.) வெள்ளிக் கோள்; venus. *"வெள்ளி மீனை யொருகைக் குட்பிடித்து" (கொண்டல்விடு. 191).*

*[வெள்ளி + மீன்]*

**வெள்ளிமுலாம்** *ve|li-mulām,* பெ.(n.) வெள்ளிப் பூச்சு; coating or plating with silver.

*[வெள்ளி + முலாம்]*

**வெள்ளியகாகச்சி** *ve|liya-kākacci,* பெ.(n.) வெண்கரும்பு; white sugarcane-saccharum officinarum.

*[வெள்ளிய + காகச்சி]*

**வெள்ளியங்கிரி** *ve|liyaṅkiri,* பெ.(n.) வெள்ளிமலை1 பார்க்க (பிங்.); see *ve|li-malai.*

*[வெள்ளி + அம் + கிரி]*

**Skt.** Giri > த. கிரி.

**வெள்ளியங்குன்று** *ve|liyaṅ-kunru,* பெ.(n.) வெள்ளிமலை பார்க்க; see *ve|li-malai.*

*[வெள்ளி + அம் + குன்று]*

**வெள்ளியப்பிரகம்** *ve|liya-p-pirakam,* பெ.(n.) வெள்ளையப்பிரகம்; white mica.

**வெள்ளியம்** *ve|liyam,* பெ.(n.) மரவகை (மலை.); wood-apple.

*[வெள்ளில் → வெள்ளியம்]*

**வெள்ளியம்பலத்தம்பிரான்** *ve|liyambala-t-tambirān,* பெ.(n.) வெள்ளி[1],8 பார்க்க; see *ve|li*[1]*,8.*

*[வெள்ளியம்பலம் + தம்பிரான்]*

**வெள்ளியம்பலம்[1]** *ve|li-y-ambalam,* பெ.(n.) மதுரைக் கோயில் ஆடவல்லான் மன்றம்; the sacred hall dedicated to nataraja in the siva temple a madurai. *"வெள்ளியம்பலத்து நள்ளிருட் கிடந்தேன்" (சிலப். பதி. 40, 41).*

*[வெள்ளி + அம்பலம்]*

**வெள்ளியம்பலம்[2]** *ve|li-yambalam,* பெ.(n.) வெண் பொற்றகடு வேயப்பட்ட மன்றம்; mountain containing silver ore.

**வெள்ளியம்பலவாணத்தம்பிரான்** *ve|liyampala-vāṇa-t-tampirān,* பெ.(n.) வெள்ளி [1], 8 பார்க்க; see *ve|li* [1]*, 8.*

*[வெள்ளியம்பலம் + வாணன் + தம்பிரான்]*

**வெள்ளயம்பெருமலை** *ve|layam-perumalai,* பெ.(n.) விஞ்சையர்களுடைய மலை; a mountain of demigods.

*[வெள்ளயம் + பெருமலை]*

வெள்ளியா *velliyā,* பெ.(n.) நெத்தி போலுஞ் சிறிய மீன் (நெல்லை. மீன.); a kind of tiny fish.

வெள்ளியார் *velliyār,* பெ.(n.) 1. வெண்ணிற முடையவர்; white coloured person. 2. பெருமகன்; noble-man. *"வெள்ளியார் ணங்க விரைந்தருள் செய்வான்" (திவ். பெரியதி. 4, 10, 7).* 3. சிவன் (திவ். பெரியதி. 9, 7, 9, வ்யா); siva. 4. வெள்ளி (திவ். பெரியதி. 4, 10, 7, வ்யா); sukra.

*[வெள்ளி → வெள்ளியார்]*

வெள்ளியிலைச்செடி *velliyilai-c-cedi,* பெ.(n.) வெள்ளி மடந்தை பார்க்க; see *velli-madantai.*

*[வெள்ளி + இலை + செடி]*

வெள்ளியுயிர் *velli-y-uyir,* பெ.(n.) மக்கட் பிறப்பு (சீவக. 3111, உரை); human being.

*[வெள்ளி + உயிர்]*

வெள்ளியெழுதல் *velli-yelutal,* பெ.(n.) விண்மீன் தோன்றுதல் (திவ். திருப்பா. 13); rising of the morning star.

*[வெள்ளி + எழுதல்]*

வெள்ளிரேக்கு *velli-rēkku,* பெ.(n.) மிக மெலிதாக அடிக்கப்பட்ட வெள்ளித் தகடு; silver leaf.

*[வெள்ளி + இரேக்கு]*

U. *Rēk* > த. இரேக்கு.

வெள்ளில்[1] *vellil,* பெ.(n.) 1. விளாம்பழம்; fruit of wood-apple. *"மன்ற விளவின் மனைவீழ் வெள்ளில்" (புறநா. 181).* 2. விளா[1] பார்க்க (பிங்.); see *vilā.*

*[வெள் + இல்]*

வெள்ளில்[2] *vellil,* பெ.(n.) பாடை; bier. *"வெள்ளிற்பாடை" (மணி. 6, 93).*

*[வெள் + இல்]*

வெள்ளிலங்காடு *vellilan-kādu,* பெ.(n.) சுடுகாடு; cremation ground. *"வெள்ளிலங் காட்டிடை.... நடமாடிய நாதன்" (தேவா. 439, 10).*

*[வெள்ளில் + காடு]*

வெள்ளிலத்தி *velli-latti,* பெ.(n.) விளாம்பழம் (தைலவ.); wood-apple.

*[வென்னில் + அத்தி]*

வெள்ளிலை[1] *vellilai,* பெ.(n.) 1. வெற்றிலை; betel leaf. *"வெள்ளிலைத் தம்பல் கண்டார்" (கம்பரா. வரைக். 49).* 2. வெள்ளிமடந்தை பார்க்க; see *velli-madantai.*

*[வெள் + இலை]*

வெள்ளிலை[2] *vellilai,* பெ.(n.) படைக்கலத்தின் அலகு; sharp edge, as of a spear. *"வெள்ளிலை வேலினான்" (சீவக. 328).*

*[வெள் + இலை]*

வெள்ளிலைப்பற்று *vellilai-p-parru,* பெ.(n.) வெற்றிலைக்கவளி; bundle of betel leaves. *"அடைக்காயமுதுக்கு...... வெள்ளிலைப் பற்றொன்பதும்" (S.I.I.iii, 188).*

*[வெள்ளிலை + பற்று]*

வெள்ளிலையமுது *vellilai-yamutu,* பெ.(n.) வெற்றிலைத் தம்பலப் படையல்; offering of betel, as to a diety.

*[வெள்ளிலை + அமுது]*

வெள்ளிலோத்தி *velli-lōtti,* பெ.(n.) செடிவகை; a plant.

**வெள்ளிலோத்திரம்** *ve*ḷ*ḷi-lōttiram,* பெ.(n.) 1. வெண்பூவுள்ள மரவகை; a tree with white flowers. *"வெள்ளிலோத்திரத்தின் பூம்பொருக்க தைத்த சாந்தின்" (சீவக. 622).* 2. விளாம்பழம்; wood-apple. 3. விளாம் பட்டை; bark of wood-apple tree (w.).

*[வெள்ளி + உலோத்திரம்]*

**Skt.** *lōdhra* > த. உலாத்திரம்.

**வெள்ளிவரைகாப்போன்** *ve*ḷ*ḷi-varai-kāppō*ṉ*,* பெ.(n.) நந்தி (நாமதீப. 42); nanti, as guarding mt. kailas.

*[வெள்ளி + வரை + காப்போன்]*

**வெள்ளிவவ்வால்** *ve*ḷ*ḷi-vavvāl,* பெ.(n.) சாம்பல் நிறமும், சிவப்பு நிறமும் கலந்ததும் ஓரடி வளர்வதுமான மீன்வகை; silver pomfret, greyisl netural tint with purplish reflexions, attaining 1 ft. in length.

*[வெள்ளி + வவ்வால்]*

**வெள்ளிவள்ளி** *ve*ḷ*ḷi-va*ḷ*ḷi,* பெ.(n.) மகளிரணியும் வெள்ளித் தோள்வளை; a kind of silver armlet, worn by women. *"வெள்ளிவள்ளியின் விளங்கு தோணலார்" (சீவக. 420).*

*[வெள்ளி + வள்ளி]*




**வெள்ளிவாரம்** *ve*ḷ*ḷi-vāram,* பெ.(n.) வெள்ளிக்கிழமை பார்க்க (சிலப். 23, 135); see *ve*ḷ*ḷi-k-ki*ḻ*amai.*

*[வெள்ளி + வாரம்]*

**வெள்ளிவிழா** *ve*ḷ*ḷi-vi*ḻ*ā,* பெ.(n.) ஓர் அமைப்பின் அல்லது இயக்கத்தின் இருபத்தைந்தாவது ஆண்டு நிறைவுக் கொண்டாட்டம்; 25th anniversary of an event.

*[வெள்ளி + விழா]*

**வெள்ளிவெற்பு** *ve*ḷ*ḷi-ve*ṟ*pu,* பெ.(n.) கயிலை மலை (சூடா.); mt. kailas.

*[வெள்ளி + வெற்பு]*

**வெள்ளிவேர்** *ve*ḷ*ḷi-vēr,* பெ.(n.) சல்லி வேர் (சங்.அக.); rootlet.

*[வெள்ளி + வேர்]*

**வெள்ளிழுது** *ve*ḷ*ḷi*ḻ*utu,* பெ.(n.) வெண்ணெய்; butter. *"வெண்மை வெள்ளிழுது" (குறுந். 277).*

*[வெள் + இழுது]*

**வெள்ளிறகுமந்தாரை** *ve*ḷ*ḷi*ṟ*aku-mantārai,* பெ.(n.) வெள்ளைமந்தாரை பார்க்க (யாழ்.அக.); see *ve*ḷ*ḷai-mantārai.*

*[வெள் + இறகு + மந்தாரை]*

**வெள்ளிறா** *ve*ḷ*ḷi*ṟ*ā,* பெ.(n.) வெள்ளிறால் பார்க்க (வி.); see *ve*ḷ*ḷi*ṟ*āl.*

*[வெள் + இறால்]*

**வெள்ளிறால்** *ve*ḷ*ḷi*ṟ*āl,* பெ.(n.) 1. மீன்வகை; white prawn. 2. கடல் மீன் வகை; a sea-fish.

*[வெள் + இறால்]*



**வெள்ளீயச்சீலை** *ve!!iya-c-cilai,* பெ.(n.) துணை நீர்மப் பொருள்; one of 120 natural substances mentioned in siddha medicine.

*[வெள்ளீயம் + சீலை]*

**வெள்ளீயப்பிறப்பி** *ve!!iya-p-pirappi,* பெ.(n.) வெள்ளைநாகணம் பார்க்க; see *ve!!ai-nākaṇam.*

*[வெள்ளீயம் + பிறப்பி]*

**வெள்ளீயபற்பம்** *ve!!iya-parpam,* பெ.(n.) மருந்துப்பொடி; calcined powder of tin good for skin diseases.

*[வெள்ளீயம் + பற்பம்]*

**Skt.** Bhasman > த. பற்பம்.

**வெள்ளீயம்**[1] *ve!!iyam,* பெ.(n.) மாழை வகை (பதார்த்த. 1174) (வி.); tin.

*[வெள் + ஈயம்]*

**வெள்ளீயம்**[2] *ve!!iyam,* பெ.(n.) வெண்ணாகம்; white lead-slannum pewter.

இதன் பொடி மலத்தை உண்டு பண்ணவும் மேகத்தைப் போக்கவும் பசி தீர்வும் பயன்படும்.

**வெள்ளீயமணல்**[1] *ve!!iya-maṇal,* பெ.(n.) வெள்ளீயங்கலந்த மணல்; sand mixed with tin.

*[வெள்ளீயம் + மணல்]*

**வெள்ளீயவுப்பு** *ve!!iya-vuppu,* பெ.(n.) துத்த நாகவுப்பு; white vitriol, zincisulphas.

*[வெள்ளீயம் + உப்பு]*

**வெள்ளீரல்** *ve!!iral,* பெ.(n.) 1. மணிக்குடர்; mesentery. 2. நுரையீரல்; lungs.

*[வெள் + ஈரல் → வெள்ளீரல்]*

**வெள்ளீரல்** *ve!!iral,* பெ.(n.) நெஞ்சாங்குலை (வி.); lung.

*[வெள் + ஈரல்]*

**வெள்ளுகா** *ve!!ukā,* பெ.(n.) உகாமரம் பார்க்க; see *ukā-maram.*

*[வெள் + உகா]*

**வெள்ளுடும்பு** *ve!!uḍumbu,* பெ.(n.) உடும்பு வகை; white guana.

*[வெள் + உடும்பு]*



**வெள்ளுடைக்கழிச்சல்** *ve!!uḍai-k-ka!iccal,* பெ.(n.) வெண் மலக் கழிச்சல்; white coloured purging.

*[வெள்ளுடை + கழிச்சல்]*

வெள்ளுடைப்பணி *vel̤l̤udai-p-pan̤i,* பெ.(n.) மெய்நோகாமல் (அழுக்குப்படாமல்) மேலோட்டமாகச் செய்யும் வேலை; white-scholar job.

*[வெள்ளுடை + பணி]*

வெள்ளுப்பு[1] *vel̤l̤uppu,* பெ.(n.) வெண்மை நிறமான உப்பு; white salt. *"வெள்ளுப்புப் பகருநர்" (மணி. 28, 31).*

*[வெள் + உப்பு → வெள்ளுப்பு]*

வெள்ளுப்பு[2] *vel̤l̤uppu,* பெ.(n.) 1. வெள்ளை யுப்பு; white common salt.

*[வெள் + உப்பு]*

வெள்ளுயிர் *vel̤l̤uyir,* பெ.(n.) செம்மை உயிர்த்துடிப்பு; pure soul. *"என்னை வெள்ளுயிராக்கவல்ல" (திவ். திருப்பல், 8).*

*[வெள் + உயிர்]*

வெள்ளுரம் *vel̤l̤uram,* பெ.(n.) வெள்ளை யுரம்; a medicine prepared with tin and other mineral salt.

*[வெள் + உரம்]*

வெள்ளுருட்டு *vel̤l̤ūruṭṭu,* பெ.(n.) வெறுமனே அச்சுறுத்துகை (வி.); empty threat.

*[வெள் + உருட்டு]*

வெள்ளுவரி *vel̤l̤u-vari,* பெ.(n.) நல்ல நீர்; good drinking water. *"வெள்ளுவரி சேய்க்கு" (சினேந். 366).*

*[வெள் + வரி]*

வெள்ளுவா *vel̤l̤uvā,* பெ.(n.) வெள்ளை யானை; white elephant. *"வெள்ளுவாப்பிட ரேறிய வேந்தனே முதல்" (பறாளை. பள்ளு. 8).*

*[வெள் + உவா]*

வெள்ளுழவு *vel̤l̤ul̤avu,* பெ.(n.) நிலத்தில் ஈரம் அல்லது காய்ச்சல் அதிகம் இல்லாத காலத்தில் உழும் உழவு; ploughing while the land is neither very dry nor very wet.

*[வெள் + உழவு]*

வெள்ளுழவுப்பயிர் *vel̤l̤ul̤avu-p-payir,* பெ.(n.) பக்குவமான ஈரத்தில் உழுது விதைத்து உழவுசால் தோன்ற விளையும் பயிர்; young crops on land properly moist when sown, the furrows being visible.

*[வெள்ளுழவு + பயிர்]*

வெள்ளுள்ளி *vel̤l̤ul̤l̤i,* பெ.(n.) வெள்ளைப் பூண்டு (சிலப். 11, 88, உரை); garlic.

*[வெள் + உள்ளி]*

வெள்ளுள்ளித்தைலம் *vel̤l̤ul̤l̤i-t-tailam,* பெ.(n.) வெள்ளைப் பூண்டு நெய்; oil extracted from garlic.

*[வெள்ளுள்ளி + தைலம்]*

**Skt.** Taila > த. தைலம்.

வெள்ளுள்ளிநெய் *vel̤l̤ul̤l̤i-ney,* பெ.(n.) வெள்ளைப் பூண்டினின்று செய்யப்படும் மருந்து நெய்; medicated ghee prepared with garlic as chief ingredient. *"இது பெண்கள் அத்தி வெட்டைக்குக் கொடுக்கலாம்".*

*[வெள்ளுள்ளி + நெய்]*

வெள்ளுள்ளிப்பருப்பு *vel̤l̤ul̤l̤i-p-paruppu,* பெ.(n.) பூண்டுப்பல்; tooth of garlic.

*[வெள்ளுள்ளி + பருப்பு]*

**வெள்ளுளுவை** *ve!!u!uvai,* பெ.(n.) உளுவை மீன்வகை (சங்.அக.); a kind of uluvai fish.

*[வெள் + உளுவை]*



**வெள்ளுறட்டி** *ve!-!-uratti,* பெ.(n.) பணியார வகை (யாழ்.அக.); a kind of sweetmeat.

*[வெள் + ரொட்டி]*

**வெள்ளுறி** *ve!!uri,* பெ.(n.) சமணத் துறவிகள் கைக்கொண்ட உறிவகை (பெருங். உஞ்சைக். 36, 228); a kind of net-bag used by Jain monks.

*[வெள் + உறி]*

**வெள்ளூக்காப்பியனார்** *ve!!ū-k-kāppiyaṉār,* பெ.(n.) இடைக் கழகப் புலவருளொருவர்; a middle sangam poet.

**வெள்ளூச்சி** *ve!!ūcci,* பெ.(n.) நத்தை வகை; a kind of snail.

*[வெள் + ஊச்சு → வெள்ளூச்சி]*

**வெள்ளூமத்தை** *ve!!ūmattai,* பெ.(n.) 1. சிறிய ஊமத்தை வகை; white flowered asiatic thorn-apple. 2. பெரிய ஊமத்தை வகை; thorn-apple. 3. அடுக்கூமத்தை பார்க்க; see *aḍu-k-kūmattai.*

*[வெள் + ஊமத்தை]*



**வெள்ளூர்க்காப்பியன்** *ve!!ūr-k-kāppiyaṉ,* பெ.(n.) இடைக்கழகப் புலவருளொருவர் (இ.க.உ.); a middle sangam poet.

*[வெள்ளூர் + காப்பியன்]*

**வெள்ளெடுப்பு** *ve!!eḍuppu,* பெ.(n.) வெளுப்பான கழிச்சல்; white coloured diarrhoea.

*[வெள் + எடுப்பு]*

**வெள்ளெண்ணெய்** *ve!!eṉṉey,* பெ.(n.) மரவெண்ணெய்; wood oil tree of india-dipterocarpus indicus.

*[வெள் + எண்ணெய்]*

**வெள்ளெரி** *ve!!eri,* பெ.(n.) நரம்பிலுண்டாகும் கட்டியைப் போக்கும் ஓர் பூண்டு; a plant.

*[வெள் + எரி]*

**வெள்ளெரிக்காய்** *ve!!erikkāy,* பெ.(n.) வெள்ளரிக்காய் பார்க்க; see *ve!!arikkāy.*

*[வெள் + எரி + காய்]*

**வெள்ளெருக்கங்காய்ப்பஞ்சு** *ve!!erukkaṅkāy-p-pañju,* பெ.(n.) இக் காயின் பஞ்சைப் பாலில் தோய்த்து உருள்கடலையளவு உண்டை செய்து 2,3 மாதப் பிண்டங்களை வெளிப்படுத்தக்

**வெள்ளைமாளர்** *veḷḷai-māḷar,* பெ.(n.) கழகக் காலப் புலவர்; a sangam poet. இவர் பாடிய ஏறாண் முல்லைத் துறை (புறநா. 296) மிக்க பொருள் நயமுடையது.

**வெள்ளைமிளகாய்** *veḷḷai-miḷakāy,* பெ.(n.) வெண்மிளகாய்; white chily.

*[வெள்ளை + மிளகாய்]*

**வெள்ளைமிளகி** *veḷḷai-miḷagi,* பெ.(n.) மடங்கல், கன்னி மாதங்களில் விதைத்து ஐந்து மாதங்களில் அறுவடையாகும் சம்பாநெல்வகை; a kind of *campā* paddy, sown in *avaṇi puraṭṭāśi,* maturing in five months.

*[வெள்ளை + மிளகி]*

**வெள்ளைமிளகு**[1] *veḷḷai-miḷaku,* பெ.(n.) 1. மரவகை (பதார்த்த. 952); china pepper. 2. மிளகு (இலத்.); common pepper. 3. கரு மிளகிலிருந்து செய்யப்படும் வெண்மிளகு; white pepper, prepared from black pepper. 4. வெள்ளைமிளகி பார்க்க; see *veḷḷai-miḷaki.*

*[வெள்ளை + மிளகு]*

**வெள்ளைமிளகு**[2] *veḷḷai-miḷaku,* பெ.(n.) 1. வெண்ணிறமான மிளகு; white pepper is only black-pepper rid off its skin. வயிற்று வலி முதலியவற்றுக்குப் (கிரகணி, சிலேஷ்மவாதம், சீழ்ப்பிரமேகம்) பயன்படுத்த நல்ல குணம் தரும். 2. தோலைப் போக்கின மிளகுப் பழத்தின் வித்து; pepper rid of its skin. 3. பழத்தின் விதை; seed of a fruit.

*[வெள்ளை + மிளகு]*

**வெள்ளைமுயல்** *veḷḷai-muyal,* பெ.(n.) வெண்முயல்; white rabbit.

*[வெள்ளை + முயல்]*



**வெள்ளைமுரல்** *veḷḷai-mural,* பெ.(n.) செத்தமுரல் (மீன்து.அக.) பார்க்க; see *setta-mural.*

*[வெள்ளை + முரல்]*

**வெள்ளைமுருக்கு** *veḷḷai-murukku,* பெ.(n.) வெள்ளைப் பூவுடைய கலியாண முருங்கை மரம்; a thorny tree bearing white flowers-erythrina indica (albiflora).

*[வெள்ளை + முருக்கு]*

**வெள்ளைமுழி** *veḷḷai-muḻi,* பெ.(n.) வெண்முழி; an eye in which the white part is very large wall eye. it is a popular name for glaucoma (a disease of a eye).

*[வெள்ளை + முழி]*

**வெள்ளைமுள்முருங்கை** *veḷḷai-muḷ-muruṉkai,* பெ.(n.) வெள்ளைப் பூ பூக்கும் கலியான முருங்கை; a thorny tree bearing white flowers eythrina indica (albiflora).

*[வெள்ளை + முள் + முருங்கை]*

**வெள்ளைமுள்வேல்** *veḷḷai-muḷ-vēl,* பெ.(n.) குடைவேல் (இலத்.); buffalo-thorn cutch.

*[வெள்ளை + முள்வேல்]*

**வெள்ளைமுள்ளி**[1] *vellai-mulli,* பெ.(n.) செடி வகை; (L.) lesser yellow nail-dye.

*[வெள்ளை + முள்ளி]*

**வெள்ளைமுள்ளி**[2] *vellai-mulli,* பெ.(n.) கடல்படு சிப்பியுளொருவகை (நெல்லை. மீன.); a sea based oyster a sea shell-fish.

**வெள்ளைமூங்கில்** *vellai-mūṅkil,* பெ.(n.) மூங்கில் வகை; yellow bamboo.

*[வெள்ளை + மூங்கில்]*

**வெள்ளைமூர்த்தி** *vellai-mūrtti,* பெ.(n.) 1. பலதேவர் (சிலப். 5, 171, உரை); bala *dēva.* 2. நின்மலவடிவன்; one whose form is pure or immaculate.

*[வெள்ளை + மூர்த்தி]*

**Skt.** *mūrti* > த. மூர்த்தி.

**வெள்ளைமெய்யாள்** *vellai-meyyāl,* பெ.(n.) வெள்ளைமேனியாள் பார்க்க (சூடா.); see *vellai-mēniyāl.*

*[வெள்ளை + மெய்யாள்]*

**வெள்ளைமெழுகு** *vellai-melugu,* பெ.(n.) சுத்தி செய்த தேன் மெழுகு; purified honey wax.

*[வெள்ளை + மெழுகு]*

**வெள்ளைமேகம்** *vellai-mēgam,* பெ.(n.) வெண்முகில்; white venereal discharge.

*[வெள்ளை + மேகம்]*

**வெள்ளைமை** *vellaimai,* பெ.(n.) அறிவின்மை; ignorance. *"வெள்ளைமை கலந்த ............ புன்சொன்மாற்றம்"* (பெருங். இலாவாண. 19, 21).

**வெள்ளைமைனா** *vellai-mainā,* பெ.(n.) பாப்பாத்தி மைனா; pagoda-thrush (M.M.533).

*[வெள்ளை + மைனா]*

**வெள்ளையகில்** *vellai-yakil,* பெ.(n.) வெள்ளை நிறமான அகிற்கட்டை; white species of eagle wood.

*[வெள்ளை + அகில்]*

**வெள்ளையஞ்சனக்கல்** *vellai-yañcana-k-kal,* பெ.(n.) ; white aatimony which is applied to the conjanctive to ensure acute vision.

*[வெள்ளை + அஞ்சனக்கல்]*

**வெள்ளையடம்பு** *vellai-yadambu,* பெ.(n.) வெண்ணடம்பு; white adambo.

*[வெள்ளை + அடம்பு]*

**வெள்ளையடி-த்தல்** *vellai-y-adi-,* செ.கு.வி. (v.i.) வெள்ளை பூசு-, 1, 2 பார்க்க; see *vellai-pūšu-, 1, 2.*

*[வெள்ளை + அடி-,]*

**வெள்ளையடுக்கரளி** *vellai-yadu-k-karali,* பெ.(n.) அடுக்கலரி; nerium bearing double whorl flowers-nerium odorum.

*[வெள்ளை + அடுக்கு + அரளி]*

**வெள்ளையணு** *vellai-yanu,* பெ.(n.) அரத்தத்தில் விரைவாக நகரக் கூடியதும் நோயை எதிர்க்கும் ஆற்றலைக் கொண்டதுமான வெள்ளை நிற உயிரணு; white blood cell, white corpuscle.

*[வெள்ளை + அணு]*

வெள்ளையத்தி *vel̤l̤ai-yatti,* பெ.(n.) கல்லத்தி; a kind of big tree.

*[வெள்ளை + அத்தி]*

வெள்ளையப்பம் *vel̤l̤ai-yappam,* பெ.(n.) ஒரு வகை உப்புப் பணியாரம் (இ.வ.); a savoury cake made of dough.

*[வெள்ளை + அப்பம்]*

வெள்ளையப்பன் *vel̤l̤ai-yappaṉ,* பெ.(n.) வெள்ளிக்காசு – பணம் (கொச்சை); the silver rupee.

*[வெள்ளை + அப்பன்]*

வெள்ளையம்புலி *vel̤l̤aiyam-puli,* பெ.(n.) முட்டையின் வெண்கரு; white of an egg-albumen.

*[வெள்ளையம் + புலி]*

வெள்ளையம்மான்பச்சரிசி *vel̤l̤aiyammāṉ-paccariši,* பெ.(n.) அம்மான் பச்சரிசி வகை (வின்.); a plant.

வெள்ளையரிங்கை *vel̤l̤ai-yariṅkai,* பெ.(n.) வெள்ளுருவை பார்க்க; see *vel̤l̤uruvai.*

*[வெள்ளை + அரிங்கை]*

வெள்ளையல்லி *vel̤l̤ai-alli,* பெ.(n.) அல்லி; water lily bearing white flowes.

*[வெள்ளை + அல்லி]*

வெள்ளையலரி *vel̤l̤ai-yalari,* பெ.(n.) வெள்ளலரி; nerium odorum-albiflora.

*[வெள்ளை + அலரி]*

வெள்ளையவரை *vel̤l̤ai-yavarai,* பெ.(n.) வெண்மை நிறவகை; dolichos lab lab (tropical) bearing white fruits kitchen garden white lab lab.

*[வெள்ளை + அவரை]*

வெள்ளையவுரி *vel̤l̤ai-yavuri,* பெ.(n.) வெண்ணிறமான அவுரிச்செடி; a white species of indigo plant.

*[வெள்ளை + அவுரி]*

வெள்ளையறிக்கை *vel̤l̤ai-aṟikkai,* பெ.(n.) ஒன்றைக் குறித்த அரசின் கொள்கை நிலையை விளக்கும் அறிக்கை; white paper.

*[வெள்ளை + அறிக்கை]*

வெள்ளையன் *vel̤l̤aiyaṉ,* பெ.(n.) 1. வெண்மை நிறமுள்ளவன்; skinned person, albino. 2. வெள்ளைக்காரன் பார்க்க; see *vel̤l̤ai-k-kāraṉ.* 3. வெள்ளையப்பன் பார்க்க; see *vel̤l̤ai-yappaṉ.*

வெள்ளையாடை *vel̤l̤ai-yāḍai,* பெ.(n.) 1. கைம்பெண் உடுக்கும் வெள்ளைப் புடவை; white cloth worn by widows. 2. வெள்ளைவேட்டி பார்க்க; see *vel̤l̤ai-vētti.*

*[வெள்ளை + ஆடை]*

வெள்ளையாதளை *vel̤l̤ai-yādal̤ai,* பெ.(n.) வெண்ணிற ஆதளை; white castor, castor plant bearing whtie seeds.

*[வெள்ளை + ஆதளை]*

வெள்ளையாமணக்கு *vel̤l̤ai-yāmaṇakku,* பெ.(n.) வெண்ணாமணக்கு; castor, castor plant bearing white seeds.

*[வெள்ளை + ஆமணக்கு]*

வெள்ளையாமிதம் *vel̤l̤ai-yāmitam,* பெ.(n.) வெண்முள்ளிக்கீரை பார்க்க; see *veṉ-mul̤l̤i-k-kīrai.*

வெள்ளையாவரை *veḷḷai-yāvarai,* பெ.(n.) ஒரு வகை யாவரை; a plant.

*[வெள்ளை + யாவரை]*

வெள்ளையாவிரை *veḷḷai-yāvirai,* பெ.(n.) வெள்ளையாவரை பார்க்க; see *veḷḷai-yāvarai.*

*[வெள்ளை + யாவிரை]*

வெள்ளையானை *veḷḷai-yāṉai,* பெ.(n.) 1. வெண்ணிறமுள்ள யானை; white elephant. 2. தேவேந்தனின் ஊர்தியாகிய யானை (அயிராவதம்) (திருவிளை.); indra's elephant. 3. அதிகச் செலவு (புதுமை.); possession which is burdensome owing to the high cost of its maintenance. *'அந்த வெள்ளை யானைக்கு நம்மால் தீனிபோட முடியாது'.*

*[வெள்ளை + யானை]*

வெள்ளையானையூர்தி *veḷḷai-yāṉai-yūrdi,* பெ.(n.) வானவர்க்கரசன்; indra as riding the white elephant airavatam. 2. ஐயனார் (பிங்.); *aiyaṉār.*

*[வெள்ளை + யானை + ஊர்தி]*

வெள்ளையானைவாகனன் *veḷḷai-yāṉai-vāgaṉaṉ,* பெ.(n.) வெள்ளையானையூர்தி (இலக்.அக.) பார்க்க; see *veḷḷai-yāṉai-yūrdi.*

*[வெள்ளை + யானை + வாகனன்]*

**Skt.** *vāhana* > த. வாகனன்.

வெள்ளையானைவேர் *veḷḷai-yāṉai-vēr,* பெ.(n.) இறைச்சி; meat.

*[வெள்ளை + யானை + வேர்]*

வெள்ளையிண்டு[1] *veḷḷai-yiṇḍu,* பெ.(n.) வெள்ளிண்டு பார்க்க; (L) see *veḷḷiṇḍu.*

வெள்ளையிண்டு[2] *veḷḷai-yiṇḍu,* பெ.(n.) கருவேலமரம்; acacia intsia.

வெள்ளையிறால் *veḷḷai-iṟāl,* பெ.(n.) இந்த இறால் ஒரு விரல் அளவுடையதாயிருக்கும் பொழுது கடலிலிருந்த ஆற்றுத் துறையிலும், கழியிலும் புழுந்து அங்கு வளரும். அவ்வாறு வளரும் பொழுது சிறிது பச்சை நிறமாகக் காணப்படும் (செங்கை. மீன.); IRAL fish migrates, when it attains of finger's size, to bark water and natural saltpan. At this stage it looks as slight given colour.

*[வெள்ளை + இறால்]*

வெள்ளையிலை *veḷḷai-yilai,* பெ.(n.) வெள்ளிமடந்தை (இலத்.) பார்க்க; see *veḷḷi-maḍantai.*

*[வெள்ளை + இலை]*

வெள்ளையிற்கூடுதல் *veḷḷaiyiṟ-kūḍudal,* பெ.(n.) கடல்மேற் சென்று மீன் பிடி தொழிற்பட்டார் உணவு கொள்ள முற்படுதல்; taking food by fishermen engaged in fishing.

*[வெள்ளையில் + கூடுதல்]*

வெள்ளையீரல் *veḷḷai-yīral,* பெ.(n.) வெள்ளீரல் பார்க்க; see *veḷḷīral.*

*[வெள்ளை + ஈரல்]*

வெள்ளையீருவல்லி *veḷḷai-īruvalli,* பெ.(n.) கூட்டரளிமரம் பார்க்க; see *kūṭṭaraḷi-maram.*

*[வெள்ளை + ஈருவல்லி]*

வெள்ளையீருள்ளி *ve|lai-yīru|li*, பெ.(n.) வெண்ணிறமான வெங்காயம்; white coloured onion-allium cepa.

*[வெள்ளை + ஈருள்ளி]*

வெள்ளையுஞ்சள்ளையும் *ve|laiyu-ñ-ca|laiyum*, பெ.(n.) வெண்மையானவுடை; white dress or clothes. *'அவன் வெள்ளையுஞ்சள்ளையுமாய்ப் போகிறான்' (இணைமொழி).*

வெள்ளையுப்பி *ve|lai-uppi*, பெ.(n.) கருப்புக்கெதிரான உப்பிலாங் கொடி; ordinary stinking swallow wort-pentatropis micrphylla.

*[வெள்ளை + உப்பி]*

வெள்ளையுருவாள் *ve|lai-yuruvā|*, பெ.(n.) வெள்ளைமேனியாள் பார்க்க (நாமதீப. 56); see *ve|lai-mēṉiyā|.*

*[வெள்ளை + உருவாள்]*

வெள்ளையுள்முள்ளு *ve|laiyu|-mu|lu*, பெ.(n.) குடைவேல்; acacia plomifrous.

*[வெள்ளையுள் + முள்ளு]*

வெள்ளையூடகம் *ve|lai-vūḍagam*, பெ.(n.) வெண்ணிறத்து ஊடகமெனுங் கடல் மீன் (முகவை. மீன.); a white sea fish called UDAGAM.

*[வெள்ளை + ஊடகம்]*

வெள்ளையூதம் *ve|lai-yūdam*, பெ.(n.) வெண்கடுகு; white mustard.

வெள்ளையூமத்தை *ve|lai-yūmattai*, பெ.(n.)
1. வெள்ளூமத்தை பார்க்க; see *ve|lūmattai.*
2. அடுக்கூமத்தை; downy datura.

*[வெள்ளை + ஊமத்தை]*

வெள்ளையெருக்கு *ve|lai-yerukku*, பெ.(n.) வெண்மைநிற எருக்கஞ் செடிவகை; mader bearing white flowers-calotrop is gigantea-albiflora.

*[வெள்ளை + எருக்கு]*

வெள்ளையெடு-த்தல் *ve|lai-yeḍu-*, செ.கு.வி. (v.i.) 1. பாடையுடன் மேற்கட்டி யெடுத்தல் (இ.வ.); to carry the pall. 2. அழுக்காடைகளை வெளுத்தற்கு எடுத்துப் போதல்; to take clothes to the wast.

*[வெள்ளை + எடு-]*

வெள்ளையெழுத்து *ve|lai-yeḻuttu*, பெ.(n.) வெள்ளெழுத்து பார்க்க; see *ve|leḻuttu.*

*[வெள்ளை + எழுத்து]*

வெள்ளையெள்ளு *ve|lai-ye|lu*, பெ.(n.) 1. கழுவி தூய்மைசெய்து மேல் தோலைப் போக்கிய எள்ளு; segame washed and cleaned of its skin. 2. எள்ளு வகையில் ஒன்று; white variety of sesame-sesamum orientale.

*[வெள்ளை + எள்ளு]*

வெள்ளையெறி-தல் *ve|lai-yeṟi-*, செ.கு.வி. (v.i.) 1. வெண்மை பெறச் செய்தல் (மலைபடு. 441, உரை); to whiten or brighten. 2. வெள்ளை வீசு-, பார்க்க; see *ve|lai-vīśu-.*

*[வெள்ளை + எறி-,]*

வெள்ளையொட்டடை *ve|lai-yoṭṭaḍai*, பெ.(n.) நெல்வகை (இ.வ.); a kind of paddy.

*[வெள்ளை + ஒட்டடை]*

**வெள்ளையொழுக்கு** *veḷḷai-yoḻukku,* பெ.(n.) மேக நோய்; a venereal disease in which there is frequent discharge of semen - a transparent mucous discharge from the urethra.

*[வெள்ளை + ஒழுக்கு]*

**வெள்ளையோக்காளம்** *veḷḷai-yōkkāḷam,* பெ.(n.) வெறுவாய் குமட்டல்; nausea.

*[வெள்ளை + ஒக்காளம்]*

**வெள்ளையோடு** *veḷḷai-ōḍu,* பெ.(n.) மேற்கூரை அமைக்கப் பயன்படும் ஒட்டு வகை, மங்களூர் ஒடு (தெ.ஆ.வழ.); a kind of tiles used for roofing, mangalore tiles.

*[வெள்ளை + ஒடு]*

**வெள்ளையோன்** *veḷḷai-yōṉ,* பெ.(n.) வெள்ளைமூர்த்தி 1 பார்க்க (தக்கயாகப். 368); see *veḷḷai-mūrtti.*

**வெள்ளைரசிதம்** *veḷḷai-rašidam,* பெ.(n.) வைப்பு நஞ்சுகளில் ஒன்று; one of the prepared arsenic. 2. வெள்ளி; silver.

**வெள்ளைராசிக்கல்** *veḷḷai-rāši-k-kal,* பெ.(n.) நன்றாகச் சுடப்படாத செங்கல்; half-burnt brick.

*[வெள்ளை + ராசிக்கல்]*

**Skt.** *Rāši* > த. இராசி → ராசி.

**வெள்ளைரோசா** *veḷḷai-rōšā,* பெ.(n.) மலர்களில் ஒருவகை – முளரி; indian white rose-rosa alba - a cooling medicine in fever.

*[வெள்ளை + ரோசா]*

**Lat.** Rosa > த. உரோசா → ரோசா.

**வெள்ளைவசநாபி** *veḷḷai-vašanābi,* பெ.(n.) ஒரு வகை நச்சு மூலிகை; a white aconite root.

**வெள்ளைவட்டன்** *veḷḷai-vaṭṭaṉ,* பெ.(n.) வேளாளன் (நாமதீப. 152); *vēḷāḷa.*

*[வெள்ளை + வட்டன்]*

**வெள்ளைவண்ணாத்தி** *veḷḷai-vaṇṇātti,* பெ.(n.) வண்ணாத்திப் பூச்சிவகை; a gryish moth.

*[வெள்ளை + வண்ணாத்தி]*



**வெள்ளைவதனத்தி** *veḷḷai-vadaṉatti,* பெ.(n.) ஒரு மூலி; a plant.

**வெள்ளைவர்க்கம்** *veḷḷai-varkkam,* பெ.(n.) வெள்ளெருக்கம் பால்; milk taken from madar-calotropis bearing white flowers.

*[வெள்ளை + **Skt.** varga > த. வர்க்கம்]*

**வெள்ளைவரகு** *veḷḷai-varagu,* பெ.(n.) வரகுவகை; a kind of white millet. *"வெள்ளை வரகுங் கொள்ளும் வித்தும்"* *(புறநா. 392).*

*[வெள்ளை + வரகு]*



வெள்ளை அலரி



வெள்ளை குன்றிமணி



வெள்ளை வெங்காயம்



வெள்ளை வெட்சி

**வெள்ளைவவ்வால்** *ve!!ai-vavvāl,* பெ.(n.) சாம்பல் நிறங் கலந்த செந்நீல வண்ணமும் ஓரடி வளர்ச்சியுமுள்ள கடல் மீன்வகை; a sea-fish, greyish neutral tint with purplish reflection, attaining 1ft. in length.

*[வெள்ளை + வவ்வால்]*

**வெள்ளைவள்ளைக்கிழங்கு** *ve!!ai-va!!ai-k-ki!aṅku,* பெ.(n.) வெண்ணிறமான வள்ளி; white sweet potato-a creeper - Ipomoea digitata alias Ipomoea batatas.

*[வெள்ளை + வள்ளை + கிழங்கு]*

**வெள்ளைவாடாமல்லிகை** *ve!!ai-vāḍā-mallikai,* பெ.(n.) பால் வாடாமல்லிகை; a white species of amaranth-gomphrena grobosa.

*[வெள்ளை + வாடா + மல்லிகை]*

**வெள்ளைவாயன்** *ve!!ai-vāyaṉ,* பெ.(n.) கமுக்கத்தை மறைக்கமுடியாது வெளியிடுபவன்; babbler, one who cannot keep secrets.

*[வெள்ளை + வாயன்]*

**வெள்ளைவாரணன்** *ve!!ai-vāraṇaṉ,* பெ.(n.) இந்திரன் (திவா.); indra, as riding the white elephant *airāvatam.*

*[வெள்ளை + வாரணன்]*

**வெள்ளைவாள்** *ve!!ai-vā!,* பெ.(n.) பரம உணர்வு நிலை; a kind of meditation on the supreme spirit. *"வெள்ளைவாள் கொண்டு வீரனை வாழ்த்துவதே" (திருநூற். 19).*

*[வெள்ளை + வாள்]*

**வெள்ளளைவிரலி** *ve!!ai-virali,* பெ.(n.) விலாரி, செடிவகை; a plant.

*[வெள்ளை + விரலி]*

**வெள்ளைவிராலி** *ve!!ai-virāli,* பெ.(n.) விலாரி–செடிவகை; a plant.

*[வெள்ளை + விராலி]*

**வெள்ளைவிரி–த்தல்** *ve!!ai-viri-,* செ.கு.வி. (v.i.) பெரியோரை வரவேற்கத் தரையில் வெள்ளாடை விரித்தல்; to spread a white cloth on the floor for guests to walk on in a reception.

*[வெள்ளை + விரி–,]*

**வெள்ளைவிருத்தம்** *ve!!ai-viruttam,* பெ.(n.) வெளிமண்டிலம் (விருத்தம்) (வீரசோ. யாப். 15); a kind of stanza.

*[வெள்ளை + விருத்தம்]*

**வெள்ளைவிழி** *ve!!ai-vi!i,* பெ.(n.) கண் விழியில் வெண்மையுள்ள பாகம்; white of the eye.

*[வெள்ளை + விழி]*

**வெள்ளைவீசு–தல்** *ve!!ai-vīsu-,* செ.கு.வி. (v.i.) 1. வெள்ளாடை அல்லது வெண் கொடியை அசைத்து அடையாளங் காட்டுதல் (வின்.); to make signals with a white flagor cloth. 2. மகிழ்ச்சிக்கான அடையாளமாக ஆடையை மேலே வீசுதல்; to wave one's cloth for joy.

*[வெள்ளை + வீசு–,]*

**வெள்ளைவெங்காயம்** *ve!!ai-veṅkāyam,* பெ.(n.) வெள்ளைவெண்காயம் பார்க்க; see *ve!!ai-veṇ-kāyam.*

*[வெள்ளை + வெங்காயம்]*

**வெள்ளைவெட்சி** *veḷḷai-veṭci,* பெ.(n.) செடிவகை (இலத்.); white flowered pink jungle geranium.

*[வெள்ளை + வெட்சி]*



**வெள்ளைவெண்காயம்** *veḷḷai-veṇ-kāyam,* பெ.(n.) 1. வெண்ணிறமான பூடுவகை; white onion. 2. வெள்ளைப்பூண்டு பார்க்க; see *veḷḷai-p-pūṇḍu.*

*[வெள்ளை + வெண்காயம்]*

**வெள்ளைவெளு-த்தல்** *veḷḷai-veḷu-,* செ.கு.வி.(v.i.) ஆடையை யழுக்ககற்றி வெள்ளையாக்குதல்; to wash clothes.

*[வெள்ளை + வெளு-,]*

**வெள்ளைவெளேர்-என்று** *veḷḷai-veḷēr-eṉṟu,* வி.எ.(adv.) மிகவும் வெண்மையாக; brilliantly white. *'வெள்ளை வெளேரென்று இருந்த வேட்டி எப்படி ஆகிவிட்டது!'*

*[வெள்ளை + வெளேர் + என்று]*

**வெள்ளைவெளேரெனல்** *veḷḷai-veḷēreṉal,* பெ.(n.) மிக வெண்மையாதற்குறிப்பு; being exceedingly white.

*[வெள்ளை + வெளேர் + எனல்]*

**வெள்ளைவெற்றிலை** *veḷḷai-veṟṟilai,* பெ.(n.) வெண்ணிறமான வெற்றிலை வகை; betel leaf of a whitish kind.

*[வெள்ளை + வெற்றிலை]*

**வெள்ளைவேட்டி** *veḷḷai-vēṭṭi,* பெ.(n.) 1. இல்லறத்தான் உடுக்கும் வெண்ணிற ஆடை; white cloth, as worn by house holder. 2. வெள்ளை 16 பார்க்க; see *veḷḷai 16.*

*[வெள்ளை + வேட்டி]*

**வெள்ளைவேட்டிக்காரன்** *veḷḷai-vēṭṭi-k-kāraṉ,* பெ.(n.) வெள்ளைவேட்டிப்பண்டாரம் பார்க்க (இ.வ.); see *veḷḷai-vēṭṭi-p-paṇḍāram.*

*[வெள்ளை + வேட்டிக்காரன்]*

**வெள்ளைவேட்டிப்பண்டாரம்** *veḷḷai-vēṭṭi-p-paṇḍāram,* பெ.(n.) மாசுமறுவற்ற ஆடையணிந்து சோம்பேறியாய்த் திரிபவன் (நெல்லை.); idler who is scrupulouly neat in his dress.

*[வெள்ளை + வேட்டி + பண்டாரம்]*

**வெள்ளைவை-த்தல்** *veḷḷai-vai-,* செ.கு.வி. (v.i.) வீட்டுக்கு மெருகு சுண்ணாம்பு பூசுதல்; to plaster, as the walls of a new house.

*[வெள்ளை + வை-,]*

**வெள்ளைவௌவால்** *veḷḷai-vauvāl,* பெ.(n.) வெள்ளை வாவல் (செங்கை. மீன.) பார்க்க; see *veḷḷai-vāval.*

*[வெள்ளை + வௌவால்]*

**வெள்ளொக்கலர்** *veḷḷokkalar,* பெ.(n.) 1. குற்றமற்ற மரபினர் (நன். 408, உரை); persons of spotless lineage. 2. முட்டில் செல்வத்துக் கிளையினை யுடையார் (நன்.

407, மயிலை.); persons whose relations are exceedingly wealthy. 3. மாசற்ற சுற்றத்தினையுடையார் (நன். 407, மயிலை); persons whose relations are spotless in character.

**வெள்ளொத்தாழிசை** *ve!!o-t-tā!isai,* பெ.(n.) வெண்டாழிசை (காரிகை, செய். 7, உரை); a kind of metre.

**வெள்ளொலியல்** *ve!!oliyal,* பெ.(n.) சேலைக் குஞ்சம் (யாழ்.அக.); a flywhisk of cloth.

**வெள்ளொளி**[1] *ve!!oli,* பெ.(n.) சுடரொலி; lime light.

*[வெள் + ஒளி]*

**வெள்ளொளி**[2] *ve!!oli,* பெ.(n.) வெள்ளெழுத்து; long sight.

*[வெள் + ஒளி]*

**வெள்ளொளிப்பருவம்** *ve!!oli-p-paruvam,* பெ.(n.) வெள்ளெழுத்துண்டாம் அகவை (ஈச்சுர நிச்சயம். 139); age when long sight commences.

*[வெள்ளொளி + பருவம்]*

**வெள்ளோக்காளம்** *ve!!ō-k-kā!am,* பெ.(n.) உள்ளிருந்து உமிழ் நீரை மட்டும் வெளியேற்றுங் குமட்டல் (பாலவா. 1018); vomitting when saliva only is emiited.

**வெள்ளோங்காளம்** *ve!!ō-ṅ-kā!am,* பெ.(n.) வெள்ளோக்காளம் பார்க்க (யாழ்.அக.); see *ve!!ō-k-kō!am.*

**வெள்ளோசை** *ve!!ōsi,* பெ.(n.) 1. பாடும் போது தோன்றும் வெடித்த குரலாகிய இசைக்குற்றம்; discordant note. *"இவற்றின் த்வனியில் வெள்ளோசையாய்க் கழியுண்பதில்லை" (ஈடு. 5, 9, 6).* 2. பெருங் குரல் (திருவாலவா. 57, 26, கீழ்க்குறிப்பு); cracked voice. 3. வெண்பாவுக்குரிய ஓசை (கலித். 52, உரை); rhythm peculiar to *venpā.*

*[வெள் + ஓசை]*

**வெள்ளோட்டம்** *ve!!ōttam,* பெ.(n.) 1. நோட்டம் பார்க்குமாறு புதுத்தேர் முதலியவற்றை முதன்முதலாக நடத்துகை; dragging a new temple-car for the first time in trial, trial run. 2. ஒன்றனை பயன்படுத்துவதற்கு முன் செய்து பார்க்கும் சோதனை (இ.வ.); preliminary test. 3. ஒருவன் நோக்கத்தை அறிய முன்னாற் செய்யும் செயல்; feeler.

*[வெள் + ஓட்டம்]*

**வெள்ளோடன்** *ve!!ōdan,* பெ.(n.) ஓட்டில் ஒட்டாது கழன்றிருக்கும் தேங்காயுள்ளீடு (யாழ்.அக.); copra kernel adhering loosely to the shell.

*[வெள் + ஓடன்]*

**வெள்ளோடு** *ve!!ōdu,* பெ.(n.) 1. வெள்ளை மேலோடு; white shell. 2. வெண்மையுடன் மஞ்சட் பச்சை நிறமும் இருபது விரல வளர்ச்சியுமுள்ள கடல் மீன் வகை; sea-fish silvery yellowish green attaining 20 in. in length. 3. வெண்கலம் பார்க்க; see *ven-kalam.* *'வெள்ளோட்டுப் பாத்திரம்'.*

*[வெள் + ஓடு]*

**வெள்ளோத்திரம்** *ve!!ōttiram,* பெ.(n.) வெள்ளைப் பூவுள்ள மரவகை; a tree with white flowers. *"மால் வெள்ளோத்திரத்து ...... வாலிணர்" (ஐங்குறு. 301).*

*[வெள் + லோத்திரம்]*

**Skt.** *Lōdhra* > த. உலோத்திரம் → லோத்திரம்.

**வெள்ளோந்தி** *veḷḷōnti,* பெ.(n.) ஓந்தி வகை (வின்.); a white species of chameleon.

**வெள்ளோலை** *veḷḷōlai,* பெ.(n.) 1. எழுதப் படாத ஓலை; blank ōlai. *"வெள்ளோலை கண்பார்க்கக் கையாலெழுதானை" (தனிப்பா. i, 109, 49).* 2. முத்திரையிடப் பெறாத ஓலை; unstamped *ōla.* *'வெள்ளோலை யாதாரம்'.*

*[வெள்ளை + ஓலை]*

**வெளம்** *veḷam,* பெ.(n.) சினம், கடுப்பு; angry, impatience, exasperation. *'வெளம் வந்தா அவ்வளவுதான். போட்டு ஒடைச்சிட்டுப் போயிடுவான்'.*

*[வலம் → வெலம் → வெளம்]*

**வெளி**[1] *veḷi,* பெ.(n.) 1. புறம்; outside. *'வெளியே போ'.* 2. நிலப்பரப்பு; open space, plain. 3. விண்வெளி; space, as an element, sky. *"வெளியிடை யொன்றாய் விளைந்தாய் போற்றி" (திருவாச. 4, 141).* 4. இடைவெளி; intervening space, room, gap. *"வானகம் விழுங்கினர் விண்ணவர் வெளியின் றென்னவே" (கம்பரா. திருவவதாரம். 85).* 5. வெளிப்படை; openness, plainness. 6. விளம்பரம்; publicity. *'கமுக்கங்கள் வெளியாய் விட்டன'.* 7. வெளித்தோற்றம் பார்க்க; see *veḷi-t-tōṟṟam.* 8. வழிவகை; means, way. *"அன்னவை தீரும் வெளி பெற்றோம்" (கம்பரா. மகேந். 3).*

*[விள் → வெள் → வெளி]*

**வெளி**[2]**-த்தல்** *veḷi-,* செ.கு.வி.(v.i.) 1. வெளிப் படையாதல்; to be open or public. *"வெளித்து வைகுவ தரிதெனவவருருமேவி ஒளித்து வாழ்கின்ற தருமமன்னாள்" (கம்பரா. ஊர்தேடு. 136).* 2. உத்தி முதலியன வெளியாதல் (சப்.); to come to light, as dishonest tricks.

*[விள் → வெள் → வெளி → வெளி-,]*

**வெளி**[3] *veḷi,* பெ.(n.) 1. தூய்மை; purity. *"உளம்வெளி செய்திடும்" (சேதுபு. அசுவ. 76).* 2. வெண்பா; *veṇpā* metre.

*[விள் → வெள் → வெளி]*

**வெளி**[4]**-த்தல்** *veḷi-,* செ.கு.வி.(v.i.) 1. விடிதல்; to break, as the day. 2. தெளிதல்; to clear as the sight after dimness, or the sky after cloudiness, to brighten, as the sun or moon after being obscured, to become clear, as the meaning of an obscure verse. 3. வெண்ணிறம் கொள்ளுதல் (கம்பரா. ஊர்தேடு. 136); to become white. 4. பயனில தாதல் (இலக். அக.); to become useless. 5. வெறிதாதல் (யாழ்.அக.); to be vacant.

*[விள் → வெள் → வெளி-,]*

**வெளி**[5] *veḷi,* பெ.(n.) 1. மீன்வகை; a fish. 2. பெண்; girl.

*[வெள் → வெளி]*

**வெளிக்கட்டு** *veḷi-k-kaṭṭu,* பெ.(n.) வீட்டின் முன்பாகம்; front portion of a building.

*[வெளி + கட்டு]*

**வெளிக்கண்** *veḷi-k-kaṇ,* பெ.(n.) வெளிப் புறக்கண்; external eye.

*[வெளி + கண்]*

**வெளிக்கரு** *veḷi-k-karu,* பெ.(n.) 1. பூப்புச் சேலை; menustral cloth. 2. வணிகக்குலப் பிண்டக்கரு; foetus of merchant class.

*[வெளி + கரு]*

**வெளிக்கவசம்** *veḷi-k-kavašam,* பெ.(n.) வெளிப்புறக்குப்பாயம்; external coat.

*[வெளி + கவசம்]*

**வெளிக்காட்சி** *veḷi-k-kāṭci,* பெ.(n.) வெளித் தோற்றம் பார்க்க (வின்.); see *veḷi-t-tōṟṟam.*

*[வெளி + காட்சி]*

**வெளிக்காது** *veḷi-k-kādu,* பெ.(n.) வெளிப்புறக்காது; external ear.

*[வெளி + காது]*

**வெளிக்கால்** *veḷi-k-kāl,* பெ.(n.) நீர் வெளியேறிச்செல்லும் வாய்க்கால்; outlet, drainage or surplus channel.

*[வெளி + கால்]*

**வெளிக்கிடு-தல்** *veḷi-k-kiḍu-,* செ.கு.வி. (v.i.) வாய்ப்பகட்டாகச் சொல்லுதல்; to speak formally or glibly.

*[வெளிக்கு + இடுதல்]*

**வெளிக்குப்பேசு-தல்** *veḷikku-p-pēšu-,* செ.குன்றாவி.(v.t.) மனத்திற் பகைமை யிருக்கவும் பார்வைக்கு அது தோன்றாதவாறு பேசுதல்; to speak smoothly hiding one's hatred.

*[வெளிக்கு + பேசு-,]*

**வெளிக்குப்போ-தல்** *veḷikku-p-pō-,* செ.கு.வி. (v.i.) மலங்கழித்தல் (கொ.வ.); to ease one self.

*[வெளிக்கு + போ-,]*

**வெளிக்குவா-தல் (வெளிக்குவருதல்)** *veḷikku-vā-,* செ.கு.வி.(v.i.) 1. வெளிப் படுதல்; to become public. *'அவன் மறைத்து வைத்தது வெளிக்கு வந்து விட்டது'.* 2. மல வெளிப்பாட்டுணர்ச்சி உண்டாதல்; to feel urged to stool.

*[வெளிக்கு + வா-,]*

**வெளிக்கொண்டுவ(ரு)ா-தல்** *veḷi-k-koṇḍu-v(ru)ā-,* செ.கு.வி.(v.i.) வெளிப் படுத்துதல், வெளிக்கொணர்தல்; bring out (the abilities, talent, etc.). *'குழந்தையின் முழுத் திறமையையும் வெளிக்கொண்டு வரும் பயிற்சி இது'.*

*[வெளிக்கு + கொண்டுவரு-தல்]*

**வெளிக்கொணர்-தல்** *veḷi-k-koṇar-,* செ.கு.வி.(v.i.) தெரியச் செய்தல், வெளிப்படுத்துதல்; bring out (what is hidden), draw out. *'கறுப்புப் பணத்தை வெளிக்கொணர்வதற்கான எல்லா நடவடிக்கைகளும் மேற்கொள்ளப்படும்'.*

*[வெளிக்கு + கொணர்-தல்]*

**வெளிக்கோட்டுருவம்** *veḷi-k-kōṭṭuruvam,* பெ.(n.) (ஒன்றின் வடிவம்) வெளிக் கோடுகளால் மட்டும் புலப்படுகிற தோற்றம்; contour, silhouette. *'கதிரவன் மறைவின் போது கோயில் கோபுரம் வெளிக் கோட்டுருவமாகத் தெரிந்தது'.*

*[வெளிக்கோட்டு + உருவம்]*

**வெளிக்கோணம்** *veḷi-k-kōṇam,* பெ.(n.) சுவர் கட்டும்போது கொத்து வேலைக்காரர் முதலில் அதன் வெளிக் கோணங்களை ஆறு

அல்லது ஏழு வரிசைகள் வரை அமைத்துக் கொண்டு அவற்றை மிகத் திருத்தமாகச் சரி செய்து கொண்டு பின்னர் இடையிலுள்ள நேரான பகுதியைச் செங்கற்களால் நிரப்புதலாகும். (பொ.வழ.); initial anything, selling of angles with six or seven layer of bricks for walls before actually filling the straight line with bricks.

*[வெளி + கோணம்]*

வெளிக்கோபம் *veḷi-k-kōbam,* பெ.(n.) மேலெழக் காட்டுஞ் சினம் (வின்.); out ward, pretended displeasure.

*[வெளி + கோபம்]*

**Skt.** *Kōpa* > த. கோபம்.

வெளிக்கோயில் *veḷi-k-kōyil,* பெ.(n.) பெரிய கோயிலைச் சார்ந்ததும் அதற்குப் புறம்பிலேயுள்ளதுமான கோயில் (பொ.வழ.); outer spaced temple attached to a big temple.

*[வெளி + கோயில்]*

வெளிக்கோள் *veḷi-k-kōḷ,* பெ.(n.) வெளியாக்குகை (நாமதீப. 733); revealing.

*[வெளி + கோள்]*

வெளிகண்டசொல் *veḷi-kaṇḍa-šol,* பெ.(n.) வெளிப்படையான சொல் (வின்.); plain word.

*[வெளிகண்ட + சொல்]*

வெளிகாண்(ணு)-தல் *veḷi-kāṇ(ṇu)-,* செ.கு.வி. (v.i.) மழை பெய்தபின் வானம் முகிலின்றித் தோன்றுதல் (இ.வ.); to clear, as the sky after rain.

*[வெளி + காண்(ணு)-,]*

வெளிகொடுவெளியே *veḷi-koḍu-veḷiyē,* வி.எ. (adv.) வெளிப்படையாய்; publicity. *"வெளிகொடு வெளியே தேவர்களுக்கு அம்ருதத்தைக் கொடுத்துவிட்ட மஹாபாஹு" (ஈடு. 1, 3, 1).*

*[வெளிகொடு + வெளியே]*

வெளிகொண்டமூலி *veḷi-koṇḍa-mūli,* பெ.(n.) வெள்ளூமத்தை; dhatura bearing white flowers-datura alba.

*[வெளிகொண்ட + மூலி]*

வெளிகொள்(ளு)-தல் *veḷi-koḷ(ḷu)-,* பெ.(n.) வெளிச்சைக்கெண்டை பார்க்க; see *veḷiccai-k-keṇḍai.*

*[வெளி + கொள்]*

வெளிச்சங்காட்டு[1]-தல் *veḷiccaṅ-kāṭṭu-,* செ.கு.வி.(v.i.) 1. வழி முதலியன தெரிய விளக்கு முதலியவற்றால் ஒளி காண்பித்தல்; to furnish light, to brandish a torch in order to light one's path. 2. ஒளியாற் கப்பல் முதலியவற்றுக்கு அடையாளம் தெரிவித்தல்; to show a light as a signal at sea. 3. ஒளி செய்தல்; to shine.

*[வெளிச்சம் + காட்டு-,]*

வெளிச்சங்காட்டு[2]-தல் *veḷiccaṅ-kāṭṭu,* செ.கு.வி.(v.i.) 1. தோன்றுதல் (வின்.); to appear. 2. பகட்டுப் பேச்சால் மழுப்புதல் (இ.வ.); to put one off with empty words. 3. வெளிக்குப் பகட்டாகத் தோன்றுதல்; to be showy, gandy in dress.

*[வெளிச்சம் + காட்டு]*

வெளிச்சங்காணுதல் *veḷicca-ṅ-kāṇutal,* பெ.(n.) 1. விடியற்காலமாகை; day break.

2. தெளிவாகை (இ.வ.); becoming clear.

*[வெளிச்சம் + காணுதல்]*

வெளிச்சம்¹ *veliccam,* பெ.(n.) 1. ஒளி; light. 2. விளக்கு; lamp. *'அந்த அறைக்கு ஒரு வெளிச்சங் கொண்டுவா'.* 3. தெளிவு (வின்.); clearness.

வெளிச்சம்² *veliccam,* பெ.(n.) 1. வெளிப் படை; publicity. *"வீரமெல்லா மின்றைக்கு வெளிச்சமாக" (இராமநா. உயுத். 28).* 2. பகட்டு; show.

வெளிச்சம்போட்டுக்காட்டு-தல் *veliccam-pōṭṭu-k-kāṭṭu-,* செ.குன்றாவி. (v.t.) விளம்பரப்படுத்துதல்; make public. *'இந்த வாரப் பத்திரிகை அவரைப் பற்றிய உண்மைகளை வெளிச்சம் போட்டுக் காட்டிவிட்டது'.*

*[வெளிச்சம் + போட்டுக்காட்டு-,]*

வெளிச்சம்போடு¹-தல் *veliccam-pōḍu-,* செ.கு.வி.(v.i.) 1. வணிகப் பொருள் ஒளிபடத் தோன்றச் செய்தல் (வின்.); to make a display, to make things, appear in a favourable light. 2. விளக்கேற்றுதல்; to light, as lamp to switch on, as electric light.

*[வெளிச்சம் + போடு-,]*

வெளிச்சம்போடு²-தல் *veliccam-pōḍu-,* செ.கு.வி.(v.i.) உள்ளதை மறைத்துப் பொய்த் தோற்றங்காட்டுதல் (வின்.); to make false pretensions.

*[வெளிச்சம் + போடு-,]*

வெளிச்சமா-தல் *veliccam-ā-,* செ.கு.வி. (v.i.) 1. விடிதல்; to dawn. 2. விளங்குதல்; to come to light.

*[வெளிச்சம் + ஆதல் → வெளிச்சமா-தல்]*

வெளிச்சவீடு *velicca-vīḍu,* பெ.(n.) கலங்கரை விளக்கம்; lighthouse.

*[வெளிச்சம் + வீடு]*



வெளிச்சாடை *veli-c-cāḍai,* பெ.(n.) 1. வெளிப்பகட்டு (வின்.); outward show, mere profession. 2. வெளித்தோற்றம், 1 பார்க்க; see *veli-t-tōṟṟam 1.*

*[வெளி + சாடை]*

வெளிச்சாயல் *veli-c-cāyal,* பெ.(n.) வெளித்தோற்றம், 1 பார்க்க (வின்.); see *veli-t-tōṟṟam 1.*

*[வெளி + சாயல்]*

வெளிச்சி¹ *velicci,* பெ.(n.) 1. காதுநோய் வகை; abscess in the external ear. 2. விளாம்பிசின் (மூ.அ.); gum of the wood-apple tree.

வெளிச்சி² *velicci,* பெ.(n.) 1. ஒளி மரம் (நாஞ்.); a tree said to shine at night. 2. மரவகை (இலத்.); small obovate oblong cuspidate leaved cornel. 3. மீன்வகை; a kind of fish. shell.

வெளிச்சிப்பிசின் *veḷicci-p-pišiṉ,* பெ.(n.) விளாம் பிசின்; gum of wood-apple tree-gum of feronia elephantum.

*[வெளிச்சி + பிசின்]*

வெளிச்சியெண்ணெய் *veḷicci-yeṇṇey,* பெ.(n.) விளவ எண்ணெய் ; oil from *veḷicci.*

*[வெளிச்சி + எண்ணெய்]*

வெளிச்சிறப்பு[1] *veḷi-c-ciṟappu,* பெ.(n.) வெளிப்பகட்டாகச் செய்யுங் கோலம்; adornment of the outside, out ward decoration.

*[வெளி + சிறப்பு]*

வெளிச்சிறப்பு[2] *veḷi-c-ciṟappu,* பெ.(n.) அறிவுத் தெளிவு; clearness of wisdom. *"பகவத் பிரசாதத்தால் வந்த வெளிச்சிறப்பாலே" (ஈடு. 3, 4, 2).*

*[வெளி + சிறப்பு]*

வெளிச்செண்ணெய் *veḷi-c-ceṇṇey,* பெ.(n.) தேங்காயெண்ணெய் (நாஞ்.); coconut oil.

*[வெளி + எண்ணெய் → வெளிச்செண்ணெய்]*

வெளிச்செலவு *veḷi-c-celavu,* பெ.(n.) குடும்பத்திற்கன்றிப் புறம்பாகச் செய்யப்படும் பொருட் செலவு (கொ.வ.); expenses other than the ordinary house hold expenses.

*[வெளி + செலவு]*

வெளிச்சை *veḷiccai,* பெ.(n.) வெளிச்சைக் கெண்டை பார்க்க; see *veḷiccai-k-keṇḍai.* *"வெளிச்சை மீறும்" (அழகர்கல. 86).*

*[வெளி → வெளிச்சை]*

வெளிச்சைக்கெண்டை *veḷiccai-k-keṇḍai,* பெ.(n.) 1. வெண்ணிறமும் அறுவிரல வளர்ச்சியுமுள்ள கெண்டைமீன்வகை; a kind of carp, silvery, attaining 6 in. in length chela argen tea. 2. வெண்மை நிறமுடையதும் ஏறக்குறைய ஆறுவிரலம் வளர்வதுமான கெண்டைமீன் வகை; a kind of carp, silvery, attaining at lease 6 in. in length chela culpeoides.

*[வெளிச்சை + கெண்டை]*

வெளிச்சைப்பிசின் *veḷiccai-p-pišiṉ,* பெ.(n.) முருங்கை அல்லது நறுவிலிப் பிசின்; gum of moringa or naruvili.

*[வெளிச்சை + பிசின்]*

வெளிசங்கம் *veḷi-šaṅgam,* பெ.(n.) வெளியரங்கம் பார்க்க (வின்.); see *veḷiyaraṅgam.*

*[வெளி + சங்கம்]*

**Skt.** *saṅgha* > த. சங்கம்.

வெளிசம் *veḷišam,* பெ.(n.) தூண்டில் (நாமதீப. 450); fish-hook.

*[வெளி → வெளிசம்]*

வெளிசுரம் *veḷi-šuram,* பெ.(n.) உடலில் பரவும் ஒரு வகை காய்ச்சல்; a kind of fever that is felt out side.

*[வெளி + சுரம்]*

வெளித்தட்டு *veḷi-t-taṭṭu,* பெ.(n.) பொறுப்பின்றி செயல் நடத்துகை (யாழ்.அக.); irresponsible action.

*[வெளி + தட்டு]*

வெ்ளித்தாமரை *veḷi-t-tāmarai,* பெ.(n.) வா (ஆகாய)த் தாமரை; sky lotus.

*[வெளி + தாமரை]*

வெளித்துகம் *veḷi-t-tugam,* பெ.(n.) முருக்க மரம்; a tree-butea frondosa.

வெளித்தோல் *veḷi-t-tōl,* பெ.(n.) மேல்தோள்; epidermis.

*[வெளி + தோல்]*

வெளித்தோற்றம் *veḷi-t-tōṟṟam,* பெ.(n.) 1. மேற்பார்வைக்குக் காணும் காட்டு; out ward appearance. 2. உருவெளித் தோற்றம் (வின்.); hallucination, vision. 3. விளைச்சல் (யாழ்.அக.); birth, growth, evolution. 4. காட்சி; being manifest or perceptible to the senses.

*[வெளி + தோற்றம்]*

வெளிதிற[1]–த்தல் *veḷi-tiṟa-,* செ.குன்றாவி. (v.t.) 1. வெளியிடுதல் (யாழ்.அக.); to let out express. 2. வெளிப்படையாதல் (வின்.); to be frank. *'வெளி திறந்து சொன்னான்'.*

*[வெளி + திற–,]*

வெளிதிற[2]–த்தல் *veḷi-tiṟa-,* செ.கு.வி.(v.i.) வெளிர்த்துக் காட்டு–, 1 பார்க்க; see *veḷirttu-k-kāṭṭu-, 1.*

*[வெளி + திற–,]*

வெளிது *veḷitu,* பெ.(n.) 1. வெண்மையானது; that which is white. *"நிறம் வெளிது செய்து" (திவ். இயற். 3, 56).* 2. வெள்ளிய ஆடை; white cloth. *"வெளிது விரித்துடீஇ" (புறநா. 279).*

வெளிநடப்பு *veḷi-naḍappu,* பெ.(n.) (ஓர் அவையில் உறுப்பினர்கள்) எதிர்ப்புத் தெரிவிக்கும் வகையில் அவை நடவடிக்கைகளைப் புறக்கணித்து வெளியில் எழுந்து செல்லுதல்; walkout (in an assembly). *'கூறியவற்றைத் திரும்பப்பெற அமைச்சர் மறுத்ததால் எதிர்க்கட்சியினர் வெளி நடப்புச் செய்தனர்'.*

*[வெளி + நடப்பு]*

வெளிநபர் *veḷi-nabar,* பெ.(n.) (ஒரு நிறுவனம், அமைப்பு முதலியவற்றோடு) தொடர்பு இல்லாதவர்; out sider, stranger. *'வெளிநபர்கள் முன் அனுமதி பெற்றுத்தான் தொழிற்சாலைக்குள் நுழைய வேண்டும்'.*

*[வெளி + நபர்]*

**U.** Nafar > த. நபர்.

வெளிநாட்டம் *veḷi-nāṭṭam,* பெ.(n.) தீ நெறியில் ஒழுகுகை (இ.வ.); leading an immoral life.

*[வெளி + நாட்டம்]*

வெளிநாடு[1]–தல் *veḷi-nāḍu-,* செ.கு.வி.(v.i.) வெளியிற் காணப்படுதல் (யாழ்.அக.); to be seen outside or in public. 2. தீய நெறியில் ஒழுகுதல் (இ.வ.); to lead an immoral life.

*[வெளி + நாடு]*

வெளிநாடு[2] *veḷi-nāḍu,* பெ.(n.) 1. வேற்று நாடு; foreign country. 2. வெளியுலகம்; the world at large. *"வெளிநாடுகாணப் புறப்பட விட்டும்" (ஈடு. 4, 5, 10).*

*[வெளி + நாடு]*

வெளிநீர் *veḷi-nīr,* பெ.(n.) மழை நீர்; rain water.

*[வெளி + நீர்]*

வெளிநீருண்ணீர் *veḷi-nīruṇṇīr,* பெ.(n.) இதுவே முன்னீர், பின்னீர்; coryza.

*[வெளிநீர் + உள்நீர்]*

வெளிப்பகட்டு *veḷi-p-pagaṭṭu,* பெ.(n.) வெளிமயக்கு பார்க்க; see *veḷi-mayakku.*

*[வெளி + பகட்டு]*

வெளிப்பகடம் *veḷi-p-pagaḍam,* பெ.(n.) வெளிமயக்கு பார்க்க; see *veḷi-mayakku.*

*[வெளி + பகடம்]*

வெளிப்பகடு *veḷi-p-pagaḍu,* பெ.(n.) வெளிப்பகட்டு பார்க்க; see *veḷi-p-pagaṭṭu.*

*[வெளி + பகடு]*

வெளிப்பசப்பு *veḷi-p-pašappu,* பெ.(n.) 1. வெளிமயக்கு பார்க்க; see *veḷi-mayakku.* 2. வெளித்தோற்றத்தில் அமைதியாய்ப் பேசுகை; speaking blandly.

*[வெளி + பசப்பு]*

வெளிப்படல் *veḷi-p-paḍal,* பெ.(n.) 1. தோன்றல்; appearing. 2. பிண்டம் வெளிப்படல்; presentation of the foetus.

*[வெளி + படல்]*

வெளிப்படு¹-தல் *veḷi-p-paḍu-,* செ.கு.வி. (v.i.) 1. வெளியே வருதல்; to come out, issue forth as breath. 2. வெளிப்படத் தோற்றுதல்; to become manifest or evident, to become public, to be revealed. *"பரவா வெளிப்படா... உரவோர்கட் காமநோய்" (நாலடி, 88).* 3. பொருள் விளக்கமாதல்; to be clear, explicit. *"வெளிப்படு சொல்லே கிளத்தல் வேண்டா" (தொல். சொல். 298).* 4. வெளி வா-, 2 பார்க்க; see *veḷivā-, 2.*

*[வெளி + படு-,]*

வெளிப்படு²-த்தல் *veḷi-p-paḍu-,* செ.கு.வி. (v.i.) வெளிப்படுத்து-, பார்க்க; see *veḷi-p-paḍuttu-. "தத்தமாற்றல்........... வெளிப்படுத் தன்று" (பு.வெ. 4, 6, கொளு).*

*[வெளி + படு-]*

வெளிப்படுத்து-தல் *veḷi-p-paḍuttu-,* செ. குன்றாவி.(v.t.) 1. பலர் அறியத் தெரிவித்தல் (வின்.); to reveal, divulge. 2. காட்டுதல்; to show express. 3. வெளியே வரச்செய்தல்; to cause to issue or come out, to eject. 4. புத்தகம் பதிப்பித்தல் (இ.வ.); to publich, as a book. 5. வெளியேற்று-, 1 பார்க்க; see *veḷiyēṟṟu,1.*

*[வெளி + படுத்து-,]*

வெளிப்படை *veḷi-p-paḍai,* பெ.(n.) 1. தெளிவானது (நன். 269); that which is evident, clear or obvious. 2. மேற் பார்வையில் தோன்றுவது; that which is aparent. 3. விளம்பரம்; publicity. 4. பல பொருள் குறிக்குஞ் சொல்லை ஒரு பொருட்கு உரித்தாக்கும் பொருட்டு ஏற்றதோர் அடை கொடுத்துக் கூறும் அணிவகை (புறநா. 17, உரை); a figure of speech in which the meaning of an ambiguous word is made clear by the use of a qualifying word, as *pāyavēṅkai.*

*[வெளி + படை]*

வெளிப்படைச்சொல் *veḷi-p-paḍai-c-col,* பெ.(n.) இயல்பாய் விளங்கி நிற்கும் மொழி; clear word.

*[வெளிப்படை + சொல்]*

**வெளிப்படைநிலை** *veḷippaḍai-nilai,* பெ.(n.) அறத்தொடு நிற்றல் (களவியற். 122);

*[வெளிப்படை + நிலை]*

**வெளிப்படையுவமம்** *veḷi-p-paḍai-yuvamam,* பெ.(n.) குறிப்பானன்றித் தெளிவாக அறியப்படும் உவமம் (இலக். வி. 639, உரை); explicil simile.

*[வெளிப்படை + உவமம்]*

**வெளிப்பயன்** *veḷi-p-payaṉ,* பெ.(n.) 1. வெளிப்படத் தெரியக்கூடிய பயன்; visible gain or advantage. 2. வெளிப்பொருள் பார்க்க (வின்.); see *veḷi-p-poruḷ.*

*[வெளி + பயன்]*

**வெளிப்பாடு**[1] *veḷi-p-pāḍu,* பெ.(n.) மறைதலின்றி வெளிப்பட்டுத் தோன்றுகை; coming out, appearing in public. *"வெளிப்பாட்டுச் சருக்கம்" (பாரத.).* 2. பெரியோர்க்கு அளிக்குங் கையுறை (சப்.); presents to great persons.

*[வெளி + பாடு]*

**வெளிப்பாடு**[2] *veḷi-p-pāḍu,* பெ.(n.) (ஒன்று மற்றொன்றை) வெளிப்படுத்துவதாக இருப்பது; manifestation, over sign. *'நாங்கள் தேர்தலில் அடைந்திருக்கும் வெற்றி எங்கள் மீது மக்கள் கொண்டிருக்கும் நம்பிக்கையின் வெளிப்பாடு'.* 2. (எண்ணம், உணர்வு முதலியவற்றை) வெளிப்படுத்துவது அல்லது வெளியிடுவது; expression, communication. *'கவிதை கவிஞனின் எண்ண வெளிப்பாட்டுச் சாதனம்'.*

*[வெளி + பாடு]*

**வெளிப்பிடம்** *veḷi-p-piḍam,* பெ.(n.) கடலடிப் பரப்பில் வலை பாய்ச்சுதற்கேற்ற இடம் (தஞ்சை. மீன.).

*[வெளி + பிடம்]*

**வெளிப்பு**[1] *veḷippu,* பெ.(n.) 1. வெளிப்புறம் (யாழ்.அக.); outside. 2. வெளியிடம்; open space unenclosed place.

**வெளிப்பு**[2] *veḷippu,* பெ.(n.) தெளிவு (யாழ்.அக.); clearness, brightness.

**வெளிப்புடம்போடல்** *veḷi-p-puḍam-pōḍal,* பெ.(n.) மறைப்பில்லாமல் திறந்தபடி புடமிடுதல்; ordinary calcination with cow dung cakes.

*[வெளிப்புடம் + போடல்]*

**வெளிப்புரைச்சவ்வு** *veḷi-p-purai-c-cavvu,* பெ.(n.) உடம்பின் வெளிப்புற தோல் பாகங்களை அடிப்படையாகக் கொண்டு நிற்கும் சவ்வு; an external tining membrance.

*[வெளிப்புரை + சவ்வு]*

**வெளிப்புற்று** *veḷi-p-puṟṟu,* பெ.(n.) புற்று நோய்வகை; cancer (m.l.).

*[வெளி + புற்று]*

**வெளிப்புறப்படப்பிடிப்பு** *veḷi-p-puṟa-p-paḍappiḍipu,* பெ.(n.) (பெரும்பாலும்) திரைப்படம் எடுக்க வெளி இடங்களில் நடத்தப்படும் படப்பிடிப்பு; outdoor shooting.

*[வெளிப்புறம் + படப்பிடிப்பு]*

**வெளிப்பேச்சு** *veḷi-p-pēccu,* பெ.(n.) 1. நாட்டுச் செய்தி; rumour. 2. உண்மையற்ற பேச்சு; hallow in sinceretalk.

*[வெளி + பேச்சு]*

**வெளிப்பொருள்** *veḷi-p-poruḷ,* பெ.(n.) தெளிவாயறியப்படும் பொருள் (வின்.); obvious meaning.

*[வெளி + பொருள்]*

**வெளிபொருள்** *veḷi-poruḷ,* பெ.(n.) வெளிப்பொருள் பார்க்க (யாழ்.அக.); see *veḷi-p-poruḷ.*

*[வெளி + பொருள்]*

**வெளிமடை** *veḷi-maḍai,* பெ.(n.) கோயிற்புரம் பேயுள்ள சிறுதெய்வங்களுக்குப் படைக்கும் படையல் (சப்.); offerings to the attendent deities outside a temple.

*[வெளி + மடை]*

**வெளிமயக்கம்** *veḷi-mayakkam,* பெ.(n.) கண்ணோய் வகை; an eye disease.

*[வெளி + மயக்கம்]*

**வெளிமயக்கு** *veḷi-mayakku,* பெ.(n.) வெளித்தோற்றத்தாலுண்டாம் மதிமயக்கம்; fascination due to outward show. *"எல்லாம் வெளிமயக்கே" (பட்டினத். தனிப்பா.).*

*[வெளி + மயக்கு]*

**வெளிமருந்து** *veḷi-marundu,* பெ.(n.) புறத்திடும் மருந்து; medicine for external application or use (C.G.).

*[வெளி + மருந்து]*

**வெளிமனிதன்** *veḷi-maṉitaṉ,* பெ.(n.) அயலான்; stranger.

*[வெள் + மனிதன்]*

**Skt.** manu-ja > த. மனிதன்.

**வெளிமா** *veḷimā,* பெ.(n.) காட்டுமா; wild mango.

*[வெளி → வெளிமா]*

**வெளிமான்[1]** *veḷimāṉ,* பெ.(n.) 1. மான்வகை (வின்.); revine deer. 2. பெண்மான்வகை (யாழ்.அக.); hind, female deer.

*[வெளு + மான்]*



**வெளிமான்[2]** *veḷi-māṉ,* பெ.(n.) கழகக் காலத்துத் தலைவருள் ஒருவன்; a chief of the *śaṅgam* age. *"வெளிமானுழைச் சென்றார்க்கு" (புறநா. 162).*

*[வெளி + மான்]*

**வெளிமான்[3]** *veḷi-māṉ,* பெ.(n.) பெருஞ் சித்தரனரால் பாடப்பட்ட சிற்றரசன்; a chieftarin, sung by peruncittanar.

*[வெளி + மான்]*

மிக்க கொடையுளோன். இவன் இறக்கும் போது பெருஞ்சித்திரனார்க்குப் பரிசு கொடுக்குமாறு தம்பிக்கு ஆணை செய்திருந்தான். அவன் கூறிய அளவிற் சிறிது கொடுப்ப பெருஞ்சித்திரனார் ஏற்றுக் கொள்ளாமற் போய், குமணனை யடைந்து, யானையும் பொன்னும் பெற்று, மீண்டுபுக்கு அவனை நோக்கி, இரப்போர்க்குக் கொடுப்பவ ரில்லையுமல்லர். யான் பெற்று வந்து ஊர்ப்புறத்தே

கட்டியிருக்கும் யானை குமணன் தந்த பரிசில், யான் போய் வருகிறேன் என்னுங் கருத்தினை யுடைய "இரவலர் புரவலை நீயுமல்லை, புரவல ரிரவலர்க்கில்லையுமல்ல ரிரவலருண்மையுங் காணினியிரவலர்க், கீவோருண்மையுங் காணினி நின்னூர்க், கடிமரம் வருந்தத் தந்தியாம் பிணித்த, நெடுநல்யானை யெம் பரிசில், கடுமான்றோன்றல் செல்வல் யானே" என்னும் பாடலைக் கூறிப் போயினார்.

வெளிமுகடு *veḷi-mugaḍu,* பெ.(n.) உலகில் புறவெல்லை; the atmost limit of space. *"அகில வெளிமுகடிய" (பாரத. ஆறாம் போர். 22).*

*[விள் → வெள் → வெளி + முகடு] (தே.நே.பக்.124)*

வெளிமுசுக்கை *veḷi-mušukkai,* பெ.(n.) காட்டு முசுக்கை; wild climber with hairy stem and leaves-bristly bryonia-mukia scabrella.

*[வெளி + முசுக்கை]*

வெளிமுற்றம் *veḷi-muṟṟam,* பெ.(n.) 1. வீட்டின் வெளிப்புறத்துள்ள திறந்த வெளி; courtyard of a house. 2. சமையலறையில் ஏனம் முதலியன தூய்மை செய்யும் முற்றம்; place marked off in a kitchen for washing utensils.

*[விள் → வெள் → வெளி + முற்றம்]*

வெளிமூலம் *veḷi-mūlam,* பெ.(n.) குடலிறக்க நோய் (மூளைகள் வெளித்தோன்றும் மூலநோய் வகை); external piles (M.L.).

*[விள் → வெள் → வெளி + மூலம்]*

வெளியங்கம் *veḷi-y-aṅkam,* பெ.(n.) பகட்டு; outward show, pomp.

*[வெளி + அங்கம்]*

**Skt.** *Aṅga* > த. அங்கம்.

வெளியச்சு *veḷi-accu,* பெ.(n.) தேரின் வெளிப்புறச் சக்கரங்கள் நான்கிற்கும் முன்பின் அமைந்த இரண்டு அச்சு (பொ.வழ.); two axis for front and book wheels of chariot.

*[வெளி + அச்சு]*

வெளியடை *veḷi-y-aḍai,* பெ.(n.) திரைச்சீலை (வின்.); curtain, veil.

*[வெளி + அடை]*

வெளியந்தரம் *veḷi-y-antaram,* பெ.(n.) இடைவெளி (தக்கயாகப். 147, உரை); intervening space.

*[வெளி + அந்தரம்]*

**Skt.** Antara > த. அந்தரம்.

வெளியரங்கம் *veḷi-y-araṅkam,* பெ.(n.) 1. வெளிப்படை; openness, publicity. *"வெளியரங்கம் பெறத்தந்தோம்" (குற்றா. தல. 16, 54).* 2. தெளிவானது (வின்.); that which is clear, obvious or evident.

*[விள் + வெள் → வெளி + அரங்கம்]*

வெளியா-தல் *veḷi-y-ā-,* செ.கு.வி.(v.i.) வெளிப்படு¹-, பார்க்க; see *veḷi-p-paḍu-.* *"வெளிநின்ற மாற்றம் வெளியான பின்" (பாரத. வெளிப்பாட்1டு. 17).*

*[விள் → வெளி → வெளியா-தல்]*

வெளியாக்கு¹-தல் *veḷi-y-yākku-,* செ.குன்றாவி.(v.t.) வெளிப்படுத்து-, பார்க்க; see *veḷi-p-paḍuttu-,*

*[வெள் → வெளி + ஆக்கு-,]*

வெளியாக்கு²–தல் *veḷi-y-ākku-,* செ. குன்றாவி.(v.t.) வெளிப்படுத்துதல்; make public disclose. *'வினாத்தாளை முன்னதாக வெளியாக்கிய அதிகாரிகள் மீது நடவடிக்கை'.*

*[வெளி + ஆக்கு–,]*

வெளியாகாமை *veḷiyākāmai,* பெ.(n.) மாதவிடாயாகாதிருத்தல்; absense of menses.

*[வெளி + ஆகாமை]*

வெளியாகு–தல் *veḷiyāku-,* செ.கு.வி.(v.i.) (திரைப்படம் தேர்தல் முடிவுகள் போன்றவை) வெளியிடப்படுதல்; be released. *'பள்ளி இறுதித் தேர்வு முடிவுகள் நாளை வெளியாகும்'.* 2. (உண்மை முதலியவை) வெளிப்படுதல்; become public, become known. *'என்றாவது ஒரு நாள் உண்மை வெளியாகும்'.*

*[வெளி + ஆகு]*

வெளியாடை *veḷi-y-āḍai,* பெ.(n.) 1. ஒப்பனைத் தொங்கற் சீலை (வின்.); curtain, hanging, tapestry. 2. உடலை மூடிக்கொள்ளும் ஆடை; veil, outer-wear.

*[வெளி + ஆடை]*

வெளியார்¹ *veḷiyār,* பெ.(n.) அறிவிலார்; senseless persons. *"வெளியார் முன் வான்சுதை வண்ணங் கொளல்" (குறள், 714).*

*[வெள் → வெளி → வெளியார்]*

வெளியார்² *veḷiyār,* பெ.(n.) புறம்பானவர்; outsiders, strangers.

*[வெள் → வெளி → வெளியார்]*

வெளியாள் *veḷiyāḷ,* பெ.(n.) தொடர்பில்லாத பேர்வழி; அயலான், வேற்றவன்; a person who is not connected (with the affair), out sider. *'வெளியாள் வேண்டாம் நாமே செய்து கொள்வோம்'.*

*[வெள் → வெளி → வெளியாள்]*

வெளியிடு–தல்¹ *veḷi-y-iḍu-,* செ.குன்றாவி. (v.t.) வெளிப்படுத்து–, பார்க்க; see *veḷi-p-paḍuttu.*

*[வெள் → வெளி → வெளியிடு–தல்]*

வெளியிடு–தல்² *veḷi-y-iḍu-,* செ.கு.வி.(v.i.) வெளிவாங்கு–, (யாழ்.அக.) பார்க்க; see *veḷi-vāṅku-.*

*[வெள் → வெளி → வெளியிடு–தல்]*

வெளியில் *veḷiyil,* வி.எ.(adv.) வெளியே பார்க்க; see *veḷiyē.*

*[வெள் → வெளி → வெளியில்]*

வெளியீடு–தல் *veḷi-yīḍu-,* பெ.(n.) (அஞ்சல் தலை, திரைப்படம் முதலியவற்றை) பயன் பாட்டிற்குக் கிடைக்கச் செய்தல்; release (stamps, film, etc.). *'புதிய அஞ்சல் தலையை அரசு வெளியிட்டது'. 'அந்தப் படம் அடுத்த மாதம் வெளியிடப்படும்'.* 2. செய்தி, உணர்ச்சி முதலியவற்றைப் பலரும் அறியும் வகையில் வெளிப்படுத்துதல்; reveal, publich. *'தயங்கித் தயங்கி செய்தியை வெளியிட்டான்'. 'மேற்கூறிய செய்திகளை அந்தத் தாளிகை வெளியிட்டிருக்கிறது'. 'தன்னுடை வியப்பை வெளியிடாமல் இருக்க முடியவில்லை'.* 3. (நூல் முதலியவற்றை) அச்சிட்டு வெளிக்கொண்டு வருதல்; publich. *'வெளியிட்ட ஆயிரம் படிகளும் விற்பனையாகிவிட்டன'.*

*[வெள் → வெளி → வெளியிடு → வெளியீடு]* *(தே.நே.பக். 124)*

**வெளியீட்டாளர்** *veḷiyīṭṭāḷar,* பெ.(n.) நூல்களைப் பதிப்பித்து வெளியிடுபவர்; publisher.

*[வெள் → வெளி → வெளியிடு → வெளியீடு → வெளியீட்டாளர்]*

**வெளியீடு** *veḷiyīḍu,* பெ.(n.) 1. (அச்சடிக்கப் பட்டு அல்லது உருவாக்கப்பட்டுப் பொது மக்களுக்காக) வெளியிடுதல்; (the act of) publishing, release (of book, bonds, film, etc.), issue. *'புத்தக வெளியீட்டு விழாவில் அமைச்சர் கலந்து கொண்டார்', 'புதிய பங்குப் பத்திரங்களின் வெளியீடு நாளை தொடங்கும்'.* 2. (வெளியிடப்பட்ட நூல் முதலியவற்றின்) படி; copy (of the publication). *'எங்களிடம் எல்லாப் பதிப்பகத்தாரின் வெளியீடுகளும் கிடைக்கும்'.* 3. (எண்ணம், கற்பனை முதலியவற்றை) வெளிப்பாடு; expression. *'கருத்து வெளியீட்டுச் சுதந்திரம்'. 'வெளியீட்டுத் திறன் உள்ளவன் கலைஞன் ஆகிறான்'.*

*[வெள் → வெளி → வெளியிடு → வெளியீடு]*

**வெளியுப்பு** *veḷiyuppu,* பெ.(n.) கட்டுப்பு, இயல்பாக உணவில் பயன்படுத்தும் கறியுப்பு; common salts.

*[வெள் → வெளி + உப்பு]*

**வெளியுறவு** *veḷiyuṟavu,* பெ.(n.) ஒரு நாடு பிற நாடுகளுடன் அரசியல், பண்பாடு, வாணிபம் முதலிய துறைகளில் கொள்ளும் உறவு; foreign affairs, foreign relations (of a country). *'வெளியுறவு அமைச்சர்'. 'வெளியுறவுக் கொள்கை'.*

*[வெள் → வெளி + உறவு]*

**வெளியூர்** *veḷiyūr,* பெ.(n.) (ஒருவர் குடியிருக்கும் ஊர் அல்லாத) பிற ஊர்; place other than one's residence. *'அப்பா வெளியூர் போயிருக்கிறார், நாளை தான் வருவார்'.*

*[வெளி + ஊர்]*

**வெளியெரிப்பொறிகள்** *veḷiyeri-p-poṟikaḷ,* பெ.(n.) வெல்லப் பொறிகளில் ஒருவகை; a combustion.

வெப்பப்பொறிகள் வெப்ப ஆற்றலை இயக்க ஆற்றலாகப் பயன்படத்தக்க வடிவில் மாற்றுகின்றன. ஒரு பொருள் எரிந்து அதனால் உண்டாகும் வெப்பத்தைக் கொண்டு இயக்க ஆற்றலை உண்டு பண்ணும் பொறிகளுக்கு எரிபொறிகள் என்று பெயர். இவற்றை உள்ளெரி பொறிகள், வெளியெரி பொறிகள் என இருவகைப் படுத்தலாம். தானியங்கி (automobiles) பொறிகளும், வளிமப் பொறிகளும் (Gas turbines) முதல்வகையைச் சாரும். நீராவி பொறிகளும், நீராவி விசையாழிகளும் இரண்டாவது வகையைச் சேர்ந்தன. வளி மண்டலத்தின் அழுத்தத்தை விட அதிகமான அழுத்த நிலையில் கொதி கலத்தினுள் நீராவி உருவாக்கம் செய்யப்படுகிறது. அழுத்தம் அதிகமாக இருப்பதனால் வெப்ப நிலையும் அதிகமாகவே இருக்கும் அந்த நிலையில் நீராவியில் நிறைந்த அளவு வெப்பம் அடங்கியிருக்கும். நீராவியிலுள்ள வெப்பத்தை வேலைக்கு மாற்றுகின்ற பொறிகளே வெளியெரி பொறிகள்.

*[வெளியெறி + பொறிகள்]*

**வெளியே** *veḷiyē,* வி.எ.(adv.) 1. எல்லையைத் தாண்டி, உள்ளே இல்லாமல்; outside, out. *'வீட்டுக்கு வெளியே உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தார்கள்'. 'கடையை விட்டு வெளியே வந்தார்'. 'உறையிலிருந்து கத்தியை*

*வெளியே எடுத்தான்*'. 2. (பேச்சால் அல்லது செயல்பாடுகளால்) பிறர் அறியும்படி, மறைவாக இல்லாமல்; in public, openly. '*வெளியே சொன்னால் வெட்கக் கேடு*'. '*என் மேல் உள்ள சீற்றத்தை அவர் வெளியே காட்டிக் கொள்ள வில்லை*'.

*[வெள் → வெளி → வெளியே]*

வெளியேற்று–தல் *veḷi-y-ēṟṟu-,* செ.குன்றாவி.(v.t.) 1. வெளியே போகச் செய்தல்; to expel. 2. நாடு கடத்துதல்; to transport, to extern. 3. வெளிப்படுத்து–, 3 பார்க்க; see *veḷi-p-paḍuttu-.*

*[விள் → வெள் → வெளி + ஏற்று–,]*

வெளியேறு–தல் *veḷi-y-ēṟu-,* செ.கு.வி.(v.i.) 1. வெளியே போதல்; to get out, as from a house. 2. வீட்டை விட்டு ஓடிப்போதல்; to abandon one's home and go away. '*அவன் வெளியேறி விட்டான்*'. 3. வெளியூருக்குக் குடிபோதல்; to migrate. 4. ஏதத்தினின்று தப்பித்து வருதல்; to escape from a danger.

*[விள் → வெள் → வெளி + ஏது]*

வெளிர் *veḷir,* பெ.எ.(adj.) (நிறத்தில்) அடர்த்தி குறைந்த; light, pale. '*வெளிர் மஞ்சள்*'. '*வெளிர் நீலம்*'.

*[வெளி → வெளிர்]*

வெளிர்த்துக்காட்டு–தல் *veḷirttu-k-kāṭṭu-,* செ.கு.வி.(v.i.) 1. மழை பெய்த பின் வானம் வெளுத்தல்; to clear, as the sky after rain. 2. வெளிறின நிறமாகத் தோன்றுதல்; to appear pale.

*[வெளிர்த்து + காட்டு–தல்]*

வெளில்[1] *veḷil,* பெ.(n.) 1. யானைத்தறி; post to which elephants are tied. *"களிறிலவாகிய புல்லரை நெடுவெளில்" (புறநா. 127).* 2. தயிர் கடைதறி (பிங்.); churning rod. 3. கம்பம் (வின்.); stake, post. 4. அணில்; squirrel. *"நீடுமரச் சோலை விழைவெளிலாடுங் கழை வளர் நனந்தலை" (அகநா. 109).*

*[வெளி → வெளில்]*

வெளில்[2] *veḷil,* பெ.(n.) வெள்ளில்[2] (பிங்.) பார்க்க; see *veḷḷil.*

*[வெளி → வெளில்]*

வெளிவந்தை *veḷi-vantai,* பெ.(n.) மாட்டின் மேலுள்ள உண்ணி; tick, an external parasite, on cattle.

*[வெளி → வெளிவந்தை]*

வெளிவர்த்தகம் *veḷi-varttagam,* பெ.(n.) இரு நாடுகளுக்கு இடையே நடைபெறும் வாணிபம்; foreign trade, trade between two regions.

*[வெளி +* **Skt.** *vartaka > த. வர்த்தகம்]*

வெளிவ(ரு)–தல் *veḷi-vā-,* செ.குன்றாவி.(v.t.) 1. (புத்தகம், கட்டுரை, கதை முதலியவை தாளிகையில்) வெளியாதல், (திரைப்படம் முதன் முறையாக) திரையிடப் படுதல்; (of books etc.) be published, (of films, etc.) be released. '*தாளிகையில் தன் கட்டுரை வெளி வந்திருக்கிறதா என்று ஆவலோடு பார்த்தார்*'. '*இப்போது வெளிவரும் படங்களில் கதை இருப்பதாகத் தெரியவில்லை*'.

*[வெள் → வெளி → வெளிவரு–தல்]*

**வெளிவா–தல் (வெளிவருதல்)** *veḷi-vā-,* செ.கு.வி.(v.i.) 1. பலராலுமறியப்படுதல்; to be public. 2. பலருக்கும் கிடைக்குமாறு பதிப்பிக்கப்படுதல்; to be published.

*[வெள் → வெளி → வெளிவா–தல்]*

**வெளிவாங்கு–தல்** *veḷi-vāṅku-,* செ.கு.வி. (v.i.) மழை பெய்தபின் முகில் கலைந்து வெளிச்சமாதல் (யாழ்.அக.); to become clear, as the sky after rain.

*[வெளி + வாங்கு–,]*

**வெளிவாசல்** *veḷi-vāšal,* பெ.(n.) 1. கட்டடத்தின் வெளியிலிருக்கும் வாசல்; outer gate. 2. வீட்டின் முகப்பிலுள்ள முற்றம்; open space in front of a house.

*[வெளி + வாசல்]*

**வெளிவாசலுக்குப்போ–தல்** *veḷi-vāšalukku-p-pō-,* செ.கு.வி.(v.i.) வெளிக்குப் போ–, பார்க்க; see *veḷikku-p-pō-.*

*[வெளிவாசலுக்கு + போ–தல்]*

**வெளிவாய்** *veḷi-vāy,* பெ.(n.) 1. மறை பொருளை வெளியிடும் சொல் (யாழ். அக.); word disclosing a secret. 2. பாண்டத்தின் வெளிப்புற விளிம்பு; the outer rim or lip of a vassel.

*[வெளி + வாய்]*

**வெளிவாய்**[2] *veḷi-vāy,* பெ.எ.(adj.) வெளிப் படையாய்; openly. *'வெளிவாய்ச் சொல்'.*

*[வெளி + வாய்]*

**வெளிவாய்க்கல்** *veḷi-vāy-k-kal,* பெ.(n.) கட்டடச் சுவரில் அழகியற் கூறுகள் முன்பக்கத்தில் தோன்றுமாறு செதுக்கப்பட்ட கல் (பொ.வழ.); a stone projected in architectural design in the wall of a building.

*[வெளி + வாய்க்கல்]*

**வெளிவாய்ப்படுகை** *veḷi-vāy-p-paḍukai,* பெ.(n.) ஆறு குளங்களையடுத்துப் புறம்பாகவுள்ள நிலம்; land adjacent to and outside the bund of a river or tank.

*[வெளிவாய் + படுகை]*

**வெளிவாயன்** *veḷi-vāyaṉ,* பெ.(n.) பூட்டகத்தை (இரகசியம்) வெளிவிடுபவன் (யாழ்.அக.); one who lets out secrets.

*[வெள் → வெளி + வாயன்]*

**வெளிவிடு–தல்** *veḷi-viḍu-,* செ.குன்றாவி. (v.t.) பலரறியச் செய்தல்; to reveal, make known.

*[வெளி + விடு–தல்]*

**வெளிவிருத்தம்** *veḷi-viruttam,* பெ.(n.) மூன்றடியாலேனும் நான்கடியாலேனும் முற்றுப்பெற்று அடிதோறும் இறுதியில் ஒரு சொல்லையே தனிசொல்லாகக் கொண்டு வெண்பாவுக்கு இனமாய் வரும் பாவகை (காரிகை. செய். 7, உரை); a kind of stanze belonging to the *veṉpā* class and consisting of three or four lines, each line ending with the same *taṉi-c-col.*

*[வெளி + விருத்தம்]*

**Skt.** vṛtta > த. விருத்தம்.

**வெளிவிழுதல்** *veḷi-viḻutal,* பெ.(n.) குடல் நிலத்தில் தாழ்கை; ruptured intestines, hernia. *'அவனுக்கு வெளிவிழுந்திருக்கிறது'.*

*[வெளி + விழுதல்]*

**வெளிவிவகாரம்** *veḷi-vivakāram,* பெ.(n.) வெளியுறவு பார்க்க; see *veḷi-yuṟavu.*

*[வெளி + விவகாரம்]*

**Skt.** *vyava-hāra* > த. விவகாரம்.

**வெளிவீதி** *veḷi-vīdi,* பெ.(n.) கோயில் முதலியவற்றிற்கு வெளிப்புறமுள்ள தெரு; boulevard or street surrounding a temple, fort or town.

*[வெளி + வீதி]*

**வெளிவு** *veḷivu,* பெ.(n.) வெளிப்படை 1, 2 பார்க்க; see *veḷi-p-paḍai.*

*[விள் → வெள் → வெளி → வெளிவு] (தே.நே.பக். 86)*

**வெளிவெருட்டு** *veḷi-veruṭṭu,* பெ.(n.) வெளிப்பகட்டு பார்க்க (யாழ்.அக.); see *veḷi-p-pagaṭṭu.*

*[வெளி + வெருட்டு]*

**வெளிவேடம்** *veḷi-vēḍam,* பெ.(n.) 1. தன்னுருவைப் பிறர் அறியாதபடி பூச்சு முதலியவற்றால் மறைக்கை; disguise. 2. வெளித்தோற்றம்; outward show. 3. வஞ்சகம்; hypocrisy.

*[வெளி + வேடம்]*

**Skt.** *vēsa* > த. வேடம்.

**வெளிற்றுக்குணம்** *veḷiṟṟu-k-kuṇam,* பெ.(n.) இழிவான குணம்; immodesty, indecency.

*[வெளிற்று + குணம்]*

**வெளிற்றுப்பனை** *veḷiṟṟu-p-paṉai,* பெ.(n.) கூர்மையற்ற பனை; palmyra having no hard core. *"வேனில் வெளிற்றுப் பனை போலக் கையெடுத்து" (அகநா. 333).*

*[வெளிற்று + பனை]*

**வெளிற்றுமரம்** *veḷiṟṟu-maram,* பெ.(n.) 1. காழ்ப்பில்லாத மரம் (பிங்.); soft, pithy tree with out core. 2. மரவகை (முள்ளுமுருக்கு) (அக.நி.); east indian coral tree.

*[வெளிற்று + மரம்]*

**வெளிற்றுரை** *veḷiṟṟurai,* பெ.(n.) பயனில் சொல்; unmeaning word, rain, empty speech. *"வெளிற்றுரை விடுமினென்றான்" (சீவக. 1431).*

*[வெள் → வெளி → வெளிற்றுரை]*

**வெளிறர்** *veḷiṟar,* பெ.(n.) அறிவில்லார்; fools, shipid people.

*[வெளி → வெளிறர்]*

**வெளிறல்** *veḷiṟal,* பெ.(n.) வெளுத்தல்; becoming pale.

*[வெள் → வெளி → வெளிறல்]*

**வெளிறன்** *veḷiṟaṉ,* பெ.(n.) 1. அறிவில்லாதவன் (யாழ்.அக.); ignorant man. 2. கீழ் மகன் (பிங்.); mean person.

*[வெளி → வெளிறன்]*

**வெளிறின** *veḷiṟiṉa,* பெ.(n.) சோகை பிடித்த; wan.

*[வெளி → வெளிறின]*

**வெளிறு-தல்** *veḷiṟu-,* செ.கு.வி.(v.i.) 1. வெண்மையாதல்; to grow white. 2. நிறங் கெடுதல்; to become pale. *'அவன் முகம் வெளிறிப் போயிற்று'.*

*[வெள் → வெளி → வெளிறு-தல்] (தே.நே.பக்.85).*

வெளிறு[2] *veḷiṟu,* பெ.(n.) 1. வெண்மை; whiteness. *"வெளிறு சேர்நிணம்" (கம்பரா. கரன். 155).* 2. நிறக்கேடு; paleness, pallor. 3. வெளிச்சம்; light. *"கதிர்வே றுணையா வெளிறுவிரவ வருதிகண்டாய்" (பதினொ. திருவாரூர்மும். 9).* 4. வெளிப்படுகை; becoming clear or manifest. *"வெளிறுற்ற வான்பழியாம்" (திருக்கோ. 254).* 5. பயனின்மை; uselessness. *"வெளிற்றுரை" (சீவக. 1431).* 6. அறியாமை; stupidity, ignorance. *"ஆசற்றார் கண்ணும் ...... இன்மை யரிதே வெளிறு" (குறள், 503).* 7. இளமை; tenderness, youth. *"வெளிற்றுப் பனந்துணியின்" (புறநா. 35).* 8. திண்மையற்றது; that which is not dense. *"வெளிறான இருளன்றிக்கே" (ஈடு. 2, 1, 8).* 9. குற்றம்; fault, defect. *"வெளிறில் வாள்" (சீவக. 3074).* 10. காழ்ப் (வயிரம்) பின்மை; having no hard core. *"வெளிறி னோன் காழ்" (புறநா. 23).* 11. வெளிற்று மரம் 1 பார்க்க; see *veḷiṟṟu-maram 1. "வெளிறு முன் வித்திப் பின்னை வச்சிரம் விளைத்த லாமோ" (சீவக. 2613) (திவா.* MSS). 12. செடி வகை (மலை.); common sebesten.

*[வெள் → வெளி → வெளிறு]*

வெளிறு *veḷiṟu,* பெ.(n.) 1. அலிமரம்; a tree without a solid portion either inside or outside. 2. வெளுத்தல்; becoming pale. 3. நறுவிலி; a tree.

*[வெள் → வெளி → வெளிறு] (தே.நே.பக்.85).*

வெளு[1]-த்தல் *veḷu-,* செ.கு.வி.(v.i.) 1. வெண்மையாதல்; to become white. *"கீர்த்தி வெளுத்ததே" (கலிங். 243).* 2. நிறங்கெடுதல்; to become pale, to lose colour. *'அந்தப் புடவை வெளுத்துவிட்டது'.* 3. விடிதல்; to dawn. *'கிழக்கு வெளுத்தது'.* 4. உண்மை நிலை வெளிப்படுதல்; to become clear or manifest. *'அவர் பெருமையெல்லாம் வெளுத்துவிட்டது'.*

*[வெ → வெளு → வெளு-த்தல்] (தே.நே.பக்.85)*

வெளு[2]-த்தல் *veḷu-,* செ.குன்றாவி.(v.t.) 1. ஆடையொலித்தல்; to whiten, bleach, wash, as clothes. 2. புடைத்தல்; to durb, beat hard.

*[வெ → வெளு → வெளுத்தல்]*

வெளுக்கங்கல் *veḷukku-ṅ-kal,* பெ.(n.) சுக்கான் கல்; lime stone.

*[வெளுக்கம் + கல்]*

வெளுச்சி *veḷucci,* பெ.(n.) விளாம் பிசின்; gum of wood-apple-feronia elephantum.

வெளுத்தபாதிரி *veḷutta-pādiri,* பெ.(n.) மரவகை; indian calosanthas.

*[வெளுத்த + பாதிரி]*

வெளுத்தபிசின் *veḷutta-piśiṉ,* பெ.(n.) வெளுத்தற் பிசின்; white gum.

*[வெளுத்த + பிசின்]*

வெளுத்தமுகம் *veḷutta-mugam,* பெ.(n.) வெளிறிய முகம்; pale face.

*[வெளுத்த + முகம்]*

வெளுத்தமேகசலம் *veḷutta-mēga-śalam,* பெ.(n.) வெள்ளை நோய்; gonorrhoea.

*[வெளுத்த + மேகசலம்]*

வெளுத்தல்[1] *veḷuttal,* பெ.(n.) மரவகை (யாழ்.அக.); a tree.

வெளுத்தல்² *veḷuttal,* பெ.(n.) 1. மரவகை; a tree. 2. வெள்ளையாக்கல்; calcining. 3. வெண்மையாதல்; growing white-albication.

*[வெ → வெளு → வெளுத்தல்] (தே.நே.பக். 85).*

வெளுத்தலரி *veḷuttalari,* பெ.(n.) அலரிவகை; pagoda tree.

வெளுத்துக்கட்டு–தல் *veḷuttu-k-kaṭṭu-,* செ.குன்றாவி.(v.t.) (பலரும் பாராட்டும் வகையில் அல்லது வியக்கும் வகையில் ஒன்றை) சிறப்பாகச் செய்தல்; do very well. *'அப்பா வேடத்தில் நடிகர் வெளுத்துக் கட்டியிருக்கிறார்'.*

*[வெளுத்து + கட்டு–,]*

வெளுத்துநீறுதல் *veḷuttu-nīṟutal,* பெ.(n.) மருந்து வெண்ணிறமாகி தூளாகுதல்; medicine turning white and powdery.

*[வெளுத்து + நீறுதல்]*

வெளுத்துவாங்கு¹–தல் *veḷuttu-vāṅku-,* செ.கு.வி.(v.i.) மிக நன்றாகச் செய்தல்; to do a thing in an admirable manner.

*[வெளுத்து + வாங்கு]*

வெளுத்துவாங்கு²–தல் *veḷuttu-vāṅku-,* செ.குன்றாவி.(v.t.) வெளு–, பார்க்க; see *veḷu-.*

*[வெளுத்து + வாங்கு]*

வெளுத்துவிடு–தல் *veḷuttu-viḍu-,* செ.கு.வி & செ.குன்றாவி.(v.i. & v.t.) வெளுத்து வாங்கு–, பார்க்க; see *veḷuttu-vāṅku-.*

*[வெளுத்து + விடு]*

வெளுப்பத்தி *veḷu-p-patti,* பெ.(n.) எலும்பு; bone.

வெளுப்பி *veḷuppi,* பெ.(n.) 1. குண்டுமணி; jeweller's bead. 2. புறங்கைநாறி பார்க்க; see *puṟaṅkai-nāṟi.*

*[வெளு → வெளுப்பி]*

வெளுப்பு *veḷuppu,* பெ.(n.) 1. வெண்மை; whiteness. 2. நோயால் உடல் வெளிறுகை; pallor, as from illness. 3. ஆடை வெளுக்கை; bleaching, washing of clothes. 4. புடைக்கை; drubing, beating.

*[வெ → வெளு → வெளுப்பு] (தே.நே.பக். 85).*

வெளுப்புக்கலவை *veḷuppu-k-kalavai,* பெ.(n.) வெண்மையாக்கும் பொருள்; bleaching.

*[வெளுப்பு + கலவை]*

வெளுப்புக்காகச்சி *veḷuppu-k-kākacci,* பெ.(n.) வெண்கரும்பு; white sugar-cane-saccharum offcinarum.

*[வெளுப்பு + காகச்சி]*

வெளுப்புடும்பு *veḷuppuḍumbu,* பெ.(n.) வெள்ளையுடும்பு; white guana.

*[வெளுப்பு + உடும்பு]*

வெளுப்புநீர் *veḷuppu-nīr,* பெ.(n.) வெளுப் பதற்கு பயன்படும் நீர்மம்; washing fluid.

*[வெளுப்பு + நீர்]*

வெளுப்பேறல் *veḷuppēṟal,* பெ.(n.) வெளுத்தல்; to become white.

*[வெளுப்பு + ஏறல்]*

வெளூரல் *veḷural,* பெ.(n.) வெளுத்தல், சுண்ணாமாகல்; to be calcined.

*[வெ → வெளு → வெளூரல்]*

வெளூரி *veḷuri,* பெ.(n.) வெளுத்தல்; to become white.

*[வெ → வெளு → வெளூரி]*

வெளுவெளு-த்தல் *veḷu-veḷu-,* செ.கு.வி. (v.i.) 1. வெண்மையாதல் (வின்.); to become white. 2. நிறங்கெடுதல்; to become pale.

*[வெளு + வெளு-,]*

வெளுவெளுப்பு¹ *veḷu-veḷuppu,* பெ.(n.) 1. வெளுப்பு 1 பார்க்க; see *veḷuppu1*. 2. வெளுப்பு 2 பார்க்க (யாழ்.அக.); see *veḷuppu 2*.

*[வெ → வெளு → வெளுவெளுப்பு]*

வெளுவெளுப்பு² *veḷu-veḷuppu,* பெ.(n.) நோயடைந்த வெண்மை; pale.

*[வெளு → வெளுவெளுப்பு]*

வெளுவெளுவெனல் *veḷu-veḷu-v-eṉal,* பெ.(n.) 1. மிக வெண்மையாதற் குறிப்பு; extreme whiteness. 2. நிறம் வெளிறுதற் குறிப்பு; extreme paleness. 3. நையப் புடைத்தற் குறிப்பு; sound thrashing. 4. கொண்டாடத்தக்க விதத்தில் ஒன்றைச் செய்தற் குறிப்பு; doing a thing in an admirable manner.

*[வெளுவெளு + எனல்]*

வெளுவை *veḷuvai,* பெ.(n.) வெண்மையாகை (யாழ்.அக.); becoming white.

*[வெ → வெளு → வெளுவை]*

வெளேரெனல் *veḷēreṉal,* பெ.(n.) 1. வெண்மையாதற்குறிப்பு; appearing white. 2. நிறம் வெளிறுதற்குறிப்பு; looking pale.

*[வெளேர் + எனல்]*

வெற்பஞ்சனம் *veṟ-pañjaṉam,* பெ.(n.) நீலாஞ்சனக்கல், துருசு; blue vitriol-copper sulphate.

வெற்பன் *veṟpaṉ,* பெ.(n.) குறிஞ்சி நிலத் தலைவன் (பிங்.); chief of *kuṟiñci* tract.

*[வெள் → வெறு → வெற்பன்]*

வெற்பிரதம் *veṟ-piratam,* பெ.(n.) ஒருவகை மருந்துக்கல் (தைலவ.); foliated crystallised gypsum.

வெற்பு *veṟpu,* பெ.(n.) 1. மலை (பிங்.); mountain, hill. *"மால்வரை நிவந்த சேணுயர் வெற்பில்" (திருமுரு. 12).* 2. பக்க மலை (ஐங்குறு. அரும்.); foothill spur.



வெற்பேந்தி¹ *veṟ-pēnti,* பெ.(n.) செடிவகை; sickle-leaf.

வெற்பேந்தி² *veṟ-pēnti,* பெ.(n.) மலை தாங்கிப் பூடு; a plant-sida acuta. இதனால் பாரிப்பு, இழுப்பு நோய் நீங்கும்.

வெற்றம் *verram,* பெ.(n.) 1. வெற்றி பார்க்க; see *verri.* *"வேற்றுப்புலம் போகி நல் வெற்றங் கெடுத்து" (சிலப். 11, 212).* 2. வீரம் (அக.நி.); courage.

*[வெல் → விர் → விறு → வீறு → வெற்றம்]*

வெற்றர் *verrar,* பெ.(n.) 1. ஏழைகள்; poor people. *"வீடுதோ றிரந்தும் பசியறாதயர்ந்த வெற்றரைக் கண்டுளந் துடித்தேன்" (அருட்பா. iv, பிள்ளைப் பெரு. 58).* 2. பயனற்றார்; worthless persons. *"நின்ற னடியரோடன்றி மற்றுமோர் வெற்றருள் வாழேன்" (அருட்பா. ii, அவத்தொழிற். 8).*

*[வெற்று + அர்]*

வெற்றல் *verral,* பெ.(n.) வெற்றி பார்க்க; see *verri.* *"வெற்றல் வேல்வேந்தர்க் கினது" (இனி. நாற். 36).*

வெற்றாள் *verrāl,* பெ.(n.) 1. வேலையில்லாதவ-ன்-ள்; un employed person. 2. குடும்பச் சுமையின்றித் தனித்திருப்பவ-ன்-ள் (யாழ்.அக.); lonely person without any family responsibilities. 3. பயனற்றவ-ன்-ள்; worthless person.

*[வெற்று + ஆள்]*

வெற்றி[1] *verri,* பெ.(n.) வெல்கை, வாகை (பிங்.); victory, success, conquest, triumph. *"வெற்றிக்கருளக்" (கொடியான். திவ். நாய்ச். 13,7).*

*[வெல் → விர் → விறு → வீறு = வெற்றி] (தே.நே.பக். 89)*

வெற்றி[2] *verri,* பெ.(n.) 1. (போர், போட்டி முதலியவற்றில் எதிர்ப்பவரை) தோற்கடித்துப் பெறும் உயர்வு; victory, success. *'அவர் ஆயிரம் ஒப்போலை வேறுபாட்டில் வெற்றி பெற்றுள்ளார்'. 'வெற்றி தோல்வி இல்லாமல் போட்டி முடிவடைந்தது'.* 2. (எடுத்துக் கொண்ட முயற்சியின்) பயன் நிறைந்த முடிவு; successful completion. *'உன் முயற்சிகள் வெற்றி பெற என் வாழ்த்துகள்'. 'பேச்சு வெற்றி அடைந்தது'.* 3. (திரைப்படம் நாடகம் முதலியவை நல்ல வசூல் கொடுத்து) நீண்ட நாள் நடைபெறும் நிலை; (of films) a box office hit. *'கலைப் படங்கள் வெற்றி அடைவதில்லை என்று வருத்தப்பட்டுக் கொண்டார்.*

*[வெல் → (வில்) → (விர்) → விறு → (வில்) → வீறு = வெற்றி] (தே.நே.பக்.89)*

வெற்றிக்கடுக்காய் *verri-k-kadukkāy,* பெ.(n.) பெரிய மரவகை (தைலவ.); crape myrtle.

*[வெற்றி + கடுக்காய்]*

வெற்றிக்கம்பம் *verri-k-kambam,* பெ.(n.) *வெற்றித்தம்பம்* பார்க்க (யாழ்.அக.); see *verri-t-tambam.*

*[வெற்றி + கம்பம்]*

வெற்றிக்கரந்தைமஞ்சரி *verri-k-karantai-mañcari,* பெ.(n.) தொண்ணூற்றாறு வகைப் பனுவ(பிரபந்தம்)லுள் பகைவர் கவர்ந்து சென்ற நிரையைக் கரந்தை மாலை சூடிய வீரர் மீட்பதைக் கூறும் நூல் வகை; a poem celebrating the recovery of cattle from the enemies who had captured them by warriors in pursuit wearing karantai, one of 96 kinds pirapantam.

*[வெற்றி + கரந்தை + மஞ்சரி]*

வெற்றிக்கீர்த்தி *verṟi-k-kirtti,* பெ.(n.) வெற்றிப்புகழ் பார்க்க (தக்கயாகப். 483, உரை); see *verṟi-p-pugaḻ.*

*[வெற்றி + கீர்த்தி]*

வெற்றிக்குதிரை *verṟi-k-kudirai,* பெ.(n.) போட்டி (பந்தயம்)யில் வென்ற குதிரை (யாழ்.அக.); winning horse in a race.

*[வெற்றி + குதிரை]*

வெற்றிக்கொடி *verṟi-k-koḍi,* பெ.(n.) வாகையைக் குறிக்க எடுக்கும் கொடி; flag of victory. *"இவ்வாயர் மகள் தோள்........ வெற்றிக்கொடியை உண்டாக்கினவாம்" (கலித். 101, 37, உரை).*

*[வெற்றி + கொடி]*

வெற்றிகாண்(ணு)-தல் *verṟi-kāṇ(ṇu)-,* செ.கு.வி.(v.i.) வெற்றிபெறுதல் (வின்.); to gain a victory, to win.

*[வெற்றி + காண்(ணு)-,]*

வெற்றிகொள்ளல் *verṟi-koḷḷal,* பெ.(n.) வெல்லுதல்; win, succeed.

*[வெற்றி + கொள்ளல்]*

வெற்றிலைச்சருகு *verṟilai-c-caruku,* பெ.(n.) காய்ந்த வெற்றிலை இல்லை; dried betel leaf.

*[வெற்றிலை + சருகு]*

வெற்றிச்சின்னம் *verṟi-c-cinnam,* பெ.(n.) வென்ற பரிசிற்பொருள்; trophy.

*[வெற்றி + சின்னம்]*

வெற்றிச்சீட்டு *verṟi-c-ciṭṭu,* பெ.(n.) குலுக்கல் பரிசுச் சீட்டில் வெற்றியைக் குறிக்குஞ் சீட்டு (யாழ்.அக.); the winning tickets, as in a lottery.

*[வெற்றி + சீட்டு]*

வெற்றிசூடு-தல் *verṟi-cūḍu-,* செ.கு.வி. (v.i.) வெற்றி பெறுதல்; to gain a victory.

*[வெற்றி + சூடு-,]*

வெற்றிடக்குழல்கள் *verṟita-k-kuḻalgaḷ,* பெ.(n.) தொடக்ககாலக் கணிப்பொறியில் பயன்படுத்தப்பட்ட மின்னணு உறுப்பு; vacumm tubes.

*[வெற்றிடம் + குழல்கள்]*

வெற்றிடம்[1] *verṟiḍam,* பெ.(n.) வெறுமையான இடம் (பொருந. 245, உரை); vacant place.

*[வெற்று + இடம்]*

வெற்றிடம்[2] *verṟiḍam,* பெ.(n.) 1. காற்றில்லாத விடம்; vaccum. 2. வெறுவெளி; etheric space.

*[வெற்று + இடம்]*

வெற்றித்தண்டை *verṟi-t-taṇḍai,* பெ.(n.) வீரக்கழல் (யாழ்.அக.); anklet warn on the leg, as a sing of victory.

*[வெற்றி + தண்டை]*

வெற்றித்தம்பம் *verṟi-t-tambam,* பெ.(n.) 1. வாகைக்கம்பம் (வின்.); column erected in commemoration of a victory, triumphal column. 2. வெற்றிக் கொடியைக் கட்டியுள்ள கம்பம் (யாழ்.அக.); staff on which is hoisted the flag of victory.

*[வெற்றி + தம்பம்]*

**Pkt.** Tamba > த. தம்பம்.

**வெற்றித்துவசம்** *verri-t-tuvašam,* பெ.(n.) வெற்றிக்கொடி; victory or triumph.

*[வெற்றி + துவசம்]*

**Skt.** Dhvaja > த. துவசம்.

**வெற்றிப்பத்திரம்** *verri-p-pattiram,* பெ.(n.) இரு பக்கத்தார் உரையையும் கேட்ட பின்னர் கொடுக்கப்படும் வெற்றியாவணம் (சுக்கிரநீதி. 92); document embodying the judicial decision in a contested case.

*[வெற்றி + பத்திரம்]*

**Skt.** Bhadra > த. பத்திரம்.

**வெற்றிப்பரிசு** *verri-p-paricu,* பெ.(n.) வெற்றி வாகை சூடிய பொருள்; memorial of victory.

*[வெற்றி + பரிசு]*

**வெற்றிப்பாடு** *verri-p-pāḍu,* பெ.(n.) வெற்றியாற் பெற்ற பெருமை; greatness attained by victory. *"வெற்றிப்பாடுங் குணப்பாடும்........ தெற்றிப்பாட"* *(தமிழ்நா. 234).*

*[வெற்றி + பாடு]*

**வெற்றிப்புகழ்** *verri-p-pugal,* பெ.(n.) 1. வெற்றியால் உண்டாகும் புகழ் (வின்.); fame due to victory, as in war. 2. போரில் அடைந்த வெற்றியைப் புகழ்கை; eulogy on a viclorious campaign.

*[வெற்றி + புகழ்]*

**வெற்றிப்பூ** *verri-p-pū,* பெ.(n.) வெற்றிக் குறியாக அணியப்படும் பூ, வாகை மாலை (பிங்.); flcwer worn as a sign of victory.

*[வெற்றி + பூ]*

**வெற்றிமகள்** *verri-makaḷ,* பெ.(n.) வெற்றி மடந்தை பார்க்க; see *verri-maḍantai.* *"பிறரை வென்று வெற்றி மகளைத் தன்னிடத்து மீட்டுக்கொண்டு"* *(பு.வெ.ஒழிபு. 13).*

*[வெற்றி + மகள்]*

**வெற்றிமடந்தை** *verri-maḍantai,* பெ.(n.) வெற்றித்திருமகள் (செயலெட்சுமி); the goddess of victory.

*[வெற்றி + மடந்தை]*

**வெற்றிமாலை** *verri-mālai,* பெ.(n.) வெற்றி வாகை பார்க்க; see *verri-vāgai.*

*[வெற்றி + மாலை]*

**வெற்றிமுரசு** *verri-murašu,* பெ.(n.) வெற்றிக் குறியாக முடிக்கப்படும் பேரிகை; drum beaten in token of victory.

*[வெற்றி + முரசு]*



**வெற்றிமை¹** *verrimai,* பெ.(n.) 1. வெற்றியாகிய தன்மை; victoriousness, victory. 2. மேம்பாடு; distinctive, greatness. *"ஆரழலாய் நிமிர்கின்ற வெற்றிமையென்"* *(தோ. 1019, 9).*

*[வெற்றி → வெற்றிமை]*

**வெற்றிமை²** *veṟṟimai,* பெ.(n.) வெறுமை; emptiness, barrenness, bareness. *"முதுகுந் தலையும் வெற்றிமைப் பட்டுப் பருஷமா யிராதபடி" (திவ். திருநெடுந். 21, வ்யா. பக். 173).*

*[வெறுமை → வெற்றுமை]*

**வெற்றிலை** *veṟṟilai,* பெ.(n.) 1. கொடிவகை; betel pepper. 2. பாக்குஞ் சுண்ணாம்புஞ் சேர்ந்து மென்று தின்பதற்குரிய வெற்றிலைக் கொடியின் இலை; betel leaf. *"பருகுநீர் தின்னும் வெற்றிலை" (திவ். திருவாய். 6, 7, 1).*

*[வெள்ளிலை → வெற்றிலை] (தே.நே.பக். 126)*

வெள்ளிலை = பூ காய் கனியில்லாத வெறுங்கொடியின் இலை.

**வெற்றிலைக்கத்தூரி** *veṟṟilai-k-kattūri,* பெ.(n.) செடிவகை; musk mallow.



**வெற்றிலைக்காய்** *veṟṟilai-k-kāy,* பெ.(n.) வெற்றிலைக் கொடியின் காய் (யாழ்.அக.); fruit of betel vine.

*[வெற்றிலை + காய்]*

**வெற்றிலைக்கால்** *veṟṟilai-k-kal,* பெ.(n.) வெற்றிலைத்தோட்டம் (வின்.) பார்க்க; see *veṟṟilai-t-tōṭṭam.*

*[வெற்றிலை + கால்]*

**வெற்றிலைக்காளாஞ்சி** *veṟṟilai-k-kāḷāñci,* பெ.(n.) வெற்றிலைப்படிக்கம் பார்க்க; see *veṟṟilai-p-paḍikkam.*

*[வெற்றிலை + காளாஞ்சி]*

**வெற்றிலைக்கொடி** *veṟṟilai-k-koḍi,* பெ.(n.) தம்பல (தாம்பூல)வல்லி; betel vine.

*[வெற்றிலை + கொடி]*

**வெற்றிலைக்கொழுந்து¹** *veṟṟilai-k-koḻundu,* பெ.(n.) வெற்றிலை 1 பார்க்க; see *veṟṟilai 1.*

*[வெற்றிலை + கொழுந்து]*

**வெற்றிலைக்கொழுந்து²** *veṟṟilai-k-koḻundu,* பெ.(n.) இளவெற்றிலை; tender betel leaf.

*[வெற்றிலை + கொழுந்து]*

**வெற்றிலைச்சரை** *veṟṟilai-c-carai,* பெ.(n.) வெற்றிலைத்தட்டி (யாழ்.அக.) பார்க்க; see *veṟṟilai-t-taṭṭi.*

*[வெற்றிலை + சரை]*

**வெற்றிலைச்சாறு** *veṟṟilai-c-cāṟu,* பெ.(n.) வெற்றிலையைக் கசக்கி எடுக்கும் சாறு, நஞ்சை சுருக்கிடவுதவும்; juice of betel leaf, used for treating arsenic.

*[வெற்றிலை + சாறு]*

**வெற்றிலைசுருட்டி** *veṟṟilai-śuruṭṭi,* பெ.(n.) ஒரு வகைப் புழு; a kind of worm which rools the betel leaf.

*[வெற்றிலை + சுருட்டி]*

வெற்றிலைச்சுருள் *verrilai-c-curul,* பெ.(n.) வெற்றிலையிற் பாக்குவைத்துக் கட்டிய சுருள்; betel leaves rolled up with areca-nut parings.

*[வெற்றிலை + சுருள்]*

வெற்றிலைச்செல்லம் *verrilai-c-cellam,* பெ.(n.) வெற்றிலைப்பெட்டி பார்க்க; see *verrilai-p-petti.*

*[வெற்றிலை + செல்வம்]*

வெற்றிலைசுருட்டி *verrilai-curutti,* பெ.(n.) வெற்றிலைப் புழுவகை (யாழ்.அக.); a betel pest.

*[வெற்றிலை + சுருட்டி]*

வெற்றிலைத்தட்டம் *verrilai-t-tattam,* பெ.(n.) வெற்றிலைத்தட்டு பார்க்க; see *verrilai-t-tattu.*

*[வெற்றிலை + தட்டம்]*

வெற்றிலைத்தட்டி[1] *verrilai-t-tatti,* பெ.(n.) வெற்றிலையை உள்ளடக்கி வைக்கும் வாழையிலை முதலியவற்றாலான கூடு (யாழ்.அக.); cover made of plaintain leaves, straw or ola, for betels.

*[வெற்றிலை + தட்டி]*

வெற்றிலைத்தட்டி[2] *verrilai-t-tatti,* பெ.(n.) வெற்றிலைச்சருகு; dried betel leaf.

*[வெற்றிலை + தட்டி]*

வெற்றிலைத்தட்டு *verrilai-t-tattu,* பெ.(n.) வெற்றிலை பாக்கு, சுண்ணாம்பு முதலியன வைக்குந் தட்டம்; salver for betels, areca-nut, chunam, etc.

*[வெற்றிலை + தட்டு]*

வெற்றிலைத்தண்டுலம் *verrilai-t-tandulam,* பெ.(n.) வேம்பின் மேற் புல்லுருவி; parasitic plant on neem tree.

*[வெற்றிலை + தண்டுலம்]*

வெற்றிலைத்தம்பலம் *verrilai-t-tambalam,* பெ.(n.) வெற்றிலை பாக்கு மென்ற எச்சில் (யாழ்.அக.); red spittle of chewed betel leaves.

*[வெற்றிலை + தம்பலம்]*

வெற்றிலைத்தாம்பாளம் *verrilai-t-tāmbālam,* பெ.(n.) வெற்றிலைத்தட்டு பார்க்க; see *verrilai-t-tattu.*

*[வெற்றிலை + தாம்பாளம்]*

வெற்றிலைத்தோட்டம் *verrilai-t-tōttam,* பெ.(n.) வெற்றிலைக்கொடி பயிர் செய்யுந் தோட்டம்; betel garden.

*[வெற்றிலை + தோட்டம்]*

வெற்றிலைநறுக்கி *verrilai-narukki,* பெ.(n.) செடிவகை (யாழ்.அக.); a kind of plant.

வெற்றிலைநாரி *verrilai-nāri,* பெ.(n.) ஒருவகைப் புல்; a kind of grass.

வெற்றிலைநாறி *verrilai-nāri,* பெ.(n.) ஒரு வகைப் புதர் (யாழ்.அக.); a kind of shrub.

*[வெற்றிலை + நாறி]*

வெற்றிலைப்பட்டி *verrilai-p-patti,* பெ.(n.) வெற்றிலைச்சுருள் பார்க்க; see *verrilai-c-curul.*

*[வெற்றிலை + பட்டி]*

**வெற்றிலைப்பட்டை** *veṟṟilai-p-paṭṭai,* பெ.(n.) காட்டுக்குமிழ்; mulberry of western ghats-callicarpes lanata.

*[வெற்றிலை + பட்டை]*

**வெற்றிலைப்படலிகை** *veṟṟilai-p-paḍaligai,* பெ.(n.) வெற்றிலை வைக்குங் கூடை (சீவக. 826, உரை); basket for betels.

*[வெற்றிலை + படலிகை]*

**வெற்றிலைப்படிக்கம்** *veṟṟilai-p-paṭikkam,* பெ.(n.) தம்பலந் துப்புங் கலம்; spittoon.

*[வெற்றிலை + பழக்கம்]*

**வெற்றிலைப்பழு** *veṟṟilai-p-paḻu,* பெ.(n.) பழுத்த வெற்றிலை; sere betel.

*[வெற்றிலை + பழு]*

**வெற்றிலைப்புழு** *veṟṟilai-p-puḻu,* பெ.(n.) வெற்றிலைப்பூச்சி பார்க்க; see *veṟṟilai-p-pūcci.*

*[வெற்றிலை + புழு]*

**வெற்றிலைப்பூச்சி** *veṟṟilai-p-pūcci,* பெ.(n.) வெற்றிலையிலுள்ள நச்சு புழு; a kind of small worm in betel leaves, said to be poisonous.

*[வெற்றிலை + பூச்சி]*

**வெற்றிலைப்பூமணி** *veṟṟiai-p-pūmaṇi,* பெ.(n.) மகளிரணி வகை (யாழ்.அக.); a kind of jewel worn by women.

*[வெற்றிலை + பூமணி]*

**வெற்றிலைப்பெட்டி** *veṟṟilai-p-peṭṭi,* பெ.(n.) வெற்றிலை பாக்கு சுண்ணாம்பு முதலியன வைக்கும் சிறு பெட்டி; a small box for betels, areca-nuts, chunam, etc.

*[வெற்றிலை + பெட்டி]*



**வெற்றிலைப்பை** *veṟṟilai-p-pai,* பெ.(n.) தம்பலம் (தாம்பூலம்) வைக்கும் பை; a bag for betels, areca-nut, parings, etc.

*[வெற்றிலை + பை]*

**வெற்றிலைபாக்கு** *veṟṟilai-pākku,* பெ.(n.) தம்பலம் (தாம்பூலம்); betels and areca-nuts.

*[வெற்றிலை + பாக்கு]*

**வெற்றிலைபாக்குக்கொடு-த்தல்** *veṟṟilai-pākku-k-koḍu-,* செ.கு.வி.(v.i.) 1. தம்பலம் (தாம்பூலம்) வழங்கி மதிப்புரவு (மரியாதை) செய்தல்; to show civility by the distributiion of betels and areca-nuts. 2. வெற்றிலையிடு-, 2 பார்க்க; see *veṟṟilai-y-iḍu-, 2.*

*[வெற்றிலை + பாக்கு + கொடு-,]*

**வெற்றிலைபாக்குவை-த்தல்** *veṟṟilai-pākku-vai-,* செ.கு.வி.(v.i.) வெற்றிலை வை-, பார்க்க; see *veṟṟilai-vai-.*

*[வெற்றிலை + பாக்கு + வை-,]*

**வெற்றிலைபோடு-தல்** *veṟṟilai-pōḍu-,* செ.கு.வி.(v.i.) தம்பலம் பூணுதல்; to chew betel.

*[வெற்றிலை + போடு-,]*

வெற்றிலைமடல் *verrilai-madal,* பெ.(n.) வெற்றிலை வைக்கும் பெட்டிவகை; a small box for betels.

*[வெனற்றிலை + மடல்]*

வெற்றிலைமடிப்பு *verrilai-madippu,* பெ.(n.) வெற்றிலைச் சுருள்; roll of betel leef and Arecaunut.

*[வெற்றிலை + மடிப்பு]*

வெற்றிலையமுது *verrilai-yamudu,* பெ.(n.) இறைவன் படையலுக்கான வெற்றிலை; betels offered to deities. *"வெற்றிலை யமுது அறுபதுக்குமாக" (S.I.I.iii,116,32).*

*[வெற்றிலை + அமுது]*

வெற்றிலையிடு-தல் *verrilai-yidu-,* செ.கு.வி. (v.i.) 1. வெற்றிலைபாக்குக்கொடு-,1 பார்க்க; see *verrilai-pākku-k-kodu-,1.* 2. பிரிந்து செல்வதற்கு வெற்றிலை வழங்கி விடை கொடுத்தல்; to give permission to leave, by the giving of betels and areca-nuts. *"கொன்று வருகிறோம் எங்களுக்கு வெற்றிலையிட்டருளீர்" (ஈடு. 4, 1, 2).*

*[வெற்றிலை + இடு-,]*

வெற்றிலைவல்லி *verrilai-valli,* பெ.(n.) வெற்றிலைக்கொடி; betel vine-piper betel.

*[வெற்றிலை + வல்லி]*

வெற்றிலைவள்ளி *verrilai-valli,* பெ.(n.) வள்ளிக்கொடிவகை (இலத்.); betel yam.

*[வெற்றிலை + வள்ளி]*

வெற்றிலைவள்ளிக்கிழங்கு *verrilai-valli-kilangu,* பெ.(n.) 1. உணவுக்குரிய ஒரு வகைக் கிழங்கு; vegetable root. இதுவே காய்த்துளசிக் கிழங்கு. 2. நாகவள்ளிக் கிழங்கு; dioscorea opposititolia.

*[வெற்றிலை + வள்ளி + கிழங்கு]*

வெற்றிலைவாணியர் *verrilai-vāniyar,* பெ.(n.) இலைவாணியர் பார்க்க; see *ilai-vāniyar* (S.I.I.iv.496).

*[வெற்றிலை + வாணியர்]*

வெற்றிலைவெடிபதம் *verrilai-vedipadam,* பெ.(n.) இட்ட வெற்றிலை வெடிக்கும் பருவம் வரை காய்ச்சப்படும் மருந்தெண்ணெய்ப்பதம் (யாழ்.அக.); a stage in the boiling of medicinal oil, when a betel thrown into it will crackle.

*[வெற்றிலை + வெடிபதம்]*

வெற்றிலைவை-த்தல் *verrilai-vai-,* செ.கு.வி. (v.i.) வெற்றிலைபாக்கு வைத்து திருமணம் முதலிய சிறப்பிற்கு உறவினர் நண்பர் முதலியோரை அழைத்தல்; to invite relations, friends, etc. by offering betels and areca-nuts, as to a wedding.

*[வெற்றிலை + வை-,]*

வெற்றிவாகை *verri-vāgai,* பெ.(n.) வெற்றிக் குறியாகச் சூடும் வாகைமாலை; wreath of siris flowers, worn as an emblem of victory.

*[வெற்றி + வாகை]*

வெற்றிவெறிது *verri-veridu,* பெ.(n.) பயன் சிறிதுமின்மை; absolute worthlessness. *"வெற்றி வெறிதே பெற்றதாய் வேம் பேயாக வளர்த்தாளே" (திவ். நாய்ச். 137).*

*[வெற்றி + வெறிது]*

**வெற்றிவேற்கை** *verri-vērkai,* பெ.(n.) தமிழில் உள்ள ஒரு அறநூல்; code of laws, treatise on civil and religious duties in tamil.

ஆத்திசூடி என்பதைப் போல் இது வெற்றிவேற்கை என்று தொடங்கும் முதலை யுடைமையால் இவ்வாறு பெயர் பெற்றது. இதற்கு நறுந்தொகை யெனவும் பெயர் உண்டு. இந்நூற் செய்யுட்கள் யாவும் நூற்பா வடிவில் அமைந்துள்ளன. இப்பாக்கள் பெரும்பாலும் ஒவ்வோரடியால் ஆகியவை 84 பாடல்கள் இதனில் உள்ளன. இதனை இயற்றியவர் அதி வீரராமபாண்டியர் என்னும் அரசராவர்.

*[வெற்றி + வேற்கை]*

**வெற்றிவேற்செழியன்** *verri-vēr-celiyan,* பெ.(n.) இவன் பாண்டி நாட்டில் கொற்கையில் இருந்து அரசு செய்தவன்; he was administration at korkai in *pāṇḍināḍu.*

பாண்டியன் நெடுஞ்செழியன் தான் அரசு முறை கோயதன் விளைவாக மாண்ட பிறகு மதுரை நகர் புரப்பாரின்றிக் கெட்டழிந்து நல்ல மழையில்லாமையாலும் வேறு பல செயல்களாலும் நாடு நாடோறுஞ் சீரழிந்து கொண்டிருந்தது. கொற்கையில் இருந்த இவன் மதுரையை அடைந்து அரசாட்சியை மேற்கொண்டான். நேர்ந்துள்ள தீமைகட்கெல்லாம் கழுவாய் செய்தான். அதன் பிறகு நாடு செழித்து நன்னிலைக்கு வந்தது.

**வெற்றிழுப்பு** *verriluppu,* பெ.(n.) பயனற்ற செயல்; rain attempt, futile effort.

**வெற்று** *verru,* பெ.எ.(adj.) 1. (ஒன்றில் இருக்க வேண்டியது) எதுவும் இல்லாத வெறும்; empty, bare, blank. *'வெற்றுத் துமுக்கியைக் காட்டி அச்சுறுத்தி விட்டான்'. 'இடுப்பில் துண்டைக் கட்டிக்கொண்டு வெற்று மார்போடு நின்று பூசை செய்தார்'.* 2. எதிர்பார்க்கும் பயனை விளைவிக்காத; useless. *'சிக்கலுக்குத் தீர்வு இல்லை, ஆக நாம் இதுவரை வெற்றுப் பேச்சுதான் பேசிக் கொண்டிருந்திருக்கிறோம்'.*

*[வெள் → வெறு → வெற்று] (தே.நே.பக்.126)*

**வெற்றுக்கட்டை** *verru-k-kattai,* பெ.(n.) வெற்றாள் 2 பார்க்க; see *verrāl 2.*

*[வெள் → வெறு → வெற்று + கட்டை]*

**வெற்றுக்கால்** *verru-k-kāl,* பெ.(n.) வெறுங் கால்; bare foot.

*[வெள் → வெறு → வெற்று + கால்]*

**வெற்றுகம்** *verrukam,* பெ.(n.) வட்டத்துத்தி; a plant-abutilon indicum.

**வெற்றுடம்பு** *verrudambu,* பெ.(n.) 1. சதைப் பிடிப்பில்லாதவுடம்பு; body without much flesh. 2. இயல்பானவுடம்பு; body in its natural state, mere body. 3. கருப்ப மில்லாதவுடம்பு; body without conception. 4. உடையுடுத்தாதவுடம்பு; naked body.

*[வெறு → வெற்று + உடம்பு] (தே.நே.பக்.126)*

**வெற்றுடம்புக்காரி** *verrudambu-k-kāri,* பெ.(n.) கருப்பமடையாத பெண்; woman not carring.

*[வெற்றுடம்பு + காரி]*

**வெற்றுடல்** *verrudal,* பெ.(n.) 1. வெறிதாய உடம்பு; bare, unadorned body. 2. பிணம்; corpse, as lifeless. *"விருந்தினராய் வந்தாரை வெற்றுடலா நோக்கும் பெருந்திருவி" (சீவக. 1969).*

*[வெள் → வெறு → வெற்று → வெற்றுடல்] (தே.நே.பக்.126)*

வெற்றுப்பேச்சு *verru-p-pēccu,* பெ.(n.) வீண்பேச்சு; Idle talk.

*[வெற்று + பேச்சு]*

வெற்றுரை *verrurai,* பெ.(n.) பொருளற்ற சொல்; meaningless word. *"வெற்றுரைக் குண்டோர் வலியுடைமை" (நீதிநெறி. 21).*

*[வெள் → வெறு → வெற்று → வெற்றுரை]*

வெற்றுவட்டி *verru-vaddi,* பெ.(n.) வட்டிப் பணம்; pure interest. மொத்த வட்டியில், உருவாக்க வட்டி, முதலீடு, வரவு செலவுகள் வட்டியை கழித்தபின் எஞ்சி நிற்பதே வெற்று வட்டி.

*[வெற்று + வட்டி]*

வெற்றெலும்பன் *verrelumban,* பெ.(n.) ஒல்லியானவன்; bare bone.

*[வெற்று + எலும்பன்]*

வெற்றெலும்பு *verrelumbu,* பெ.(n.) சதை கழிந்தவெலும்பு; bone rid of flesh.

*[வெற்று + எலும்பு]*

வெற்றெனத்தொடுத்தல் *verrena-t-toduttal,* பெ.(n.) நூற்குற்றம் பத்தனுள் பயனில் சொற்றொடர்படக் கூறுவது (நன். பொது.); prolixity or verbosity in literary composition, as being barren of ideas, one of 10 *nūr-kurram.*

வெற்றெனல் *verrenal,* பெ.(n.) வெறுமை யாதற்குறிப்பு; expr. of being empty.

*[வெறு → வெற்று → வெற்றெனல்]*

வெற்றொழிப்பு *verrolippu,* பெ.(n.) ஒன்றன் தன்மையை மறுத்து வேறொன்றன் தன்மையை ஏற்றிக் கூறும் அணி வகை (யாழ்.அக.); a figure of speech, being a variety of avanuti.

வெற்றோலை *verrōlai,* பெ.(n.) 1. எழுதப் படாத ஓலை; blank, unwritten ola. 2. மகளிரணியும் பனையோலைச் சுருளாலான காதணி; roll of palmyra leaf, worn in the ear-lobe, by women. *'உமக்கு வாழ்க்கைப்பட்டு வெறுங் காதும் வெற்றோலையுமாய் நிற்கிறேனே'.*

*[வெறு → வெற்று → வெற்றோலை] (தே.நே.பக். 126)*

வெறி¹-தல் *veri-,* செ.கு.வி.(v.i.) செறிதல் (பிங்.); to be abundant.

வெறி² *veri,* பெ.(n.) 1. ஒழுங்கு; order, orderliness. *"வெறி நிரை வேறாகச் சார்ச்சாரலோடி" (கலித். 11).* 2. வட்டம் (பிங்.); circle.

வெறி³ *veri,* பெ.(n.) 1. கள் (பிங்.); toddy. 2. குடிமயக்கம் (வின்.); drunkenness, drunken fury, intoxication. 3. மயக்கம் (வின்.); giddiness. 4. கலக்கம் (பிங்.); bewilderment, confusion, perturbation. 5. பித்து (பயித்தியம்); madness, insanity. *'வெறிநாய்'.* 6. மதம் கொள்கை; frenzy. 7. சினம்; anger. 8. விரைவு (அக.நி.); quickness, hastiness. 9. நறுமணம்; fragrance. *"வெறிகமழ் வணரைம் பால்" (கலித். 57).* 10. வெறியாட்டு பார்க்க (பிங்.); see *veri-y-āttu.* *"வெறிபுரி யேதில் வேலன்" (அகநா. 292).* 11. வெறிப்பாட்டு பார்க்க; see *veri-p-pattu.* *"வேலனேத்தும் வெறியுமுளவே" (பரிபா. 5, 15).* 12. முரட்டுத் தனம்; savagery, wildness. 13. பேய் (பிங்.);

devil. 14. தெய்வம்; deity. *"வெறியறி சிறப்பன்" (தொல். பொ. 60, உரை).* 15. ஆடு; sheep. *"இறும்கலா வெறியும்" (மணி. 19, 97).* 16. பேதைமை (பிங்.); ignorance. 17. அச்சம் (பிங்.); fear. *"வெறிகொளாக மாயையாதலின்" (ஞானா. 59, 5).* 18. நோய் (பிங்.); disease.

*[வெள் → வெறு → வெறி]*

வெறி⁴–த்தல் *veṟi-,* செ.கு.வி.(v.i.) 1. குடியால் மயங்குதல்; to be drunk, intoxicated. 2. பித்துப் பிடித்தல்; to become mad. *'வெறித்த நாய்'.* 3. மதங் கொள்ளுதல்; to be frenzied. *"வெறி பொறி வாரணத்து" (கலித். 43).* 4. திகைத்தல் (வின்.); to stare. 5. கடுமையாதல்; to be furious. *"உருமேறு வெறித்து வீழ" (கம்பரா. வாலிவ. 30).* 6. வெருவுதல், அஞ்சுதல்; to be fringhtened. *"நெஞ்சம் வெறியா" (கலித். 143).* 7. விலங்கு முதலியன வெருளுதல்; to shy, as a beast. *"வெறித்து மேதியோடி" (தேவா. 693,3).* 8. ஆவலெபாடு பார்த்தல் (வின்.); to look with longing eyes. 9. விறைத்து நிற்றல்; to stand stiff, to stand on end, as hair. *"வெறித்த குஞ்சியன்" (காசிக. சிவ. நிருதி. 16).*

வெறி⁵–த்தல் *veṟi-,* செ.கு.வி.(v.i.) 1. ஆட்களின்றி வெறுமையாதல்; to become empty, as a place devoid of inhabitants. *'அரசனில்லாத அரண்மனை வெறித்துப் போயிற்று'.* 2. வானந்தெளிதல்; to clear away, as clouds. *'மழை நின்று வெறித்துவிட்டது'.*

*[வெள் → வெறு → வெறி–த்தல்]*

வெறி⁶ *veṟi,* பெ.(n.) வெறிச்சு பார்க்க; see *veṟiccu. "இல்லம் வெறியோடிற் றாலோ" (திவ். பெரியாழ். 3, 8, 1).*

வெறி⁷ *veṟi,* பெ.(n.) நாற்றம்; smell.

*[வெறு → வெறி]*

வெறி⁸–த்தல் *veṟi-,* செ.கு.வி.(v.i.) வெறுமையுடன் உற்று நோக்குல், பார்வை ஒன்றின் மீது நிலைத்தல்; stare blankly, give a vacant stare. *'சாப்பிடப் பிடிக்காமல் சோற்றை வெறித்தபடி உட்கார்ந்திருந்தான்'.* 2. (மாடு முதலியவை) மிரளுதல்; be faightened. *'குடையைக் கண்டால் மாடு வெறிக்கும் என்று தெரியாதா?'*

*[வெறு → வெறி–தல்]*

வெறிக்கடுக்காய் *veṟi-k-kaḍukkāy,* பெ.(n.) பேய்க் கடுக்காய்; a kind of wild gallnut.

*[வெறி + கடுக்காய்]*

வெறிக்கப்பார்–த்தல் *veṟikka-p-pārttal,* பெ.(n.) பரக்கப் பார்த்தல், மரணக்குறி; staring, a death symptom.

*[வெறிக்க + பார்த்தல்]*

வெறிக்கப்பார்–த்தல்² *veṟṟikka-p-pār-,* செ.குன்றாவி. (v.t.) இமையாது வெகுண்டு நோக்குதல்; to glare at.

*[வெறிக்க + பார்–,]*

வெறிக்கல் *veṟi-k-kal,* பெ.(n.) சுக்கான்கல்; lime-stone.

*[வெறி + கல்]*

வெறிக்களம் *veṟi-k-kaḷam,* பெ.(n.) வெறியாட்டயரும் இடம்; place where *veṟi-y-āṭṭu* takes place. *"வெறிக்களங் கடுப்ப" (பெருங். இலாவாண. 2, 104).*

*[வெறி + களம்]*

**வெறிக்குணம்** *veṟi-k-kuṇam,* பெ.(n.) 1. பித்துக்குணம்; mad quality. 2. முரட்டுக் குணம்; eccentric. 3. கழிகாமம்; lusty.

*[வெறி + குணம்]*

**வெறிக்குதல்** *veṟikkutal,* பெ.(n.) வெறி கொள்ளல் பார்க்க; see *veṟi-koḷḷal.*

*[வெறு → வெறி → வெறிக்குதல்]*

**வெறிக்கூத்து**[1] *veṟi-k-kūttu,* பெ.(n.) வெறியாட்டு பார்க்க; see *veṟi-y-āṭṭu.* (பு.வெ. 12. இருபாற். 10, தலைப்பு).

*[வெறி + கூத்து]*

**வெறிக்கூத்து**[2] *veṟi-k-kūttu,* பெ.(n.) இது தெய்வம் ஏறியாடுகிற வெறிக் கூத்தாகும்; priest dancing under possession by skanda.

வேலனாகிய பூசாரிகையில் வேலேந்திச் செம்பட்டாடையுடுத்திச் செவ்வணியணிந்து, செஞ்சந்தனம் பூசித் தொண்டகப்பறை ஒலிக்க ஆடுவான். இவன் வேலையேந்தியாடுகிற படியால் வேலன் எனப்படுவான்.

*[வெறி + கூத்து]*

**வெறிகொள்(ளு)-தல்** *veṟi-koḷ(ḷu)-,* செ.கு.வி. (v.i.) 1. மயக்கங் கொள்ளுதல்; to become dizzy, to be intoxicated. 2. பித்து கொள்ளுதல்; to be crazy or mad. 3. வெறி[4]–, 3 பார்க்க; see *veṟi[4]–,* 3. *"வெறி கொண் மத மலைகளும்" (பாரத. பதினாறாம்போர். 25).* 4. (மூர்க்கம்) முருடம் கொள்ளுதல்; to become furious.

*[வெறி + கொள்(ளு)-தல்]*

**வெறிகோள்** *veṟi-kōḷ,* பெ.(n.) வெறியாட்டு பார்க்க; see *veṟi-y-āṭṭu. "வெறிகோள் பண்ணியுந் தொழிறலை பெயர்த்தவன்" (பெருங். உஞ்சைக். 32, 94).*

*[வெறி + கோள்]*

**வெறிச்சி** *veṟicci,* பெ.(n.) அழுகண்ணி; a plant found in marshing places from which water contionuously oozes out- a carnirorous plant - drosera indica. 2. சண்பகம்; a flower-champaca.

*[வெறி → வெறிச்சி]*

**வெறிச்சு** *veṟiccu,* பெ.(n.) ஆட்களின்றி வெறுமையாகை; emptiness, as of a place devoid of inhabitants. *"வெறிச்சான திருமாளிகை" (திருபுரம். 536).*

*[வெறிது → வெறிச்சு]*

**வெறிச்செனல்** *veṟiccenal,* பெ.(n.) ஆட்களின்றி வெறுமையாதற்குறிப்பு; expr. of being vacant or empty, as a place devoid of inhabitants. *'மனைவியும் குழந்தைகளும் ஊருக்குப் போன பிறகு வீடு வெறிச்சென இருக்கிறது'.*

*[வெறிச்சு + எனல்]*

**வெறிச்சோடு-தல்** *veṟiccōḍu-,* செ.கு.வி. (v.i.) (ஓர் இடம்) ஆட்கள் நடமாட்டம் இல்லாமல் இருத்தல், வெறுமையாதல்; wear a desolate look. *'திருமணம் முடிந்த பிறகு வீடுவெறிச்சோடி விட்டது'.*

*[வெறு → வெறி + சோடு–,]*

**வெறிசிங்கி** *veṟi-śiṅgi,* பெ.(n.) வயிற்றுப்புண்; ulcer.

*[வெறி + சிங்கி]*

**வெறித்தசிங்கம்** *veritta-śingam,* பெ.(n.) 1. உப்பு மணி; a bead made by melting to consolidated salt. 2. கட்டியகல்லுப்பு; consolidated rock-salt. 3. உப்பு; the three universal salts.

**வெறித்தபார்வை** *veritta-pārvai,* பெ.(n.) அச்சுறுத்தும் பார்வை; fearful look.

*[வெறித்த + பார்வை]*

**வெறித்தல்** *verittal,* பெ.(n.) மயக்குறல்; being intoxicaled or stupified.

*[வெறி → வெறித்தல்]*

**வெறிதருமருந்து** *veri-taru-marundu,* பெ.(n.) மயக்கத்தை யுண்டாக்கு மருந்து; an intoxicating drug-bang.

*[வெறிதரு + மருந்து]*

**வெறிது** *veridu,* பெ.(n.) 1. ஒன்றுமில்லாமை; emptiness. 2. பயனின்மை; uselessness, futility. *"வெறிது நின் புகழ்களை வேண்டாரி லெடுத்தேத்தும்" (கலித். 72).* 3. அறிவின்மை (யாழ்.அக.); stupidity.

*[வெறு–மை → வெறிது]*

**வெறிநாய்** *veri-nāy,* பெ.(n.) வெறி பிடித்த நாய்; rabid dog.

*[வெறி + நாய்]*

**வெறிநாய்க்கடி** *verināy-k-kaḍi,* பெ.(n.) நச்சணுக்களால் உண்டாகும் கொடி நோய் வகை; rabie.

இந்நோய் கண்டிருக்கும் நாய், பூனை, நரி, ஓநாய் ஆகிய விலங்குகள் கடித்தால் மக்களுக்கு இந்நோய் தொற்றும். இந்நோய் கண்ட விலங்குகளின் உமிழ் நீரில் நச்சணுக்கள் நிறைந்திருக்கும். இவை மக்களை நக்கினாலும், நக்கின இடத்தில் புண் இருந்தால் அதன் மூலம் நோய் தொற்றிக்கொள்ளும். சில நாடுகளில் சிலவகை வௌவால்கள் கடிப்பதனாலும் மக்களுக்கு இந்நோய் பரவுகிறது. மூளைப் பிறழ்ச்சியும், தாங்க முடியாத துன்பமும், நீர் வேட்கையும், தண்ணீரைக் கண்டால் நடுக்கமும், எதையும் விழுங்க முடியாத தவிப்பும் இந்நோயின் அறிகுறிகள். இறுதியில் இந்நோய் கண்டவர்கள் இறந்து போகின்றார்கள்.

*[வெறிநாய் + கடி]*

**வெறிநாய்கடிப்பைத்தியம்** *verināy-kaḍi-p-paittiyam,* பெ.(n.) வெறிநாய் கடியால் ஏற்பட்ட பித்து; canine madness.

*[வெறிநாய் + கடி + பித்து → **Skt.** பைத்தியம்]*

**வெறிநாற்றம்** *veri-nārram,* பெ.(n.) புணர்ச்சிக்குப் பின் பிறக்கும் நாற்றம் (ஐங்குறு. 93, உரை); a kind of odour perceived after sexual inter course.

*[வெறி + நாற்றம்]*

**வெறிநீர்** *veri-nīr,* பெ.(n.) 1. சாராயம்; arrack. 2. பருகை; drink causing giddiness.

*[வெறி + நீர்]*

**வெறிப்பாட்டு** *veri-p-pāṭṭu,* பெ.(n.) வெறியாட்டில் நிகழும் பாடல் (பரிபா. 5, 15, உரை); song sung in *veri-y-āṭṭu.*

*[வெறி + பாட்டு]*

**வெறிபாடியகாமக்கண்ணியார்** *veri-pāḍiya-kāma-k-kaṇṇiyār,* பெ.(n.) கழகக் காலப் பெண் புலவர்; a female sangam poet.

வெறியென்பது தெய்வமேறப்பெற்று ஒருத்தியாடுதல். இது வெறியாட்ட மெனவும்

வழங்கும். இதன் இயல்பை நன்றாக விளக்கிப் பாடியிருத்தலால் 'வெறிபாடிய' என்னும் அடைமொழி இவர் பெயர்க்குமுன் சேர்க்கப் பெற்றது. (அகநா. 22, 92; நற். 268). இவர் புறநானூற்றில் பாடிய செருவிடை வீழ்தல், குதிரை மறமென்னுந் துறைப்பாடல்கள் அறிதற் பாலன.

வெறிப்பானவேரு *veṟippāṉa-vēru,* பெ.(n.) வெள்ளரிசி பார்க்க; see *veḷḷariśi.*

*[வெறிப்பான + வேரு]*

வெறிப்பு[1] *veṟippu,* பெ.(n.) 1. கண்கூச்சம்; dazzle, glare. *"கோல வெறிப்பினான்........ மாலைக் கண் கொண்டவே" (சீவக. 2397).* 2. ஏக்கறவு (வின்.); longing in consequence of privation. 3. கொடுமை; jarring. *'அந்தப்பாட்டு வெறிப்பாயிருக்கிறது'.* 4. மது மயக்கம் (வின்.); drunkenness.

*[வெறி → வெறிப்பு]*

வெறிப்பு[2] *veṟippu,* பெ.(n.) பஞ்சம் (வின்.); famine.

*[வெறு → வெறி → வெறிப்பு]*

வெறிப்பு[3] *veṟippu,* பெ.(n.) மயக்கம்; intoxication, drunkness.

*[வெறி → வெறிப்பு]*

வெறிபிடி-த்தல் *veṟi-piḍi-,* செ.கு.வி.(v.i.) வெறிகொள்-, பார்க்க; see *veṟi-koḷ-.*

*[வெறி + பிடி-,]*

வெறிமகள் *veṟi-magaḷ,* பெ.(n.) இழிமகள்; hell-cat.

*[வெறி + மகள்]*

வெறிமயக்கம் *veṟi-mayakkam,* பெ.(n.) குடிவெறி; drunkness.

*[வெறி + மயக்கம்]*

வெறிமருந்து *veṟi-marundu,* பெ.(n.) 1. நஞ்சு; arsenic. 2. மயக்கத்தையுண்டாக்கு மருந்து; drug causing giddiness-intoxicating drug.

*[வெறி + மருந்து]*

வெறிமலர் *veṟi-malar,* பெ.(n.) 1. நறுமண மலர் (திருக்கோ. 96, உரை); fragrant flower. 2. தெய்வத்துக்குரிய பூ (திருக்கோ. 96, உரை); flower offered to a god.

*[வெறி + மலர்]*

வெறிமுண்டன் *veṟi-muṇḍaṉ,* பெ.(n.) பித்துப்பிடித்த தடியன்; mad fellow.

*[வெறி + முண்டன்]*

வெறியயர்-தல் *veṟi-y-ayar-,* செ.கு.வி.(v.i.) வெறியாடு-, பார்க்க; see *veṟi-y-āḍu-.* *"வேலன் வெறியயர் வியன்களம் பொற்ப" (அகநா. 97).*

*[வெறி + அயர்-,]*

வெறியன்[1] *veṟiyaṉ,* பெ.(n.) 1. பித்துக் கொண்டவன்; an insane man. 2. மயக்கங் கொண்டவன்; a giddy person. 3. குடியன்; drunkard. 4. கஞ்சா பிடித்தவன்; ganjah smoker.

*[வெறி → வெறியன்]*

வெறியன்[2] *veṟiyaṉ,* பெ.(n.) 1. குடிவெறி யுள்ளவன்; drunkard. 2. பித்தன்; madman. 3. கடுமையானவன்; furious person.

*[வெறி → வெறியன்]*

**வெறியன்³** *veriyan,* பெ.(n.) யாதும் அற்றவன்; empty, distitute person. *"வெறியரன்றோ குணங்களான் விரிஞ்சன் முதலா மேலானோர்" (கம்பரா. உருக்காட்டு. 111).*

*[வறியன் → வெறியன்]*

**வெறியாட்டம்** *veriyāttam,* பெ.(n.) 1. வன்முறைச் செயல், மிகுசினம்; rampageous conduct, frenzy. *'இனக்கலவரத்தைத் தகுந்த வாய்ப்பாகப் பயன்படுத்திக் கொண்டு கயவர்கள் வெறியாட்டம் போட்டனர்'.* 2. (குறி சொல்பவர்) தெய்வ வெறி வந்து ஆடும் ஆட்டம்; dance (of a soothsayer) possessed by spirit, frenzied state.

*[வெறி + ஆட்டம்]*

**வெறியாட்டாளன்¹** *veriyāttālan,* பெ.(n.) 1. பித்துப் பிடித்தவன்; madman. 2. தேவர்க் காடுவோன்; dance before the fanes of tutelarly gods bacchanalian.

*[வெறி + ஆட்டாளன்]*

**வெறியாட்டாளன்²** *veriyāttālan,* பெ.(n.) வெறியாடல் புரியும் வேலன் (பு.வெ.9.41, உரை); priest dancing under possession by skanda.

*[வெயாட்டு + ஆளன்]*

**வெறியாட்டு¹** *veri-y-āttu,* பெ.(n.) 1. வேலனாடல் (பு.வெ. 1, 21, தலைப்பு); dance of a priest possessed by skanda. 2. களியாட்டம்; frantic or mad play. *"வெறியாட்டுக் காளாய்" (தாயு. கற்புறு. 2).*

*[வெறி + ஆட்டு]*

**வெறியாட்டு²** *veri-y-āttu,* பெ.(n.) பித்து பிடித்திடுதல்; madness.

**வெறியாட்டுப்பறை** *veriyāttu-p-parai,* பெ.(n.) வெறியாட்டில் முழங்கும் குறிஞ்சி நிலப் பறை (இறை. 1, பக். 17); drum of *kuriñji* tract, used in *veri-y-āttu.*

*[வெறியாட்டு + பறை]*

**வெறியாடல்¹** *veriyādal,* பெ.(n.) 1. வெறி கொள்ளல்; becoming mad. 2. பேயாட்டம்; devil dance. 3. மயக்கத்தினால் கூத்தாடல்; dancing through intoxicating.

*[வெறி + ஆடல்]*

**வெறியாடல்²** *veriyādal,* பெ.(n.) வெறியாட்டு பார்க்க; see *veri-y-āttu.*

*[வெறி + ஆடல்]*

**வெறியாடு-தல்** *veri-y-ādu-,* செ.கு.வி.(v.i.) வெறியாட்டாடுதல்; to dance under possession by skanda.

*[வெறி + ஆடு-,]*

**வெறியாள்** *veriyāl,* பெ.(n.) வெறியாட்டாளன் (குறுந். 366) பார்க்க; see *veriyāttālan.*

*[வெறி + ஆள்]*

**வெறியுறை** *veriyurai,* பெ.(n.) 1. மயக்க முண்டாக்கும் ஒரு வகை மருத்துவமுறை; giving chloroform. 2. பித்துப் பிடிக்கச் செய்யும் மருந்து; medicine causing insanity.

*[வெறி + உறை]*

**வெறியெடு-த்தல்** *veri-y-edu-,* செ.கு.வி. (v.i.) வெறியாட்டு நிகழ்த்துதல்; to conduct a *veri-y-āttu.* *"தமர்வெறி யெடுப்புழி அதனை விலக்கக் கருதிய தோழி" (ஐங்குறு. 28, உரை).*

*[வெறி + எடு-,]*

**வெறியெடுத்தல்** *veṟiyeḍuttal,* பெ.(n.) வெறிகொள்ளல், மதங்கொள்ளல்; becoming fascivious of rusty.

*[வெறி + எடுத்தல்]*

**வெறியேறி** *veṟiyēṟi,* பெ.(n.) நெருப்பு; fire.

*[வெறி + ஏறி]*

**வெறியோடு[1]-தல்** *veṟi-y-ōḍu-,* செ.கு.வி. (v.i.) 1. ஒளி மிகுதியால் கண் வெறித்துப் போதல்; to be dazzled, as eyes by excessive brilliancy. *"பல புண் மின்னலுங் கண்கள் வெறியோடி விட்டனவே" (பாரத. பதினேழாம் போர். 168).* 2. ஆற்றாமையுறுதல்; to be in despair, to be inconsolable.

*[வெறி + ஓடு-,]*

**வெறியோடு[2]-தல்** *veṟi-y-ōḍu-,* செ.கு.வி. (v.i.) வெறி[5]-, 1 பார்க்க; see *veṟi[5]-,1. "இல்லம் வெறியோடிற்றாலோ" (திவ். பெரியாழ். 3, 8, 1).*

*[வெறி + ஓடு-,]*

**வெறியோன்** *veṟiyōṉ,* பெ.(n.) பேய்த்துவரை; a wild gram.

**வெறிவாகை** *veṟi-vāgai,* பெ.(n.) பன்றி வாகை; bastard rose wood-dalbiergia paniculata.

*[வெறி + வாகை]*

**வெறிவிலக்கல்** *veṟi-vilakkal,* பெ.(n.) வெறிவிலக்கு (ஐங்குறு. 247, உரை) பார்க்க; see *veṟi-vilakku.*

*[வெறி + விலக்கல்]*

**வெறிவிலக்கு** *veṟi-vilakku,* பெ.(n.) தலைவிக்குக் காமத்தாலுண்டான நோயை வேறு காரணத்தாலுண்டானதாகக் கொண்டு அந்நோயைத் தணிக்க வேண்டிச் செய்யும் வெறியாட்டைத் தடுத்து நிற்றலைக் கூறும் அகத்துறை; theme of opposing the *veṟi-y-āṭṭu* performed with a view to curing a lovesick women under a mistaken impression that she is ill.

*[வெறி + விலக்கு]*

**வெறு[1]-த்தல்** *veṟu-,* செ.குன்றாவி. (v.t.) 1. அருவருத்தல்; to detest, loathe. *"வெறுமின் வினைதீயார் கேண்மை" (நாலடி, 172).* 2. பகைத்தல்; to hate. 3. வெகுளுதல் (சூடா.); to be angry at. 4. விரும்பா திருத்தல்; to dislike. 5. பற்றுவிடுதல்; to renouce, to be free from attachments. *"வெறுத்தார் பிறப்பறுப்பாய் நீயே" (தேவா. 310, 10).*

*[வெறு → வெறுத்தல்]*

**வெறு[2]-த்தல்** *veṟu-,* செ.கு.வி. (v.i.) 1. மிகுதல் (தொல். சொல். 347); to abound. *"வெறுத்த கேள்வி விளங்கு புகழ்க் கபிலன்" (புறநா. 53).* 2. துன்பமுறுதல்; to be afflicted. *"எதிரேவருமே சுரமே வெறுப்பவொரேந்த லோடே" (திருக்கோ. 243, உரை).*

*[வெறு → வெறுத்தல்]*

**வெறு** *veṟu,* பெ.(n.) வெறுமை, வெறு வென்னேவல்; vapidness.

*[வெள் → வெறு]*

**வெறுக்கச்சாப்பிடல்** *veṟukka-c-cāppiḍal,* பெ.(n.) மனம் சலிக்கும் வரையுண்ணல்; to eat to satiety.

*[வெறுக்க + சாப்பிடல்]*

வெறுக்கவெறுக்க *veṟukka-veṟukka,* வி.எ.(adv.) வேண்டாமென்று தள்ளக்கூடிய வளவு மிகுதியாக; in a surfeiting measure.

*[வெறு → வெறுக்க]*

வெறுக்கை[1] *veṟukkai,* பெ.(n.) 1. அருவருப்பு; aversion, loathing. *"தாதுண வெறுகைய வாகி" (ஐங்குறு. 93).* 2. வெறுப்பு; dislike. 3. மிகுதி; abundance. 4. செல்வம்; wealth. *"நன்கல வெறுக்கை துஞ்சும் பந்தர்டு" (பதிற்றுப். 55, 4).* 5. பொன் (பிங்.); gold. 6. வாழ்வின் அடிப்படையாயுள்ளது; life-spring. *"பரிசிலர் வெறுக்கை" (பதிற்றுப். 38, 9).* 7. கையுறை; offering, as to a superior. *"தொடைமலர் வெறுக்கை யேந்தி" (சீவக. 2708).* 8. ஊக்கம்; self-assertion. *"ஒளி ஒருவற்கு உள்ள வெறுக்கை" (குறள், 971)*

வெறுக்கை[2] *veṟukkai,* பெ.(n.) கனவு (அக.நி.); dream.

*[வெறு → வெறுக்கை]*

வெறுக்கைக்கிழவன் *veṟukkai-k-kiḻavaṉ,* பெ.(n.) செல்வத்துக்குரியவன் (குபேரன்.); *kubēra,* as the god of wealth. *"வெறுக்கைக் கிழவன் மகளென்ன" (சீவக. 1871).*

*[வெறுக்கை + கிழவன்]*

வெறுங்கல்லறை *veṟuṅkallaṟai,* பெ.(n.) பிணத்தை அடக்கம் செய்யாது நினைவுக் குறியாகக் கட்டப்பட்ட கல்லறை (பொ.வழ.); cemetery.

*[வெறும் + கல்லறை]*

வெறுங்காய் *veṟu-ṅ-kāy,* பெ.(n.) பாக்கு; areca-nut.

*[வெறு–மை + காய்]*

வெறுங்கால் *veṟuṅ-kāl,* பெ.(n.) வெற்றுக் கால்; bare foot.

*[வெறு–மை + கால்]*

வெறுங்காவல் *veṟu-ṅ-kāval,* பெ.(n.) வேலை வாங்குதலில்லாமல் அடைத்து வைத்திருக்குஞ்சிறை; simple imprisonment, opp. to *kaḍuṅ-kāval.*

*[வெறு–மை + காவல்]*

வெறுங்கை *veṟu-ṅ-kai,* பெ.(n.) 1. ஒன்று மில்லாத கை; emptyhand. *"வெறுங்கை யோடிலங்கைபுக்கான்" (கம்பரா. கும்பக். 1).* 2. வறுமை; poverty. *"வெறுங்கையா ரென்னும் பேரின் மென்மையை வன்மை செய்யும்" (சேதுபு. இலக்குமி. 31).*

*[வெறு–மை + கை]*



வெறுங்கைது *veṟu-ṅ-kaidu,* பெ.(n.) வெறுங்காவல் பார்க்க; see *veṟuṅ-kāval.*

*[வெறு–மை + கைது]*

வெறுங்கோது *veṟuṅ-kōdu,* பெ.(n.) 1. பயனற்றது; chaff, worthless staff. 2. ஒன்றுக்குமுதவாத–வன்–வள்–து; good for nothing person or thing.

*[வெறு–மை + கோது]*

வெறுஞ்சோறு *veṟuñ-cōṟu,* பெ.(n.) வெஞ்சனமில்லாத உணவு; plain rice without curry, etc.

*[வெறு-மை + சோறு]*

வெறுத்தகு-தல் *veṟu-t-tagu-,* செ.கு.வி. (v.i.) செறிதல்; to abound. *"வெறுத்தக்க பண்பொத்தல்" (குறள், 993).*

*[வெறு + தகு-,]*

வெறுத்தார் *veṟuttār,* பெ.(n.) 1. வெறுப் புற்றவர்; haters, those who dislike. 2. பற்றற்றோர்; those who have renounced the world. *"வெறுத்தார் பிறப்பறுப்பாய் நீயே" (தேவா. 310, 10).*

*[வெறு → வெறுத்தார்]*

வெறுத்தாள் *veṟuttāḷ,* பெ.(n.) பல பெண் குழந்தைகளைப் பெற்றுச் சலித்தோர் மேலும் பெறுதலில் வெறுப்புற்று இதுவே கடைப்பெண்ணாக (சம்பூரணம்) என்று பிறந்த பெண்குழந்தைக்கிடும் பெயர்; name given to the last of a number of female children, showing that their parents wish to have no more daughter.

*[வெறு → வெறுத்தாள்]*

வெறுத்திசை *veṟu-t-tiśai,* பெ.(n.) வெறுத் திசைப்பு பார்க்க; see *veṟu-t-tiśaippu. "இன்னோசைத்தாய் வெறுத்தி சையின்றாம்" (தொல். பொ. 323, உரை).*

*[வெறு + இசை]*

வெறுத்திசைப்பு *veṟu-t-tiśaippu,* பெ.(n.) யாப்பின் ஓசைக் குற்றவகை (யாப். வி. பக். 403); discordant rhythm in a stanza.

*[வெறு + இசைப்பு]*

வெறுந்தண்ணீர் *veṟun-taṇṇīr,* பெ.(n.) இயல்பான நீர்; water only (in prescribing diet).

*[வெறு(மை) + தண்ணீர்]*

வெறுந்தப்பறை *veṟu-n-tappaṟai,* பெ.(n.) முழுத்தவறு (வின்.); complete error.

*[வெறு-மை + பறை]*

வெறுந்தரை *veṟun-tarai,* பெ.(n.) 1. விரிப்பு முதலிய இடாத தரை; bare, uncovered floor or ground. *'வெறுந் தரையில் அவர் இருந்தார்'.* 2. கட்டாந்தரை; land devoid of vegetation. 3. பயனில்லாப் பொருள்; worthless thing. *"அவனோடு கலந்து பிரிந்து வெறுந்தரையா யிருக்கிற எனக்கு" (ஈடு. 1, 4, 2).*

*[வெறு-மை + தரை]*

வெறுந்தலை *veṟu-n-talai,* பெ.(n.) தலைப் பாகையணியாத தலை (வின்.); bare uncovered head.

*[வெறு-மை + தலை]*

வெறுநரையோர் *veṟu-naraiyōr,* பெ.(n.) முழுநரையுள்ள முதியவர்; very old persons, as having their hair turned completely grey. *"விரவு நரையோரும் வெறுநடை யோரும்" (பரிபா. 10, 22).*

*[வெறு-மை + நரை]*

வெறுநிலம் *veṟu-nilam,* பெ.(n.) வெறுந் தரை *1* பார்க்க; see *veṟu-n-tarai1*. *"நின்மகன் அவந்தனாய் வெறு நிலத்திருக்கலான போது" (கம்பரா. மந்தரைப். 55).* 2. வெறுந்தரை 2 பார்க்க; see *veṟu-n-tarai* 2.

*[வெறு–மை + நிலம்]*

வெறுநுகம் *veṟu-nukam,* பெ.(n.) விளக்கு (சோதி) நாள்; the 15th nakšatra.

*[வெறு(மை) + நுகம்]*

வெறுநெற்றி *veṟu-neṟṟi,* பெ.(n.) நீறணியா நெற்றி; bare forehead without sectarian marks.

*[வெறு(மை) + நெற்றி]*

வெறுப்பு[1] *veṟuppu,* பெ.(n.) 1. அருவருப்பு; disgust, aversion. 2. பகைமை; hatred, enmity. 3. சினம் (சூடா.); wrath. 4. விருப் பின்மை; dislike displeasure. *"வெறுப்பில வேண்டும்" (குறள், 696).* 5. துன்பம் (பிங்.); affliction. 6. கலக்கம் (திவா.); confusion. 7. அச்சம் (பிங்.); fear. 8. செறிவு (தொல். சொல். 347); abundance.

*[வெறு → வெறுப்பு]*

வெறுப்பு[2] *veṟuppu,* பெ.(n.) வெறுமை உணர்வு, மனச்சோர்வு, சலிப்பு; feeling of emptiness (caused by frustration). *'வாழ்க்கையில் வெறுப்புத் தட்டிவிட்டது'. 'பதவி உயர்வு கிடைக்காததால் வெறுப்பு அடைந்திருக்கிறார்'.*

*[வெறு → வெறுப்பு]*

வெறுப்புக்காட்டுதல் *veṟuppu-k-kāṭṭutal,* பெ.(n.) பரிவுகாட்டாமை; unaffection.

*[வெறுப்பு + காட்டுதல்]*

வெறுப்புக்கொடு–த்தல் *veṟuppu-k-koḍu-,* செ.கு.வி.(v.i.) 1. அருவருப்பு உண்டாம்படி நடத்தல்; to behave in a disgusting manner. 2. அருவருப்பு உண்டாக்குதல் (யாழ்.அக.); to be disgusting.

*[வெறுப்பு + கொடு–,]*

வெறும் *veṟum,* பெ.எ.(adj.) 1. உள்ளடக்கம் இல்லாத; empty. *'எண்ணெய் இல்லாத வெறுங் குடுவை'. 'வெறும் வயிற்றில் மாத்திரை சாப்பிடாதே'.* 2. (உடல், உடலுறுப்பு முதலியவை குறித்து வருகையில்) எதுவும் அணியாத! உடன் வேறு எதுவும் இல்லாத; bare, naked. *'யாரோ அலறும் ஒலி கேட்டதும் வெறும் உடம்போடு தெருவுக்கு ஓடிவந்தார்'.* 3. 'வேறு எதுவும் இல்லாமல் குறிப்பிட்டது மட்டும் தான்' என்பதைக் கூறப்பயன்படும் சொல்; mere, nothing but. *'இதெல்லாம் வெறும் பொய்ச்செய்தி'. 'வெறுசோற்றை எப்படிச் சாப்பிட முடியும்?'*

*[வெறு → வெறும்]*

வெறும்பருக்கை *veṟum-parukkai,* பெ.(n.) வெறுஞ்சோறு பார்க்க; see *veṟuñ-cōṟu.*

*[வெறு(மை) + பருக்கை]*

வெறும்பாட்டம் *veṟum-pāṭṭam,* பெ.(n.) வெண்பாட்டம் பார்க்க; see *veṇ-pāṭṭam.*

*[வெறு–மை + பாட்டம்]*

வெறும்பானை *veṟum-pāṉai,* பெ.(n.) வெற்றுப்பானை, ஒன்றுமில்லாப்பானை; empty pot.

*[வெறு(மை) + பானை]*



வெறும்பேச்சு *veṟum-pēccu,* பெ.(n.) வீண்சொல்; unneccessary-talk.

*[வெறு(மை) + பேச்சு]*

வெறும்பிலுக்கு *veṟum-pilukku,* பெ.(n.) *வீண்பகட்டு;* mere glitter, foppery. *'வெறும்பிலுக்கு வண்ணான் மாற்று'.*

*[வெறு(மை) + பிலுக்கு]*

வெறும்புறங்கூற்று *veṟumpuṟaṅ-kūṟṟu,* பெ.(n.) அலர்மொழி (யாழ்.அக.); scandal.

*[வெறும்புறங்கூறு → வெறும்புறங்கூற்று]*

வெறும்புறங்கூறு—தல் *veṟum-puṟaṅ-kūṟu-,* செ.கு.வி.(v.i.) 1. குறளை கூறுதல் (திவா.); to spread tales. 2. அலர் தூற்றுதல் (யாழ்.அக.); to utter slanderous words.

*[வெறு(மை) + புறம் + கூறு]*

வெறும்புறம் *veṟum-puṟam,* பெ.(n.) 1. ஒன்றுமில்லாத நிலை; empty condition. *"வெறும்புறத்திலே ஆலத்தி வழிக்க வேண்டுங் கையிலே" (ஈடு. 1, 8, 9).* 2. காரணமின்மை; absence of reason or purpose. *"வெறும்புறத்திலே தன்னதல்லாததைத் தன்னதென்று ஏறட்டுக் கொள்ளக் கடவ அவன்" (ஈடு. 9, 8, 7).*

*[வெறு(மை) + புறம்]*

வெறும்பூ *veṟum-pū,* பெ.(n.) பிஞ்சில்லாப்பூ; flower only.

*[வெறு(மை) + பூ]*



வெறும்பெரியவன் *veṟum-periyavaṉ,* பெ.(n.) அறிவில் முதிராது தோற்றத்தால் மட்டும் பெரியவனாகத் தோன்றுபவன்; one who is a grown-up physically but not intellectually.

*[வெறு(மை) + பெரியவன்]*

வெறும்பொய் *veṟum-poy,* பெ.(n.) மெய்யின் கலப்பு அற்ற முழுப்பொய்; down right lie, unmixed false hood.

*[வெறு(மை) + பொய்]*

வெறும்வயிறு *veṟum-vayiṟu,* பெ.(n.) 1. ஒன்றுமில்லா வயிறு; empty stomach. 2. கருவுறாத வயிறு; abdomen with impregnation.

*[வெறு(மை) + வயிறு]*

வெறுமணம் *veṟu-maṇam,* பெ.(n.) மணமின்மை; odorless.

*[வெறு(மை) + மணம்]*

**வெறுமன்** *veṟuman,* பெ.(n.) வீண்; worthlessness. *"அப்பச்சை வெறுமனாகாமே" (ஈடு. 4, 10, 7).*

*[வெறு(மை) + மன்]*

**வெறுமனே** *veṟumaṉē,* வி.எ.(adv.) 1. வீணாக; in vain, without advantage. 2. வேலையின்மை; without doing anything, idly. *"வெறுமனே தாளத்திற்கு இசைவிடும் எழிற்கையினை" (பதிற்றுப். 61, உரை).*

*[வெறுமன் → வெறுமனே]*

**வெறுமனை** *veṟumaṉai,* வி.எ.(adv.) வெறுமனே (யாழ்.அக.) பார்க்க; see *veṟumaṉē.*

*[வெறுமன் → வெறுமனை]*

**வெறுமை** *veṟumai,* பெ.(n.) 1. ஒன்றுமின்மை; emptiness, rapidness. 2. பயனின்மை; profitlessness, uselessness. *"வெறுமையின் மனைகள் வாழ்ந்து" (தேவா. 838, 3).* 3. அறிவின்மை; ignorance. *"வெறுமையினவரைப் போக்கி" (சீவக. 1908).* 4. வறுமை; poverty. *"வெறுமை யிடத்தும்.......... மறுமை மனத்தரே யாகி" (நாலடி, 329).* 5. கலப்பின்மை; quality of being unmixed or pure. *'வெறுஞ் சிவப்பு'.*

*[வெறு → வெறுமை]*

**வெறுமைநிலை** *veṟumai-nilai,* பெ.(n.) வறிதான நிலை; state of being empty.

*[வெறுமை + நிலை]*

**வெறுமைபோக்கி** *veṟumai-pōkki,* பெ.(n.) முண்டினிவிருட்சம் பார்க்க; see *muṇḍiṉi-virutšam.*

*[வெறுமை + போக்கி]*

**வெறுமொருவன்** *veṟu-moruvaṉ,* பெ.(n.) தனித்த ஒருவன்; single, solitary person. *"கலகமாரன் வெறுமொருவனால்" (தக்கயாகப். 25).*

*[வெறு(மை) + ஒருவன்]*

**வெறுமொன்று** *veṟum-oṉṟu,* பெ.(n.) தனித்த ஒன்று; single, solitary thing. *"தாம வில்லு வெறுமொன்று முன்னம்" (தக்கயாகப். 23).*

*[வெறு(மை) + ஒன்று]*

**வெறுவயிறு** *veṟu-vayiṟu,* பெ.(n.) 1. ஒன்றுமில்லா வயிறு; empty stomach. 2. கருவுறாத வயிறு; abdomen with impregnation.

*[வெறு(மை) + வயிறு]*

**வெறுவாக்கிலங்கெட்டவன்** *veṟu-vākkilaṅ-keṭṭavaṉ,* பெ.(n.) வெறுவாய்க்கிலை கெட்டவன் பார்க்க; see *veṟu-vāy-k-kilai-keṭṭavaṉ.*

*[வெறுவாய்க்கு + இலை + கெட்டவன்]*

**வெறுவாய்** *veṟuvāy,* பெ.(n.) வறிதானவாய்; empty mouth.

*[வெறு(மை) + வாய்]*

**வெறுவாய்க்கிலைகெட்டவன்** *veṟuvāy-k-kilai-keṭṭavaṉ,* பெ.(n.) ஒன்றுமில்லாத ஏழை எவறும் வாயில் வெற்றிலை போட்டுக் கொள்ளவும் ஏதுமற்றவன் (சீவக. அரும்.); extremely poor man, as not even having a betel leaf to chew, used in contempt.

*[வெறுவாய்க்கு + இலை + கெட்டவன்]*

வெறுவாய்க்குமட்டல் *veṟuvāy-k-kumaṭṭal,* பெ.(n.) வெள்ளோர்க்காளம் பார்க்க; see *veḷḷōr-k-kāḷam.*

*[வெறு(மை) + வாய் + குமட்டல்]*

வெறுவாய்கூறு-தல் *veṟuvāy-kūṟu-,* செ.கு.வி.(v.i.) பிதற்றுதல் (வின்.); to babble.

*[வெறு(மை) + வாய் + கூறு]*

வெறுவாய்பசப்பு[1]-தல் *veṟu-vāy-paśappu-,* செ.கு.வி.(v.i.) வெறுவாயலட்டு 1 பார்க்க (யாழ்.அக.); see *veṟu-vāy-alaṭṭu 1.*

*[வெறு(மை) + வாய் + பசப்பு]*

வெறுவாய்பசப்பு[2]-தல் *veṟu-vāy-paśappu-,* செ.குன்றாவி.(v.t.) வெறுஞ் சொற்களால் வசப்படுத்துதல்; to loax with empty words.

*[வெறு(மை) + வாய் + பசப்பு]*

வெறுவாயலட்டு-தல் *veṟu-vāy-alaṭṭu-,* செ.கு.வி.(v.i.) 1. வீண் பேச்சுப் பேசுதல் (யாழ்.அக.); to ulter empty or useless words. 2. வெறுவாய்கூறு-, பார்க்க; see *veṟu-vāy-kūṟu-.* 3. தற்பெருமை பேசுதல்; to brag.

*[வெறு(மை) + வாய் + அலட்டு-தல்]*

வெறுவியர் *veṟu-viyar,* பெ.(n.) 1. பயனற்றவர்; worthless, insignificant persons. *"இருபிறப்பும் வெறுவியரா யிருந்தார் சொற் கேட்டு" (தேவா. 962, 5).*

*[வெறு(மை) + இயர்]*

வெறுவெளி *veṟu-veḷi,* பெ.(n.) வெற்றிடம்; etheric space.

*[வெறு (மை) + வெளி → வெறுவெளி]*

வென்[1] *veṉ,* பெ.(n.) வெற்றி; victory. *"வென்டுவெற் செழிய" (புறநா. 19).*

*[வெல் → வென்]*

வென்[2] *veṉ,* பெ.(n.) வெந் பார்க்க; see *ven.* *"மயில்வென் றனில்வந்தருளுங் கனபெரி யோனே" (திருப்பு. 10).*

தெ. வென்னு; க. பென்னு.

*[வெரிந் → வென்]*

வென் *veṉ,* பெ.(n.) முதுகு; back.

*[வெரிந் → வென்]*

வென்றநாமங்கொடு-த்தல் *veṉṟa-nāma-ṅ-koḍu-,* செ.கு.வி. (v.i.) ஒருவனுக்கு அவனை வென்றடக்கியவன் பெயரைக் கொடுத்தல்; to give a person the name of his conqueror. *"உத்தம சோழனென் றிவர் தமக்கு வென்ற நாமங் கொடுத்து" (S.I.I.iv, 29-30).*

*[வெல் + நாமம் + கொடு-,]*

**Skt.** *Nāman* > த. நாமம்.

வென்றவன் *veṉṟavaṉ,* பெ.(n.) 1. வெற்றி பெற்றவன்; victor. *"வென்றவன் வென்றவன் வேள்வியில் விண்ணவர் தங்களை" (தேவா. 1024, 5).* 2. பற்றற்றுப் பேறுபெற்றவன்; siddha, as one who has renounced the world. *"வென்றவ ருலகம் பெற்ற வேந்து" (சீவக. 956).* 3. வென்றோன், 2 பார்க்க; see *veṉṟōṉ, 2.* *"வென்றவன் பாதஞ் சேர்ந்து" (சீவக. 1437).*

*[வெல் → வென் → வென்றவன்]*

**வென்றான்** *venṟāṉ,* பெ.(n.) வென்றோன் பார்க்க; see *venṟōṉ.* *"வென்றான் வினையின் றொகை" (சூளா. காப்பு.).*

*[வெல் → வென் → வென்றான்]*

**வென்றி** *venṟi,* பெ.(n.) வெற்றி; victory, triumph. *"வேலன்று வென்றி தருவது" (குறள், 546).*

ம. வின்னி.

*[வெல் → வென் → வென்றி]*

**வென்றிக்கூத்து** *venṟi-k-kūttu,* பெ.(n.) மாற்றானொடுக்கமும் மன்னனுயர்ச்சியுங் காட்டுங் கூத்து (சிலப். 3, 13, உரை); *(nātya)* dance exhibiting the downfall of the enemy and the triumph of one's king.

*[வென்றி + கூத்து]*

**வென்றிக்கொடி** *venṟi-k-koḍi,* பெ.(n.) வெற்றிக்கொடி; victoriya triumph.

*[வென்றி + கொடி]*

**வென்றிமாலை** *venṟi-mālai,* பெ.(n.) 1. வெற்றிவாகை (யாழ்.அக.); see *veṟṟi-vākai.* 2. வெற்றி வரிசை; series of victories. *"வென்றிமாலை கேட்டு" (சீவக. 2325).*

*[வென்றி + மாலை]*

**வென்றிமாலைக்கவிராயர்** *venṟi-mālai-k-kavirāyar,* பெ.(n.) 17–ஆம் நூற்றாண்டிலிருந்து வரும் திருச்செந்தூர்ப் புராணம் இயற்றியவருமாகிய ஆசிரியர்; a poet author of *tiruccentūr-p-purāṇam*, 17th C.

*[வெற்றிமாலை + கவிராயர்]*

**வென்றியன்** *venṟiyaṉ,* பெ.(n.) வென்றோன் 1 பார்க்க; see *venṟōṉ 1.* *"செருமேம்பட்ட வென்றியர்" (கலித். 27, 25).*

*[வெல் → வென் → வென்றியன்]*

**வென்றோர்** *venṟōr,* பெ.(n.) புலனடங்கப் பெற்றோர், வெற்றியடைந்தோர்; controller of senses, victorious person.

*[வெல் → வென் → வென்றோர்]*

**வென்றோன்** *venṟōṉ,* பெ.(n.) வென்றவன் 1, 2 பார்க்க; see *venṟavaṉ 1, 2.* 2. அருகக் கடவுள் (சூடா.); arhat, as one who conquered the world by his renunciation.

*[வெல் → வென் → வென்றோன்]*

**வென்னிடுதல்** *veṉṉiḍutal,* பெ.(n.) புறங்கொடுத்தல்; retreat.

*[வெரிந் → வெந் → வென் → இடுதல்]*

**வென்னீர்** *veṉṉīr,* பெ.(n.) சூடான நீர்; hot water.

*[வெந்நீர் → வென்னீர்]*

**வென்னீர்ப்புண்** *veṉṉīr-p-puṇ,* பெ.(n.) கொதிநீர்பட்ட புண்; scalds.

*[வெந்நீர் → வென்னீர் + புண்]*

**வென்னீறாதல்** *veṉṉīṟātal,* பெ.(n.) நீற்றுப் போதல், பற்பமாதல்; to slake, as lime.

*[வெறுநீறு → வென்னீறு + ஆதல்]*

**வெனப்பீலி** *veṉa-p-pīli,* பெ.(n.) இருவேலி; khus-khus root - vetiveria zizanioides.

**வெனப்பீலிகம்** *veṉa-p-pīligam,* பெ.(n.) இருவேலி; khus-khus root - vetiveria zizanioides.

# வே

வே[1] *vē,* பெ.(n.) தமிழ் நெடுங்கணக்கில் 'வ்' என்ற மெய்யெழுத்தும் 'ஏ' என்ற உயிரெழுத்தும் சேர்ந்து உருவான உயிர்மெய் எழுத்து; the compound of v and *ā.*

*[வ் + ஏ = வே]*

வே[2] *vē,* 13 செ.கு.வி. (v.i.) 1. எரிதல்; to burn. *"புனத்து வெறிகமழ் சந்தனமும் வேங்கையும் வேமே" (நாலடி, 180).* 2. வெப்பமாதல்; to be hot, sultry, as the weather, to be scorched. *'வெயிற்காலமாகையால் பகலெல்லாம் வேகின்றது'.* 3. அழலுதல்; to be inflamed, as the stomach. 4. கொதிக்கும் நீர் எண்ணெய் முதலிய வற்றிற் பக்குவப்படுதல்; to be boiled, cooked, as rice. *'சோறு வேகவில்லை'.* 5. புடம் வைக்கப்படுதல்; to be refined by burning in a crucible as gold. *"வெந்தெரி பசும்பொன்" (சீவக. 585).* 6. துன்பமுறுதல்; to be distressed by grief or passion. *'துயரச் செய்தி கேட்ட என் மனம் வேகின்றது'.* 7. சினமுறுதல்; to be angry. *"கட்டுர் நாப்பண் வெந்து வாய்மடித்து" (புறநா. 295).*

*[வ் + ஏ = வே]*

வே[3] *vē,* பெ.(n.) வேவு (யாழ்.அக.); spying.

வேக்கா *vēkkā,* பெ.(n.) கொருக்காப்புளி; a tree-pithecolobium duice.

*[வே → வேக்கா]*



வேக்காடு[1] *vēkkāḍu,* பெ.(n.) 1. எரிகை; burning. *'செங்கலுக்கு வேக்காடு பற்றாது'.* 2. கொதிக்கும் நீர் முதலியவற்றில் வேகுகை; boiling, cooking. 3. அழற்சி; inflammation, as of the stomach. 4. வெந்த புண் (வின்.); burn, scald. 5. வெப்பம்; heat. *'இன்றைக்குக் காற்றில்லாமல் வேக்காடா யிருக்கிறது?'* 6. பொறாமை; envy, jealosy, heart-burning. *'இந்த வேக்காடு உனக்கேன்?'*

*[வே + காடு]*

வேக்காடு[2] *vēkkāḍu,* பெ.(n.) 1. (அரிசி காய்கறி முதலியவை) வெந்திருக்கும் நிலை; boiled state. *'முட்டையை அரை வேக்காட்டில் கொடு'.* 2. புழுக்கம்; sultriness. *'மின்விசிறி இல்லாமல் இந்த வேக்காட்டில் எப்படி வேலை செய்வது?'*

*[வே + காடு]*

வேக்காளப்படு-தல் *vēkkāḷa-p-paḍu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. மனத்துயரப்படுதல்; to be pained. 2. வெட்கப்படுதல்; to be shy.

*[வேக்காளம் + படுதல்]*

வேக்காளம்[1] *vēkkāḷam,* பெ.(n.) 1. வேக்காடு (இ.வ.) பார்க்க; see *vēkkāḍu.* 2. கோபம் (இ.வ.); anger. 3. மனத்துயர்;

grief, sorrow. 4. வெட்கம் (யாழ்.அக.); shyness.

*[வே → வேக்காளம்]*

வேக்காளம்[2] *vēkkāḷam,* பெ.(n.) 1. மழையில்லாக் காலம்; a dry period without rain. 2. வெக்காளம்; sultriness. 3. வாய் வேக்காளம்; navsia.

*[வே → வேக்காளம்]*

வேகசரம் *vēgacaram,* பெ.(n.) ஒட்டகம் (வின்.); camel.



வேகசாரம் *vēgacāram,* பெ.(n.) 1. ஒட்டகம்; camel. 2. குதிரை; horse. 3. வேகமாக மூச்சு விடல்; hard breathing. 4. துரிதமாக நடத்தல்; fast walking.

வேகடம் *vēgaḍam,* பெ.(n.) 1. மணியின் மாசுநீக்குகை; polishing and cleaning gems. *"வேகடஞ்செய் மணியென மின்னினார்" (கம்பரா. நீர்விளை. 22).* 2. புதுமை வேலை (வின்.); fancy work. 3. இளமை; youthfulness. 4. மீன் வகை (வின்.); a kind of fish.

*[வே → வேகடம்]*

வேகடன் *vēgaḍaṉ,* பெ.(n.) 1. வேகடி பார்க்க; see *vēgaḍi.* 2. இளைஞன்; youth.

*[வே → வேகடன்]*

வேகடி *vēgaḍi,* பெ.(n.) 1. மணிமாசு நீக்குவோன்; one who cleans and polishes gems. *"வேகடி துரிசறுத்தடுக்கு வானது போல்" (உபதேசகா. சிறப்புப். 12).*

*[வேகடம் → வேகடி]*

வேகடை *vēgaḍai,* பெ.(n.) வேகடம் பார்க்க (வின்.); see *vēgaḍam.*

*[வேகடம் → வேகடை]*

வேகடைத்தாள்[1] *vēgaḍai-t-tāḷ,* பெ.(n.) ஒளியுள்ள ஒருவகை மெல்லிய வண்ணத் தகடு (வின்.); foliated tinsel.

*[வேகடை + தாள்]*

வேகடைத்தாள்[2] *vēgaḍai-t-tāḷ,* பெ.(n.) குருநாப்பட்டை; a thin metallic leaf.

*[வேகடை + தாள்]*

வேகடையாள் *vēgaḍai-yāḷ,* பெ.(n.) வீண்பகட்டான ஆள் (வின்.); fop.

*[வேகடை + ஆள்]*

வேகடைவேலை *vēgaḍai-vēlai,* பெ.(n.) உண்மையில்லாத (போலி) வேலை (வின்.); unsubstantial work.

*[வேகடை + வேலை]*

வேகத்தடுப்பு / வேகத்தடை *vēga-t-taḍuppu / vēga-t-taḍai,* பெ.(n.) (வாகனங்களின் வேகத்தைக் குறைப்பதற்காகச் சாலையில்) குறுக்கே சற்று மேடாக ஏற்படுத்தப்பட்டிருக்கும் அமைப்பு; speed breaker. *'இந்த சாலையின் சந்திப்பில் வேகத்தடை வந்த பின் விபத்துகள் குறைந்து விட்டன'.*

*[வேகம் + தடுப்பு / வேகம் + தடை]*

வேகத்தி *vēgatti*, பெ.(n.) பூ வழலை; a kind of salt obtained from fuller's earth.

வேகப்பந்துவீச்சு *vēga-p-pandu-viccu*, பெ.(n.) (கிரிக்கெட்) (மட்டைப் பந்து விளையாட்டில்) மிகுந்த வேகத்தில் பந்து வீசப்படுதல்; (in cricket) fast bowling. *'அவருடைய வேகப்பந்து வீச்சுதான் இன்றைய கட்டத்தின் சிறப்பு அம்சம்' (உ.வ.).*

*[வேகம் + பந்து + வீச்சு]*



வேகப்புள் *vēga-p-pul*, பெ.(n.) கருடன்; sacred kite. *"வேகப்புள்ளின் வெவ்விசை கேட்ட நாகமகளிரின்" (பெருங். உஞ்சைக். 44, 44).*

*[வேகம் + புள்]*

வேகம்[1] *vēgam*, பெ.(n.) 1. விரைவு; swiftness, quickness. *"மதியினுக்கிவர்ந்த வேகமா மணிநாகம்" (சீவக. 982).* 2. விரை வளவு; speed, velocity, impetuosity. *'அவன் குதிரை வாயுவேகமாய்ச் சென்றது'.* 3. விசை; force. *"வேகமொடு வந்ததெழ வேகவதி யாறு" (திருவாலவா. 7, 6).* 4. வலிமை; power, strength. *'மருந்தின் வேகம் இன்னுந் தணியவில்லை'.* 5. கோபம்; anger. *"ஓவா வேகமொடுருத்து" (கலி. 103).* 6. மனக் கலக்கம்; agitation, unrest. *"வேகங் கெடுத்தாண்ட வேந்தனடி வெல்க" (திருவாச. 1, 6).* 7. கடுமை; severity. *'சுரம் வேகமாயடிக்கிறது'.* 8. மலக்கழிவு (சாரங்க. 244, கீழ்க்குறிப்பு); expulsion of urine, faeces, etc. 9. விந்து (யாழ்.அக.); semen. 10. நச்சு; poison. *"அரசு கான்ற வேகம் மிக்கட்ட தன்றே" (சீவக. 1274).* 11. நாற்றம் பார்க்க; see *nāṟṟam*, bad odour. *'வேகமடிக்கின்றது'.* 12. வெள்ளப் பெருக்கு (இலக்.அக.); flood. 13. கீழ் (அக.நி.); lowness. 14. பரவுகை (அரு.நி.); circulation, as of poison. 15. உடம்பு (அரு.நி.); body. 16. கொடி வகை (சங்.அக.); hare leaf. 17. சினம்; anger. *"ஓவா வேகமோ டுருத்து" (கலித். 103).*

*[வே → வேகு → வேகம்] (வே.க.பக். 135)*

வேகமடக்கல் *vēga-maḍakkal*, பெ.(n.) வேகநிரோதம் பார்க்க; see *vēga-nirōdam*.

*[வேகம் + மடக்கல்]*

வேகர் *vēgar*, பெ.(n.) தூதுவர்; messenger, courier. *"நல்வேந்தனுக் குரைத்தனர் வேகர்" (கம்பரா. அகலி. 39).*

தெ. வேகருலு.

*[வேயர் → வேகர்]*

வேகரம் *vēgaram*, பெ.(n.) 1. கடுமை (சங்.அக.); severity. 2. உறைப்பு (யாழ்.அக.); pungency.

*[வேகம் → வேகரம்]*

வேகவதி *vēgavati*, பெ.(n.) 1. வைகை; the vaigai river in the madura district. *"வேகமொடு வந்தெழு வேகவதி யாறு"*

*(திருவாலவா. 7, 6).* 2. காஞ்சீபுரத்தருகில் ஓடும் கம்பாநதி (குருபரம். 170) (காஞ்சிப்பு. தலவி. 23); the kampa river near kanjeevaram. 3. தன் காதற்றிறத்தாற் புகழ் விளங்கிய ஓர் இளவரசி; a princess famed for her constancy. *"வேகவதி யென்றுரைக்குங் கன்னி" (திவ். இயற். பெரிய. ம. 52).*

*[வேகம் → வேகவதி]*

வேகவை-த்தல் *vēgavai-*, செ.குன்றாவி. (v.t.) சூடாற் பக்குவப்படுத்துதல்; to boil.

*[வே → வேகு → வேகவை-,]*

வேகா *vēgā*, இடை. (part.) 1. வேகாது; unboiled. 2. வேகமின்மை; slow.

*[வேகாது → வேகா]*

வேகாத்தலை *vēgā-t-talai*, பெ.(n.) விண் வெளி; open atmosphere.

*[வேகா + தலை]*

வேகாத்தலைவழுக்கை *vēgā-t-talai-vaḻukkai*, பெ.(n.) இள வழுக்கை; a foetus three months old.

*[வேகாத்தலை + வழுக்கை]*

வேகாதம் *vēgātam*, பெ.(n.) மலக்கட்டு; a state of bowels in which the irregular evacuations are very hard and expelled with difficulty-costiveness.

*[வே → வேகாதம்]*

வேகாதுப்பு *vēgāduppu*, பெ.(n.) முடியண்ட படருப்பு; a kind of salt prepared out of human skull.

*[வே → வேகாதுப்பு]*

வேகாமை *vēgāmai*, பெ.(n.) பச்சை; raw.

*[வே → வேகாமை]*

வேகாரி¹ *vēgāri*, பெ.(n.) கட்டாய வேலை (இ.வ.); compulsory labour.

*[வே → வேகாரி]*

வேகாரி² *vēgāri*, பெ.(n.) பழைய வரி வகை (S.I.I.V.95); an ancient tax.

*[வே → வேகாரி]*

வேகாவரி¹ *vēgāvari*, பெ.(n.) நன்றாகச் சுடப்படாத செங்கல் (இ.வ.); underburnt brick.

*[வே + ஆ + வரி]*

வேகாவரி² *vēgāvari*, பெ.(n.) ஒன்றுக்கும் உதவாதவ-ன்-ள் (இ.வ.); good-for-nothing person.

இ. பேகர்.

*[வே + ஆ + வரி]*

வேகாவாரி *vēgāvāri*, பெ.(n.) வேகாவரி¹ பார்க்க; see *vēgā-vāri.*

*[வே + ஆ + வாரி]*

வேகாளம்¹ *vēgāḷam*, பெ.(n.) 1. காங்கை; heat. 2. வேக்காடு; sultriness. *"அணிலத்தாம் வேகாளத்தைத் தணிக்கும்" (பதார்த்த. 428).* 2. கோபம் (வின்.); anger.

*[வேக்காளம் → வேகாளம்]*

வேகாளம்² *vēgāḷam*, பெ.(n.) விரைவு (வின்.); swiftness.

*[வேகம் → வேகாளம்]*

**வேகாளம்³** *vēgāḷam*, பெ.(n.) வெக்காளம் பார்க்க; see *vekkāḷam*.

*[வெக்காளம் → வேக்காளம்]*

**வேகி¹-த்தல்** *vēgi-*, 11 செ.கு.வி. (v.i.) 1. விரைதல்; to be swift. *"பாச தரனெதிர் நீலயயிலொரு பாகனென வேகியா" (பாரத. மணி மான். 52).* 2. கோபித்தல்; to be angry. *"சம்பரன் வேகித்து மதமுறு மிமையோர் சேனை வதஞ்செய்வான்" (ஞானவா. வீம. 16).*

*[வேகம் → வேகு → வேகி]*

**வேகி²** *vēgi*, பெ.(n.) 1. வேகமுடையவ-ன்-ள் (இலக்.அக.); one who is agile or quick. 2. கோபமுடையவ-ன்-ள்; angry person. *"வேகியானாற்போற் செய்த வினையினை வீட்டலோரார்" (சி.சி. 1, 50).* 3. வஞ்சகமுடைய வ-ன்-ள் (நாமதீப. 171); deceilful person.

*[வேகம் → வேகு → வேகி]*

**வேகி³** *vēgi*, பெ.(n.) மிளகாய்; chilly.

**வேகிகம்** *vēgigam*, பெ.(n.) அடம்புக்கொடி பார்க்க; see *aḍambu-k-koḍi*.

**வேகிதன்** *vēgitaṉ*, பெ.(n.) விரைவுடையான் (சுக்கிரநீதி. 114); one who is quick, as in action.

*[வேகம் → வேகு → வேகிதன்]*

**வேகிதை** *vēgidai*, பெ.(n.) விரைவு (யாழ்.அக.); swiftness.

*[வேகம் → வேகு → வேகிதை]*

**வேகு-தல்** *vēgu-*, செ.கு.வி. (v.i.) காய்தல்; boiling.

*[வே → வேகு → வேகுதல்]*

**வேங்கக்கல்** *vēṅga-k-kal*, பெ.(n.) ஒரு வகைக்கல்; a kind of stone, white translucent quartz.

**வேங்கடக்கோட்டம்** *vēṅgaḍa-k-kōṭṭam*, பெ.(n.) தொண்டை மண்டலத்தின் கோட்டங்களுள் திருப்பதி மலையைச் சூழ்ந்த நாட்டுப்பகுதி; Mt. tiruppati and the surrounding region, a division of *toṇḍai-māṇḍalam*.

*[வேங்கடம் + கோட்டம்]*

**வேங்கடம்¹** *vēṉgaḍam*, பெ.(n.) 1. தமிழ் வழங்கு நிலத்தின் வடவெல்லையான திருப்பதி மலை; the tiruppati hills which formed the northern boundary of ancient tamil country. *"வடவேங்கடந் தென்குமரி" (தொல். பாயி).* 2. திருப்பதி என்ற திருமால் திருக்கோயில்; tiruppati a *visṇu* shrine.

**வேங்கடாசலபதி** *vēṉgaḍacala-pati*, பெ.(n.) திருவேங்கடத்துக் கோயில் கொண்ட திருமால்; *visṇu*, as the lord of lit. tiruppati.

*[வேங்கடாசலம் + பதி]*



**வேங்கடாசலம்** *vēṅgaḍa-calam*, பெ.(n.) வேங்கடம் 1 பார்க்க; see *vēṅkaḍam*.

*[வேங்கடம் + அசலம்]*



வேங்கை



வேம்பு



வேலிப்பருத்தி

**வேங்கடாசலமூர்த்தி** *vēṅgaṭācala-mūrtti*, பெ.(n.) வேங்கடாசலபதி பார்க்க; see *veṅgaḍacala-pati.*

*[வேங்கடாசலன் + மூர்த்தி]*

**வேங்கடாசலன்** *vēṅgaḍā-calaṉ*, பெ.(n.) வேங்கடாசலபதி பார்க்க; see *vēṅkaṭācala-pati.*

**வேங்கடேசன்** *vēṅgaḍēšaṉ*, பெ.(n.) வேங்கடாசலபதி பார்க்க; see *vēṅgaḍācala-pati.*

*[வேங்கடம் + ஈசன்]*

**வேங்கடேசுவரன்** *vēṅgaḍēšuvaraṉ*, பெ.(n.) வேங்கடாசலபதி பார்க்க; see *vēṅkaṭāšalapati* (M.N.A.327).

*[வேங்கடம் + ஈசுவரன்]*

**வேங்கியம்** *vēṅgiyam*, பெ.(n.) 1. குறிப்புப் பொருள் (சங்.அக.); suggested sense. 2. வியங்கியம் 2 பார்க்க; see *viyaṅgiyam.* 3. வெட்கம்; shame. *'அவளை வேங்கிய மில்லாமற் பேசினான்'.*

**வேங்கை**[1] *vēṅgai*, பெ.(n.) 1. புலிவகை; tiger. felis tigris. *"குயவரி வேங்கை யனைய வயவர்" (பு.வெ. 3, 23).* 2. நீண்ட மரவகை; east indian kino tree. 1.tr., ptero carpus marsulpium. *"சந்தனமும் வேங்கையும் வேமே" (நாலடி, 180).* 3. மலை; a hill. *"வேங்கை வெற்பின்" (புறநா. 336).* 4. வேங்கைநாடு பார்க்க; see *vēṅgai-nāḍu. "வேங்கை வளநாடன்" (வீரசோ. அலங். 23).* 5. பொன் (பிங்.); gold. 6. புலி தொடக்கி; a thorny shrub which see.

தெ. வேகி; ம. வேன்னா.

*[வேம் → வேங்கை] (மு.தா.145)*

**வேங்கை**[2] *vēṅgai*, பெ.(n.) நீண்ட மரவகை; east indian kino tree. 1.tr., ptero carpus marsulpium. *"சந்தனமும் வேங்கையும் வேமே" (நாலடி, 180).*

வேங்கை வகைகள் :

1. வேங்கை; indian kino tree. 2. சிறு வேங்கை; Bredelia retusa. 3. முள்வேங்கை; Bredelia montana. 4. சந்தன வேங்கை; Pterocarpus santalina. 5. உதிர வேங்கை; pterocarpus marsu pium. 6. சோலை வேங்கை (காட்டு சாதிக்காய்); wild mace-myristica malabarica. 7. சாற்று வேங்கை (பெண் மரம்). 8. பெண் வேங்கை. (same as No.7). 9. மணி முத்து வேங்கை. 10. வச்சிர வேங்கை.

**வேங்கைக்கல்** *vēṅgai-k-kal*, பெ.(n.) வேங்கக்கல் பார்க்க; see *vēṅga-k-kal.*

*[வேங்கை + கல்]*

**வேங்கைக்குறித்தோன்** *vēṅgai-k-kuṟittōṉ*, பெ.(n.) சிங்கம்; lion.

*[வேங்கை + குறித்தோன்]*

**வேங்கைநாடு** *vēṅgai-nāḍu*, பெ.(n.) கோதாவரி கிருட்டினா மாவட்டத்தைச் சேர்ந்ததும் பத்துப் பதினோராம் நூற்றாண்டு களில் சோழ மன்னனால் ஆட்சி செய்யப்பட்டு வந்ததுமான ஓர் நாடு; the *vēṅgi* country comprising the godavari and the kistna districts, ruled by the *cōḻas* in the 10th and 11th C.

*[வேங்கை + நாடு]*

**வேங்கைப்பிசின்** *vēṅgai-p-pišiṉ*, பெ.(n.) வேங்கை மரத்தின் பிசின்; the gum obtained from the indian kino tree.

*[வேங்கை + பிசின்]*

**வேங்கைமண்டலம்** *vēṅgai-maṇḍalam*, பெ.(n.) வேங்கைநாடு பார்க்க; see *vēṅgai-nāḍu*. *'வடதிசை வேங்கை மண்டலங் கடந்து'.*

*[வேங்கை + மண்டலம்]*

**வேங்கைமரம்** *vēṅgai-maram*, பெ.(n.) உறுதிவாய்ந்த மரவகைகளுள் ஒன்று, கட்டட வேலைகளுக்குப் பயன்படும் சிறந்த மரவகையாகும் (பொ.வழ.); a kind of wood strongest.

*[வேங்கை + மரம்]*

**வேங்கையூறாகம்** *vēṅgai-yūṟāgam*, பெ.(n.) வேங்கைப்புலி; a large streaked tiger-man eater.

*[வேங்கை + யூறாகம்]*



**வேங்கைவயிரம்** *vēṅgai-vayiram*, பெ.(n.) வேங்கை மரத்து வயிரப்பாகம்; the middle hard core of the trunk of the tree-indian kino.

*[வேங்கை + வயிரம்]*

**வேச்சென்றிரு-த்தல்** *vēccenṟiru-*, செ.குன்றாவி. (v.t.) சூடு ஆறாதிருத்தல்; to remain warm.

*[வே + சென்றிரு]*

**வேசகம்**[1] *vēšagam*, பெ.(n.) 1. யானை வாலின் நுனி (பிங்.); tip of an elephant's tail. 2. வால் (சூடா.); tail. 3. குதிரையின் பிடரிமயிர் (நாமதீப. 211); horse's mane.

**வேசகம்**[2] *vēšagam*, பெ.(n.) வீடு (யாழ்.அக.); dwelling place, house.

**வேசங்கை** *vēšaṅgai*, பெ.(n.) ஒன்பது நிதியுளொன்று (சீவசம். MS.); one of nava-niti.

**வேசடை** *vēšaḍai*, பெ.(n.) துக்கம் (யாழ்.அக.); sorrow.

**வேசதாரி** *vēšadāri*, பெ.(n.) வேடதாரி பார்க்க; see *vēḍadāri*.

*[வேடதாரி → வேசதாரி]*

**வேசம்**[1] *vēšam*, பெ.(n.) வேடம்[1] பார்க்க; see *vēḍam*.

*[வேடம் → வேசம்]*

**வேசம்**[2] *vēšam*, பெ.(n.) 1. நுழைவு; entrance. 2. வீடு (யாழ்.அக.); house. 3. வேசையர் தெரு (யாழ்.அக.); street of harlots.

**வேசம்**[3] *vēšam*, பெ.(n.) கூர்ப்பு (யாழ்.அக.); vehemence.

**வேசம்**[4] *vēšam*, பெ.(n.) வேடகம் பார்க்க (வின்.); see *vēḍagam*.

**வேசம்**[5] *vēšam*, பெ.(n.) வேசை[2] பார்க்க (யாழ்.அக.); see *vēcai*.

**வேசம்**[6] *vēšam*, பெ.(n.) ஒனித்து வாரம்; vestribule of vulva-vagina.

**வேசயப்பத்திரி** *vēšaya-p-pattiri*, பெ.(n.) இலவங்கப் பத்திரி; cinnamon leaf.

*[வேசயம் + பத்திரி]*

**வேசயம்** *vēšayam*, பெ.(n.) இலவங்கம்; clove.

**வேசரம்**[1] *vēšaram*, பெ.(n.) வேசறவு பார்க்க; see *vēšaṟavu.*

தெ. வேசரமு.

**வேசரம்** *vēšaram*, பெ.(n.) 1. தெலுங்கு மொழி (வின்.); the telugu language. 2. சிற்ப வகை; a style of architecture. *"நாகரந் திராவிடம் வேசர மற்றுங் கிளந்தவற்றுளோர் பெற்றியின்.......... ஆலயங் காண்டக வெடுபோர்" (காஞ்சிப்பு. சிவ. 52).*

**வேசரம்**[3] *vēšaram*, பெ.(n.) ஒட்டகம் (யாழ்.அக.); camel.

**வேசரி** *vēšari*, பெ.(n.) கோவேறு கழுதை; mule. *"மணியணி வேசரி" (பரிபா. 22, 24).* 2. கழுதை (பிங்.); ass.

*[வே → வேசரி]*

**வேசறவு** *vēšaṟavu*, பெ.(n.) 1. மனச்சோர்வு; weariness, fatique. 2. துக்கம்; sorrow. *"வேசற வொழிதி" (காஞ்சிப்பு. தழுவக். 214).*

*[வேசறு + உ]*

**வேசறிக்கை** *vēšaṟikkai*, பெ.(n.) வேசறவு பார்க்க; see *vēšaṟavu.* *"இன்ப வீட்டினிடைத் துயின்றே வேசறிக்கை தீர்வேனா" (திருப்போ. சந். கொச்சகக்கலி. 4).*

*[வேசறு + அறிக்கை]*

**வேசறு-தல்** *vēšaṟu-*, 6 செ.கு.வி. (v.i.) 1. மனஞ் சோர்தல்; to be weary, fatiqued. 2. வருந்துதல்) to be vexed, distressed. *"என் பிழைக்கே குழைந்து வேசறுவேனை" (திருவாச. 6, 50).*

தெ. வேசறு; க. பேசறு.

*[ஏசறு → வேசறு]*

**வேசனம்** *vēšaṉam*, பெ.(n.) 1. மருதநிலத்தூர் (வின்.); town in an agricultural teract. 2. வீடு (யாழ்.அக.); house. 3. வாயில் (யாழ்.அக.); gate.

**வேசனைநாற்றம்** *vēšaṉai-nāṟṟam*, பெ.(n.) கதிரவன் வெப்பத்தாற் குளம் முதலியவற்றின் நீரினின்றெழும் நாற்றம்; odour due to the action of the sun's heat, as from a pond, etc. *"யாற்று வெந்நாற்று வேசனை நாற்றங் குதுகுதுப்ப" (பரிபா. 20, 13).*

*[வேசனை + நாற்றம்]*

**வேசா** *vēšā*, பெ.(n.) வேசி பார்க்க; see *vēši.* *"வேசாக்கள் பின்செல் வறியானில் விளங்க" (கந்தபு. பானுகோ. 41).*

*[வே → வேசா]*

**வேசாடல்** *vēšāḍal*, பெ.(n.) மனக்கலக்கம் (யாழ்.அக.); mental agitation.

க. பேகாடா.

*[வேசறவு + ஆடு-.]*

**வேசாடை** *vēšāḍai*, பெ.(n.) வேசடை (யாழ்.அக.) பார்க்க; see *vēšaḍai.*

**வேசாறல்** *vēšāṟal*, பெ.(n.) 1. சோர்வு; weariness. 2. துக்கம்; sorrow. *"நினைக்கினும் வேசாறலாறுமடி" (அருட்பா. vi, அனுபவ. 44).* 3. ஆறுகை (யாழ்.அக.); becoming consoled or pacified. 4. களைப்பாறுகை (யாழ்.அக.); rest.

தெ. வேசாறு; க. பேஜாறு; ம. பேஜாறா.

*[வேசாறு → வேசாறல்]*

வேசாறு¹-தல் *vēšāṟu-*, செ.கு.வி. (v.i.) 1. வேசறு-, 1 (வின்.) பார்க்க; see *vēšaṟu-*. 2. வேசறு-, 2 பார்க்க (யாழ்.அக.); see *vēšaṟu-*. 3. களைப்பாறுதல் (யாழ்.அக.); to rest. 4. ஆறுதல் (யாழ்.அக.); to be consoled or pacified.

*[வேசறு → வேசாறு]*

வேசாறு² *vēšāṟu*, பெ.(n.) வேசாறல் பார்க்க; see *vēšāṟal*. *'உடம்பு மிகவும் வேசாறா யிருக்கிறது'*.

வேசி¹ *vēši*, பெ.(n.) 1. பரத்தை (பிங்.); courtesan, whore. 2. கூடா ஒழுக்கம் (விபசாரி) (யாழ்.அக.); adult.

வேசி² *vēši*, பெ.(n.) 1. மிளகுத் தக்காளி; a plant-solanum nigrum. 2. வேசை பார்க்க; see *vēšai*.

வேசிக்கள்ளன் *vēši-k-kaḷḷaṉ*, பெ.(n.) பரத்தையர்தரகன் (வேசியுறவுள்ளவன்) (வின்.); whore-monger.

*[வேசி + கள்ளன்]*

வேசிகை *vēšigai*, பெ.(n.) 1. வாயில்; entrance. 2. போனிவாய்; vagina.

*[வேசி → வேசிகை]*

வேசித்தனம் *vēši-t-taṉam*, பெ.(n.) 1. பரத்தைமை (வின்.); harlotry. 2. பிறர்மனை நயத்தல்; adultery. 3. பகட்டு; coquetry.

*[வேசி + தனம்]*

வேசிதம் *vēšidam*, பெ.(n.) ஊடிழைமம்; seton.

அறுவையில் சிறப்பாக விலங்குடல் தோலடியூடாக ஊருதல் தடுப்பிற்காகவும் செயற்கைப்புண் மூலம் மருந்துச் சீநீர் பெறுவதற்காகவும் ஊடு செலுத்தப்படும் மயிர் அல்லது இழையாலான துய்க்கற்றை; ஊடுசீநீர், ஊடிழைமம் வழிப் பெறப்படும் செயற்கைச் சீநீர்.

வேசிநங்கை *vēši-naṅgai*, பெ.(n.) மிளகாய் நங்கை; a plant.

*[வேசி + நங்கை]*

வேசிப்பழம் *vēši-p-paḻam*, பெ.(n.) எலுமிச்சம்பழம்; lime fruit.

*[வேசி + பழம்]*

வேசிப்பார்வை *vēši-p-pārvai*, பெ.(n.) புணர்ச்சி நோக்கு; look with a desire for sexual intercourse.

*[வேசி + பார்வை]*

வேசியம் *vēšiyam*, பெ.(n.) 1. வேசம்², 3 பார்க்க (சங்.அக.); see *vēšam*. 2. பரத்தையர் வீடு; house of prostitute.

*[வேசி → வேசியம்]*

வேசியர்பால் *vēšiyar-pāl*, பெ.(n.) பரத்தையின்பால்; breast milk of prostitutes-not useful for any kind of medicines - internal or external.

*[வேசியர் + பால்]*

வேசியாடு-தல் *vēši-y-yāḍu-*, செ.கு.வி. (v.i.) கற்பொழுக்கந் தவறி நடத்தல் (யாழ்.அக.); to become an adulteress; to walk the street, as a prostitute.

*[வேசி + ஆடு-,]*

வேசியை *vēšiyai*, பெ.(n.) வேசி (யாழ்.அக.) பார்க்க; see *vēši*.

*[வேசி → வேசியை]*

வேசிவிடையான் *vēśi-viḍaiyāṉ*, பெ.(n.) கழுதை; ass.

*[வேசி + விடையான்]*



வேசை¹ *vēśai*, பெ.(n.) வேசி பார்க்க; see *vēśi*. *"வேசையர் நட்பும்" (நாலடி, 371).*

*[வேசி → வேசை]*

வேசை² *vēśai*, பெ.(n.) ஊதியம் (சம்பளம்) (யாழ்.அக.); wage, remuneration.

வேட்களம் *vēṭ-kaḷam*, பெ.(n.) திருவேட்களம் என்ற பெயரில், தென் ஆர்க்காடு மாவட்டத்தில் உள்ள ஊர்; its name *tiru-vēṭkaḷam* village placed in *ten-ārkkāḍu* district.

சிதம்பரத்திற்குப் பக்கத்தில் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தை ஒட்டியுள்ளது என்ற எண்ணம் அமைகிறது. 'வேட்களம்' என்ற நிலையில் பார்க்கும்போது, வேட்டையாடும் நிலைவாய்ந்த களம் என்ற பொருள் அமைகிறது. எனவே வேடர்கள் வாழ்ந்த பகுதியக இருந்திருக்கலாம். சம்பந்தர், அப்பர் இத்தலத்து இறைவனைப் பாடிப் பரவியுள்ளனர்.

வேட்கை¹ *vēṭkai*, பெ.(n.) 1. பற்றுள்ளம்; desire, want, appetite. *"வேட்கையெல்லாம் விடுத்தென்னை....... திருவடிக்கட் கூட்டினை" (திவ். திருவாய். 4, 9, 9).* 2. பத்து நிலைகளுள் ஒன்றான காம விருப்பம் (நம்பியகப். 36, உரை); amorousness, one of ten avattai, q.v.

*[வெள் → வேள் → வேட்பு → வேட்கை] (தே.நே.பக். 145)*

வேட்கை² *vēṭkai*, பெ.(n.) காமவிருப்பம்; sexual desire.

*[வெள் → வேள் → வேட்பு → வேட்கை]*

வேட்கைத்துணைவி *vēṭkai-t-tuṇaivi*, பெ.(n.) மனைவி (வின்.); wife.

*[வேட்கை + துணைவி]*

வேட்கைநீர் *vēṭkai-nīr*, பெ.(n.) 1. விடாய் தணிக்கும் நீர் (வின்.); water to quench one's thirst. 2. காமநீர்; a fluid discharge in a woman from orgasm in sexual inter course.

*[வேட்கை + நீர்]*

வேட்கைநோய் *vēṭkai-nōy*, பெ.(n.) 1. வேட்கை பார்க்க; see *vēṭkai*. *"வேட்கை நோய் கூர நினைந்து கரைந்துகும்" (திவ். திருவாய். 9, 6, 7).* 2. வயா (புறநா. 20, 14, உரை); morbid appetite or longings of women during pregnancy.

*[வேட்கை + நோய்]*

வேட்கைப்பெருக்கம் *vēṭkai-p-perukkam*, பெ.(n.) பேராசை (பிங்.); great desire.

*[வேட்கை + பெருக்கம்]*

வேட்கைபெருக்கம் *vēṭkai-perukkam*, பெ.(n.) காமநோய்; excess of love for intercourse-amorousness.

*[வேட்கை + பெருக்கம்]*

**வேட்கைமுந்துறுத்தல்** *vēṭkai-munturuttal*, பெ.(n.) தலைவி தன் விருப்பத்தைத் தலைவன் முன் கூறும் புறத்துறை (பு.வெ. 12, 1); theme of a woman giving expression to her love in the presence of her loneq.

*[வேட்கை + முந்துறுத்தல்]*

**வேட்கைமை** *vēṭkaimai*, பெ.(n.) வேட்கை பார்க்க; see *vēṭkai. "வேட்கைமை யென்னு நாவில்" (சீவக. 2729).*

*[வேள் → வேட்கைமை]*

**வேட்கோ** *vēṭ-kō*, பெ.(n.) குயவன்; potter. *"வேட்கோச் சிறா அர் தேர்க்கால் வைத்த பசு மட் குருஉத்திரள்" (புறநா. 32).*

*[வேள் + கோ³]*



**வேட்கோபன்** *vēṭkōpaṉ*, பெ.(n.) வேட்கோ (யாழ்.அக.) பார்க்க; see *vēṭkō.*

*[வேட்கோ → அன்]*

**வேட்கோவன்** *vēṭkōvaṉ*, பெ.(n.) வேட்கோ பார்க்க (பெரியபு. திருநீல கண்டநாய. 1); see *vēṭkō.*

*[வேட்கோ + அன்]*

**வேட்சாடை** *vēṭcāḍai*, பெ.(n.) வேட்டாடை; a mode of wearing clothes by males.

*[வேட்டி + ஆடை¹]*

**வேட்சி** *vēṭci*, பெ.(n.) வேட்கை பார்க்க; see *vēṭkai. "வெளிப்பட் டிறைஞ்சினும் வேட்சியு மாமே" (திருமந். 437).*

*[வேள் → வேட்சி]*

**வேட்சை¹** *vēṭcai*, பெ.(n.) விருப்பம் (யாழ்.அக.); desire.

*[வேள் → வேட்சை]*

**வேட்சை²** *vēṭcai*, பெ.(n.) புடைவை (யாழ்.அக.); saree.

**வேட்டக்குடி¹** *vēṭṭa-k-kuḍi*, பெ.(n.) வேட்டுவர் வீடு; hunter's quarer. *"வேட்டக் குடிதொறும்" (புறநா. 333).*

*[வேடு¹ + குடி]*

**வேட்டக்குடி²** *vēṭṭa-k-kuḍi*, பெ.(n.) வேட்டக்குடி என, காரைக்காலுக்கு அருகில் அமைந்துள்ளது இவ்வூர்; this village near by *kārai-k-kāl* as called *vēṭṭa-k-kuḍi.*

வேட்டம் குடி வேட்டையாடும் மக்கள் வாழ்ந்த குயிருப்புப் பகுதி (வேட்டை–வேட்டையாடுதல்) என்பதே பொருத்தமாக அமைகிறது. சம்பந்தர் இங்குள்ள சிவனைப் புகழ்கின்றார். இவ்வேட்டக் குடி வேடர்கள் வாழ்ந்த குடியிருப்பாக இருக்கலாம் என்பது, காட்டுப்பகுதி என்ற எண்ணத்தாலும் உறுதிப்படுகிறது.

**வேட்டகண்ணனார்** *vēṭṭa-kaṇṇaṉār*, பெ.(n.) கழகக் காலப் புலவர்; a sangam poet.

இவர் சாதியில் வேடர் என்று தெரிகிறது. வேட்டம் – வேட்டை. இவர் தாம் வேடர் என்பதற்கியைக் குறுந்தொகையில் தோழி கூற்றில் *"தலைமகனுடைய குற்றேவல் மகன்", "நெய்கனி குறும் பூழ் காயமாக, ஆர்பதம் பெறுக"* என்று

நெய்யிற் பொரித்த காடை இறைச்சியைக் கூறியுள்ளார். வேட்டக் கண்ணனார் என்பது கண்ணப்ப நாயனாரை நினைவுறுத்துகின்றது.

**வேட்டகம்[1]** *vēṭṭagam*, பெ.(n.) மனைவியின் பிறந்த வீடு; house of one's wife's people. *"புக்கு வேட்டகத்தினி லுண்ணும் புன்மையோர்" (நைடத. நகர்நீங். 17).*

*[வேள் + அகம்[1]]*

**வேட்டகம்[2]** *vēṭṭagam*, பெ.(n.) தலைப்பாகை (யாழ்.அக.); turban.

*[வேள் + அகம்]*



**வேட்டகம்[3]** *vēṭṭagam*, பெ.(n.) பிசின்; gum.

**வேட்டஞ்செய்-தல்** *vēṭṭañ-cey-*, செ. குன்றாவி. (v.t.) வேட்டையாடு பார்க்க; see *vēṭṭai-y-āḍu-*. *"வேட்டஞ் செய் காண்டாம்" (அரிச். பு.).*

*[வேட்டம் + செய்-,]*

**வேட்டணம்** *vēṭṭaṇam*, பெ.(n.) 1. சூழ்கை; surrounding. 2. காது; ear. 3. சுவர்; wall.

*[வேள் → வேட்டணம்]*

**வேட்டம்[1]** *vēṭṭam*, பெ.(n.) 1. வேட்டை; hunting, chase. *"வயநாய் பிறபடவேட்டம் போகிய குறவன்" (அகநா. 182).* 2. கொலை (பிங்.); murder.

தெ., க. வேட; ம. வேட்ட.

*[வேள் → வேட்டை → வேட்டம்]*

**வேட்டம்[2]** *vēṭṭam*, பெ.(n.) 1. விருப்பம்; desire. *"உயர்ந்த வேட்டத்துயர்ந்திசி னோர்க்கு" (புறநா. 214).* 2. விரும்பிய பொருள்; the thing desired. *"வேட்டம் போகிய.......... தும்பி" (கலித். 46).*

க. வேட.

*[வேள் → வேட்டை → வேட்டம்]*

**வேட்டம்[3]** *vēṭṭam*, பெ.(n.) 1. பிசின்; gum. 2. சாரம்; essence.

**வேட்டமாடு-தல்** *vēṭṭam-āḍu-*, 5 செ. குன்றாவி. (v.t.) வேட்டையாடு-, பார்க்க; see *vēṭṭai-y-āḍu-*. *"செழுங்கடல் வேட்ட மாடி" (சீவக. 2770).*

*[வேட்டம் + ஆடு-,]*

**வேட்டல்** *vēṭṭal*, பெ.(n.) 1. வேள்வி செய்தல்; sacrificing, one of *antaṇan-aṟu-tolil*, q.v. *"ஓதல் வேட்ட லவைபிறர் செய்தல்"* (பதிற்றுப். *24, 6).* 2. மணம்; marriage. 3. விரும்புகை (பிங்.); desiring. 4. ஏற்கை (அரு.நி.); begging.

*[வேள் → வேட்டல்]*

**வேட்டனம்** *vēṭṭaṉam*, பெ.(n.) கூத்தின் உறுப்புகளுள் ஒன்று (சிலப். பக். 81, கீழ்க்குறிப்பு); a gesture or movement in dancing.

**வேட்டாரன்** *vēṭṭāraṉ*, பெ.(n.) வேட்டைக் காரன் 2 (நாஞ்.) பார்க்க; see *vēṭṭai-k-kāraṉ*.

*[வேள் → வேட்டை → வேட்டாரன்]*

வேட்டாவளியன் *vēṭṭā-vaḷiyaṉ*, பெ.(n.) வேட்டுவன் 4 (இ.வ.) பார்க்க; see *vēṭṭuvaṉ*.

*[வேட்டம் + வளியன்]*

வேட்டாள் *vēṭṭāḷ*, பெ.(n.) 1. மனைவி (யாழ்.அக.); wife. 2. மணமானவள் (வின்.); married woman.

*[வே → வேட்டாள்]*

வேட்டான் *vēṭṭāṉ*, பெ.(n.) 1. விரும்புவோன்; one who desires. *"வேட்டார்க் கினிதாயி னல்லது நீர்க்கினி தென்றுண்பவோ நீருண்பவர்" (கலித். 62).* 2. கணவன் (யாழ்.அக.); husband. 3. மணமானவன் (வின்.); married man. 4. நண்பன் (யாழ்.அக.); friend.

*[வேள் → வேட்டான்]*

வேட்டி *vēṭṭi*, பெ.(n.) ஆடவர் புனையும் ஆடை; man's clothes. *"வேட்டியுந் தாழ்வடமும் வெண்ணீறும்" (ஒழிவி. சரியைக் கழற்றி. 4).*

*[வெட்டி → வேட்டி]*

வேட்டித்துணி *vēṭṭi-t-tuṇi*, பெ.(n.) வேட்டி பார்க்க; see *vēṭṭi*. *'வேட்டித் துணிக்கு விதியில்லாதவன்'.*

*[வேட்டி + துணி]*

வேட்டிதம் *vēṭṭidam*, பெ.(n.) 1. சூழ்கை (இலக்.அக.); surrounding. 2. சூழப் பெற்றது; that which is surrounded. 3. தடை (இலக்.அக.); obstacle. 4. மடிப்பு (யாழ்.அக.); folding. 5. ஒரு வகைக் கூத்து (யாழ்.அக.); (*nāṭya*) a kind of dance.

*[வேட்டி → வேட்டிதம்]*

வேட்டிதகம் *vēṭṭidagam*, பெ.(n.) வேட்டிதம் பார்க்க; see *vēṭṭidam*.

*[வேட்டி → வேட்டிதகம்]*

வேட்டு[1] *vēṭṭu*, பெ.(n.) வேட்டையாடுந் தொழில்; the occupation of hunting. *"வேட்டென்னுந் தொழிலுடையானை வேட்டுவன் என்றலின்" (தொல். பொ. 21, உரை).*

*[வேடு → வேட்டு]*

வேட்டு[2] *vēṭṭu*, பெ.(n.) வெடி; report of a gun. *'தப்பட்டை யொலிவல் வேட்டு' (அறப். சத. 63).*

*[வேடு → வேட்டு]*

வேட்டுப்பறி–தல் *vēṭṭu-p-paṟi-*, 20 செ.கு.வி. (v.i.) 1. வெடி வெடித்தல்; to burst, explode, as a cartridge. 2. கீழ்நோக்குக் காற்று விடுதல்; to break wind.

*[வேட்டு + பறி]*

வேட்டுவன் *vēṭṭuvaṉ*, பெ.(n.) 1. வேடன்[1] பார்க்க (சூடா.); see *vēḍaṉ*. *"வேட்டுவன் புட்சிமிழ்த் தற்று" (குறள், 274).* 2. வேட்டைக்குச் செல்வோன்; one who goes hunting. *"யானை வேட்டுவன் யானையும் பெறுமே (புறநா. 214).* 3. குறிஞ்சி நிலத்திற் குரிய ஆடவன்; man of the *kuriñci* track. *"ஆயர் வேட்டுவர்" (தொல். பொ. 21).* 4. குளவி (பிங்.); hornet. *"வேட்டுவனாமப் புழுப்போல்" (சி.போ. 1, 2, 2).* 5. நாண்மீன்களுள் பத்தாவது (மகம்) (பிங்.); the 10-th naksatra.

*[வேடு → வேட்டுவன்]*

வேட்டுவாளி *vēṭṭu-vāḷi*, பெ.(n.) வேட்டுவன் 4 பார்க்க (சங்கற்ப. 9, உரை); see *vēṭṭuvaṉ*.

*[வேட்டுவாள் + இ]*

**வேட்டுவாளியன்** *vēṭṭu-vāḷiyaṉ,* பெ.(n.) வேட்டுவாளி (சங்.அக.) பார்க்க; see *vēṭṭu-vāḷi.*

*[வேட்டுவாளி + அன்]*

**வேட்டுவிடு[1]-தல்** *vēṭṭu-viḍu-,* செ.குன்றாவி. (v.t.) திருடுதல்; to steal, rob.

*[வேட்டு + விடு-,]*

**வேட்டுவிடு[2]-தல்** *vēṭṭu-viḍu-,* செ.கு.வி. (v.i.) 1. வேட்டுப்பறி-, பார்க்க; see *vēṭṭu-p-paṟi-.* 2. பொய்சொல்லுதல்; to bib.

*[வேட்டு + விடு-,]*

**வேட்டுவித்தி** *vēṭṭu-vitti,* பெ.(n.) குறிஞ்சி நிலப்பெண் (தொல். பொ. 20, உரை); women of the *kuṟiñci* tract.

*[வேட்டு + வித்தி]*



**வேட்டுவேளான்** *vēṭṭu-vēḷāṉ,* பெ.(n.) வேட்டுவன் 4 பார்க்க; see *vēṭṭuvaṉ.* *"கிட்டமும் வேட்டுவேளானும் போலே" (ஆசார்ய. 11).*

*[வேட்டு + வேளான்]*

**வேட்டுவை** *vēṭṭuvai,* பெ.(n.) வெடிவை பார்க்க; see *veḍivai.*

*[வேட்டு + வை]*

**வேட்டை[1]** *vēṭṭai,* பெ.(n.) 1. வேட்டம்[1],1 பார்க்க; see *vēṭṭam.* *"வேட்டை வேட்கை மிக" (கம்பரா. நகர்நீங். 74).* 2. வேட்டையிற் கிடைக்கும் பொருள்; hunt, game killed in hunting. *"பிடித்தலு நமக்கு வேட்டை வாய்த்ததின்று" (திருவாலவா. 44, 38).* 3. கொலை; murder. *"ஆடுவனே யின்னு மாருயிர் வேட்டை" (திருநூற். 56).*

*[வேடு → வேட்டை]*

**வேட்டை[2]** *vēṭṭai,* பெ.(n.) 1. இளைப்பு; weariness. 2. துன்பம்; affliction.

**வேட்டைக்கடா** *vēṭṭai-k-kaḍā,* பெ.(n.) வேட்டைக்குப் பழக்கிய கடா (யாழ்.அக.); ram trained for hunting.

*[வேட்டை + கடா]*

**வேட்டைக்காரன்[1]** *vēṭṭai-k-kāraṉ,* பெ.(n.) 1. வேட்டுவன் 1 பார்க்க; see *vēṭṭvaṉ.* 2. வேட்டையாடும் ஒரு வகையினர்; person belonging to the hunting caste.

*[வேட்டை + காரன்]*

**வேட்டைக்காரன்[2]** *vēṭṭa-k-kāraṉ,* பெ.(n.) 1. செந்நாய் பார்க்க; see *cennāy.* 2. வேட்டைநாய் பார்க்க; see *vēṭṭai-nāy.*

*[வேட்டை + காரன்]*

**வேட்டைகட்டு-தல்** *vēṭṭai-kaṭṭu-,* செ.கு.வி. (v.i.) வேட்டை மேற் செல்லுதல்; to go hunting. *"பொங்குகடல் வேட்டைகட்டி" (கொண்டல் விடு. 71).*

*[வேட்டை + கட்டு-,]*

**வேட்டைநாய்** *vēṭṭai-nāy,* பெ.(n.) வேட்டையாடப் பழகிய நாய்வகை; a special breed of hunting dogs. *"வேட்டை நாய்போற்கடிக்க வருஞ் சிலநேரம்" (தனிப்பா. i, 264, 1).* 2. கடிக்கும் நாய் (யாழ்.அக.); biting dog.

*[வேட்டை + நாய்]*



**வேட்டைப்பல்** *vēṭṭai-p-pal,* பெ.(n.) வளைந்த யானைக்கோடு (வின்.); tusk, fang.

*[வேட்டை + பல்²]*

**வேட்டைப்பை** *vēṭṭai-p-pai,* பெ.(n.) வேட்டையாடுதற்குரிய மருந்து வெடி முதலியவை வைக்கும் பை; hunters pouch for cartridges, etc.

*[வேட்டை + பை]*

**வேட்டைபிடி-த்தல்** *vēṭṭai-piḍi-,* செ.கு.வி. (v.t.) வேட்டையாடு-, பார்க்க; see *vēṭṭai-y-āḍu-. 'குலைக்கிற நாய் வேட்டை பிடிக்குமா?'*

*[வேட்டை + பிடி-,]*

**வேட்டையவியல்** *vēṭṭai-y-aviyal,* பெ.(n.) அவியற்கறி வகை (யாழ்.அக.); a kind of curry preparation.

*[வேட்டை + அவியல்]*

**வேட்டையாடு-தல்** *vēṭṭai-y-āḍu-,* செ. குன்றாவி.(v.t.) கொல்லுதற் கேனும் பிடித்தற்கேனும் காட்டிலுள்ள விலங்கு முதலியற்றைத் துரத்திச் செல்லுதல்; to chase, hunt. *"கானகத் தெய்தி நீ வேட்டை யாடி விலங்கின மாய்த்து" (அரிச்.பு. வேட்டஞ். 3).*

*[வேட்டை + ஆடு-,]*

**வேட்டையிராகம்** *vēṭṭai-y-irāgam,* பெ.(n.) வேட்டைக்குரிய பண்; hunting note.

*[வேட்டை + இராகம்]*

**வேட்டைவாளி** *vēṭṭai-vāḷi,* பெ.(n.) குளவி வகை (கோயிற்பு. பதஞ். 80, உரை); a kind of hornet.

*[வேட்டை + வாளி]*

**வேட்டோன்** *vēṭṭōṉ,* பெ.(n.) மணமானவன் (சங்க.அக.); married man. 2. கணவன் (நாமதீப. 193); husband. 3. நண்பன் (யாழ்.அக.); friend. 4. விரும்புவோன் (பிங்.); one who desires.

**வேட்பாளர்** *vēṭpāḷar,* பெ.(n.) தேர்தலில் போட்டியிடுபவர்; candidate (for election to an office). *'எங்கள் தொகுதி வேட்பாளர்'.*

*[வேள் → வேட்பு → வேட்பாளர்]*

**வேட்பித்தல்** *vēṭpittal,* பெ.(n.) அந்தணரறு தொழிலுள் ஒன்றான வேள்வி செய்விக்கை (பிங்.); conducting sacrifies as priests, one of *antaṇar-aṟu-toḻil,* q.v.

**வேட்பு** *vēṭpu,* பெ.(n.) விருப்பம் (யாழ்.அக.); desire.

*[வேள் → வேட்பு]*

**வேட்புமனு** *vēṭpu-maṉu,* பெ.(n.) தகவல்களை நிரப்பிக் கையெழுத்திட்டு முன்வைப்புத் தொகையுடன் (தேர்தல் அதிகாரியிடம்) அளிக்கும் படிவம்; nomination papers. *'கட்சி வேட்பாளர்கள் வேட்பு மனு தாக்கல் செய்ய ஊர்வலமாக வந்தனர்'.*

*[வேட்பு + மனு]*

**வேடகம்** *vēḍagam,* பெ.(n.) காதணிவகை (அக.நி.); an ear-ornament.

**வேடங்கட்டு-தல்** *vēḍaṅ-kaṭṭu-,* செ.கு.வி. (v.i.) மாறுவேடம் கொள்ளுதல்; to put on a disguise.

*[வேடம் + கட்டு-,]*

**வேடங்காட்டு-தல்** *vēḍaṅ-kāṭṭu-,* செ.கு.வி. (v.i.) போலியாக நடித்தல் (வின்.); to dissemble, to appear in false light.

*[வேடம் + காட்டு-,]*

**வேடச்சி** *vēṭacci,* பெ.(n.) வேட்டுவகுலப் பெண்; women of the hunter tribe.

*[வேடன் → வேடச்சி]*

**வேடச்சேரி** *vēḍa-c-cēri,* பெ.(n.) வேடரூர்; hamlet of hunters.

*[வேடன் + சேரி]*

**வேடசம்** *vēḍacam,* பெ.(n.) பிரம்பு; calamus rotang.

**வேடணம்** *vēḍaṇam,* பெ.(n.) வளைக்கை (சங்.அக.); surrounding.

**வேடதாரி** *vēḍatāri,* பெ.(n.) 1. (கூத்து, நாடகம் முதலியவற்றில் நடிப்பதற்காக) வேடம் தரித்தவர்; one who plays a role in a drama. 2. (சுய ஆதாயம் தேடும் உள் நோக்கத்துடன்) வெளியில் வேறு விதமாகப் பேசி நடிப்பவர், வெளிவேடம் போடுபவர்; one who masks his intentions hypocrite. *'சமூக சேவை என்ற போர்வையில் வேடதாரிகள்'.*

*[வேடம் + தாரி]*

**வேடந்தாங்கல்¹** *vēḍan-dāṅgal,* பெ.(n.) தமிழ்நாட்டில் செங்கற்பட்டு மாவட்டத்தில் மதுராந்தகம் வட்டத்தில் உள்ள ஊர்; this village located at *madurāndagam* taluk in *ceṅgarpaṭṭu* district state of *tamil-nāḍu.*

சென்னையில் இருந்து 54 மைல் தொலைவில் இருக்கிறது. இங்கு 74 ஏக்கர் பரப்புள்ள பெரிய ஏரி ஒன்று இருக்கிறது. அதற்குள் ஏராளமான கடப்ப மரங்கள் இருக்கின்றன. அம்மரங்களில் ஆயிரக் கணக்கான பறவைகள் பல நாடுகளிலும் இருந்து செப்டம்பர்த் திங்கள் முதல் மார்ச்சுத் திங்கள் வரையில் வந்து தங்கி முட்டையிட்டுக் குஞ்சு பொரிக்கின்றன. ஏரி நீரில் மரங்கள் இருப்பதால் பறவைகளுக்குத் தீங்குண்டாவதில்லை. வேடந்தாங்கல் மக்கள் இப்பறவைகளுக்கு எவ்வகையான தீங்கும் நேராதவாறு 150 ஆண்டு களாகப் பாதுகாத்து வருகின்றனர். இவைகளைப் பார்ப்பதற்குப் பல ஊர்களிலிருந்தும் மக்கள் வருகின்றதால் சுற்றுலாத் தலமாகவும் இருந்து வருகிறது.

**வேடந்தாங்கல்²** *vēḍan-dāṅgal,* பெ.(n.) பறவைகள் புகலிடம்; birds shelter.

தமிழக வனவிலங்குப் புகலிடங்களில் கருங்குழிக்கு அருகில் நீர்ப்பறவைகள் வந்து தங்கும் வேடந்தாங்கல் புகலிடம் முக்கியமான இடமாகும். சுமார் 15 வெவ்வேறு வகை நீர்ப்பறவைகள், நத்தைகுத்தி நாரை, நரையான் (gray herons), வக்கா (night herons), மடையான் (pond herons), வெண்கொக்கில் நான்கு வகைகள், கங்கணம் (ibis), கரண்டி அலகி (spoon bill), மூன்று வகை நீர்க் காக்கைகள், பாம்புத்தாரா ஆகிய பறவைகள் வேடந்தாங்கல் ஏரியின் மையத்தில் உள்ள கடப்ப மரங்களில் கூடுகட்டி இனப்பெருக்கம் செய்கின்றன.

**வேடம்¹** *vēḍam,* பெ.(n.) 1. உடை முதலியவற்றாற் கொள்ளும் வேற்று வடிவம்; disguise. *"கிராத வேடமொடு கிஞ்சுக வாயவள்......... கொங்கை நற்றடம் படிந்தும்" (திருவாச. 2, 15).* 2. உடை; clothes, dress.

*[வேள் → வேடம்]*

**வேடம்²** *vēḍam,* பெ.(n.) விருப்பம்; desire. *"வேண்டற் கரிய விடயங்களின் வேட மாற்றி" (பாரத. சம்பவ. 53).*

க. வேட.

*[வேள் → வேடம்]*

**வேடம்³** *vēḍam,* பெ.(n.) 1. (நடிப்பவர்) பாத்திரத்திற்கு ஏற்பச் செய்து கொள்ளும் ஒப்பனை; costume due to a part in a drama, make-up. 2. (திரைப்படம், நாடகம் முதலியவற்றில்) பாத்திரம்; role (in a film, etc.). *'கதாநாயகியாக நடித்தவர் அம்மா வேடத்தில் நடிக்க ஆரம்பித்து விட்டார்'.*

*[வேள் → வேடம்]*

**வேடம்கட்டு-தல்** *vēḍam-kaṭṭu-,* செ. குன்றாவி.(v.t.) (நாடகம் முதலியவற்றில்) பாத்திரம் ஏற்று நடித்தல், வேடம் தரித்தல்; play roles (in drama, etc.). *'அந்த காலத்தில் அவர் கள்ள பார்ட் வேடம் கட்டிக்கொண்டு வசனம் பேசினால் அரங்கமே அதிரும்'.*

*[வேடம் + கட்டு-,]*

**வேடன்¹** *vēḍaṉ,* பெ.(n.) 1. வேட்டுவன்; hunter, fowler. *"வெந்தொழில் வேடரார்த்து" (சீவக. 421).* 2. பாலை நிலத்திற்குரியவன் (திவா.); man of the *pālai* tract.

*[வேடு → வேடன்]*

**வேடன்²** *vēḍaṉ,* பெ.(n.) வேடதாரி 1 பார்க்க (கந்தபு.); see *vēḍadāri 1.*

*[வேடம் → வேடன்]*

**வேடாங்கயிறு** *vēḍāṅ-kayiṟu,* பெ.(n.) கட்டுமரத்தில் நுனி மற்றும் அடிப்பக்கத் தினைக் கட்டியிணைக்கும் பெருங்கயிறு (தஞ்சை. மீன.); large rough.

*[வேடம் + கயிறு]*

**வேடிக்கை** *vēḍikkai,* பெ.(n.) 1. விளையாட்டு; amusement, diversion, fun. *"மெள்ளக் கூடிக் கலந்திருந்து கொள்வதோ வேடிக்கை" (பணவிடு. 314).* 2. வியப்புக்காட்சி; show. *'வேடிக்கை பார்க்கப் போனான்'.* 3. அணி செய்தல் (அலங்கரிப்பு) (இலக்.அக.); decoration.

தெ. வேடுகா.

*[வேடு → வேடிக்கை]*

**வேடிக்கைக்காரன்** *vēḍikkai-k-kāraṉ,* பெ.(n.) வியப்புச் செய்கையுடையவன்; droll person.

*[வேடிக்கை + காரன்]*

**வேடிக்கைகாட்டு-தல்** *vēḍikkai-kāṭṭu-,* செ.கு.வி.(v.i.) வியப்பானச் செயல் செய்தல்; to divert, amuse.

*[வேடிக்கை + காட்டுதல்]*

**வேடிக்கைசெய்-தல்** *vēḍikkai-cey-,* செ.கு.வி. (v.i.) வேடிக்கைகாட்டு-, பார்க்க; see *vēḍikkai-kāṭṭu-,*

*[வேடிக்கை + செய்-,]*

வேடிக்கைப்பேச்சு *vēḍikkai-p-pēccu,* பெ.(n.) விளையாட்டு தனமான சொல்; divertin talk, banter.

*[வேடிக்கை + பேச்சு]*

வேடிக்கைபார்-த்தல் *vēḍikkai-pārt,* செ. குன்றாவி.(v.t.) (காண்பது) விளையாட்டாகவும் தெம்பாகவும் கவனித்தல்; enjoy the scenes, witness passively. *'நீ அவனை அடித்தால் நாங்கள் வேடிக்கைப் பார்த்துக் கொண்டு இருப்போமா?'*

*[வேடிக்கை + பார்-,]*

வேடிக்கைமனிதன் *vēḍikkai-maṉitaṉ,* பெ.(n.) வேடிக்கைக்காரன் பார்க்க; see *vēḍikkai-k-kāraṉ.*

*[வேடிக்கை + மனிதன்]*

வேடிக்கையரங்கம் *vēḍikkai-y-araṅgam,* பெ.(n.) உடற்பயிற்சி மற்றும் உலாவரும் காட்சி முதலான வேடிக்கைகள் காட்டுமிடம் (வட்டங்கு); circus.

*[வேடிக்கை + அரங்கம்]*

வேடிச்சி *vēḍicci,* பெ.(n.) வேடச்சி பார்க்க; see *vēḍacci.* *"வேடிச்சி கொங்கை விரும்புங் குமரனை" (கந்தரல. 53).*

*[வேடச்சி → வேடிச்சி]*

வேடிதம் *vēḍidam,* பெ.(n.) மூலிகைகளைக் காய்ச்சுவதால் உண்டாகும் நாற்றம் (வின்.); unpleasent smell, as in boiling medicinal plants.

*[வேடு → வேடிதம்]*

வேடு[1] *vēḍu,* பெ.(n.) 1. வேடர் தொழில்; hunting. *"வேட்டொடு வேய்பியிலழுவத்துப் பிரித்து நின்னாய்" (அகநா. 318).* 2. வேடகுலம்; the caste of hunters. *"வேடுமுடை வேங்கடம்" (திவ். இயற். நான்மு. 47).* 3. வேடன் (இலக்.அக.); hunter. 4. வரிக் கூத்துவகை (சிலப். 3, 13, உரை); a kind of masquerade dance.

க. பேடா.

*[வேள் → வேடு]*

வேடு[2] *vēḍu,* பெ.(n.) 1. கலத்தின் வாயை மூடிக்கட்டும் ஆடை (வின்.); cover for the mouth of a vessel. 2. மூடுகை (யாழ்.அக.); covering. 3. வடிகட்டுசீலை; cloth for filtering or straining. 4. பொட்டணம் (யாழ்.அக.); small packet.

தெ. வேசை; க. வேடி; ம. வேடு.

*[வேள் → வேடு]*

வேடுகட்டல் *vēḍu-kaṭṭal,* பெ.(n.) பாத்திரத்தின் வாயை சீலைத் துணியால் மூடல்; covering the mouth of a vessel with a cloth on which the substance to be boiled in vapour is put.

*[வேடு + கட்டல்]*

வேடுகட்டு-தல் *vēḍu-kaṭṭu-,* செ.கு.வி.(v.i.) 1. பானையின் வாயை சீலையாற் கட்டுதல் (வின்.); to tie a cloth over the mouth of a pot. 2. பொட்டணங் கட்டுதல் (யாழ்.அக.); to tie into a bundle.

*[வேடு + கட்டு-,]*

வேடுகா *vēḍugā,* பெ.(n.) பாதிரி; trumpet flower tree-sterospermum chelonoides.

வேடுபறி *vēḍu-paṟi,* பெ.(n.) 1. வழிப்பறி; highway robbery. *"சுந்தரர் வேடுபறி".* 2. திருமங்கை மன்னன் திருமாலை வழிபறிக்க முயன்றதைக் கொண்டாடுந் திருவிழா (பெருந்தொ. 1863, தலைப்பு); a festival celebrating *tirumaṅgai-maṉṉaṉ's* attempt to rob *visṇu* on the highway.

*[வேட + பறி]*

வேடுமுள் *vēḍu-muḷ,* பெ.(n.) வேலமரவகை (இலத்.); pulpy podded black babool.

*[வேடு + முள்]*

வேடுவழி[1] *vēḍu-vaḻi,* பெ.(n.) நீண்ட மரவகை; pulpy-podded black babul.

*[வேடு + வழி]*

வேடுவழி[2] *vēḍu-vaḻi,* பெ.(n.) வேடுமுள் பார்க்க; see *vēḍu-muḷ.*

*[வேடு + வழி]*

வேடுவன் *vēḍuvaṉ,* பெ.(n.) 1. வேடன்; hunter. *"வீரத்தாலொரு வேடுவனாகி" (தேவா. 485, 4).* 2. வேட்டுவன் 4 பார்க்க (யாழ்.அக.); see *vēṭṭuvaṉ.*

*[வேடு → வேடுவன்]*



வேடை[1] *vēḍai,* பெ.(n.) 1. வேட்கை; desire longing. *"வள்ளிக்கு வேடைகொண்ட பெருமாளே" (திருப்பு. 288).* 2. காமநோய்; lovesickness. *"கொண்டதோர் வேடை தீரும்" (கந்தபு. ததீசியுத். 74).* 3. தாகம்; thirst. *"சால வருந்தின வேடையோடி" (கம்பரா. திருவடி. 24).*

க. வேட.

*[வேண் → வேடு → வேடை] (தே.நே.பக்.99)*

வேடை[2] *vēḍai,* பெ.(n.) மரக்கலம் (யாழ்.அக.); boat, vessel.



வேடை[3] *vēḍai,* பெ.(n.) 1. வெப்பம்; heat, intense dryness. *"வேடையதெய்த வெதுப்பினும்" (திருவாரூ. 522.).* 2. மழை யில்லாக் காலம்; season of drought. *"கொடி வேடைப்படலாற் சோர்ந்து" (இரகு. திருவவ. 29).* 3. வேடைக்காலம் 1 பார்க்க; see *vēḍai-k-kālam.*

*[வேடு → வேடை]*

வேடை[4] *vēḍai,* பெ.(n.) செட்டிகள் வசிக்குந் தெரு (யாழ்.அக.); street where merchants live.

வேடைக்காலம் *vēḍai-k-kālam,*. பெ.(n.) 1. கோடைக்காலம் (வின்.); hot season, summer. 2. வேடை[3], 2 பார்க்க; see *vēḍai.*

*[வேடை + காலம்]*

**வேண்[1]** *vēṇ,* பெ.(n.) வேணாடு பார்க்க; see *vēṇāḍu.* *"குடங்கற்கா வேண்பூழி" (நன். 272, மயிலை.).*

*[வெள் → வேள் → வேண்] (தே.நே.பக்.145)*

**வேண்[2]** *vēṇ,* பெ.(n.) விருப்பம் (யாழ்.அக.); desire. *"ஒன்பாண்டி குட்டங் குடங்கற்கா வேண்பூழி" (நன். 272, மயிலை).*

ம. வேண்.

*[வேள் → வேண்]*

**வேண்[3]** *vēṇ,* பெ.(n.) ஆசைப் பெருக்கம்; excess desire.

*[வேள் → வேண்]*

**வேண்டப்பாடு[1]** *vēṇḍa-p-pāḍu,* பெ.(n.) வேண்டற்பாடு பார்க்க (தக்கயாகப். அரும்.); see *vēṇḍaṟ-pāḍu.*

*[வேண்டல் + பாடு]*

**வேண்டப்பாடு[2]** *vēṇḍa-p-pāḍu,* பெ.(n.) பொருள் நிரம்புதற்குரியதாய்த் தொக்கு நிற்குஞ் சொற்றொடர்; (Gram) words which are understood, in an elliptical constraction. *"நின்றவில்லி, வீரபத்திர தேவர்க்கு எதிரே பொருதற்கு நின்றவில்லி யென்பது வேண்டப்பாடு" (தக்கயாகப். 704, உரை).*

*[வேண்டல் + பாடு]*

**வேண்டல்** *vēṇḍal,* பெ.(n.) 1. விரும்புகை (பிங்.); desiring. 2. விண்ணப்பம்; petition.

*[வேண்டு → வேண்டல்]*

**வேண்டலன்** *vēṇḍalaṉ,* பெ.(n.) பகைவன் (சேதுபு.); enemy.

*[வேண்டு + அ + அன்]*

**வேண்டவிருப்பு** *vēṇḍa-viruppu,* பெ.(n.) விருப்பின்மை; reluctance.

*[வேண்டு + ஆ + விருப்பு]*

**வேண்டற்பாடு** *vēṇḍaṟ-pāḍu,* பெ.(n.) 1. விருப்பம் (தக்கயாகப். 506, உரை); desire. 2. தேவை; need. 3. பெருமை; greatness, as compelling obeisance. *"அவன் தொழும்படியான வேண்டற்பாடுடைய தான் தொழாநின்றாள்" (ஈடு. 2, 4, 4).* 4. கருவம்; pride. *"பூதகணநாதர் கருட பகவானை வேண்டற்பாடு கெடுத்தது" (தக்கயாகப். 554, உரை).*

*[வேண்டல் + பாடு]*

**வேண்டாத்தலையன்** *vēṇḍā-t-talaiyaṉ,* பெ.(n.) 1. அஞ்சாதவன்; dare-devil. 2. முரடன்; rough-mannered person.

*[வேண்டு + ஆ + தலையன்]*

**வேண்டாத்தனம்** *vēṇḍā-t-taṉam,* பெ.(n.) 1. தவறு; wrong, wickedness. 2. வேண்டாப்பொறுப்பு பார்க்க; see *vēṇḍā-p-poṟuppu.*

*[வேண்டு + ஆ + தனம்]*

**வேண்டாத** *vēṇḍāda,* பெ.எ. (adj.) சிக்கல் ஏற்படுத்தக் கூடிய, தேவையில்லாத; unnecessary. *'வேண்டாத வேலைகளை யெல்லாம் ஏன் இழுத்துப் போட்டுக் கொண்டு செய்கிறாய்?'*

*[வேண்டு + ஆ → வேண்டாத]*

**வேண்டாதகாரியம்** *vēṇḍāda-kāriyam,* பெ.(n.) தேவையில்லாத செயல்; unnecessary act or business.

*[வேண்டு + ஆ + அன்]*

**வேண்டாதவன்** *vēṇḍādavaṉ,* பெ.(n.) 1. விரும்பப்படாதவன்; undesirable man. 2. பகைவன்; enemy.

*[வேண்டு + ஆ + அன்]*

**வேண்டாதார்** *vēṇḍādār,* பெ.(n.) 1. விருப்பமற்றவர்; those who have no desires. *"வளம்பட வேண்டாதார் யார் யாருமில்லை" (நாலடி, 103).* 2. வேண்டார் 2 பார்க்க; see *vēṇḍār.* *"வேண்டாதார் நெஞ்சுட்க" (கலித். 100).*

*[வேண்டு + ஆ + அர்]*

**வேண்டாப்பாடு** *vēṇḍā-p-pāḍu,* பெ.(n.) வேண்டாப்பொறுப்பு பார்க்க; see *vēṇḍā-p-poruppu.*

*[வேண்டு + ஆ + பாடு]*

**வேண்டாப்பொறுப்பு** *vēṇḍā-p-poruppu,* பெ.(n.) பொறுப்பின்மை; indifference, irresponsibility.

*[வேண்டு + ஆ + பொறுப்பு]*

**வேண்டாம்** *vēṇḍām,* வி.(v.) 1. இன்றியமையாது வேண்டத்தக்கதன்று என்பது குறிக்கும் வியங்கோள்வினை; verb meaning will not be required or will not be necessary, indispensade. *"ஒதாம லொருநாளு மிருக்கவேண்டாம்".* 2. இன்றியமையாததன்று என்ற பொருளில் ஐம்பால் மூவிடத்திற்கும் உரியதாய் வரும் எதிர் கால வினைமுற்று; verb in the future tense used in all genders, numbers and persons meaning (a) will not be required; உறவின்மை முதலியவற்றைக் குறிக்கும் ஐம்பால் மூவிடத்திற்கும் உரியதாய் வரும் எதிர்கால வினைமுற்று; (b) will stand into no relation to. 3. அவசியமின்மை என்பதைக் குறிக்கும் வினை; auxilliary verb meaning must not.

*[வேண்டு + ஆ + அம்]*

**வேண்டாமை** *vēṇḍāmai,* பெ.(n.) 1. வெறுப்பு; aversion, dislike. *"வேண்டுதல் வேண்டாமை யிலான்" (குறள், 4).* 2. அவாவின்மை; absence of desire, contentment. *"வேண்டாமை யன்ன விழுச் செல்வ மீண்டில்லை" (குறள், 363).*

*[வேண்டு + ஆ + மை]*

**வேண்டார்** *vēṇḍār,* பெ.(n.) 1. வேண்டாதார் 1 பார்க்க; see *vēṇḍādār.* 2. பகைவன்; enemies. *"வேண்டார் பெரியர் விறல்வேலோன் றானிளையன்" (பு.வெ. 10, பொது. 6).*

*[வேண்டு + ஆ + அர்]*

**வேண்டாவெறுப்பு** *vēṇḍā-veṟuppu,* பெ.(n.) மெத்தனம், கருத்தின்மை; indifference, unconcern. *'அவன் அந்தக் காரியத்தை வேண்டா வெறுப்பாய்ச் செய்கிறான்'.*

*[வேண்டு + ஆ + வெறுப்பு]*

**வேண்டி** *vēṇḍi,* மு.செ.(prep.) பொருட்டு; for the sake of. *'அதை எனக்கு வேண்டிச் செய்'.*

*[வேண்டு + இ]*

**வேண்டிக்கேள்–தல் (வேண்டிக்கேட்டல்)** *vēṇḍi-k-kēḷ-, (vēṇḍi-k-kēṭṭal)* செ. குன்றாவி.(v.t.) மன்றாடிக் கேட்டல் (யாழ்.அக.); to besseech.

*[வேண்டு + கேள்–தல்]*

**வேண்டிக்கொள்(ளு)–தல்** *vēṇḍi-k-koḷ(ḷu)-,* செ.குன்றாவி. (v.t.) வழிபாடு; to solicit, pray for, request.

*[வேண்டு + கொள்(ளு)–தல்]*

**வேண்டிய¹** *vēṇḍiya,* பெ.எ.(adj.) 1. இன்றியமையாத; indispensable. 2. தேவையான; required. 3. போதுமான; sufficient. 4. மிகுதியான; many. *"வேண்டிய நாள் என்னோடும் பழகிய நீ" (தாயு. மண்டலத். 10).*

*[வேண்டு → வேண்டிய]*

**வேண்டிய²** *vēṇḍiya,* பெ.எ.(adj.) 1. தேவையான, போதுமான; necessary, adequate. *'கல்லூரி தொடங்குவதற்கு வேண்டிய வசதிகள் கிராமத்தில் இல்லையா?'* 2. (பழக்கத்தில் ) நெருக்கமான; close (to S.O.). *'அவர் உனக்கு வேண்டிய நபர் என்று தெரிகிறது'.* 3. (செய என்னும் வாய்பாட்டு வினையெச்சத்தின் பின்) நிர்ப்பந்தத்தையோ அவசியத்தையோ வெளிப்படுத்தப் பயன்படுவது; (after infinitive) used to indicate obligation, necessity, etc. *'செய்ய வேண்டிய வேலை நிறைய இருக்கிறது'. 'படிக்க வேண்டிய புத்தகம்'.*

*[வேண்டு → வேண்டிய]*

**வேண்டியது** *vēṇḍiyadu,* பெ.(n.) 1. இன்றியமையாதது; that which is indispensable. *"பயிருக்கு வேண்டியது மழை".* 2. தேவையானது; that which is required. *'பானை செய்யக் குயவனுக்கு மண்ணோடு சக்கரமும் தண்டமும் வேண்டியது'.* 3. போதுமானது; that which is sufficient. 4. மிகுதியானது; that which is abundant. 5. வேணது 2 பார்க்க; see *vēṇadu2.*

*[வேண்டு + அது]*

**வேண்டியமட்டும்** *vēṇḍiya-maṭṭum,* வி.எ. (adv.), பெ.(n.) 1. அவசியமான அளவில்; as much as is indispensable. 2. தேவையான அளவில்; as much as is required. 3. போதுமான அளவில்; sufficiently. 4. மிகுதியாக; abundantly.

*[வேண்டிய + மட்டும்]*

**வேண்டியவன்** *vēṇḍiyavaṉ,* பெ.(n.) 1. அன்பிற்குரியவன்; friend, favourite. 2. ஒருவனது நன்மையை நாடுபவன், நலன் விரும்பி; well-wisher, interested person. *'அரசனுக்கு மந்திரி வேண்டியவன்'.*

*[வேண்டு + அவன்]*

**வேண்டியிரு–த்தல்** *vēṇḍiyiru-,* செ.கு.வி. (v.i.) இன்றியமையாததாயிருத்தல்; to be necessary or indispensable. *'இந்தக் காலத்திற்குப் படாடோபம் வேண்டியிருக்கிறது'.*

*[வேண்டு + இரு]*

**வேண்டு¹–தல்** *vēṇḍu-,* செ.குன்றாவி.(v.t.) 1. விரும்புதல்; to want desire. *"பகலோடு செல்லாது நின்றீயல் வேண்டுவன்" (கலித். 145).* 2. வழிபடுதல் (பிங்.); to beg, entreat, request. *"வேண்டித்தேவ ரிரக்கவந்து பிறந்ததும்" (திவ். திருவாய். 6, 4, 5).*

3. விரும்பிக் கேட்டல்; to listen to with eagerness. *"அன்னை வாழி வேண்டன்னை" (ஐங்குறு. 101).* 4. விலைக்கு வாங்குதல் (நாமதீப. 704); to buy purchase.

*[வேள் → வேண்டு-தல்]*

**வேண்டு²-தல்** *vēṇḍu-,* செ.கு.வி.(v.i.) இன்றியமையாததாதல்; to be indispensable, to be necessary. *"வேண்டுமே காக்கை கடிவதோர் கோல்" (நாலடி, 41).*

*[வேள் → வேண்டு]*

**வேண்டுகோள்** *vēṇḍu-kōḷ,* பெ.(n.) மன்றாடுதல், வழிபடுதல்; supplication, request, entreaty. *"வென்று பத்திரஞ் செய்து நின் வேண்டுகோளென்றார்" (திருவிளை. விறகு. 51).*

*[வேண்டு-. + கொள்-,]*

**வேண்டுகோள்வரி** *vēṇḍu-kōḷ-vari,* பெ.(n.) வரிவகை (S.I.I.iv.79); a tax.

*[வேண்டு + கொள் + வரி]*

**வேண்டுநர்** *vēṇḍunar,* பெ.(n.) விரும்புவோர்; those who wish for or desire a thing. *"வேண்டுநர் வேண்டியாங் கெய்தினர் வழிபட" (திருமுரு. 248).*

*[வேண்டு + நர்]*

**வேண்டும்** *vēṇḍum,* வி.வி.(v.opt.) 1. இன்றியமையாது வேண்டத்தக்கது என்பது குறிக்கும் வியங்கோள் வினை; verb meaning 'will be required' or 'will be necessary, indispensable'. *"வேந்தனியாகி வையமிசைபடக் காத்தல் வேண்டும்" (சீவக. 201).* 2. இன்றியமையாதது என்ற பொருளில் ஐம்பால் மூவிடத்திற்கும் உரியதாய் வரும் எதிர்கால வினைமுற்று; verb in the future tense used in all genders, numbers and persons, meaning (a) will be required. *'எனக்குப் புத்தகம் வேண்டும்'. 'உறவு முதலியவற்றைக் குறித்து ஐம்பால் மூவிடத்திற்கும் உரியதாய் வரும் எதிர்கால வினைமுற்று';* (b) will be required. *'அவன் உனக்கு என்ன வேண்டும்?'.* 3. அவசியம் என்பதைக் குறிக்கும் வினை; auxilliary verb meaning 'must'.

*[வேள் → வேண்டும்]*

**வேண்டுமளவு** *vēṇḍumaḷavu,* பெ.(n.) போதுமட்டும்; as much as required, quantum sufficit.

*[வேண்டும் + அளவு]*

**வேண்டுமென்று** *vēṇḍum-eṉṟu,* வி.எ. (adv.) 1. முழுமனதோடு; intentionally. *'அதை வேண்டுமென்று செய்தேன்'.* 2. பிடிவாதமாய்; wilfully. *'பலர் தடுக்கவும் வேண்டுமென்று அந்தக் காரியத்தைச் செய்கிறான்'.*

*[வேண்டும் + என்று]*

**வேண்மாள்¹** *vēṉ-māḷ,* பெ.(n.) வேளிர்குலப் பெண்; women of *vēḷiri*-tribe. *"வேண்மாள் அந்துவஞ் செள்ளை" (பதிற்றுப். 9-ஆம் பதி.).*

*[வேண்மான் → வேண்மாள்]*

**வேண்மாள்²** *vēṉ-māḷ,* பெ.(n.) சேரன் செங்குட்டுவனுடைய மனைவி; wife of *cēraṉ-ceṅguṭṭuvaṉ.* *'கண்ணகிக்குக் கோயிலமைக்க வேண்டுமென்று தன் கணவனிடந் தெரிவித்து அவ்வாறே கோயில் அமைப்பித்தவன்'.*

*[வேண்மான் → வேண்மாள்]*

**வேண்மான்** *vēṇ-māṉ,* பெ.(n.) வேளிர் குலத்து மகன்; male member of *vēḷir*-tribe. *"நன்னன் வேண்மான்" (அகநா. 97).*

*[வேண் + மான்]*

**வேண** *vēṇa,* பெ.எ.(adj.) வேண்டிய பார்க்க; see *vēṇḍiya.*

*[வேண்டு → வேண]*

**வேணகை** *vēṇagai,* பெ.(n.) சுற்றுமதில் (பிங்.); surrounding wall, outer fortification.

**வேணது** *vēṇadu,* பெ.(n.) 1. வேண்டியது ***1,2,3,4*** பார்க்க; see *vēṇḍiyadu.* 2. மனத்துத் தோன்றியது; whatever strikes the mind. *"காணாமல் வேணதெல்லாங் கத்தலாம்" (தனிப்பா. i, 92, 6).*

*[வேண்டியது → வேணது]*

**வேணவா** *vēṇavā,* பெ.(n.) வேட்கைப் பெருக்கம் (பெருவிருப்பம்) (தொல். எழுத். 288, உரை); ever-increasing desire, intense desire.

*[வேண் + அவா = வேணவா] (தே.நே.பக்.95)*

இதை வேட்கை + அவா என்று பிரிப்பது பொருந்தாது.

**வேணன்** *vēṇaṉ,* பெ.(n.) வைதேகனுக்கு அம்பட்டப் பெண்ணினிடம் பிறந்தவன் (சங்.அக.); person born of a barber girl and a *vaitēkaṉ.*

**வேணாட்டடிகள்** *vēṇāṭṭaḍigaḷ,* பெ.(n.) 1. வேணாட்டு அரசன்; ruler of *vēṇāṭṭu* (T.A.S.ii,184). 2. திருவிசைப்பாவியற்றிய ஆசிரியருள் ஒருவரான பெரியார் (திருவிசைப்பாயி. 3); a *śaiva* saint one of the authors of *tiru-v-icai-p-pā.*

*[வேணாடு + அடிகள்]*

**வேணாடர்** *vēṇāḍar,* பெ.(n.) வேணாட்டடிகள் பார்க்க (திருவிசைப். பாயி. 2); see *vēṇāṭṭaḍigaḷ.*

*[வேணாடு + அர்]*

**வேணாடு** *vēṇāḍu,* பெ.(n.) கொடுந்தமிழ் நாடு பன்னிரண்டனுள் திருவிதாங்கூர் நாட்டில் அடங்கிய பெரும் பகுதி; (நன். 273) (T.A.S.i,296); the region comprising the major portion of modern travancore, whre a dialect of tamil was spoken, one of 12 *koṭun-tamiḻ-nāḍu.* q.v.

*[வேள் + நாடு]*

**வேணாவியோர்** *vēṇāviyōr,* பெ.(n.) கதிரவன் வெப்பத்தால் உலகந் துன்புறாமல் அதனை தம்மேல் தாங்கி அக்கதிரோனுடன் செல்லும் ஒருசார் முனிவர் குழாம் (புறநா. 43, உரை); a band of rsis who accompany the sun obstructing the heat of the sun from affecting the earthfully and thus prevent suffering.

*[விண்ணாவியோர் → வேணாவியோர்]*

**வேணி¹** *vēṇi,* பெ.(n.) 1. சடை (பிங்.); matted hair. 2. பின்னிய மயிர்; plaited hair. 3. மரவேர் (யாழ்.அக.); root. 4. வசம்பு (தைலவ. தைல. 19); sweet flag. 5. நதி (பிங்.); river. 6. நீர்ப்பெருக்கு (இலக்.அக.); flood.

**வேணி²** *vēṇi,* பெ.(n.) 1. தெரு; street. 2. சேரி; village.

**வேணி³** *vēṇi,* பெ.(n.) 1. வானம் (பிங்.); atmospheric space. 2. வெளி (இலக். அக.); open space.

**வேணி[4]** *vēṇi,* பெ.(n.) பேய்ப்பீர்க்கு; loofa-lufaaegyptiaca.

**வேணிகை** *vēṇigai,* பெ.(n.) பின்னிய மயிர் (யாழ்.அக.); braided hair.

**வேணியளம்** *vēṇiyaḷam,* பெ.(n.) மத்தள வகை (பரத. ஒழிபி.13); a kind of *mattaḷam.*

**வேணினர்** *vēṇiṉar,* பெ.(n.) விரும்புபவர்; those who love or desire. *"வேலன திருபதமும் வேணின ரேணினரே" (சிவதரு. சுவர்க்க. சேட. 48).*

*[வேண்டு + அர் → வேணினர்]*

**வேணீர்** *vēṇīr,* பெ.(n.) தாகவேட்கை நீங்க உண்ணு நீர்; water to allay thirst. *"வேணீ ருண்ட குடையோ ரன்னர்" (கலித். 23).*

*[வேள் + நீர்]*

**வேணீரம்** *vēṇīram,* பெ.(n.) பூவந்தி[1],1 (மூ.அ.) பார்க்க; see *pūvandi.*

**வேணீறு** *vēṇīṟu,* பெ.(n.) 1. நறுவிலி; cordia obligua. 2. வெண்ணீறு பார்க்க; see *veṇṇīṟu.*

**வேணு[1]** *vēṇu,* பெ.(n.) 1. குழலா தொண்டை; a plant-cappans aphylles. 2. பற்பாடகம்; fever plant-mollugo cerviana. 3. தலைச்சன் குழந்தை தலை மண்டை யோட்டிலிருந்து செய்யப்படும் ஒருவித அண்டச் சுண்ணம்; the calcined white powder prepared from cranial bones of the first born.

*[வேள் + உ → வேணு]*

**வேணு[2]** *vēṇu,* பெ.(n.) 1. மூங்கில் (பிங்.); bamboo. 2. இசைக்குழல்; reed-pipe. வேணுகானம். 3. உட்டுளையுள்ள குழல் (பிங்.); hollow tube. 4. வில் (பிங்.); bow. *"வேணுப்புரி தொடை புரளவாங்கி" (இரகு. மீட்சிப். 65).* 5. தனுராசி (இலக். வி. 882); sagittaripus of the zodiac. 6. வாள் (சூடா.); sword.

**வேணுகம்** *vēṇukam,* பெ.(n.) யானைத் தொட்டி (சிந்தாமணி. நிகண்டு.); elephants goad.

*[வேணு → வேணுகம்]*

**வேணுசபலம்** *vēṇu-šabalam,* பெ.(n.) மூங்கிலரிசி; bamboo seed.

*[வேணு + சபலம்]*

**வேணுநம்** *vēṇu-nam,* பெ.(n.) மிளகு; pepper-piper nigrum.

*[வேணு + நம்]*

**வேணுபத்திரி** *vēṇu-pattiri,* பெ.(n.) 1. மூங்கிலிலை; bamboo leaf. 2. பால் பெருங்காயம்; white asafoetida. 3. மூங்கிலிலையில் மனோசிலை சிவந்திடும்; red orpiment is calcified as red powder by the leaf of bamboo.

*[வேணு + பத்திரி]*

**வேணும்** *vēṇum,* து.வி.(v.opl.) வேண்டும் பார்க்க; see *vēṇtum.* *"வேணுமாகில் வேணுமென்று" (பாரத. சூது. 165).*

*[வேணு → வேணும்] (பாரத. சூது. 165)*

**வேணுமளவு** *vēṇumaḷavu,* வி.அ. (adj.) வேண்டுமட்டும்; to the desired amount-Adlibitum, as much is requisite quantum tibet.

*[வேணும் + அளவு]*

வேணுமென்று *vēṇum-eṉṟu,* எ.வி. (adv.) வேண்டுமென்று பார்க்க; see *vēṇḍumeṉṟu.*

வேணூல் *vēṇūl,* பெ.(n.) காமநூல்; treatise on erotics. *"அம்மடாவாரியலானவும்....... ஆடவர் செய்கையும்...... விளம்பிடும் வேணூல்" (கந்தபு. இந்திரபுரி. 25).*

*[வேள் + நூல்]*

வேத்தவை *vēttavai,* பெ.(n.) அரசவை; royal assembly. *"இசைபெறு திருவின் வேத்தவை" (மலைபடு. 39).*

*[வேந்து + அவை [3]]*

வேத்தன்[1] *vēttaṉ,* பெ.(n.) அறிந்தோன் (இலக்.அக.); one who knows.

வேத்தன்[2] *vēttaṉ,* பெ.(n.) வேத்தியன் பார்க்க (கம்பரா. மீட்சிப். 116); see *vēttiyaṉ.*

வேத்தாள் *vēttāḷ,* பெ.(n.) வேறு ஆள், சூழ்நிலைக்கு அன்னியர்; the other person.

வேத்தியம் *vēttiyam,* பெ.(n.) 1. அறியப் படுவது; that which is known. *"அநுபலத்தி வேத்தியம்" (சி.சி. அளவை, 1, சிவாக. பக. 113).* 2. அடையாளம் (யாழ்.அக.); mark, sign.

வேத்தியல் *vēttiyal,* பெ.(n.) 1. வேந்தனது தன்மை (நன். 409, மயிலை); kingly nature. 2. அரசன்முன் ஆடும் கூத்துவகை; a kind of dance performed in the presence of a king, opp. to *potu-v-iyal. "வேத்தியல் பொதுவியலென விருதிறத்துக் கூத்தும்" (சிலப். 14, 148, உரை).* 3. வேத்தியன்மலிபு பார்க்க (புறநா. அரும்.); see *vēttiyaṉ-malipu.*

*[வேந்து + இயல்]*

வேத்தியன் *vēttiyaṉ,* பெ.(n.) அறியத் தக்கவன்; one who is knowable. *"சட்சுவினால் வேத்தியன்".*

வேத்தியன்மண்டபம் *vēttiyaṉ-maṇḍapam,* பெ.(n.) அரசனது பேரோலக்க மண்டபம்; durbar hall of a king. *"வேத்தியன் மண்டப மேவிய பின்னர்" (சிலப். 28, 79).*

*[வேத்தியன் + மண்டபம்]*

வேத்தியன்மலிபு *vēttiyaṉ-malipu,* பெ.(n.) மறமன்னனது மேம்பாட்டினை வீரர் சொல்லுதலைக் கூறும் புறத்துறை (பு.வெ. 2, 13); theme in which warriors expatiate upon the greatness of a heroic-king.

*[வேத்தியன் + மலிபு]*

வேத்திரகரன் *vēttira-karaṉ,* பெ.(n.) நந்திதேவன் (இலக்.அக.); nanti.

வேத்திரச்சாய் *vēttira-c-cāy,* பெ.(n.) பிரப்பங்கோரை (தைலவ.); sedge.

*[வேத்திரம் + சாய்]*

வேத்திரத்தாள் *vēttira-t-tāḷ,* பெ.(n.) பிரப்பங் கிழங்கு (தைலவ.); tuber of ratten reed.

*[வேத்திரம் + தாள்]*

வேத்திரதரன் *vēttira-daraṉ,* பெ.(n.) 1. வாயிற்காவலன் (வின்.); gate-keeper. 2. நந்திதேவன் (யாழ்.அக.); nanti. 3. கட்டியக்காரன் (யாழ்.அக.); herald, panegyrist.

வேத்திரப்படை *vēttira-p-paḍai,* பெ.(n.) பிரம்பாகிய கருவி; cane, as a weapon. *"வேத்திரப் படையாற் றாக்கி" (திருவிளை. பாயி. 17).*

*[வேத்திரம்[1] + படை]*

வேத்திரபாணி *vēttira-pāṇi,* பெ.(n.) கூட்டத்தை ஒதுக்குதற்குக் கையிற் பிரம்பு தாங்கியுள்ள பணியாளன் (கோயிலொ. 57); attendant who, with a cane in his hand, maintains order in a crowd.

வேத்திரம்[1] *vēttiram,* பெ.(n.) உப்பங்கோரை; a kind of grass.

வேத்திரம்[2] *vēttiram,* பெ.(n.) 1. பிரம்பு; rattan. *"வேத்திரக் கரத்தோர்" (தணிகைப்பு. அகத்தி. 84).* 2. அம்பு (வின்.); arrow.

வேத்திரம்[3] *vēttiram,* பெ.(n.) இலந்தை (மலை.); jujube tree.

வேதகப்பொன் *vēdaga-p-poṉ,* பெ.(n.) புடமிட்ட பொன்; refined gold. *"அல்லாத பொன்னிற்காட்டில் வேதகப் பொன்னுக்கு ஏற்றமுண்டு" (திவ். திருமாலை, 39, வ்யா.).*

வேதகம்[1] *vēdagam,* பெ.(n.) 1. புடமிடுகை; refining, as of gold. *'வேதகப் பொன்'.* 2. புடமிட்டபொன்; refined gold. *"விளங்காநின்ற வேதகமே" (தாயு. பெற்ற. வட். 10).* 3. இரும்பு முதலிய உலோகங்களைப் பொன்னாக்கும் பண்டம்; agent to transmute baser metals into gold. *"இன்புறு வேதகத் திரும்பு பொன்னானாற் போல" (பெரியபு. கண்ணப். 154).*

வேதகம்[2] *vēdagam,* பெ.(n.) 1. சூடம் (இலக்.அக.); camphor. 2. தவசம் (வித்து) (யாழ்.அக.); grain.

வேதகாரன் *vēda-kāraṉ,* பெ.(n.) 1. கூடை பின்னுவோன் (சூடா. 2, 32); worker in bamboo. 2. நெய்வோன் (யாழ்.அக.); weaver.



வேதங்கம் *vēdaṅgam,* பெ.(n.) ஒரு வகைத் துகில் (சிலப். 14, 108, உரை); a kind of fine cloth.

வேதசம் *vēdašam,* பெ.(n.) 1. பிரம்பு வகை (இலக்.அக.); rattan palm, m.cl.,calamus rotang. 2. நாணல் புல் (ஈடு.); sacred grass.

வேதசம்[2] *vēdašam,* பெ.(n.) பெருவிரலடி (யாழ்.அக.); part of the hard under the root of the thumb.

வேதசம்[3] *vēdašam,* பெ.(n.) ஒரு வகை வெள்ளி; a variety of silver.

வேதசன்னம் *vēda-šaṉṉam,* பெ.(n.) அத்தி; fig tree-ficus.

வேதசாரம் *vēda-cāram,* பெ.(n.) 1. நாணற்-புல்; reed, a kind of grass. 2. வெண் கருங்காலி; a white species of Acacia tree-Diospyros tupru.

வேததுடங்கன் *vēda-dadu-ḍaṅgaṉ,* பெ.(n.) சாரைப்பாம்பு; male cobra.

வேதநாதம் *vēda-nādam,* பெ.(n.) வெள்ளெருக்கு; madar bearing white flowers-calotropis gigantea (albiflora).

*[வேதம் + நாதம்]*



**வேதநாயகம்பிள்ளை (மாயவரம்)** *vēdanāyagam-piḷḷai (māyavaram),* பெ.(n.) (1824–89) பதினெட்டாம் நூற்றாண்டைச் சேர்ந்தவர்; he has belongs to 18th century.

பெண் புத்தி மாலை, நீதி நூல், சர்வ சமரச கீர்த்தனை, பிரதாப முதலியார் சரித்திரம், சுகுணசுந்தரி சரித்திரம் முதலியன இவர் செய்த நூல்கள் (1887).

**வேதபுட்பி** *vēda-puṭpi,* பெ.(n.) வெள்ளை காக்கணம்; a twiner bearing white flowers-fitoria ternatea (albiflora).

**வேதரிக்கண்டபூடு** *vēdari-k-kaṇḍa-pūḍu,* பெ.(n.) பிரண்டை; a climbing plant - vitex quadrangularis.



**வேதவரிசி** *vēda-variśi,* பெ.(n.) வாலுவை யரிசி; seeds of gymnosporia motana.

**வேதவல்லி** *vēda-valli,* பெ.(n.) ஒரு வகை பூண்டு; a plant-acacia farniciana alias vechellia farniciana.

இது பெரிய செடியாகவும் அல்லது மரமாகவும் இருக்கும், முட்களுண்டு, இதன் விதைகள் இரண்டு வரிசையாயிருக்கும், பூக்கள் உருண்டை வடிவமாயும் இலைகள் தழைகளின் இரு பக்கங்களிலும் உண்டு. வங்காளம், அசாம் மற்றெங்கும் விளையும், இதிலிருந்து சிறப்பாக பிசின் எடுப்பதுண்டு; இதன் பூ வாலையில் வைத்தால் வாசனைத் திரவியம் வரும், மார்கழி, தையில் பூ பூக்கும்.

**வேதவாரிதி** *vēda-vāridi,* பெ.(n.) கத்தூரியலரி; a variety of nerium odorum.

**வேதவித்தாரம்** *vēda-vittāram,* பெ.(n.) வாலைப்பூநீர் பார்க்க; see *vālai-p-pū-nīr.*

*[வேதம் + வித்தாரம்]*

**வேதன்**[1] *vēdaṉ,* பெ.(n.) கடுக்காய் (மலை.); chebulic myrobalan.

**வேதன்**[2] *vēdaṉ,* பெ.(n.) 1. சூதம்; mercury. 2. கல்லுப்பு; rock salt. 3. கடலாத்தி; a plant-sterospermum xylocarpus.

**வேதனம்** *vēdaṉam,* பெ.(n.) பொன் (யாழ்.அக.); gold.

**வேதனா** *vēdaṉā,* பெ.(n.) செவ்விறகு; red fuel or red feather.

**வேதனி**[1] *vēdaṉi,* பெ.(n.) வெந்தயம்; fenugreek.

**வேதனி**[2] *vēdaṉi,* பெ.(n.) நோயை உண்டாக்குவது; that which causes pain or disease.

**வேதனை** *vēdaṉai,* பெ.(n.) 1. நோய்; disease. 2. துன்பம்; suffering, affliction.

வேதனைதீர்தல் *vēdaṉai-tirdal,* பெ.(n.) வருத்தந் தீர்தல்; being releived off pain.

*[வேதனை + தீர்தல்]*

வேதனைப்படல் *vēdaṉai-p-paḍal,* பெ.(n.) 1. துன்பப்படல்; being tormented. 2. நோயினால் வருந்தல்; suffering from disease or pain.

*[வேதனை + படல்]*

வேதநி *vēdani,* பெ.(n.) வெந்தயம்; fenegreek seed - Trigonella foenumgracum.

வேதாக்கினிகுமரன் *vēdākkiṉi-kumaraṉ,* பெ.(n.) குப்பைமேனி; rubbish plant-acalypha indica.

*[வேதாக்கினி + குமரன்]*



வேதாந்தசாரம் *vēdānda-šāram,* பெ.(n.) தாமரைக் கிழங்கு; root of lotus.

வேதாந்தபாம்பாட்டி *vēdānda-pāmpāṭṭi,* பெ.(n.) பாம்பாட்டி சித்தர்; one of the *pāmpāṭṭi* siddhar.

வேதாந்தவாதி *vēdānda-vādi,* பெ.(n.) துருசு (மயில்துத்தம்); blue vitriol, copper sulphate.

வேதாரன் *vēdāraṉ,* பெ.(n.) பல்லி; lizard.

வேதாளக்கன்னி *vēḍāḷa-k-kaṉṉi,* பெ.(n.) நிலவாகை; a tree which see.

வேதாளம் *vēdāḷam,* பெ.(n.) 1. பேய் (திவா.); demon, ghost, goblin, vampire. 2. பிசாசு; devil. *"வேதாள கடகமேய மாயோளே" (தக்கயாகப். 104).*

வேதி[1]-த்தல் *vēdi-,* செ.குன்றாவி.(v.t.) 1. வேதி பார்க்க; see *vēdi.* 2. உலோகத்தை மற்றொன்றாக மாற்றுதல்; transmuting. 3. பிளத்தல்; splitting, dividing.

வேதி[2] *vēdi,* பெ.(n.) 1. வேறாக்கல்; to transmute metals as in alchemy. 2. விகாரப்படுத்தல்; to practice alchemy. 3. பிரித்தல்; chemically decomposing. 4. பேதி பார்க்க; see *pēdi.*

வேதிகை[1] *vēdigai,* பெ.(n.) பிரிக்குந் தன்மை; the act of chemical decomposition.

வேதிகை[2] *vēdigai,* பெ.(n.) 1. திண்ணை (பிங்.); plat form, pial. *"பவளத் திரள்காற் பைம்பொன் வேதிகை" (சிலப். 5, 148).* 2. மணமேடை (பிங்.); marriage dais. 3. காலுள்ள இருக்கை மேடை (கோயிலொ. 15); stool, pedestal. 4. கடவுளுக்கு உணவாக உயிர்களைக் கொன்று காணிக்கையிடும் மேடை; altar, raised platform for oblations of rice, etc. in temple. 5. பூசனை செய்யும் இடம்; place of worship (saiva.). 6. பலகை (அக.நி.); plank. 7. தெரு (பொதி.நி.); street.

வேதியன் *vēdiyaṉ,* பெ.(n.) சீனக்காரம் (மூ.அ.); alum.

**வேதியியல்** *vēdi-y-iyal,* பெ.(n.) பொருள்களில் மூலக் கூறுகளையும் அந்த மூலக்கூறுகள் எந்தச் சூழ்நிலையில் எவ்வாறு ஒன்றோடு ஒன்று வினை புரிகின்றன என்பதையும் விவரிக்கும் அறிவியல் துறை வேதியியல்; chemistry.

**வேதினம்** *vēdiṉam,* பெ.(n.) ஈர்வாள்; saw. *"வேதினத்துப்பவும்" (சிலப். 14, 176).*

**வேது**[1] *vēdu,* பெ.(n.) 1. வெம்மை; heat, warmth. *"வேது செய் சாந்தமும்" (சீவக. 2675).* 2. சூடான ஒற்றடம்; fomenatation. *"வேதினொற்றி" (கலி. 106).* 3. கார மருந்து (சங்.அக.); caustics pungent medicine.

*[வெய்து → வேது] (வே.க.பக். 130)*

**வேது**[2] *vēdu,* பெ.(n.) மூலிகை அல்லது சரக்குகளை தண்ணீரிற் போட்டுக் காய்ச்சியிறக்கி, அந்த ஆவியை வேதனை யுள்ள இடத்தில் படும்படி செய்தல், அதாவது ஆவி காட்டல்; vapour bath with using drugs or without using drugs.

*[வெய்து → வேது]*

**வேது**[3] *vēdu,* பெ.(n.) 1. தண்ணீர்; water. 2. வெய்து; that which is warm. 3. வேர்வை யுண்டாக்கு மருந்து; sudorific medicine - that which produces perspiration-Diaphoretic.

**வேதை** *vēdai,* பெ.(n.) 1. பொன்னாக்கல்; transmuting into gold. 2. துயரம்; grief. *"ஏதையா விந்த வேதை" (இராமநா. கிசு. 14).*

*[வேது → வேதை]*

**வேதைக்கன்னி** *vēdai-k-kaṉṉi,* பெ.(n.) வேதைக்கனிப்பூடு பார்க்க; see *vēdai-k-kaṉippūḍu.*

**வேதைக்கனிப்பூடு** *vēdai-k-kaṉi-p-pūḍu* பெ.(n.) நாய்வேளை; a plant - cleome viscosa.

**வேதைக்குரு** *vēdai-k-kuru,* பெ.(n.) மட்டரக உலோகங்களைப் பொன்னாக்கும் முயற்சியில் பயன்படுத்தும் உப்பு; universal salt or substance used in alchemy.

*[வேதை + குரு]*

**வேதைசத்துரு** *vēdai-šatturu,* பெ.(n.) வெள்ளிய மணல்; tin-ore.

*[வேதை + சத்துரு]*

**வேதைசிந்தூரம்** *vēdai-šindūram,* பெ.(n.) உலோகங்களைப் பொன்னாக்கும் மருந்து; a red calcified powder used to transmute base metal into gold.

*[வேதை + சிந்தூரம்]*

**வேதைமருந்து** *vēdai-marundu,* பெ.(n.) வேதியல்; elixir.

*[வேதை + மருந்து]*

**வேதைமுகம்** *vēdai-mugam,* பெ.(n.) உருக்குமுகம்; melting point.

*[வேதை + முகம்]*

**வேதையாடல்** *vēdai-y-āḍal,* பெ.(n.) சமராடுதல், (வாதஞ் செய்தல்); practising alchemy.

*[வேதை + ஆடல்]*

**வேதைவேங்கை** *vēdai-vēṅgai,* பெ.(n.) உதிர வேங்கை; a tree-pterocarpus marsupium.

*[வேதை + வேங்கை]*

**வேந்தர்படை** *vēndar-paḍai,* பெ.(n.) இந்திரகோபம்; an insect which is of red velvety appearance.

*[வேந்தர் + படை]*

**வேந்தவை** *vēndavai,* பெ.(n.) வேத்தவை பார்க்க; see *vēttavai.* *"இவ்வகை யுரைசெய விருந்த வேந்தவை" (கம்பரா. மந்திரப். 80).*

**வேந்தன்**[1] *vēndaṉ,* பெ.(n.) 1. இமையவர் கோன்; indra. *"வேந்தன் மேய தீம்புன லுலகமும்"(தொல். பொ. 5).* 2. அரசன்; king. *"பாடல் சான்ற விறல் வேந்த னும்மே"(புறநா. 11).* 3. பகலவன் 1 (சூரியன்) (சூடா.); 4. திங்கள் (சந்திரன்) (சூடா.); moon. 5. வியாழன் (சூடா.); brhaspati.

*[வேய் → வேய்ந்தோன் → வேந்தன்] (வே.க.பக். 121)*

**வேந்தன்**[2] *vēndaṉ,* பெ.(n.) 1. அரசமரம்; a tree-ficus religioga. 2. வெள்ளிக்கோள்; venus. 3. புதன்கோள்; mercury.

**வேந்தன்தாரம்** *vēndaṉ-dāram,* பெ.(n.) வாணகெந்தி; sulphur used in fire works.

*[வேந்தன் + தாரம்]*

**வேந்தன்பட்டை** *vēndaṉ-paṭṭai,* பெ.(n.) அரசம்பட்டை; bark of peepal tree-ficus relisiosa.

*[வேந்தன் + பட்டை]*

**வேந்தன்வெகுளி** *vēndaṉ-veguḷi,* பெ.(n.) கொடிய நஞ்சு; a kind of arsenic.

*[வேந்தன் + வெகுளி]*

**வேந்திசம்** *vēndiśam,* பெ.(n.) வெண்மிளகு; white pepper.

**வேந்து** *vēndu,* பெ.(n.) 1. அரசபதவி; kingly position. *"வேந்தறும் வேந்து கெடும்" (குறள், 899).* 2. அரசியல் (பு.வெ. 4, 5, உரை); kingdom, royalty. 3. பகலவன் (அரு.நி.); indra. 4. அரசன்; king. *"வெந்தப்பின் வேந்து செறப்பட்டவர்" (குறள், 895).*

*[வே → வேந்து]*

**வேந்துரு** *vēnduru,* பெ.(n.) ஏழாந்தலை முறையில் தந்தைவழி முன்னோன் (வின்.); ancestor in the sixth degree in the paternal line.

**வேந்தோன்றி**[1] *vēntōṉṟi,* பெ.(n.) 1. காந்தள்; a climber-Gloriosa superba. 2. கார்த்திகை கிழங்கு; plough root - Gloriosa superba.

**வேந்தோன்றி**[2] *vēn-tōṉṟi,* பெ.(n.) கலப்பைக் கிழங்கு (வின்.); malabar glory lily.



**வேநிபம்** *vēnibam,* பெ.(n.) வேப்ப மரம்; neem tree-melia indica.

**வேப்பங்கள்** *vēppaṅ-kaḷ,* பெ.(n.) வேப்ப மரத்தினின்று வடியும் நீர் (வின்.); a sour juice that oozes from margosa trees, used medicinally.

*[வேப்பம் + கள்]*

**வேப்பங்காய்** *vēppaṅ-kāy,* பெ.(n.) (கசப்புச் சுவை உடைய) வேப்ப மரத்தின் காய்; (the bitter) fruit of the neem tree. *'அவனுக்கு கணக்கு என்றால் வேப்பங்காய்'.*

*[வேப்பம் + காய்]*

**வேப்பங்குடிநீர்** *vēpaṅ-kuḍi-nīr,* பெ.(n.) வேப்பம் பட்டையினின்று வடித்த கருக்குநீர்; decoction prepared from margosa bark. *"இவ்வேப்பங்குடிநீரை யன்றே நானுன்னைக் குடிக்கச் சொல்லுகிறது" (ஈடு. 1, 10, 4).*

*[வேப்பம் + குடிநீர்]*

**வேப்பங்கொட்டை** *vēppaṅ-koṭṭai,* பெ.(n.) வேம்பின் விதை; seeds of margosa.

*[வேப்பம் + கொட்டை]*

**வேப்பங்கொழுந்து** *vēppaṅ-koḻundu,* பெ.(n.) வேப்பிலைக் கொழுந்து; tender leaf of margosa tree.

*[வேப்பம் + கொழுந்து]*

**வேப்பநெய்** *vēppa-ney,* பெ.(n.) வேப்பெண்ணெய் பார்க்க (பதார்த்த. 157); see *vēppeṇṇey.*

*[வேப்பம் + நெய்]*

**வேப்பம்பட்டை** *vēppam-paṭṭai,* பெ.(n.) வேம்பின் பட்டை இப்பட்டையை விட காய்ச்சல் தளிர் காய்ச்சல் இவற்றிற்கு பயன்படுத்துவதுண்டு, இதன் சூரணம் கல்பமாக பயன்படுத்தலாம், இம்மருந்துக் குடிநீர் (கஷாயம்) காய்ச்சலுக்கு பிற்பாடு பலகாரியாகவும் பல புண்ணிற்கும் அக்கினி மந்தத்திற்கும் பயன்படுத்தலாம். வேப்ப மரத்தின் பட்டை, 100 வருடத்திய வேப்பம் பட்டையும் பூவரசம் பட்டையும் கற்பத்துக்குச் சமானமாகக் கருதப்படும்; bark of margosa tree used a tonic in medicine-melia azardirachta.

*[வேப்பம் + பட்டை]*

**வேப்பம்பதினி** *vēppam-patiṉi,* பெ.(n.) வேப்ப மரத்தினின்றிறக்கும் பதனி; unfermented liquid got from very aged neem tree.

*[வேப்பம் + பதினி]*

**வேப்பம்பருப்பு** *vēppam-paruppu,* பெ.(n.) வேப்பங் கொட்டையினுட் பருப்பு, இது மருந்துப் பொருளாகப் பயன்படும்; the kernal of the seed of margosa, it is an general antidote.

*[வேப்பம் + பருப்பு]*

**வேப்பம்பாசி[1]** *vēppam-pāśi,* பெ.(n.) ஒரு நீர்ப்பூண்டு; a water plant, moss-chara corallina.

*[வேப்பம் + பாசி]*

**வேப்பம்பாசி[2]** *vēpam-pāśi,* பெ.(n.) பயிரைக் கெடுக்கும் ஒரு வகைப் பாசி (யாழ்.அக.); a kind of moss, affecting crops.

*[வேப்பம் + பாசி]*

**வேப்பம்பிசின்** *vēppam-piśiṉ,* பெ.(n.) வேப்ப மரத்தின் பிசின்; gum of margosa.

*[வேப்பம் + பிசின்]*

**வேப்பம்பூ** *vēppam-pū,* பெ.(n.) 1. வேப்ப மரத்தின் பூ, இதன் மருந்துக்குடிநீர் கல்லீரலின் தொழிலைச் சரிபடுத்தும்;

flowers of margosa. its decoction regulates the action of liver. 2. நாட் சென்ற வேப்பம் பூவால் பித்தத்தாலுண்டான பெரு மூர்ச்சை நாக்கு தோசம் மலக் கிருமி போகும்; old dried flowers are better than the fresh flowers.

*[வேப்பம் + பூ]*

வேப்பம்வித்து *vēppam-vittu,* பெ.(n.) வேப்பங்கொட்டை; margosa seed.

*[வேப்பம் + வித்து]*

வேப்பம்வேர் *vēppam-vēr,* பெ.(n.) வேம்பின் வேர்; root of margosa.

*[வேப்பம் + வேர்]*

வேப்பம்ரம் *vēppa-maram,* பெ.(n.) வேம்பு 1 பார்க்க; see *vēmbu1.*

*[வேப்பம் + மரம்]*

வேப்பமுத்து *vēppa-muttu,* பெ.(n.) வேம்பின் கொட்டை (வின்.); seed of margosa fruit.

*[வேப்பம் + முத்து]*

வேப்பமொட்டு *vēppa-moṭṭu,* பெ.(n.) வேப்பம் பூவின் அரும்பு; flower buds of margosa.

*[வேப்பம் + மொட்டு]*

வேப்பரிசி *vēppariši,* பெ.(n.) வேப்பம் பருப்பு; kernel of the margosa seeds.

*[வேப்பம் + அரிசி]*

வேப்பலகு *vēppalagu,* பெ.(n.) வேப்பிலையின் ஈர்க்கு (வின்.); petiote or rib of margosa leaf.

*[வேப்பம் + அலகு]*

வேப்பாலிகம் *vēppāligam,* பெ.(n.) வெட்பாலை; a tree-nerium antidysenterica.

வேப்பாலை[1] *vēppālai,* பெ.(n.) கசப்பு வெட்பாலை (பதார்த்த. 235); conessi bark.

வேப்பாலை[2] *vēppālai,* பெ.(n.) 1. ஒரு செடி; a plant. 2. வேப்பாலிகம் பார்க்க; see *vēppāligam.*

வேப்பிலைக்கட்டி[1] *vēppilai-k-kaṭṭi,* பெ.(n.) நாரத்தையிலை உப்பு மிளகாய் முதலிய வற்றாற் செய்யும் மணமிக்க உணவு வகை; a kind of relish made of *nārrata's* leaves, salt, chilies, etc.

*[வேப்பிலை + கட்டி]*

வேப்பிலைக்கட்டி[2] *vēppilai-k-kaṭṭi,* பெ.(n.) புளி, விளா எலுமிச்சை கிச்சிலி இவைகளின் சேர்த்திடித்து உண்டை செய்துலர்த்திப் பித்தத்தைத் தணிப்பதற்காக பயன்படுத்தும் ஒரு உருண்டை; a bolus got by grinding margosa tender leaves, tamerind, wood-apple leaves, tamerind, wood-apple leaves, lime and bitter-orange leaves.

*[வேப்பிலை + கட்டி]*

வேப்பிலைக்கருக்கு *vēppilai-k-karukku,* பெ.(n.) வாசல் அமைக்கப்படும் அழகிய மரவேலைப் பாடுகளுள் ஒன்று (பொ.வழ.); .

*[வேப்பிலை + கருக்கு]*

வேப்பிலைநங்கை *vēppilai-naṅgai,* பெ.(n.) மிளகாய் நங்கை பார்க்க; see *miḷagāy-naṅgai.*

*[வேப்பிலை + நங்கை]*

**வேப்பிலையடி–த்தல்** *vēppilai-y-aḍi-,* செ.கு.வி.(v.i.) 1. வேப்பிலையால் உடம்பில் அடித்து மந்திரித்து நோய் தீர்த்தல்; to effect a magic cure by passing a handful of neem twings over the body. 2. இசையாத புலனத்தில் ஒருவனை இசைவிக்க முயலுதல்; to coax a person to yield.

*[வேப்பிலை + அடி–,]*

**வேப்பீர்க்கு** *vēppīrkku,* பெ.(n.) வேப்பிலையின் ஈர்க்கு; the rib of the margosa leaf.

*[வேம்பு + ஈர்க்கு → வேப்பீர்க்கு]*

**வேப்பு** *vēppu,* பெ.(n.) வேம்பு பார்க்க; see *vēmbu.*

*[வேம்பு → வேப்பு]*

**வேப்பூலிகம்** *vēppūligam,* பெ.(n.) பூனைக்காலி பார்க்க; see *pūṉai-k-kāli.*

**வேப்பெண்ணெய்** *vēppeṇṇey,* பெ.(n.) வேப்பங் கொட்டையினின்று எடுக்கும் நெய்; oil extracted from margosa seeds.

*[வேப்பம் + எண்ணெய்]*

**வேபம்** *vēbam,* பெ.(n.) அசைவு; movement, shaking. *"வேபமொன்றில்லாத சிந்தை" (மேருமந். 99).*

**வேபனம்** *vēbaṉam,* பெ.(n.) 1. வேபம் பார்க்க (இலக்.அக.); see *vēpam.* 2. பயம் (யாழ்.அக.); fear.

**வேபாக்கு** *vē-pākku,* பெ.(n.) வேகுகை; heating, boiling. *"வேபாக் கறிந்து" (குறள், 1128).*

**வேபி–த்தல்** *vēpi-,* 11 செ.கு.வி.(v.i.) நடுங்குதல்; to tremble, quake. *"வேபியாப் பசியின் வாடி" (மேருமந். 366).*

**வேம்** *vēm,* பெ.(n.) வேகம்; will boil.

**வேம்பர்** *vēmpar,* பெ.(n.) நீர் முதலியன இறைக்குங் குழாய்; pump.

**வேம்பருலக்கை** *vēmpar-ulakkai,* பெ.(n.) நீர்க்குழாய்க் கருவியில் நீரை இழுப்பதற்குரிய உலக்கை; plunger of a pump.

**வேம்பற்றூர்க்கண்ணன்கூத்தனார்** *vēmpaṟṟūr-k-kaṇṇaṉ-kūttaṉār,* பெ.(n.) கழகக் காலப் புலவர்; a *saṅgam* poet.

வேம்பற்றூர் என்பது மதுரைக்கு வடகிழக்கில் இரண்டு காதத்தில் வையை நதிக்கு வடக்கே உள்ளது. பண்டைக்காலந் தொட்டுத் தமிழ் அறிஞர் வாழும் இடம் இது. இப்போது மேம்பத்தூர் என்று வழங்குகிறது. வேம்பற்றூர்க் குமரனார் என்பவரின் பாடல்கள் அகத்திலும், புறத்திலும் உள்ளன. இவர் கூத்தாடுந் தொழிலையுடையவர். *"வேல, நீ கொடுக்கும் பலியைச் சிலம்பன் ஒண்டாரகலமும் உண்ணுமே"* என்று தோழி கூற்றில் இவர் அமைத்துள்ள கருத்தைப் பிற்காலத்தவர் அங்ஙமே எடுத்தாண்டனர். (தமிழ் நெறி. மேற் 104; பாண்டிக் கோவை; கிளைவித் தெளிவு) குறுந்தொகையில் இவர் பாடிய பாடலொன்று இடம் பெற்றுள்ளது (குறுந். 362).

**வேம்பற்றூர்க்குமரனார்** *vēmpaṟṟūr-k-kumaraṉār,* பெ.(n.) கழகக் காலப் புலவர்; a *saṅgam* poet.

வேம்பற்றூர் என்பது மதுரைக்குக் கிழக்கே உள்ள ஒரு ஊர்; வேம்பத்தூரென இக்காலத்து வழங்கும்; குலசேகரச் சதுர்வேதி மங்கலமென்றும் இதனுக்கு ஒரு பெயர் உண்டென்று சிலாசாசனத்தால் தெரிகிறது. கடைச்சங்கப் புலவர் காலந்தொடங்கி இன்றுவரை அந்தணர்களே தமிழ்ப் புலவர்களாக இவ்வூரில் விளங்கியிருத்தல் கண் கூடாதலாலும், பெயராலும்

இவர் அந்தணராகக் கருதப்படுகிறார். இவர் பாடியனவாக அகநானூற்றில் ஒன்றும், புறநானூற்றில் ஒன்றுமாக இரண்டு செய்யுட்கள் உள்ளன. (புறம். 317).

**வேம்பன்** *vēmbaṉ,* பெ.(n.) பாண்டியன்; *pāṇḍiyaṉ.* as wearing a garland of margosa flowers. (வேப்பம்பூ மாலையை யுடையவன்) *"சினையலர் வேம்பன் றேரானாதி" (சிலப். 16, 149).*

**வேம்பனம்** *vēmbaṉam,* பெ.(n.) கள் (யாழ்.அக.); toddy.

**வேம்பா**[1] *vēmbā,* பெ.(n.) வேம்பர் பார்க்க; see *vēmbar.*

**வேம்பா**[2] *vēmbā,* பெ.(n.) வெந்நீர் சுடவைக்குங் கலம்; vessel for heating water, salamander.

**வேம்பா-தல்** *vēmbā-,* செ.கு.வி.(v.i.) 1. கசப்பாதல்; to be bitter. 2. வெறுப்புக் குரியதாதல்; to be disliked. *"என்னையும் வேம்பாக்கி" (தனிப்பா. i, 411, 45).*

**வேம்பாடம்** *vēmbāḍam,* பெ.(n.) வேம்பாடை பார்க்க; see *vēm-pāḍai.*

**வேம்பாடம்பட்டை** *vēmpāḍam-paṭṭai,* பெ.(n.) சுருள் பட்டை, சாயப்பட்டை; a bark-ventiligo madras patana.

*[வேம்பாடம் + பட்டை]*

**வேம்பாடை** *vēmpāḍai,* பெ.(n.) ஒரு வகை கொடி; red creeper.

**வேம்பாணி**[1] *vēmpāṇi,* பெ.(n.) சிறிய ஆணிவகை (வின்.); small nail.

**வேம்பாணி**[2] *vēmpāṇi,* பெ.(n.) கிராணி, ஒரு நாட்பட்ட நோய்; a disease-chronic diarrhoea.

**வேம்பாதிகம்** *vēmpādigam,* பெ.(n.) நிலவேம்பு; ground neem, the creat-andrographi's paniculata.

**வேம்பின்கண்ணியன்** *vēmbiṉ-kaṇṇiyaṉ,* பெ.(n.) வேம்பன் பார்க்க (பிங்.); see *vēmbaṉ.*

*[வேம்பின் + கண்ணியன்]*

**வேம்பின்மேற்புல்லுருவி** *vēmbiṉ-mēṟ-pulluruvi,* பெ.(n.) ஒரு கற்ப மூலிகை, 108 கற்ப மூலிகைகளுள் ஒன்று; a parasitic plant on neem tree.

*[வேம்பின் + மேல் + புல்லுருவி]*

**வேம்பு** *vēmbu,* பெ.(n.) 1. மரவகை; neem, margosa, m.tr. azadirachta indica. *"வேம்பின் பைங்கா யென்றோழி தரினே" (குறுந். 196). 'மனைக்கு வேம்பு, மன்றுக்குப் புளி' (பழ.).* 2. கசப்பு; bitterness of taste. 3. வெறுப்பு; dislike. *"வேம்புற்ற முந்நீர் விழுங்க" (சீவக. 513).*

ம. வேம்பு; தெ. வேமு; க.,து. பேவு (b)

*[வே → வேம்பு] (வே.க.பக். 80)*



**வேம்புக்கொட்டை** *vēmbu-k-koṭṭai,* பெ.(n.) வேப்பம் விரை; seed of margose.

*[வேம்பு + கொட்டை]*

**வேம்புசிமிழ்** *vēmbu-cimiḻ*, பெ.(n.) வேப்பங் கட்டையினால் செய்த மருந்து வைக்கும் பரணை; a small box made of margosa wood for preserving medicines.

*[வேம்பு + சிமிழ்]*

**வேம்புவகை** *vēmbu-vagai*, பெ.(n.) வேப்ப மரம்; margosa tree-neem tree-Axardirachta indica alias melia indica. 1. சிவனார் வேம்பு – shiva's neem - indigofera asphalathoides. 2. மதகிரி வேம்பு – Bischopia javanica. 3. கரு வேம்பு – black neem - Garuga pinnate. 4. மலை வேம்பு, நாய் வேம்பு – Melia azardirachta. 5. சாக்கரை வேம்பு, 6. நிலவேம்பு – Indian chiretta - Andro - graphis paniculata. 7. கறி வேம்பு – curry leaf - Murraya Koenegil. 8. நீர் வேம்பு – Pteris genus. 9. சன்னத் துருக்க வேம்பு – 10. வடிவேம்பு – cippadessa fruiticosa. 11. சந்தன வேம்பு – cedrela toona. 12. பெரு வேம்பு, 13. சிறு வேம்பு.

*[வேம்பு + வகை]*

**வேமண்கல்** *vēmaṇ-kal*, பெ.(n.) செங்கல்; brick. *"வேமண்கல்லே விரிசுடர்ச் செம் பொற்றின் கல்லாயின" (பெரியபு. ஏயர். 50).*

*[வேமண் + கல்]*

**வேமம்** *vēmam*, பெ.(n.) நெய்வார் தறி; loom. *"வேம முதல தாமினி தகற்ற" (ஞான.15).*

**வேமா** *vēmā*, பெ.(n.) வேமம் பார்க்க; see *vēmam*. *"ஆடைக்கு நாடா வேமா முதலியன" (தருக்க. சங். 42).*

**வேமானியர்** *vēmāṉiyar*, பெ.(n.) வானவர் (விமானத்திற் திரிதல்); celestials, as borne in heavenly cars. *"வேமானியர்தம் மகளிரின்" (சீவக. 2455).*

**வேய்[1]-தல்** *vēy-*, செ.குன்றாவி.(v.t.) முடுதல்; to cover, as a building, to roof, thatch. *"பிறங்கழல் வேய்ந்தன" (பு.வெ. 3, 22).* 2. சூடுதல்; to put on, as a garland, to wear, as crown. *"புதன் மானப் பூவேய்ந்து" (மதுரைக். 568).* 3. சூழ்தல்; to surround. *"மாலையை வேய்ந்தரிக்கு மிஞிறு" (சீவக. 1769).* 4. பதித்தல்; to set, as gems. *"வேய்ந்த மாமணிக் கவசமும்" (பாரத. காண்டவ. 8).*

*[மேய் → வேய் → வேய்தல்] (தமி.வ.பக். 72)*

**வேய்[2]** *vēy*, பெ.(n.) 1. மூங்கில்; bamboo. *"வேய்ப்பெயல் விளையுட் டேக்கட் டேறல்" (மலைபடு. 171).* 2. மூங்கிற்கோல்; bamboo rod. *"வேயகமாயினுஞ் சோராவகை யிரண்டேயடியாற் றாயவன்" (திவ். இயற். திருவிருத். 61).* 3. உட்குளைப் பொருள் (பிங்.); tube anything hollow. 4. புனர்பூசம்; the seventh naksatra. *"வேய்புனர் பூசமும்" (கம்பரா. திருவவதாரப். 102).* 5. வேய்கை (அக.நி.); covering, roofing. 6. மாடம் (நாமதீப. 494); mansion. 7. வினை (அக.நி.); karma. 8. யாழ் (அரு.நி.); *yāḻ*. 9. உன்னிப்புச் (கவனம்) செய்கை (அரு.நி.); composition, as of a song.

**வேய்[3]-த்தல்** *vēy-*, செ.குன்றாவி.(v.t.) ஒற்றராற் செய்தியறிதல் (மதுரைக். 642, உரை); to spy out. *"வேய்த்திறே, களவு காண்பது" (ஈடு. 3, 8, 3).*

*[மேய் → வேய்-,] (மு.தா.பக். 80)*

**வேய்[4]** *vēy*, பெ.(n.) 1. குறளைச் சொல்; report, as of a spy. *"ஒற்றனாகிய வேயே" (தொல். பொ. 58).* 2. ஒற்றன்; spy. *"வேயுரைப்பதென வந்து விளம்ப" (கம்பரா. இராவணன்றா. 15).* 3. ஒற்றனைத் தெரிந்து கொண்ட

கூறுபாட்டினைக் கூறும் புறத்துறை (பு.வெ. 1, 6); theme describing the choice on spies.

வேய்[5]–த்தல் *vēy-,* செ.குன்றாவி.(v.t.) வஞ்சித்தல்; to deceive.

வேய்க்கண் *vēy-k-kaṇ,* பெ.(n.) மூங்கிற் கணு (நாமதீப. 297); bamboo joint.

*[வேய் + கண்]*

வேய்ங்குழல் *vēy-ṅ-kuḻal,* பெ.(n.) புல்லாங் குழல்; bamboo pipe. *"ஆயர்கள் வேய்ங்குழ லோசையும் விடைமணிக் குரலும்" (திவ். திருப்பள்ளியெழுச். 4).*

*[வேய் + குழல்]*

வேய்தல்[1] *vēydal,* பெ.(n.) கூரையால் மூடப்பட்ட வீடு (பிங்.); thatched house. 2. துளை (அரு.நி.); tube.

*[மேய் → வேய் → வேய்தல்]*

வேய்தல்[2] *vēydal,* பெ.(n.) ஒற்று (அரு.நி.); spying.

வேய்ந்துணி *vēy-n-tuṇi,* பெ.(n.) ஊதுகுழல்; bamboo pipe. *"வேய்ந்துணி யலமரும் புறத்தர்" (சீவக. 1848).*

*[வேய் + துணி]*

வேய்நெல்லு *vēy-nellu,* பெ.(n.) குடிகள் செலுத்துங் கடமைகளுளொன்று; a customary due from the cultivator (T.A.S.iii.32).

*[வேய் + நெல்லு]*

வேய்ம்பரம்பு *vēy-m-parambu,* பெ.(n.) மூங்கிற்பாய்; bamboomat.

*[வேய் + பரம்பு]*

வேய்வனம் *vēy-vaṉam,* பெ.(n.) திருநெல்வேலித் தலம் (திருவிளை. 31, 2); *tiru-nel-vēli* believed to have been originally a bamboo forest.

*[வேய் + வனம்]*

வேய்வு[1] *vēyvu,* பெ.(n.) மூடுகை (சங்.அக.); covering.

*[மேய் → வேய் → வேய்வு] (தமி.வ.பக். 72)*

வேய்வு[2] *vēycu,* பெ.(n.) ஏய்ப்பு (சங்.அக.); deceiving.

வேய்வை *vēyvai,* பெ.(n.) யாழ் நரம்புக் குற்றவகை; a defect in a lute string. *"வேய்வை போகிய விரலுளர் நரம்பின்" (பொருந. 17).*

வேயர்[1] *vēyar,* பெ.(n.) ஒற்றர் (பிங்.); spies.

*[மேய் → வேய் → வேயர்]*

வேயர்[2] *vēyar,* பெ.(n.) வேயல் பார்க்க (வின்.); see *vēyal.*

வேயர்[3] *vēyar,* பெ.(n.) பார்ப்பனக்குடிவகை; a class of brahmins. *"வேயர்தங்கள் குலத்துதித்த விட்டுசித்தன்" (திவ். பெரியாழ். 5, 4, 11).*

வேயரிசி *vēy-ariśi,* பெ.(n.) மூங்கிலரிசி (திவா.); seed of the bamboo.

*[வேய் + அரிசி]*

வேயல் *vēyal,* பெ.(n.) சிறுமூங்கில் (நன். 71, மயிலை.); short-sized bamboo.

*[மேய் → வேயல்]*

வேயாம் *vēyām,* பெ.(n.) வேரடம் பார்க்க (மூ.அ.); see *vēraḍam.*

வேயாமாடம் *vēyā-māḍam,* பெ.(n.) நிலாமுற்றம்; open terrace of the upper storey, as uncovered. *"வேயா மாடமும் வியன்கல விருக்கையும்" (சிலப். 5, 7).*

[வேயா + மாடம்]



**வேயிகாரம்** *vēyi-kāram,* பெ.(n.) வெண்காரம்; borax.

*[வேய் + காரம்]*

**வேயிலை** *vēyilai,* பெ.(n.) மூங்கிலிலை; leaf of bamboo, it is an emmenagogue.

*[வேய் + இலை]*

**வேயுள்** *vēyuḷ,* பெ.(n.) 1. மூடுகை; covering. *"வேயுள் விசும்பு" (பு.வெ. 8, 28).* 2. மலர்கை; blossoming. *'வேயுளம் பட்டுப் பூசை கண் கறுப்பு' (கல்லா. 20, 5).* 3. வேயந்த மாடம் (சூடா.); terraced house. 4. மேன்மாடி; upper storey. *"விசித்திரத் தியற்றிய வித்தக வேயுள்" (பெருங். இலாவண. 6, 65).* 5. மாடம் (நாமதீப. 494); mansion.

*[மேய் → வேய் → வேயுள்] (மு.தா.பக். 80)*

**வேர்**[1] *vēr,* பெ.(n.) 1. மரஞ்செடிகளை மண்ணின் மேல் நிலை நிறகச் செய்து அவை உணவேற்க உதவுவதான அடிப்பகுதி (சூடா.); root. 2. ஒரு வகை நறுமண வேர்; black cuscuss grass. *"வேர் சூடுமவர்கள் மண்பற்றுக் கழற்றாதாப் போலே" (ஸ்ரீ வசன. 169).* 3. திப்பிலிவேர்(தைலவ.); root of long pepper. 4. வேர் போன்றது; anything root like. *"அலகை யன்ன வெள்வேர்ப் பீலிக் கலவ மஞ்ஞை" (மலைபடு. 234).* 5. அடிப்படை; foundation. 6. காரணம்; cause. *"வேராறு ........... வடிவாகி" (ஞானவா. வைராக். 76).*

க. பேரு.

*[விள் → விளர் → வியர் → வேர்] (செல்வி.77. வைகாசி, 499)*

**வேர்-த்தல்** *vēr-,* செ.கு.வி.(v.i.) 1. உடலின் மேல்புறத்து நீர்த்துளி தோன்றுதல்; to sweat, perspire. *"வேர்த்து வெகுளார் விழுமியோர்" (நாலடி, 64).* 2. மனப் புழுக்கம்; to feel irritated. 3. சினங்கொள்தல்; to be angry, indignant. *"பாலன்மேல் வேர்ப்பது செய்த வெங்கூற்று" (தேவா. 82, 7).* 4. அஞ்சுதல்; to be afraid. *"வேர்த்தா ரதுகண்டு விசும்புறைவோர்" (கம்பரா. அதிகா. 22).*

க. பேமர்.

*[வெயர் → வேர் → வேர்த்தல்]*

**வேர்**[3] *vēr,* பெ.(n.) 1. வேர்வை; perspiration. *"வேரொடு நனைந்து" (பொருந. 80).* 2. சினம் (வின்.); anger.

*[வெயர் → வேர்]*

**வேர்**[4] *vēr,* பெ.(n.) மூங்கில்; bamboo. *"வேர் என்று மூங்கிலுக்குப் பேராய்" (திவ். பெரியாழ். 2, 6, 1. வ்யா. பக். 360).*

*[விளர் → வியர் → வேர்] (தமி.வ.பக். 72)*

**வேர்க்கடலை** *vēr-k-kaḍalai,* பெ.(n.) நிலக்கடலை; ground-nut.

*[வேர் + கடலை]*



**வேர்க்கடலைப்பருப்பு** *vēr-k-kaḍalai-p-paruppu,* பெ.(n.) நிலக்கடலை விதை; ground nut kernel.

*[வேர்க்கடலை + பருப்பு]*

**வேர்க்கடலைபிண்ணாக்கு** *vēr-k-kaḍalai-piṇṇākku,* பெ.(n.) வேர்க்கடலைப் பருப்பை செக்கிலிட்டு ஆட்டுவதால் உண்டாகும் பிண்ணாக்கு; இது உரமாகவும், மாடுகளுக்கு உணவாகவும் பயன்படுத்தப்படுகிறது; ground nut cake-used as manure and food for cattle.

*[வேர்க்கடலை + பிண்ணாக்கு]*

**வேர்க்கடலையெண்ணெய்** *vēr-k-kaḍalai-y-eṇṇey,* பெ.(n.) வேர்க்கடலை பருப்பி லிருந்து எடுக்கும் எண்ணெய்; ground nut oil used for cooking.

*[வேர்க்கடலை + எண்ணெய்]*

**வேர்க்கசாயம்** *vēr-k-kaṡāyam,* பெ.(n.) வேர்களைக் கொண்டு இறக்குங் கசாயம்; a decoction prepared from roots. e.g., தசமூல கசாயம்.

*[வேர் + கசாயம்]*

**வேர்க்கட்டை** *vēr-k-kaṭṭai,* பெ.(n.) வசம்பு; sweet flag - a drug - A corus calamus.

*[வேர் + கட்டை]*

**வேர்க்கல்** *vēr-k-kal,* பெ.(n.) கரப்பின் மேற்பரப்பிலுள்ள சிறு கற்கள் அல்லது மணல் (முகவை. மீன.); piece of rock.

*[வேர் + கல்]*

**வேர்க்காந்தி** *vēr-k-kāndi,* பெ.(n.) விட்ணு காந்தி; a prostate plant with blue flowers used for fevers-sphoeranthes indicus.

*[வேர் + காந்தி]*

**வேர்க்கியாழம்** *vē¢-k-kiyāḻam,* பெ.(n.) வேர்க்கசாயம் பார்க்க; see *vēr-k-kaṡāyam.*

**வேர்க்கிழங்கு** *vēr-k-kiḻaṅgu,* பெ.(n.) வேரிலுள்ள கிழங்கு; tuber, rhizome.

*[வேர் + கிழங்கு]*



**வேர்க்கிறது** *vēr-k-kiṟadu,* பெ.(n.)
1. வியர்க்கிறது; to be perspiring.
2. சினமாயிருக்கிறது; to be angry.

**வேர்க்குச்சு** *vēr-k-kuccu,* பெ.(n.) நெய்வார் கருவிவகை; weaver's brush, as made of rools of grass.

*[வேர் + குச்சு]*

**வேர்க்குமருந்து** *vērkku-marundu,* பெ.(n.) வியர்வையை உண்டாக்கும் மருந்து; sudorific.

*[வேர்க்கு + மருந்து]*

**வேர்க்குரு** *vēr-k-kuru,* பெ.(n.) வியர்வையா லுண்டாகும் சிறுபரு; rash due to.

ம. வேர்குரு.

*[வேர்³ + குரு ³]*

**வேர்க்குறி** *vēr-k-kuri,* பெ.(n.) சினக்குறிப்பு (வின்.); sign of anger.

*[வேர் + குறி]*

**வேர்க்கொம்பு** *vēr-k-kombu,* பெ.(n.) 1. பூடுவகை (மலை.); ginger-plant. 2. சுக்கு (தைலவ.); dried ginger.

*[வேர்¹ + கொம்பு]*

**வேர்க்கொழுந்து** *vēr-k-kol̤undu,* பெ.(n.) வேலங்கொழுந்து; tender leaves of Acacia arabica. uses for eye diseases.

*[வேர் + கொழுந்து]*

**வேர்கல்(லு)-தல்** *vēr-kal(lu)-,* செ.குன்றாவி. (v.t.) வேரொடு அழித்தல்; to oot out. *"அறத்தை வேர் கல்லும்.......... பொய்ச் சூதை மிக்கோர்கள் தீண்டுவரோ" (நள. கலிதொ. 40).*

*[வேர் + கல்(லு)-,]*

**வேர்ச்சாயம்** *vēr-c-cāyam,* பெ.(n.) சாய வேரிலிருந்து இறக்கிய சாயம் (வின்.); dye from chay root.

*[வேர் + சாயம்]*

**வேர்த்துக்கொட்டு-தல்** *vērttu-k-kottu-,* செ.கு.வி.(v.i.) அதிகமாக வேர்வை நீர் வடிதல்; to perspire profusely.

*[வேர்-, + கொட்டு-,]*

**வேர்த்துவடி-தல்** *vērttu-vadi-,* செ.கு.வி. (v.i.) 1. வேர்த்துக் கொட்டு-தல் பார்க்க; see *vērttu-k-kottu-.* 2. ஆவி குளிர்ந்து திரவமாக வடிதல்; to be distilled, as liquors. *"வேர்த்து வடிந்தாற் சாராயம்".*

*[வேர்த்து + வடி-,]*

**வேர்த்தோல், வேர்த்தோலி** *vēr-t-tōl, vēr-t-tōli,* பெ.(n.) வேர்ப்பட்டை; bark of the root.

*[வேர் + தோல், வேர் + தோலி]*

**வேர்நீர்** *vēr-nīr,* பெ.(n.) வேர்வை பார்க்க; see *vērvai.*

*[வேர் + நீர்]*

**வேர்ப்படலம்** *vēr-p-padalam,* பெ.(n.) கண்ணோய் வகை (யாழ்.அக.); an eye-disease.

*[வேர் + படலம்]*

**வேர்ப்பலா** *vēr-p-palā,* பெ.(n.) மரவகை (வீரசோ. தொகை. 8); jack tree.

*[வேர் + பலா]*

**வேர்ப்பார்** *vēr-p-pār,* பெ.(n.) சினமாயிருக்கிறவர்; one who is angry.

*[வேர் + பார்]*

**வேர்ப்பிடுங்கல்** *vēr-p-pidungal,* பெ.(n.) நோய் குணப்படுவதற்கு மந்திரம் சொல்லி செடியின் வேரைப் பிடுங்கல்; plucking the root as a sign of curing diseases.

*[வேர் + பிடுங்கல்]*

**வேர்ப்பு** *vērppu,* பெ.(n.) வேர்³ பார்க்க (வின்.); see *vēr.*

க. பேவரு.

*[வியர் → வேர் → வேர்ப்பு] (தமி.வ.பக். 72)*

**வேர்ப்புழு** *vēr-p-pul̤u,* பெ.(n.) வேர்ப்பூச்சி பார்க்க; see *vēr-p-pūcci.*

*[வேர் + புழு]*

**வேர்ப்பூச்சி** *vēr-p-pūcci,* பெ.(n.) வேரிலிருந்தபடி அதனைத்தின்று செடியைக் கெடுக்கும் பூச்சிவகை; a grub that eats off the root-tips and fibrils of a plant and quickly destroys it.

*[வேர் + பூச்சி]*

**வேர்பு** *vērpu,* பெ.(n.) வேர்[3] பார்க்க (சங்.அக.); see *vēr.*

**வேர்பொடி-த்தல்** *vēr-podi-d,* செ.கு.வி. (v.i.) வேர்வை நீரரும்புதல்; to perspire. *"இடைப்புருவங் கோட்டித் துடிப்ப வேர் பொடிப்ப" (கம்பரா. ஊர்தேடு. 111).*

*[வேர் + பொடி-,]*

**வேர்வாசம்** *vēr-vāšam,* பெ.(n.) ஒருவகை நறுமண வேர் (திவா.); cuscuss grass.

*[வேர் + வாசம்]*

**வேர்வாளி** *vēr-vāḷi,* பெ.(n.) காதணி வகை (S.I.I. viii, 68); an ear-ornament.

*[வேர் + வாளி]*

**வேர்விடு-தல்** *vēr-vidu-,* செ.கு.வி.(v.i.) வேர்விழு-தல் பார்க்க; see *vēr-viḻu-.*

*[வேர் + விடு-,]*

**வேர்விழு-தல்** *vēr-viḻu-,* செ.கு.வி.(v.i.) செடி முதலியன நிலத்தில் நிலைத்து நிற்கும் படி வேர் பதிந்தோடுதல்; to take root.

*[வேர் + விழு-,]*

**வேர்வு** *vērvu,* பெ.(n.) வேர்[3], 1 பார்க்க; see *vēr. "தென்றல் வந்தெ னையன் திருமுகத்தின் வேர்வகற்ற" (கூளப்ப. 99).*

*[வேர் → வேர்வு]*

**வேர்வெட்டு** *vēr-veṭṭu,* பெ.(n.) ஒரு வகைப் பல்நோய்; a disease of the tooth.

**வேர்வை** *vērvai,* பெ.(n.) வேர்[3], 1 பார்க்க; see *vēr.*

க. பேவரு.

**வேர்வைசுரம்** *vērvai-šuram,* பெ.(n.) வேர்வைக் காய்ச்சல்; sweating fever, a vontagious malignant fever marked by dark coloured sweat-Ephemera maligna - Anglicus sudor.

*[வேர்வை + சுரம்]*

**வேர்வைதட்டல்** *vērvai-taṭṭal,* பெ.(n.) வியர்வை யுண்டாதல்; perspiring.

*[வேர்வை + தட்டல்]*

**வேர்வையுண்டாக்கி** *vērvai-yuṇḍākki,* பெ.(n.) வியர்வையுண்டாக்கு மருந்து; a medicine or drug which promotes sweating - Diaphoretics.

*[வேர்வை + உண்டாக்கி]*

**வேர்வைவாங்கி** *vērvai-vāṅgi,* பெ.(n.) வியர்வை சுரப்பிகள் வாயிலாக வியர்வை வெளிப்படுதல் (M.M.966); sudorific.

*[வேர்வை + வாங்கி]*

**வேரகம்** *vēragam,* பெ.(n.) கருப்பூரம் (மூ.அ.); camphor.

**வேரச்சுக்கொடி** *vēraccu-k-kodi,* பெ.(n.) சந்தன வகை (சிலப். 14, 108, உரை); a species of sandal wood.

*[வேரச்சு + கொடி]*

வேரடம் *vēradam,* பெ.(n.) முள்மரவகை (சூடா.); jujube tree.

வேரம்[1] *vēram,* பெ.(n.) வெகுளி (பிங்.); anger, wrath. *"காணா நின்ற வேரங்களற்ற" (மேருமந். 149).*

வேரம்[2] *vēram,* பெ.(n.) 1. மஞ்சள் (மலை.); turmeric. 2. (அடப்பங்) கொடிவகை (மலை.); hare leaf. 3. ஒரு வகை செடி (யாழ்.அக.); indian kales.

வேரம்[3] *vēram,* பெ.(n.) 1. செய்குன்று; artificial mound. *"சிகரமோ ரிலக்கஞ் சூடி வீசுபொன் சுடர நின்ற வேரமொன்று" (கந்தபு. நகரழி. 1).* 2. கோபுரம் (நாமதீப. 493); tower. 3. மேகக்கூட்டம் (வின்.); mass of clouds, as in the morning with the sun behind.

வேரம்[4] *vēram,* பெ.(n.) உடம்பு; body.

வேரமுட்டி *vēra-mutti,* பெ.(n.) செடிவகை (நாமதீப. 326); pink-tinged white sticky mallow.

வேரல்[1] *vēral,* பெ.(n.) 1. சிறுமூங்கில்; small bamboo. *"நுண் கோல் வேரல்" (மலைபடு. 224).* 2. புறக்காழ்வுள்ள மூங்கில் வகை (சூடா.); spiny bamboo. 3. மூங்கிலரிசு (பிங்.); seed of bamboo.

வேரல்[2] *vēral,* பெ.(n.) வேர்க்கை (இ.வ.); perspiring.

வேரறு-த்தல் *vēraru-,* செ.குன்றாவி.(v.t.) வேரோடு அழித்தல்; to root out, extirpate. *"அவர் வேரெறுப்பென் வெருவன் மின்" (கம்பரா. அகத்தியப். 22).*

*[வேர் + அறு-,]*

வேரற்கு *vērarku,* பெ.(n.) சீந்தில்; moon creeper-Tionospernum cordifolia.

*[வேர் + அற்கு]*

வேரறப்பிடுங்கல் *vērara-p-pidungal,* பெ.(n.) 1. வேரொடு பறித்தல்; to weed out. 2. முழுதும் குணமாக்கல்; to root out as in disease.

*[வேர் + அறப்பிடுங்கல்]*

வேரி[1] *vēri,* பெ.(n.) 1. தேன்; honey. *"கமலங் கலந்த வேரியும்" (திருக்கோ. 301).* 2. கள்; toddy. *"கடிகமழ் வேரிக் கடைதோறுஞ் செல்ல" (பு.வெ. 4, 25).* 3. ஒரு வகை நறுமண வேர் (திவா.); cuscuss grass. 4. ஓமாலிகை முப்பத்திரண்டனுளொன்று (சிலப். 6, 77, உரை); an aromatic, one of 32 *ōmālikai.* 5. நறுமணம்; frangrance, scent.

வேரி[2] *vēri,* பெ.(n.) 1. பூந்தேன்; honey in flowers. 2. பழச்சாறு; juice of fruits. 3. வெட்டிவேர்; fragrant yellow root-khus khus -vetivaria zizanioides alias Andropogam aromaticus.

வேரிச்சுமம் *vēri-c-cumam,* பெ.(n.) வெள்ளெருக்கு (சங்.அக.); white madar.

*[வேரி + சுமம்]*

வேரிசாத்தன் *vēri-cāttan,* பெ.(n.) கழகக் காலப் புலவர்; a sangam poet.

*[வேரி + சாத்தான்]*

இவர் குறுந்தொகையில் 278-ஆம் பாடலைப் பாடியுள்ளார்.

வேரித்தண்டு *vēri-t-tandu,* பெ.(n.) தேன் வைக்குங் குழாய் (இலக்.அக.); tube for keeping honey.

[வேரி + தண்டு]

வேரிமீதகம் *vēri-midagam,* பெ.(n.) 1. இருவேலி; khus khus root. 2. வேரி பார்க்க; see *vēri.*

[வேரி + மீதகம்]

வேரியன் *vēriyaṉ,* பெ.(n.) பகைவன்; foe. *"பண்டை வேரியர் கடாம்" (நீலகேசி. 95).*

வேரில்லாக்கொத்தான் *vērillā-k-kottāṉ,* பெ.(n.) ஒரு வகை கொத்தான் கொடி; a variety of கொத்தான் moss creeper - cassytha americana.

[வேரில்லா + கொத்தான்]

வேருக்குள்பாடாணசித்தி *vērukkuḷ-pāḍāṇa-śitti,* பெ.(n.) உரோம விருட்சம்; a kind of tree.

வேரூன்றல் *vērūṉṟal,* பெ.(n.) வேர்பற்றல்; taking root.

[வேர் + ஊன்றல்]

வேரூன்று-தல் *vērūṉṟu-,* செ.கு.வி.(v.i.) 1. செடி முதலியன நிலைபெற்று நிற்கும்படி அவற்றின் வேர் நிலத்திற் பதிந்தோடுதல் (ஈடு. 4, 8, 5); to take root. 2. அசைக்க முடியாத படி உறுதியாய் நிலை நாட்டப் பெறுதல்; to be established or settled firmly.

[வேர் + ஊன்று-,]

வேரூன்றுகட்டி *vērūṉṟu-kaṭṭi,* பெ.(n.) அடிகனத்த கட்டி; thick based abscess-deep rooted abscess.

[வேரூன்று + கட்டி]

வேரெழுத்து *vēreḻuttu,* பெ.(n.) மூலவெழுத்து (திருமந். 970); primary, basic or fundamental letter, as of a mantra.

[வேர் + எழுத்து]

வேரையாட்டுபயிர் *vēraiyāṭṭu-payir,* பெ.(n.) இலவங்கப்பட்டை; cinnamon bark-cinnamomum zeylanicum.

[வேரையாட்டு + பயிர்]

வேரோடழிதல் *vērōḍaḻidal,* பெ.(n.) வேருடன் கெடுதல்; being ruined totally.

வேரோடு-தல் *vērōḍu-,* செ.கு.வி.(v.i.) வேரூன்று-தல் பார்க்க; see *vērūṉṟu-.* *"பழமறையி னுச்சிமிசை வேரோடி" (பிரமோத். 22, 102).*

வேல்¹ *vēl,* பெ.(n.) 1. நுனிக் கூர்மையுடைய கைவேல்; dart, spear, lance, javelin. *"நெடுவேல் பாய்ந்த மார்பின்" (புறநா. 297).* 2. திரிசூலம்; trident. *"கையது வேல் நேமி" (திவ். இயற். 1, 5).* 3. போர்க்கருவி (பிங்.); weapon. 4. ஈட்டிவகை (சிலப். 15, 216, உரை); a kind of spear. 5. வெல்லுகை (அரு.நி.); conquering. 6. பகை (அரு.நி.); enemy.

[வெல் → வேல்]

வேல்² *vēl,* பெ.(n.) 1. மரவகை; babul. 2. வேல் வகை (இலத்.); Panicled babul. 3. *உடை⁵* பார்க்க; see *uḍai.* 4. புறக்காழ் உள்ள மூங்கில் வகை (நாமதீப. 296); spiny bamboo.

வேல்³ *vēl,* பெ.(n.) ஒரு மரம்; a thorny tree. 1. வேலம் or வேலா - Acacia arabica, 2. பச்சை வேல் - Acacia genus, 3. சீமை வேல் - Acacia dealbata. 4. பரங்கி வேல், 5. பீவேல் - Acacia Farniciana, 6. நல்ல வேல், 7. வெள்வேல் - Acacia leucophalaca (white babool), 8. கருவேல் - Acacia arabica, 9. சீமைச் சிறுவேல் - Common

wattle - Acacia decurrenus, 10. கடிவேல் – Acacia melanoxylon. 11. கஸ்தூரி வேல் – Acacia farni ciana. 12. உடைவேல் – arrow thorn tree-Acacia planifrons alias A. ebornea, 13. குடை வேல் – Umbrella thorn babool - Acacia tomentosa, 14. பீக்கருவேல் – Acacia eburnea, 15. கந்தர் வேல் – jungle nail - Acacia tomentosa, 16. சீமை வெள்வேல் – Acacia ferruginea, 17. வெள்ளை முள்வேல் – same as No.18, 18. முள்வேல் – rubber thorn - Acacia latronum, 19. பேய்வேல் – Acacia farniciana, 20. கூந்தல் வேல் – Acacia tomentosa.

*[வெல் → வேல்]*

**வேல்கந்தி** *vēl-kanti,* பெ.(n.) செடிவகை (சங்.அக.); scabrous ovate unifoliate tick-trefoil.

*[வேல் + கந்தி]*

**வேல்கம்பு** *vēl-kambu,* பெ.(n.) (முற் காலத்தில் போர் வீரர்கள் பயன்படுத்திய) மேல் பகுதியில் இலை வடிவக் கூரிய உலோக முனையைக் கொண்ட ஆயுதம்; a long staff with a leaf-like metal edge used as a weapon, a kind of spear.

*[வேல் + கம்பு]*



**வேல்சங்கு** *vēl-šaṅgu,* பெ.(n.) 1. முட்சங்கு; a conch with thorny edges. 2. உபரசச் சரக்கு; a mineral body.

*[வேல் + சங்கு]*

**வேல்தாரி** *vēl-dāri,* பெ.(n.) ஒரு வகை நெடுங்கோட்டுப் புடைவை; a kind of saree with long stripes.

*[வேல் + தாரி]*

**வேல்முகம்** *vēl-mugam,* பெ.(n.) கல்லாரை; a creeper.

*[வேல் + முகம்]*

**வேல்லசம்** *vēl-lašam,* பெ.(n.) மிளகு; pepper-piper nigrum.

**வேல்லி** *vēlli,* பெ.(n.) கொடி; a creeper.

**வேல்விழிமாது** *vēl-viḻimādu,* பெ.(n.) கண்டங்கத்திலி; a thorny shrub-solanum xanthocarpum.

*[வேல் + விழி + மாது]*

**வேல்விழியாள்** *vēl-viḻiyāḷ,* பெ.(n.) கத்தூரி மஞ்சள்; a kind of turmeric-curcuma aromatica.

*[வேல் + விழியாள்]*

**வேலங்காய்க்கொலுசு** *vēlaṅ-kāy-k-kolušu,* பெ.(n.) வேலங்காய்களைப் போலும் குண்டுகளையுடைய காலணி வகை; a silver anklet with beads resembling babul fruit.

*[வேலங்காய் + கொலுசு]*

**வேலங்குச்சி** *vēlaṅgucci,* பெ.(n.) கருவேலங் குச்சி, பல்லுக்குறுதி; a twig of Acacia arabica 8 inches long and of finger's thickness is used as tooth-brush, it strengthens the teeth.

*[வேலம் + குச்சி]*

வேலசம் *vēlašam,* பெ.(n.) மிளகு (சங்.அக.); pepper.

வேலப்பதேசிகர் *vēlappa-dēšigar,* பெ.(n.) பதினேழாம் நூற்றாண்டில் திருவாவடுதுறை யாதீனத்து ஆசானாயிருந்தவரும் திருப்பறியலூர்ப்புராணம் பாடியவருமான ஆசிரியர் (அபி.சிந்.); a head of *tiruvāḍuturaimutt* and author of *tiruppariyalūr-p-purāṇam,* 17C.

வேலம்[1] *vēlam,* பெ.(n.) ஒரு வகை மரம்; a thorny tree- Acacia genus.

வேலம்[2] *vēlam,* பெ.(n.) தோட்டம் (யாழ்.அக.); garden.

வேலம்பட்டை *vēlam-paṭṭai,* பெ.(n.) வேலமரத்துப்பட்டை; babul bark.

*[வேல் + பட்டை]*

வேலம்பட்டைச்சாராயம் *vēlam-paṭṭai-c-cārāyam,* பெ.(n.) போதையும் பித்த சினமும் உண்டாகும்; arrack prepared from the bark of Acacia.

*[வேலம் + பட்டை + சாராயம்]*

வேலம்பாசி[1] *vēlam-pāši,* பெ.(n.) பாசிவகை (மூ.அ.); a kind of moss.

*[வேலம் + பாசி]*

வேலம்பாசி[2] *vēlam-pāši,* பெ.(n.) ஓர் பூண்டு; a herb-vallisneria spirahs.

*[வேலை + பாசி]*

வேலம்பிசின் *vēlam-pišiṉ,* பெ.(n.) பிசின் வகை; gum arabic.

*[வேல் + பிசின்]*

வேலமரம் *vēla-maram,* பெ.(n.) (கலப்பை போன்ற வேளாண் கருவிகள் செய்யப் பயன்படுத்தும்) இரு வரிசையாகப் பிரிந்த சிறு இலைகளைக் கொண்ட ஒரு வகை முள் மரம்; babul.

வேலன் *vēlaṉ,* பெ.(n.) 1. வேற்காரன்; spearman. 2. முருகன் (பிங்.); skanda. 3. முருகன் பூசனை செய்பவன் (திருமுரு. 222); priest worshipping skanda.

*[வேல் → வேலன்]*

வேலனாடல் *vēlaṉāḍal,* பெ.(n.) வேலன் ஆடும் வெறியாட்டு கூத்து (பிங்.); dancing of a priest under possession by skanda.

*[வேலன் + ஆடல்]*

வேலா *vēlā,* பெ.(n.) கருவேல்; Acacia arabica.

வேலாமீன் *vēlā-mīṉ,* பெ.(n.) பழுப்பு நிறத்தில் காணப்படும் ஆழக் கடல் மீன் (முகவை. மீன.); a kind of sea fish.



வேலாமுற்றாழை *vēlā-muṟṟāḻai,* பெ.(n.) கடற்றாழை பார்க்க; see *kaḍaṟṟāḻai.*

வேலாமேற்புல்லுருவி *vēlā-mēṟ-pulluruvi,* பெ.(n.) வேலமரவகை; parasitic plant growing on the acacia tree.

**வேலாயுதம்** *vēl-āyudam,* பெ.(n.) வேல்[1],1 பார்க்க; see *vēl.*

*[வேல் + ஆயுதம்]*

**வேலாயுதமான்** *vēlāyuda-māṉ,* பெ.(n.) சிம்மம்; lion.

**வேலாயுதன்** *vēlāyudaṉ,* பெ.(n.) முருகன்; skanda, as wielding the lance. *"வேதாகம சித்ர வேலாயுதன்" (கந்தரலங். 17).*

*[வேல் + ஆயுதன்]*

**வேலாரை** *vēlārai,* பெ.(n.) கடலாரை பார்க்க; see *kaḍalārai.*

**வேலாவலயம்** *vēlā-valayam,* பெ.(n.) வேலாவலையம் பார்க்க (அக.நி.); see *vēlā-valaiyam.*

*[வேல் + வலயம்]*

**வேலாவலையம்** *vēlā-valaiyam,* பெ.(n.) 1. கடல்; sea, as the boundary of the earth. 2. நிலம்; earth, as boundary by the sea. *"வேலாவலயம் விளக்கி" (மாறனலங். 217. உதா. 517).*

*[வேல் + வலையம்]*

**வேலாழி** *vēlāḻi,* பெ.(n.) கடல்; sea. *"வேலாழி சூழுலகு" (திணைமாலை. 62).*

**வேலான்** *vēlāṉ,* பெ.(n.) வேற்படை தாங்கியவன்; spearman.

*[வேல் + அன்]*

**வேலி[1]** *vēli,* பெ.(n.) 1. முள், கழி முதலியவற்றாலான அரண்; hedge, fence. *"வேரல் வேலி வேர்க்கோட் பலவின்" (குறுந். 18).* 2. மதில் (பிங்.); wall. 3. காவல் (பிங்.); custody, watch, guard. *"நிறைநாண் வேலி நீங்கி" (கல்லா. 87, 3).* 4. நிலம் (பிங்.); land. *"சாலிவேலியுந் தழீஇய வைப்பும்" (கம்பரா. நாட்டுப். 12).* 5. வயல் (பிங்.); field. 6. நில அளவு; land measure = 6.74 acres (G.Ti.D. 1, 135). 7. பசுக்கொட்டில் (பிங்.); cowshed. 8. ஊர் (பிங்.); village. *"பன்னிரு வேலி கொண்டருளுஞ் செய்கை கண்டு" (தேவா. 176, 2).* 9. வேலிப்பருத்தி பார்க்க (மூ.அ.); see *vēli-p-parutti.* 10. இலவுவகை; red-flowered silk cotton tree. *"வேலியங் குறுஞ்சூல் விளைகாய்ப் பஞ்சினம்" (கல்லா. 87).* 11. ஓசை (அரு.நி.); sound. 12. காற்று (அரு.நி.); wind.

தெ. வேலுகு; க. பேலி; ம. வேலி.

*[வேல் → வேலி]*

**வேலி[2]** *vēli,* பெ.(n.) 1. கொடிவேலி; plumbago. 2. கரும்பு; sugar-cane.

*[வேல் → வேலி]*

**வேலி[3]** *vēli,* பெ.(n.) (நில அளவையில்) இருபது மா கொண்ட அளவு; a land measure of twenty ma (equal to 6.67 acres).

*[வேல் → வேலி]*

**வேலிக்கள்ளி** *vēli-k-kaḷḷi,* பெ.(n.) கள்ளிவகை (சங்.அக.); a kind of spurge.

*[வேலி + கள்ளி]*



வேலிக்காசு *vēli-k-kāšu,* பெ.(n.) பழைய வரி வகை (S.I.I.iii, 142); an ancient village- tax.

*[வேலி + காசு]*

வேலிக்காரம் *vēli-k-kāram,* பெ.(n.) வெண்காரம்; borax.

*[வேலி + காரம்]*

வேலிக்கால் *vēli-k-kāl,* பெ.(n.) 1. வேலி; hedge, fence. 2. வேலிகட்டிய தோட்டம்; fenced garden. 3. வேலி கட்ட நடுங்கழி (வின்.); stake in hedging.

*[வேலி + கால்]*

வேலிக்கொடி *vēli-kodi,* பெ.(n.) வேலிப்பருத்தி பார்க்க; see *vēli-p-parutti.*

*[வேலி + கொடி]*



வேலிக்கொவ்வை *vēli-k-kovvai,* பெ.(n.) கோவை; a climbing plant-Bryonia grandis.

*[வேர + கொவ்வை]*

வேலிகட்டு-தல் *vēli-kaṭṭu-,* செ.குன்றாவி. (v.i.) கழி முதலியவற்றால் இடத்தைச் சூழத்தடுத்து வரம்பிடுதல்; to hedge, fence, as a field's to make a hedge or fence.

*[வேலி + கட்டு-,]*

வேலிகம்[1] *vēligam,* பெ.(n.) கற்றாழை (சங்.அக.); aloe.

வேலிகம்[2] *vēligam,* பெ.(n.) ஒரு வகை மலநோய்; a disease due to worms in the intestines.

*[வேலி → வேலிகம்] (மு.தா.81)*

வேலிகொளுவு-தல் *vēli-koḷuvu-,* செ. குன்றாவி.(v.t.) வேலிகட்டு-தல் பார்க்க (வின்.); see *vēli-kaṭṭu-*

*[வேலி + கொளுவு-,]*

வேலித்துத்தி *vēli-t-tutti,* பெ.(n.) செடிவகை (இலத்.); pipal-leaved evening mallow, m.sh., abutilon polyandrum.

*[வேலி + துத்தி]*

வேலிதம் *vēlidam,* பெ.(n.) கட்டு; bandage.

வேலிநாயகம் *vēli-nāyagam,* பெ.(n.) காட்டாமணக்கு; wild castor plant-Jatropha carcas.

*[வேலி + நாயகம்]*



வேலிநோய் *vēli-nōy,* பெ.(n.) ஒரு வகை நோய்; a kind of disease.

*[வேலி + நோய்]*

வேலிப்பயறு *vēli-p-payaṟu,* பெ.(n.) பழைய நாணய வரி வகை (S.I.I.i, 89); an ancient tax in cash.

*[வேலி + பயறு]*

வேலிப்பயிர் *vēli-p-payir,* பெ.(n.) தோட்டங்களில் விளைவிக்கும் பயிர்; plant grown in gardens.

*[வேலி + பயிர்]*

வேலிப்பருத்தி[1] *vēli-p-parutti,* பெ.(n.) உத்தாமணி, உத்தமதாளி, அச்சாணி மூலி; a twiner title being a hedge plant bearing fruit with cottony fibres inside-Dog's bane; whitlow plant-Daemia extensa. The whole plant is emetic and expectorant, and used mostly in children's disease.

*[வேலி + பருத்தி]*



வேலிப்பருத்தி[2] *vēli-p-parutti,* பெ.(n.) கொடிவகை (பதார்த்த. 578); stinking swallow wort, m.cl., damia extensa.

*[வேலி + பருத்தி]*

வேலிப்பாகல் *vēli-p-pāgal,* பெ.(n.) பாகல் வகை (வின்.); a kind of caper plant.

*[வேலி + பாகல்]*

வேலிப்பாசி *vēli-p-pāši,* பெ.(n.) பாசிவகை (M.M.); hedge moss, sida humilis.

*[வேலி + பாசி]*

வேலிபோடு-தல் *vēli-pōḍu-,* செ.குன்றாவி. (v.t.) வேலிகட்டு-தல் பார்க்க; see *vēli-kaṭṭu-.*

*[வேலி + போடு-,]*

வேலிமுள் *vēli-muḷ,* பெ.(n.) கருவேல் முள்; thorn of Acacia arabica.

*[வேலி + முள்]*

வேலிமுறி-த்தல் *vēli-muṟi-,* செ.கு.வி.(v.i.) வேலியழி-தல் பார்க்க; see *vēli-yaḻi-.*

*[வேலி + முறி-,]*

வேலிமூங்கில் *vēli-mūṅgil,* பெ.(n.) செடிவகை (வின்.); a major shrub, Justicia betonica.

*[வேலி + மூங்கில்]*

வேலியடை-த்தல் *vēli-y-aḍai-,* செ. குன்றாவி.(v.t.) வேலிகட்டு-தல் பார்க்க; see *vēli-kaṭṭu-.*

*[வேலி + அடை-,]*

வேலியழி-த்தல் *vēli-y-aḻi-,* செ.கு.வி.(v.i.) 1. காவலடைப்பை அழித்தல்; to destroy or remove afence. 2. வரம்பு கடத்தல்; to transgress bounds.

*[வேலி + அழி-,]*

வேலிறை *vēliṟai,* பெ.(n.) வேலாயுதன் பார்க்க (சூடா.); see *vēlāyudaṉ.*

*[வேல் + இறை]*

**வேலின்மேற்புல்லுருவி** *vēlin-mēr-pulluruvi,* பெ.(n.) வேலாமேற்புல்லுருவி பார்க்க; see *vēlā-mēr-pulluruvi.*

*[வேலின் + மேல் + புல்லுருவி]*

**வேலுத்தம்பிதளவாய்** *vēlu-t-tambi-taḷavāy,* பெ.(n.) வீரபாண்டியக் கட்டபொம்மன், பூலித்தேவர் முதலியவர்களைப் போல் அந்நாளில் கேரள விடுதலைக்கு வெள்ளைக் காரர்களை எதிர்த்தவர் இவர்; that day agianst britishman Kerala Independent like *virapāṇḍiya-k-kaṭṭabomman, pūli-t-tēvar.*

இவர் பிறந்த ஊர் குமரி மாவட்டத்தில் உள்ள தலைக்குளம் என்பதாகும். இவர் கி.பி.1765–ஆம் ஆண்டில் பிறந்து பத்தொன்பதாம் நூற்றாண்டுத் தொடக்கம் வரை வாழ்ந்திருந்தார். வேணாட்டு அமைச்சராக இருந்து நேர்மையான ஆட்சி புரிந்தவர். தன்மானங்காக்கும் பொருட்டுத் தலையைத் தம்பியிடம் கொடுத்தவர். இவருடைய புகழைப் பரப்பும் நாடகங்களை மக்கள் இன்றும் நடிக்கின்றனர். இவர் பயன்படுத்திய வாளை இவருடைய குடும்பத்தினர் இந்தியக் குடியரசுத் தலைவராக இருந்த இராசேந்திர பிரசாத்திரடம் கொடுத்தனர். அவ்வாள் தில்லியில் உள்ள தேசியப் பொருட்காட்சி மண்டபத்தில் வைக்கப்பட்டிருக்கிறது.

*[வேலுத்தம்பி + தளவாய்]*

**வேலூர்க்கிழான்** *vēlūr-k-kiḻān,* பெ.(n.) தொண்டை நாட்டில் குமிழம்பட்டு என்னும் சிற்றூரில் இருந்த ஒர வள்ளல்; a small village *kumiḻampaṭṭu* were one donar at *toṇḍai-nāḍu.*

*[வேலூர் + கிழான்]*

பஞ்சகாலம் ஒன்று நேரிட்ட பொழுது இவன் தன்னை நாடிவந்த பல புலவர்களையும், பிறரையும் உணவிட்டுக் காப்பாற்றினான்.

**வேலேறு** *vēlēṟu,* பெ.(n.) வேல் தைத்த புண்; wound caused with a javelin. *"வேலேறு படத் தேளேறு மாய்ந்தாற்போல" (இறை. 2, பக். 39).*

*[வேல் + ஏறு]*

**வேலை¹** *vēlai,* பெ.(n.) 1. தொழில்; work, labour, task. *"வேலை யுலகிற் பிறக்கும் வேலையொழிந்தோ மில்லை" (அட்டப். திருவரங்கக். 54).* 2. காரியம்; business, matter. *'என்ன வேலையாய் வந்தாய்?'.* 3. வேலைப்பாடு; workmanship. *'இந்த நகையில் அமைந்த வேலை மிகவும் அருமையானது'.* 4. வேலைத்திறன் பார்க்க; see *vēlai-t-tiṟan.* 5. பதவி; situation, office. *'உனக்கு எங்கே வேலை?'.*

*[வேல் → வேலை] (வ.மொ.வ. 268)*

ம. வேல; து. பேலு.

**வேலை²** *vēlai,* பெ.(n.) 1. காலம் (பிங்.); time, timit of time. *"மணந்தா ருயிருண்ணும் வேலை" (குறள், 1221).* 2. கடற் கரை (பிங்.); sea-shore. *"பௌவ வேலை" (கந்தபு. மேருப். 46).* 3. கடல் (பிங்.); sea, ocean. *"வேலை நஞ்சுண் மழை தருகண்டன்" (திருவாச. 6, 46).* 4. அலை (பிங்.); wave. *"வேலைப்புணரி" (திவ். இயற். திருவிருத். 75).* 5. கானல்; sandy tract. *"வேலை யாத்திரை செல்யாறு" (பரிபா. 19, 18).*

*[வேல் → வேலை]*

**வேலை³** *vēlai,* பெ.(n.) 1. கரும்பு (மலை.); sugarcane. 2. வெண்காரம் (சங்.அக.); borax.

**வேலை⁴** *vēlai,* பெ.(n.) 1. நிகழ்காலம்; present time. 2. நோய்; disease. 3. பனி; dew. 4. வேளை பார்க்க; see *vēḷai.*

**வேலைக்கந்தகம்** *vēlai-k-kandagam,* பெ.(n.) 1. கடற்பாசி; sea weeds. 2. ஒரு கருப்பொருள்; one of the 120 natural substances.

*[வேலை + கந்தகம்]*

**வேலைக்கள்ளி** *vēlai-k-kaḷḷi,* பெ.(n.) வேலை செய்யாமல் ஏமாற்றுபவள்; woman who shirks work. *"வேலைக்கள்ளிக்குப் பிள்ளைச் சாக்கு".*

*[வேலை + கள்ளி]*

**வேலைக்காரத்தனம்** *vēlaikkāra-t-taṉam,* பெ.(n.) வேலைத்திறன் பார்க்க; see *vēlai-t-tiṟaṉ.*

*[வேலைக்காரன் + தனம்]*

**வேலைக்காரன்[1]** *vēlai-k-kāraṉ,* பெ.(n.) 1. ஊழியன்; man-servant. 2. தொழிலாளி; workman, labourer. 3. தொழில்வல்லவன்; skilled worker. 4. சூழ்ச்சி செய்பவன்; trickster. *'அவன் பெரிய வேலைக்காரன்'.*

*[வேலை + காரன்]*

**வேலைக்காரன்[2]** *vēlai-k-kāraṉ,* பெ.(n.) வைக்கோல் தள்ளுந் தடி; rake.

*[வேலை + காரன்]*

**வேலைக்காரி** *vēlai-k-kāri,* பெ.(n.) பணிப்பெண்; servant-maid.

*[வேலை + காரி]*

**வேலைக்காலம்** *vēlai-k-kālam,* பெ.(n.) வேலை செய்யும் நேரம்; period of work.

*[வேலை + காலம்]*

**வேலைக்கூலி** *vēlai-k-kūli,* பெ.(n.) குறிப்பிட்ட வேலைக்குக் கொடுக்குங் கூலிப்பணம்; wage for a specific item of work, dist, fr. *nāt-kūli.*

*[வேலை + கூலி]*

**வேலைக்கேடு** *vēlai-k-kūḍu,* பெ.(n.) வினைக்கேடு பார்க்க; see *viṉai-k-kēḍu.*

*[வேலை + கேடு]*

**வேலைகாட்டு–தல்** *vēlai-kāṭṭu-,* செ.கு.வி. (v.i.) வேலைத்தனம்பண்ணு–தல் பார்க்க; see *vēlai-t-taṉam-paṇṇu-.*

*[வேலை + காட்டு–,]*

**வேலைகொள்(ளு)[1]–தல்** *vēlai-koḷ(ḷu)-,* செ.கு.வி.(v.i.) அதிக வேலை செய்யும் படியாதல்; to involve labour. *'அதைச் செய்யத் தொடங்கினால் இன்னும் வேலை கொள்ளும்'.*

*[வேலை + கொள்(ளு)–,]*

**வேலைகொள்(ளு)[2]–தல்** *vēlai-koḷ(ḷu)-,* செ.குன்றாவி.(v.t.) வேலை வாங்கு–தல் பார்க்க; see *vēlai-vāṅgu-.*

*[வேலை + கொள்(ளு)–,]*

**வேலைச்சுருக்கு** *vēlai-c-curukku,* பெ.(n.) வேலை அதிகங் கொள்ளாமை; economy of labour.

*[வேலை + சுருக்கு]*

**வேலைசாய்[1]–தல்** *vēlai-cāy-,* செ.கு.வி. (v.i.) முடிவுக்கு வருதல்; to come an end, as life. *'அவர் பாடு வேலை சாய்ந்து விட்டது'.*

*[வேலை + சாய்–,]*

**வேலைசாய்²–த்தல்** *vēlai-šāy-,* செ. குன்றாவி.(v.t.) 1. மேற்கொண்ட தொழில் முடித்தல்; to finish as a job. *'அந்த காரியத்தை வேலை சாய்த்து விட்டான்'.* 2. அழித்தல்; to ruin, make an end of. *'அவன் அந்தக் குடியை வேலை சாய்த்து விட்டான்'.* 3. கொலை புரிதல்; to slay, murder.

*[வேலை + சாய்²–,]*

**வேலைசெய்¹–தல்** *vēlai-cey-,* செ.கு.வி. (v.i.) 1. தொழிலியற்றுதல்; to do work. *'வேலை செய்தாற் கூலி; வேடம் போட்டாற் காசு'.* 2. மழிப்பு செய்தல்; to shave. 3. சூழ்ச்சி செய்தல்; to play tricks. 4. வேலைத் தனம்பண்ணு–, 2 பார்க்க; see *vēlai-t-taṉam-paṉṉu-.*

*[வேலை + செய்–,]*

**வேலைசெய்²–தல்** *vēlai-cey-,* பெ.(n.) 1. (இயந்திரம் முதலியவை) இயங்குதல்; (machine, etc.) function. *'கணிப்பொறி வேலைசெய்யும் விதமே தனி'.* 2. (மருந்து போன்றவை) பாதிப்பை அல்லது பலனைத் தருதல்; (of medicine, etc.) act on, work. *'அரை மணி நேரத்துக்கு முன்பு குடித்த மருந்து இப்போதுதான் வேலை செய்ய ஆரம்பித்திருக்கிறது'.*

*[வேலை + செய்–,]*

**வேலத்தலம்** *vēlai-t-talam,* பெ.(n.) வேலைத் தலை பார்க்க (கொ.வ.); see *vēlai-t-talai.*

*[வேலை + தலம்]*

**வேலைத்தலை** *vēlai-t-talai,* பெ.(n.) வேலை நடக்குமிடம்; place of work.

*[வேலை + தலை]*

**வேலைத்தனம்** *vēlai-t-taṉam,* பெ.(n.) வேலைத்திறன் பார்க்க; see *vēlai-t-tiṟaṉ.*

*[வேலை + தனம்]*

**வேலைத்தனம்பண்ணு–தல்** *vēlai-t-taṉam-paṉṉu-,* செ.கு.வி.(v.i.) 1. வேலையில் திறமை காட்டுதல்; to show one's skill or handiwork. 2. குறும்பு பண்ணுதல்; to do mischief, to create trouble. 3. வேலை செய்–, 3 பார்க்க; see *vēlai-cey-.*

*[வேலைத்தனம் + பண்ணு–,]*

**வேலைத்திறம்** *vēlai-t-tiṟam,* பெ.(n.) வேலைத்திறன் பார்க்க; see *vēlai-t-tiṟaṉ.*

*[வேலை + திறம்]*

**வேலைத்திறமை** *vēlai-t-tiṟamai,* பெ.(n.) வேலைத்திறன் பார்க்க; see *vēlai-t-tiṟaṉ.*

*[வேலை + திறமை]*

**வேலைத்திறன்** *vēlai-t-tiṟaṉ,* பெ.(n.) 1. தொழில் செய்வதில் வல்லமை; efficiency or skill, as in an art or craft. 2. குறும்புச் செயல்; mischief, trick.

*[வேலை + திறன்]*

**வேலைத்துறட்டு** *vēlai-t-tuṟaṭṭu,* பெ.(n.) மாவகை; tree caper.

*[வேலை + துறட்டு]*

**வேலைத்தொல்லை** *vēlai-t-tollai,* பெ.(n.) அதிக வேலையால் உண்டாகும் நெருக்கடி; pressure of work.

*[வேலை + தொல்லை]*

**வேலைதீர்¹–தல்** *vēlai-tīr-,* செ.கு.வி.(v.i.) வேலைசாய்¹–, பார்க்க; see *vēlai-cāy-.*

*[வேலை + தீர்–,]*

**வேலைதீர்²–த்தல்** *vēlai-tīr-,* செ.குன்றாவி. (v.t.) வேலை சாய்²–, பார்க்க; see *vēlai-cāy-*

*[வேலை + தீர்–,]*

**வேலைநாணயம்** *vēlai-nāṇayam,* பெ.(n.) 1. வேலையில் நேர்மை; honesty in work. 2. செய்யப்படும் வேலையின் மேம்பாடு; excellence of work.

*[வேலை + நாணயம்]*

**வேலைநாள்** *vēlai-nāḷ,* பெ.(n.) பணி நாள்; working day.

*[வேலை + நாள்]*

**வேலைநிறுத்தம்** *vēlai-niṟuttam,* பெ.(n.) 1. வேலையின்றியிருக்கை; stoppage of work, as on holidays. 2. வேலைமறியல் பார்க்க; see *vēlai-mariyal.*

*[வேலை + நிறுத்தம்]*

**வேலைநிறுத்தம்** *vēlai-niṟuttam,* பெ.(n.) பொதுப்பணிநிறுத்தம்; General strike.

*[வேலை + நிறுத்தம்]*

தொழில் துறையில் வேலை நிறுத்தம் என்பது தொழிலாளர் பெற்றுள்ள வன்மையானதோர் கருவியாகும். தத்தம் குறைகளை நீக்கிக் கொள்ளவும், ஊதிய உயர்வு பெறவும் தொழிலாளர்கள் இந்த கருவியைப் பயன்படத்துகின்றனர். குறிப்பிட்ட ஒரு தொழில் முழுவதிலுமோ அல்லது குறிப்பிட்ட ஒரு மாநிலத்திலோ நடைபெறும் வேலை நிறுத்தத்திலும் பொது வேலை நிறுத்தம் என்று பெயர். சமூகத்தையும் அரசாங்கத்தையும் எதிர்த்து எல்லாத் தொழில் நிறுவனங்களிலும், ஆலைகளிலும், போக்குவரத்துத் துறைகளிலும் பொருளாக்கத்தை நிலைகுலையச் செய்யும் வேலை நிறுத்தம் தேசிய வேலை நிறுத்தம் எனப்படும்.

19ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் தொழிற் சங்கத் தலைவர்கள் வேலை நிறுத்தங்களை நடத்தத் தலைப்பட்டனர். 1829 முதல் 1842 வரை வேலை நிறுத்தங்கள் பல நடந்தன. ஓவன் (owen) என்பார் நாட்டில் இயங்கிவந்த தொழிற் சங்கங்களை யெல்லாம் இணைத்துப் பொது வேலை நிறுத்தம் ஒன்று நடத்தி வெற்றி பெற முயற்சி செய்தார். ஆனால் அவ்வேலை நிறுத்தம் தோல்வியடைந்தது. பொது வேலை நிறுத்தம் மக்கள் கருத்திற்கு ஒவ்வாமல் அவர்களுடைய ஆர்வமும் ஆதரவும் பெறக் கூடாமல் மறைந்துவிட்டது.

முதல் உலக போருக்குப் பின் தொழிலாளர் களிடையே வேலை நிறுத்தங்கள் மீண்டும் மீண்டும் தோன்றின. நிலக்கரிச் சுரங்கத் தொழிலில் பல கிளர்ச்சிகள் ஏற்பட்டன. 1926 ஆம் ஆண்டு மே மாதம் 3ஆம் நாள் முதல் ஒன்பது நாட்களுக்குப் பொது வேலை நிறுத்தம் நாடு முழுவதும் நடைபெற்றது. 15 இலட்சம் தொழிலாளர்கள் இதில் ஈடுபட்டனர். இதனால் அரசாங்கத்திற்கு 4,33,000 பவுன் நட்டம் ஏற்பட்டது. ஆனால் இப்பொது வேலை நிறுத்தம் வெற்றியடையவில்லை.

*“வேலை நிறுத்தம் அநீதியானது; மனிதத் தன்மையற்றது; ஊதாரித்தனமானது; கொடுமை வாய்ந்தது சமூக விரோதமானது”* என்று ஹாப்சன் (hobson) கூறுகின்றார். வேலை நிறுத்தம் தொழிலாளரின் வாழ்க்கையையே குலைக்கக் கூடியதாகும். அது எய்வோர் மீதே திரும்பிப் பாயும் ஒரு படையாகும். இதனால் தொழில் நிருவாகத் தினரும் தொழிலாளரும் நேர்முகமாகவோ நடுவர்கள் மூலமாகவோ தமக்குள் ஏற்படும் தொழிற் பூசல்களைத் தீர்த்துக் கொள்ளுவது முன்னேற்ற மடைந்த நாடுகளில் சிறந்த முறையாகக் கருதப்படுகிறது. இம்முறையில் வேலை நிறுத்தம் அறவே தவிர்க்கப்படுகிறது.

வேலை நிறுத்தம் என்பது தொழிலாளர்கள் சட்டத்தின் மூலம் பெற்றுள்ள அடிப்படை உரிமையாகும். ஆனால் சமூகத்துக்கு அதனால் ஏற்படும் தீய விளைவுகளினால் மக்கள் அதற்குத் தம் ஆதரவைத் தருவதில்லை.

வேலைநீர் *vēlai-nīr,* பெ.(n.) கல்லுப்பு; rock salt.

*[வேலை + நீர்]*

வேலைநேரம் *vēlai-nēram,* பெ.(n.) 1. வேலை செய்தற்குரிய காலம்; period of work. 2. வேலை செய்கின்ற வேளை; work-time.

*[வேலை + நேரம்]*

வேலைப்பரீட்சை *vēlai-p-parīṭcai,* பெ.(n.) ஒருவனது வேலைத்திறமையை ஆராய்கை; trial of one's skill in buisiness. 2. வேலைத்திறன் பார்க்க; see *vēlai-t-tiṟaṉ.*

*[வேலை + பரீட்சை]*

வேலைப்பாடு[1] *vēlai-p-pāḍu,* பெ.(n.) வேலைத்திறன் பார்க்க; see *vēlai-t-tiṟaṉ.*

*[வேலை + பாடு]*

வேலைப்பாடு[2] *vēlai-p-pāḍu,* பெ.(n.) (கலைப் பொருள், கைவினைப்பொருள், முதலியவற்றில்) அழகும் நுணுக்கமும் வெளிப்படும் வகையில் திறமையாகச் செய்யப்படும் வேலை; craftsmanshi, workmanship. *'சிற்ப வேலைப்பாடு நிறைந்த கோயில்', 'பின்னால் வேலைப்பாடுகள் உடைய கைப்பை'.*

*[வேலை + பாடு]*

வேலைப்பார்-த்தல் *vēlai-p-pār-,* செ.குன்றாவி.(v.t.) பணிபுரிதல், தொழில் செய்தல்; do work, work (in an office, etc.). *'ஒரு உணவு விடுதியில் வேலைபார்க்கிறார்'.*

*[வேலை + பார்-,]*

வேலைபண்ணு-தல் *vēlai-paṇṇu-,* செ.கு.வி. (v.i.) வேலைசெய்-தல் பார்க்க; see *vēlai-cey-.*

*[வேலை + பண்ணு-,]*

வேலைபிடி-த்தல் *vēlai-piḍi-,* செ.கு.வி.(v.i.) வேலைகொள்-தல் பார்க்க; see *vēlai-koḷ-.*

*[வேலை + பிடி-,]*

வேலைபோட்டுக்கொடு-த்தல் *vēlai-pōṭṭu-k-koḍu-,* செ.குன்றாவி.(v.t.) (ஒருவருக்கு) வேலை கிடைக்க ஏற்பாடு செய்தல், வேலை ஏற்படுத்தித் தருதல்; help (S.O.) with a job. *'என் மகனுக்கு உங்கள் நெசவாலையில் ஒரு வேலை போட்டுக் கொடுங்கள்'.*

*[வேலை + போட்டு + கொடு-,]*

வேலைமறியல் *vēlai-maṟiyal,* பெ.(n.) 1. ஒருவனை வேலை செய்யவொட்டா மற்றடுக்கை; slopping a person in his work. 2. தொழிலாளர் கூடிப்பேசி வேலையை ஒரே காலத்தில் நிறுத்துகை; strike.

*[வேலை + மறியல்]*

வேலைமானம் *vēlai-māṉam,* பெ.(n.) வேலைத்திறன் 1 பார்க்க; see *vēlai-t-tiṟaṉ.*

*[வேலை + மானம்]*

வேலைமினக்கெட்டவன் *vēlai-miṉa-k-keṭṭavaṉ,* பெ.(n.) 1. பயனற்ற வேலை செய்து வீண்பொழுது போக்குபவன்; one who wastes his time in useless work. 2. வேலையின்றி சோம்பியிருப்பவன்; idler.

*[வேலை + மினக்கெடு + அன்]*

வேலைமினக்கெடு-தல் *vēlai-miṉakkeḍu-,* செ.கு.வி.(v.i.) வேலைமெனக்கிடு-தல் பார்க்க; see *vēlai-meṉa-k-kiḍu-.*

*[வேலை + மினக்கெடு-,]*

**வேலைமினக்கேடு** *vēlai-minakkēḍu,* பெ.(n.) பயனுள்ள வேலை யொன்றுமின்றி யிருக்கை; being without any useful work. 2. வீணான செயல்; wasted labour.

*[வேலை + மினக்கேடு]*

**வேலைமுலைமாதர்** *vēlai-mulai-mādar,* பெ.(n.) தூதுவளை; a thorny climber, three tobed night shade-solanum trilobatum.

*[வேலை + முலை + மாதர்]*



**வேலைமெனக்கிடு-தல்** *vēlai-meṉa-k-kiḍu-,* செ.கு.வி.(v.i.) 1. பயனுள்ள வேலையொன்று மின்றியிருத்தல்; to be without any useful work. 2. செய்த காரியம் வீணாதல்; to have one's labour wasted.

*[வேலை + மெனக்கிடு-,]*

**வேலைமேற்போ-தல்** *vēlai-mēṟ-pō-,* செ.கு.வி.(v.i.) தன் வேலையைக் கவனிக்கப் போதல்; to go on duty, to go to work. *'மந்திரி வேலை மேற் போயிருக்கிறார்'.*

*[வேலை + மேல் + போ-,]*

**வேலையாள்** *vēlaiyāḷ,* பெ.(n.) கூலிக்கு வேலை செய்பவன்; workman, labourer, servant.

*[வேலை + ஆள்]*

**வேலையில்லாத்திண்டாட்டம்** *vēlaiyillā-t-tiṇḍāṭṭam,* பெ.(n.) வேலை கிடைக்காத நிலை; unemployment. *'மக்கள் தொகை அதிகமாக அதிகமாக வேலையில்லாத் திண்டாட்டமும் அதிகமாகிக் கொண்டு போகிறது'.*

*[வேலையில்லா + திண்டாட்டம்]*

**வேலையிற்றுயின்றோன்** *vēlaiyiṟṟuyiṉṟōṉ,* பெ.(n.) பாற்கடலிற் பள்ளி கொண்டவன், திருமால் (சூடா.); *visṇu,* as sleeping on the sea of milk.

*[வேலை + துயில் + அன்]*

**வேலையைக்காட்டு-தல்** *vēlaiyai-k-kāṭṭu-,* செ.குன்றாவி.(v.t.) குறும்பு செய்தல்; play dirty tricks. *'உங்களிடம் மட்டுமல்ல, வேறு சிலரிடமும் அவன் வேலையைக் காட்டியிருக்கிறான்'.*

*[வேலையை + காட்டு-,]*

**வேலைருசிவஞ்சி** *vēlairuśi-vañji,* பெ.(n.) சித்தாமுட்டி; a drug - pavonia zeylanica.

*[வேலை + ருசி + வஞ்சி]*

**வேலைவளர்-த்தல்** *vēlai-vaḷar-,* செ.கு.வி. (v.i.) வேலையை நீட்டித்தல்; to prolong work.

*[வேலை + வளர்-,]*

**வேலைவாங்கு¹-தல்** *vēlai-vāṅgu-,* செ. குன்றாவி.(v.t.) பிறரை ஏவி வேலை செய்யும்படி ஏவுதல்; to get work done, to exact work from.

*[வேலை + வாங்கு¹-,]*

வேலைவாங்கு²–தல் *vēlai-vāṅgu-,* செ.கு.வி. (v.i.) வேலைகொள்–, பார்க்க; see *vēlai-koḷ-.*

*[வேலை + வாங்கு–,]*

வேலைவை¹–த்தல் *vēlai-vai-,* செ.கு.வி. (v.i.) வீண் வேலையிடுதல்; to cause one to work unnecessarily.

*[வேலை + வை–,]*

வேலைவை²–த்தல் *vēlai-vai-,* செ.கு.வி. (v.i.) ஒருவனைக் காணுதல் முதலிய வற்றிற்கு நேரங் குறிப்பிடுதல்; to make appointments.

*[வேலை + வை–,]*

வேவம்¹ *vēvam,* பெ.(n.) தனிமை (அரு.நி.); loneliness.

*[ஏகம் → வேவம்]*

வேவம்² *vēvam,* பெ.(n.) துன்பம் (அரு.நி.); distress.

க. பேவசா.

*[எவ்வம் → வேவம்]*

வேவல் *vēval,* பெ.(n.) முற்காலத்து வழங்கிய நாணயவகை; an ancient coin. *"வேவல் புழுங்க லென்றும்" (பணவிடு. 25).*

*[வே → வேவல்]*

வேவாள் *vēvāḷ,* பெ.(n.) ஒற்றன்; spy. *"வேவா ளனுப்பும் விசாரிப்பும்" (பணவிடு. 25).*

*[வேவு + ஆள்]*

வேவி¹ *vēvi,* பெ.(n.) வேவி–த்தல் பார்க்க; see *vēvi-.*

வேவி²–த்தல் *vēvi-,* செ.குன்றாவி.(v.t.) வேகவைத்தல்; boiling.

வேவு¹ *vēvu,* பெ.(n.) ஒற்று; spying, espionage.

*[வேய் → வேவு]*

வேவு² *vēvu,* பெ.(n.) வேகை; burning, boiling.

*[வே → வேவு]*

வேவு³ *vēvu,* பெ.(n.) வேள்வு 2 பார்க்க; see *vēḷvu.*

*[வேள்வு → வேவு]*

வேவுகாரன் *vēvu-kāraṉ,* பெ.(n.) ஒற்றன்; spy.

*[வேவு + காரன்]*

வேவுபார்–த்தல் *vēvu-pār-,* செ.குன்றாவி. (v.t.) வேய்³–தல் பார்க்க; see *vēy-.*

*[வேவு + பார்–,]*

வேவெடு–த்தல் *vēveḍu-,* செ.கு.வி.(v.i.) *வேள்வெடு–, 1* பார்க்க; see *vēḷ-veḍu-.*

*[வே + வெடு–,]*

வேவை *vēvai,* பெ.(n.) வெந்தது; that which is boiled or cooked. *"பராரை வேவை பருகெனத் தண்டி" (பொருந. 104).*

*[வே → வேவை]*

வேழ் *vēḷ,* பெ.(n.) கரும்பு; sugar cane - saccharum officinarum.

*[வே → வேழ்]*

வேழ்வி *vēḻvi,* பெ.(n.) வேள்வி (அரு.நி.); corr. of.

*[வேள்வி → வேழ்வி]*

**வேழக்கரும்பு** *vēḻa-k-karumbu,* பெ.(n.) நாணல்வகை; kaus, a large and coarse grass. *"வேழக் கரும்பினொடு மென் கரும்பு" (பெரியபு. ஏனாதி. 2).*

*[வேழம் + கரும்பு]*

**வேழக்கைலாதி** *vēḻakkai-lādi,* பெ.(n.) மதனப்பூ பார்க்க; see *madaṉa-p-pū.*

*[வேழம் + கைலாதி]*

**வேழக்கோது** *vēḻa-k-kōdu,* பெ.(n.) சாறு நீங்கிய கரும்புச் சக்கை; refuse of crushed sugarcane after the juice is extracted. *"சாற்று வேழக்கோது போல்" (காஞ்சிப்பு. நகர. 52).*

*[வேழம் + கோது]*

**வேழக்கோல்** *vēḻa-k-kōl,* பெ.(n.) பேய்க் கருப்பந்தட்டை (பெரும்பாண். 263. உரை); stem of kaus.

*[வேழம் + கோல்]*

**வேழகம்** *vēḻagam,* பெ.(n.) பீர்க்கு; loofa-ribbed gourd - luffa acutangula.

**வேழதி** *vēḻadi,* பெ.(n.) மூங்கில்; bamboo.

**வேழம்** *vēḻam,* பெ.(n.) 1. கரும்பு (பிங்.); sugar cane. 2. வேழக்கரும்பு பார்க்க (பெரும்பாண். 263, அரும்.); see *vēḻa-k-karumbu.* 3. நாணல் வகை (பிங்.); european bamboo read. *"வேழப்பழனத்து" (மதுரைக். 257).* 4. மூங்கில் (பிங்.); spiny bamboo. 5. கொடி வகை (பீர்க்கு) (மூ.அ.); sponge gourd. 6. புல்வகை (யாழ்.அக.); kaus, a large and coarse grass. 7. இசை (பிங்.); music. 8. யானை; elephant. *"இரவுப் புனமேய்ந்த வுரவுச்சின வேழம்" (அகநா. 309) (பிங்.).* 9. இடராசி (பரிபா. 11, 2, உரை); aries of the zodiac. 10. பரணி நட்சத்திரம் (பரிபா. 11, 2, உரை); the 2nd naksatra. 11. விளாம் பழத்திற்கு வருவதொரு நோய்; a disease affecting the fruit of the wood-apple. *"வேழந்துற்றிய வெள்ளிலே போல்" (சீவக. 232).* 12. ஒரு வகைப் பூச்சி (பொதி.நி.); an insect.

*[வெள் → வேள் → வேளம் → வேழம்] (வே.க.பக். 140)*

**வேழம்பம்** *vēḻambam,* பெ.(n.) 1. வஞ்சகம்; deceit, trick. *"வேழம் பத்தைவர் வேண்டிற்று வேண்டிப்போய்" (தேவா. 472, 1).* 2. ஏளனம்; ridicule mockery.

*[வே → வேழம்பம்]*

**வேழம்பர்** *vēḻambar,* பெ.(n.) 1. கழைக் கூத்தர் (பிங்.); pole-dancers. 2. நகைப் பூட்டுத்திறனாளர் (விதூஷகர்) (சிலப். 26, 130); professional wits or humourists. 3. கேலி செய்வோர் (சிலப். 5, 53, உரை); those who ridicule or mock.

*[வேழம்பம் → வேழம்பர்]*

**வேழவெந்தீ** *vēḻa-ven-dī,* பெ.(n.) யானைத்தீ நோய்; a disease that causes great hunger. *"வேழ வெந்தீயினீங்கி" (சீவக. 401).*

*[வேழம் + வெம்–மை + தீ]*

**வேழாகிகம்** *vēḻākigam,* பெ.(n.) 1. பூவந்திக் கொட்டை; soap nut. 2. பூவந்திக்கொடி; a creeper.

**வேள்[1]–தல் (வேட்டல்)** *vēḷ-, (vēṭṭal),* செ. குன்றாவி.(v.t.) 1. வேள்விசெய்தல்; to offer sacrifices. *"ஓதல் வேட்டல்" (பதிற்றுப். 24, 6).* 2. மணம்புரிதல்; to marry. *"மெய்ந்நிறை

*மூவரை மூவரும் வேட்டார்" (கம்பரா. கடிமணப். 102).* 3. விரும்புதல்; to desire. *"வயவுறு மகளிர் வேட்டுணி னல்லது" (புறநா. 20).* 4. நட்பு கொள்ளல்; to love. *"மலர்ந்து பிற்கூம்பாது வேட்டதே வேட்டதா நட்பாட்சி" (நாலடி, 215).*

*[வெள் → வேள் – வேட்டல் → வேள்–தல்] (வே.க.பக். 121)*

வேள்[2] *vēḷ,* பெ.(n.) 1. திருமணம்; marriage. *"வேள்வாய் கவட்டை நெறி" (பழமொ. 360).* 2. விருப்பம் (வின்.); desire. 3. காமன்; *kāma. "வேள் பட விழி செய்து" (தேவா. 1172, 8).* 4. முருகக்கடவுள்; skanda. 5. வேளிர் குலத்தான்; one belonging to the vēḷirclass. *"தோன்முதிர் வேளிர்" (புறநா. 24).* 6. சளுக்கு வேந்தன் (பிங்.); *cāḷukya* king. 7. சிற்றரசன் (சூடா.); petty ruler, chief. 8. பண்டைத் தமிழரசரால் வேளாளர் பெற்ற ஒரு சிறப்புரிமைப் பெயர் (தொல். பொ. 30); title given by ancient tamil kings to vēḷāḷas. *"செம்பியன் தமிழவேள் என்னுங் குலப்பெயரும்" (S.I.S.iii,22).* 9. சிறந்த ஆண் மகன் (யாழ்.அக.); illustrious or great man, hero. *"பாப்பைவேளே" (பெருந்தொ. 1766).* 10. மண் (யாழ்.அக.); earth.

*[வெள் → வேள்] (வே.க.பக். 121)*

வேள்[3] *vēḷ,* பெ.(n.) செப்பு நெருஞ்சில்; a prostate plant - Indigofera enno-ophylla.

வேள்புலம் *vēḷ-pulam,* பெ.(n.) சளுக்கியர்க் குரிய நாடு (S.I.I.iii, 160); the country of the *cāḷukyas.*

*[வேள் + புலம்]*

வேள்புலவரசன் *vēḷ-pulavarašan,* பெ.(n.) சளுக்குவேந்தன் (திவா.); *cāḷukya* king.

*[வேள்புலம் + அரசன்]*

வேள்மான் *vēḷ-māṉ,* பெ.(n.) இவன் ஒரு குறுநில மன்னன்; tributary, petty.

செங்கண்மா என்னும் நகரில் இருந்து அரசு செய்தான். சிறந்த வள்ளல் புலவர்களைப் போற்றுவதில் மிகுந்த ஊக்கங் காட்டினான். இவனிடத்தில் அன்புகொண்ட பெருங்கௌசிகனார் என்னும் புலவர் இவன் மீது மலைபடுகடாம் என்னும் சிறந்த பாடலைப் பாடினார்.

வேள்வி *vēḷvi,* பெ.(n.) 1. ஐவகை வேள்வி; sacrifice. *"முன் முயன் றரிதினின் முடித்த வேள்வி" (அகநா. 220).* 2. ஐவகையாகம்; spiritual discipline. 3. வேள்விக்குழி; sacrificial pit. 4. பூசை; service, worship. *"வேள்வியி னழயில் விளம்புவோரும்" (பரிபா. 19, 43).* 5. மணம்; marriage. *"நாமுன்பு தொண்டுகொண்ட வேள்வியில்" (பெரியபு. தடுத்தாட். 127).* 6. கொடை (பிங்.); bevenolence, gift. 7. நல்வினை; religious merif. *"ஆள்வினை வேள்வியவன்" (பு.வெ. 9, 27).* 8. கொல்லும் வலிவுடைய பேய்கண், வயிறார வுண்ணும்படி பரந்த வலியினை யுடைய வீரன் போர்புரிந்து பகையழித்ததைக் கூறும் புறத்துறை; (purap) theme eulogising a warrior on his destroying his enemies to feast devils with ther dead bodies. *"பண்ணிதைஇய பயங்கெழு வேள்வியின்" (அகநா. 13).* 9. பத்தாவது நாண்மீன்; the 10th naksatra.

*[வெள் → வேள் → வேள்வி] (வே.க.பக். 121)*

ம., தெ. வேள்வி; க. பேலுவெ (b).

வேள்விக்கபிலை *vēlvi-k-kabilai,* பெ.(n.) வேள்விக்குரிய பால் முதலியவற்றை கொடுத் துதவும் பசு (தொல். பொ. 177, உரை); cow that yields milk, ghee, etc, necessary for

a sacrifice.

*[வேள்வி + கபிலை]*

**வேள்விக்குடி** *vē!vi-k-kudi,* பெ.(n.) தேவார பாடல்களில் இடம் பெற்ற குடியிருப்புகளில் ஒன்று; humble dwelling.

குடி என்னும் சொல் ஊர்ப்பெயர்களில் அமைந்த குடியிருப்பை உணர்த்துவதாகும். இளையான் குடியிற் பிறந்த மாறன் என்ற திருத்தொண்டர் இளையான்குடி மாறன் என்று பெரிய புராணத்தில் பேசப்படுகின்றார்.

*[வேள்வி + குடி]*

**வேள்விக்குண்டம்** *vē!vi-k-kundam,* பெ.(n.) வேள்விக்குழி (பிங்.); sacrificial pit.

*[வேளவி + குண்டம்]*

**வேள்விக்குவேந்தன்** *vē!vikku-vēndan,* பெ.(n.) வேள்வி நாயகன் பார்க்க (சூடா.); see *vē!vi-nāyagan.*

*[வேள்விக்கு + நாயகன்]*

**வேள்விச்சாலை** *vē!vi-c-cālai,* பெ.(n.) வேள்வி நிகழ்த்தும் இடம்; sacrificial hall. *"வேள்விச் சாலையின் வேந்தன் போந்தபின்" (சிலப். 30, 170).*

*[வேள்வி + சாலை]*



**வேள்வித்தறி** *vē!vi-t-tari,* பெ.(n.) வேள்வித் தூணம் பார்க்க (பிங்.); see *vē!vi-t-tūnam.*

*[வேள்வி + தறி]*

**வேள்வித்தூண்** *vē!vi-t-tūn,* பெ.(n.) வேள்வித்தூணம் பார்க்க (சூடா.); see *vē!vi-t-tūnam.*

*[வேள்வி + தூண்]*

**வேள்வித்தூணம்** *vē!vi-t-tūnam,* பெ.(n.) வேள்வியில் கடவுளுக்கு உணவான உயிரியைக் கட்டிவைக்கும் தம்பம்; stake to which the sacrificial victim is fastened. *"மணிச்சிரல்.......... வேள்வித் தூணத் தசைஇ" (பெரும்பாண். 316).*

*[வேள்வி + தூணம்]*

**வேள்விநாயகன்** *vē!vi-nāyagan,* பெ.(n.) இமையவர் கோன் (பிங்.); indra, as the lord of sacrifices.

*[வேள்வி + நாயகன்]*

**வேள்விநிலை** *vē!vi-nilai,* பெ.(n.) 1. அரசன் வேள்வி செய்த பெருமையைப் புகழ்ந்து கூறும் புறத்துறை (பு.வெ. 9, 15); *(purap)* theme describing the greatness of sacrifies performed by a king. 2. தலைவன் சேதாவினை நாட்காலையிற் கொடுக்குங் கொடைச் சிறப்பினைக் கூறும் புறத்துறை (தொல். பொ. 90); *(purap)* theme describing the benevolence of a chief in making gifts of red cows, in the early hours of the day.

*[வேள்வி + நிலை]*

**வேள்விமலை** *vē!vi-malai,* பெ.(n.) திவ்விய மருந்து மூலிகைகளையுடைய ஒரு மலை;

mountain containing many extra ordinary drugs.

*[வேள்வி + மலை]*

வேள்விமுதல்வன் *vēḷvi-mudalvaṉ,* பெ.(n.) 1. வேள்வித் தலைவன் (பரிபா. 3, 4, 5, உரை); sacrificer, one who performs a sacrifice. 2. வேள்வி நாயகன் பார்க்க; see *vēḷvi-nāyakaṉ.* *"விலங்கென விண்ணோர் வேள்விமுதல்வன்" (பரிபா. 5, 31).*

*[வேள்வி + முதல்வன்]*

வேள்வியாசிரியன் *vēḷvi-y-āciriyaṉ,* பெ.(n.) வேள்வி செய்விக்கும் போற்றாளி (தொல். பொ. 75, உரை); priest who conducts a sacrifice.

*[வேள்வி + ஆசிரியன்]*

வேள்வியாளன் *vēḷvi-y-āḷaṉ,* பெ.(n.) 1. பார்ப்பனன் (திவா.); brahmin. 2. கொடையாளன் (பிங்.); munificent person.

*[வேள்வி + ஆளன்]*

வேள்வியின்பதி *vēḷviyiṉ-pati,* பெ.(n.) திருமால் (பிங்.); *visṇu*, as the lord of sacrifice.

*[வேள்வியின் + பதி]*

வேள்வு *vēḷvu,* பெ.(n.) 1. வேள்வி; sacrifice. *"விழவும் வேள்வும் விடுத்தலொன்றின் மையால்" (சீவக. 138).* 2. மணத்தில் மணமக்கள் வீட்டார்கள் வரிசையாக வெடுக்கும் உணவுப்பண்டம்; presents of food-stuffs from the hose of the bridegroom to that of the bride and vice versa, at a wedding (C.N.). 3. அரும் பண்டம் (யாழ்.அக.); rare commodity.

*[வேள் → வேள்வு]*

வேள்வெடு-த்தல் *vēḷveḍu-,* செ.கு.வி.(v.i.) 1. மணமகன் வீட்டாருக்கு மணமகள் வீட்டாரும் மணமகள் வீட்டாருக்கு மணமகன் வீட்டாரும் விருந்துக்குரிய வரிசைப் பண்டங்களை யனுப்புதல்; to send presents of food-stuffs from the house of the bride groom to that of the bride and vice versa, at a wedding. 2. பல பண்டந் தேடிக் கொண்டு போதல் (யாழ்.அக.); together and carry varied articles.

*[வேள்வு + எடு]*

வேளம் *vēḷam,* பெ.(n.) 1. சோழராற் சிறைபிடிக்கப்பட்ட உயர் குலத்து மகளிர் அடிமையாக வாழும்படி அமைத்த அரண்; fortified place where ladies of rank captured in war were kept as slaves by the *cōḷas.* *"மீனவர் கானகம்புக............ வேளம்புகுமடவீர்" (கலிங். 41). "வீர பாண்டியனை முடித்தலை கொண்டு அவன் மடக்கொடியை வேளமேற்றி"* (S.I.I.iii,217). 2. இருப்பிடம்; quarters (S.I.I.ii,440).

*[வெள் → வேள் → வேளம்]*

வேளமேற்று-தல் *vēḷa-mēṟṟu-,* செ.குன்றாவி.(v.t.) சிறைபிடித்த மகளிரை வேளத்தில் அமர்த்துதல் (S.I.I.iii, 217); to confine ladies of rank captured in war within a *vēḷam.*

*[வேளம் + ஏற்று-,]*

வேளன் *vēḷaṉ,* பெ.(n.) வேளான் பார்க்க; see *vēḷāṉ.*

*[வேள் → வேளன்]*

வேளா¹ *vēḷā*, வி.எ.(adv.) ஒரு பயனுமின்றி (பிங்.); to no purpose.

*[வாள → வேளா]*

வேளா² *vēḷā*, பெ.(n.) செம்மண் நிறமுள்ளதும் இருபது அடி நீளம் வளர்வதுமான சுறாமீன் வகை; sawfish, sandy brown, attaining 20 ft. in length, pristis zyzrom.

வேளாகெடுத்தை *vēḷā-keḍuttai*, பெ.(n.) நச்சுத் தன்மையுடன் கூடிய பெரும் முட்களை யுடைய மீன் (தஞ்சை. மீன.); a kind of fish which have the large poisonous thorns.

*[வேளா + கெடுத்தை]*

வேளாச்சுறா *vēḷā-c-curā*, பெ.(n.) பெரிய சுறா மீன் வகை; a large cetaceous fish-Grampus.

*[வேளா + சுறா]*



வேளாட்டி *vēḷāṭṭi*, பெ.(n.) வெள்ளாட்டி பார்க்க (இலக். வி. 45, உரை); see *veḷḷāṭṭi*.

வேளாண்மாந்தர் *vēḷāṇ-māndar*, பெ.(n.) வேளாளர் (தொல். பொ. 635); *vēḷāḷar*.

*[வேளாண் + மாந்தர்]*

வேளாண்மாந்தரியல்பு *vēḷāṇ-māndariyalbu*, பெ.(n.) ஆணை வழிநிற்றல், அழிந்தோரை நிறுத்தல், கைக்கடனாற்றல், கசிவகத்துண்மை, ஒக்கல் போற்றல், ஒவாமுயற்சி, மன்னிறைதருதல், ஒற்றுமை கோடல், விருந்து புறந்தருதல், திருந்திய வொழுக்கம் என்ற வேளாளர்க்குரிய பத்துவகைத் தன்மைகள் (வின்.); characteristics of the *vēḷāḷas*, ten in number viz., *āṇai-vaḻi-niṟṟal, aḻintōrai-niṟuttal, kaikkaṭaṉ-āṟṟal, kacivaga-t-tuṇmai, okkal-pōṟṟal, ovā-muyaṟci, maṉṉiṟai-tarutal, oṟṟumai-kōḍal, virundu-puṟantarutal, tiruntiya-v-oḻukkam.*

*[வேளாண்மை + மாந்தர் + இயல்பு]*

வேளாண்மை *vēḷāṇmai*, பெ.(n.) 1. கொடை (பிங்.); gift, bounty, liberatity. 2. உதவி; beneficence, help. *"விருந்தோம்பி வேளாண்மை செய்தற் பொருட்டு" (குறள், 81).* 3. பயிர் செய்யும் தொழில்; cultivation of the soil, agriculture, husbandry. 4. உண்மை (பிங்.); truth. *"வேளாண்மை தானும் விளைந்திட" (கொண்டல்விடு. 84).*

*[வேள் → வேளான் → வேளாண்மை] (வே.க.பக். 122)*

வேளாண்மையமர்க்களம் *vēḷāṇmai-y-amarkkaḷam*, பெ.(n.) அறுவடைக்காலத்து நிகழும் நெற்களத் தாரவாரம்; stir and bustle of harvest.

*[வேளாண்மை + அமர்க்களம்]*

வேளாண்வாகை *vēḷāṇ-vāgai*, பெ.(n.) வேளாளன் செய்தற்குரிய கடமைகளை நிறைவேற்றலைக் கூறும் புறத்துறை (பு. வெ. 8,11); theme of exalting a *vēḷāḷa* for doing the duties laid upon him by caste rules.

*[வேளாண் + வாகை]*

வேளாண்வாயில் *vēḷāṇ-vāgai,* பெ.(n.) இரத்தல் (யாசிக்கை); begging, as offering an outlet for liberality. *"வேளாண்வாயில் வேட்பக் கூறி" (பொருந. 75).*

*[வேளாண் + வாயில்]*

வேளாதரம் *vēḷādaram,* பெ.(n.) 1. ஒருவகைப் புரசமரம்; a tree. 2. வைம்புரசு; Butea frodosa.

வேளாரி *vēḷāri,* பெ.(n.) (விராலி) செடிவகை (லத்.); Jamaica switch sorrel.

வேளாவளி *vēḷāvaḷi,* பெ.(n.) 1. பண் (பரத. இராக. 56); (mus.) a specific melody-type. 2. செவ்வழிக்குப் புறமான பண்திற வகை (சிலப். 14, 160–167, உரை); a secondary melody - type of the cevvali - class.

வேளாவேளை *vēḷā-vēḷai,* வி.எ.(adv.) 1. சிற்சில சமயத்தில்; at one time or another, occasionally. 2. உரிய காலத்தில்; at the proper time. *'நீ வேளாவேளையில் வரவேண்டும்'.*

*[வேளை + வேளை]*

வேளாளர்செய்கை *vēḷāḷar-ceykai,* பெ.(n.) வேளாண்மாந்தரியல்பு பார்க்க (பிங்.); see *vēḷāṇ-māntar-iyalpu.*

*[வேளாளர் + செய்கை]*

வேளாளரறுதொழில் *vēḷāḷaṟu-toḻil,* பெ.(n.) உழவு, பசுக்காவல், வாணிபம், கயிலுவம், காருகவினை, இ.ரு பிறப்பாளர்கேவல் செயல் என்னும் வேளாளர்க்குரிய அறுவகைத் தொழில் (திவா.); the six occupations of the *vēḷāḷas.*

*[வேளாளரறு + தொழில்]*



வேளாளன் *vēḷāḷaṉ,* பெ.(n.) 1. ஈவோன் (பிங்.); liberal person. *"வேளாள னென்பான் விருந்திருக்க வுண்ணாதான்" (திரிகடு. 12).* 2. ஒரு குலம்; *vēḷāḷa*, a caste. 3. வேளாள வகுப்பினன்; a person of *vēḷāḷa* caste. 4. வணிகன் (வைசியன்) (பிங்.); vaisya. 5. கடைமகன் (சூத்திரன்) (பிங்.); *šūdra.*

*[வேள் → வேளாளன்]*

வேளான் *vēḷāṉ,* பெ.(n.) 1. குலப்பெயர்; a caste title. *"மதுராந்தக மூவேந்த வேளான்" (S.I.I.ii,10).* 2. குயவர் வகுப்புப் பெயர்; a title of persons belonging to the kuyavar caste.

*[வேள் → வேளான்]*

வேளானுகூலம் *vēḷāṉukūlam,* வி.எ.(adv.) விதிப்படி; according to fate.

வேளிர் *vēḷir,* பெ.(n.) 1. தமிழ் நாடாண்ட ஒரு சார் அரசர் குலத்தார்; a class of ancient cheifs in the tamil country. *"நாற்பத் தொன்பது வழிமுறை வந்த வேளிருள் வேளே" (புறநா. 201).* 2. சளுக்கு வேந்தர் (திவா.); the *cāḷukyas.* 3. குறுநில மன்னர் (சூடா.); petty cheifs.

*[வேள் → வேளிர்]*

**வேளிருகைச்சீலை** *vēḷirugai-c-cīlai,* பெ.(n.) கரும்பு; sugar cane - saccharum officinarum.

*[வேளிருகை + சீலை]*

**வேளுகி** *vēḷugi,* பெ.(n.) வேம்பாடம் பட்டை பார்க்க; see *vēmpāḍam-paṭṭai.*

**வேளுங்கி** *vēḷuṅgi,* பெ.(n.) வேம்பாடல் பார்க்க; see *vēmpāḍal.*

**வேளுங்கு** *vēḷuṅgu,* பெ.(n.) 1. மரவகை (மலை.); tube in tube wood, tr., dalbergia paniculata. 2. ஒரு வகைக்கொடி (சங்.அக.); red creeper.

**வேளுசி** *vēḷuci,* பெ.(n.) அகிற்கட்டை; eagle-wood.

**வேளை**[1] *vēḷai,* பெ.(n.) 1. காலம், 1,2,3,6 பார்க்க; see *kālam.* 2. வினைப்பயன் (கரும வினை.) (யாழ்.அக.); ethical causation.

*[வே → வேளை]*

**வேளை**[2] *vēḷai,* பெ.(n.) 1. நாய்க்கடுகுச்செடி (சங்.அக.); black vailay. *"வேளை வெண்பூ" (புறநா. 23).* 2. செடிவகை; a sticky plant that grows best in sandy places.

*[வேள் → வேளை]*

**வேளை**[3] *vēḷai,* பெ.(n.) 1. ஒரு வகை பூடு. இதன் இலைகளைப் பச்சையாகவே பயன்படுத்தலாம்; இதனின்று ஒரு வித காரமான எண்ணெய் எடுக்கலாம்; அது சீக்கிரத்தில் ஆவியாய்ப் போகக் கூடியது; இதன் இலையின் சாற்றைப் பிழிந்து காதுகளில் விட, சீல் வடிதலும் காது வலியும் குணப்படும். இதன் சூரணம் குழந்தை களுக்கு கொடுப்பதுண்டு; வெள்ளைப் பூண்டுடன் மருந்துக் குடிநீர் காய்ச்சி அதனின்று தைல மெடுத்து குட்டம் முதலாகிய தோல் நோய்களுக்கு கொடுக்கலாம். இதிலிருந்து தைலமிறக்கித் தலை முழுக சீதளம், ஊதை சிலேட்டுமம், ஊதை இவைகள் போகும்; நல்வேளை வேர் பல் விளக்க உதவும், அழகு உண்டாகும்; a medicinal plant. cleome pentaphylla; Its leaves are edible and used as greens. Its root is used as tooth brush, and it causes brightness of the face. Its juice along with that of garlic is used to consolidate vermilion. That vermillion is very useful for fevers (by C.D.). 2. மூளையின் இறைச்சி; cerebrum or cerebellu. 3. காலம் (பிங்.); time.

வேளை வகைகள்; the varieties are
1. தை வேளை – a plant - cleome felina.
2. நல்ல வேளை – a useful variety of *vēḷai.*
3. நாய்வேளை – a plant - cleome viscosa.
4. முக்கா வேளை – Galega spinosa.
5. கொள்ளுக்காய் வேளை – Tephrosia purpurea alias T.villosa.

*[வேலை → வேளை] (தே.நே.பக். 159)*

**வேளைக்காரர்** *vēḷai-k-kārar,* பெ.(n.) அரசர்க்கு வேளைப்படி உரிய பணியைத் தாம் செய்யவியலாதபோது தம்முயிரை மாய்த்துக் கொள்வதாக விரதம் பூண்ட பணியாளர்; devoted servants who hold them-selves responsible for a particular service to their king at stated hours and vow to stab themselves to death if they fail in that. *"பூவேளைக் காரரைப் போலே...... கைமேலே முடிவா ரொருவரிறே" (ஈடு. 5, 1, 9).*

*[வேளை + காரர்]*

**வேளைக்காரன்** *vēḷai-k-kāraṉ,* பெ.(n.) தீமை உண்டாக்கும் காலக் கடவுள்; evil time, personified. *'வேளைக்காரன் இப்படி படுத்துகிறான்'.*

*[வேளை + காரன்¹]*

**வேளைக்குறை** *vēḷai-k-kuṟai,* பெ.(n.) தீயகாலம் (வின்.); bad times.

*[வேளை + குறை]*

**வேளைப்பாசை** *vēḷai-p-pāšai,* பெ.(n.) செடிவகை; Rhombleaved morning mallow, sida rhombifolia.

*[வேளை + பாசை]*

**வேளைப்பிசகு** *vēḷai-p-pušagu,* பெ.(n.) வேளைக்குறை பார்க்க; see *vēḷai-k-kuṟai.*

*[வேளை + பிசகு]*

**வேளைப்பிழை** *vēḷai-p-piḻai,* பெ.(n.) வேளைக் குறை பார்க்க (வின்.); see *vēḷai-k-kuṟai.*

*[வேளை + பிழை]*

**வேளைபார்-த்தல்** *vēḷai-pār-,* செ.கு.வி. (v.i.) 1. நன் முழுத்தம் பார்த்தல்; to fix an auspicious hour. *'பெண்ணை ஊருக்கு அனுப்ப வேளை பார்க்க வேண்டும்'.* 2. தக்க அமையம் பார்த்தல்; to wait for an opportunity.

*[வேளை + பார்-,]*

**வேளைபூண்(ணு)-தல்** *vēḷai-pūṇ(ṇū)-,* செ.கு.வி.(v.i.) மன்றாடுதல் (யாழ்.அக.); to beseech.

*[வேளை + பூண்(ணு)-,]*

**வேளையம்** *vēḷaiyam,* பெ.(n.) வெற்றிலை பாக்கு; betel leaves and areca-nuts.

க. வீளைய.

*[வடையம் → வேளையம்]*

**வேற்கழலி** *vēṟ-kaḻaḷi,* பெ.(n.) உடம்பின் நரம்பு; nerves of the body.

**வேற்காரன்** *vēṟ-kāraṉ,* பெ.(n.) 1. வேற் கருவியுடைய மறவன்; spearman. 2. அரச பணியின் படைக்கலக் கையன்; armed servant of a king. *"ராஜாக்கள் ராஜத்துரோகம் பண்ணினவர்களை நலிகைக்கு வேற்காரரை வரவிடுமா போலே" (ஈடு. 1, 4, 9).*

*[வேல்¹ + காரன்¹]*

**வேற்குஞ்சரன்** *vēṟ-kuñjaraṉ,* பெ.(n.) தேவாங்கு; an animal, sloth.

*[வேல் + குஞ்சரன்]*

**வேற்கோட்டம்** *vēṟ-kōṭṭam,* பெ.(n.) முருகவேள் கோயில்; temple of skanda. *"உச்சிக்கிழான் கோட்ட மூர்க்கோட்டம் வேற்கோட்டம்" (சிலப். 9, 11).*

*[வேல் + கோட்டம்]*

**வேற்றலம்** *vēṟṟalam,* பெ.(n.) காற்று (பிங்.); wind.

**வேற்றவன்** *vēṟṟavaṉ,* பெ.(n.) 1. அயலான்; stranger. *"வேற்றவர்க் கெட்டா யோகர்" (சேதுபு. தோத். 43).* 2. பகைவன்; enemy. *"வேற்றவ ரார்த்தனர்" (கம்பரா. இராவணன்வதை. 78).*

*[வெறு → வேறு + அன்] (வே.க.பக். 147)*

**வேற்றாள்** *vēṟṟāḷ,* பெ.(n.) 1. அன்னிய மானவ-ன்-ள்; stranger. *"வேற்றாளென்ன வொண்ணாதபடி" (ஈடு. 5, 10, 2).* 2. பறை (வின்.); pariah.

*[வெறு → வேறு → வேற்று + ஆள்] (வே.க.பக்.147)*

**வேற்றான்** *vēṟṟāṉ,* பெ.(n.) 1. வேற்றவன் 1 பார்க்க; see *vēṟṟavaṉ. "வேற்றார்க டிறத்திவன் றஞ்சமென் வீரவென்றான்" (கம்பரா. வாலிவ. 33).* 2. வேற்றவன் 2 பார்க்க; see *vēṟṟavaṉ. "வேற்றாரை வேற்றார் தொழுத லிளிவரவு" (பரிபா. 20, 71).*

*[வெறு → வேறு → வேற்று + ஆன்] (வே.க.பக். 147)*

**வேற்றானை** *vēṟṟāṉai,* பெ.(n.) அறுவகைத் தானையுள் ஒன்றான வேற்படை (திவா.); force of spearmen in an army, one of *aṟuvakai-t-tāṉai.*

*[வேள் + தானை]*

**வேற்றிசைப்பா** *vēṟṟicai-p-pā,* பெ.(n.) சருக்கம் அல்லது இலம்பகத்தின் முடிவில் வேறுபாடான இசைபெற்று வரும் பா வகை (திவா.); a verse in a distinctive metre at the end of a carukkam or ilampakam.

*[வேறு + இசை + பா]*

**வேற்று** *vēṟṟu,* பெ.எ.(adj.) 1. பிற; other, besides one's own. *'வேற்று மொழிச் சொற்கள் பல் நம் மொழியில் வழங்குகின்றன'.* 2. தொடர்பு இல்லாத, புதிய; unfamiliar, new. *'வேற்று மனிதர்களைக் கண்டு குழந்தை அழுகிறது'.*

*[வெறு → வேறு → வேற்று] (வே.க.பக். 147)*

**வேற்றுக்காற்று** *vēṟṟu-k-kāṟṟu,* பெ.(n.) 1. திசைமாறி வீசுங்காற்று; wind from a different direction. 2. அபானவாயு; fart.

*[வெறு → வேற்று + காற்று]*

**வேற்றுக்குடக்கன்வெட்டு** *vēṟṟu-k-kuḍa-k-kaṉ-veṭṭu,* பெ.(n.) பழைய நாணய வகை (பணவிடு. 133); an ancient coin.

*[வேறு → வேற்று + குடக்கன்வெட்டு]*



**வேற்றுக்குரல்** *vēṟṟu-k-kural,* பெ.(n.) 1. அன்னியர்குரல்; strange voice. 2. மாறு குரல்; unnatural tone, disguised voice.

*[வேறு → வேற்று + குரல்]*

**வேற்றுக்குழல்** *vēṟṟu-k-kuḻal,* பெ.(n.) 1. மாறு குரல்; change of voice. 2. தொண்டைக்கம்மல்; hoarse voice.

*[வேறு → வேற்று + குழல்]*

**வேற்றுடம்பு** *vēṟṟuḍambu,* பெ.(n.) மாறான வுடம்பு; change in the appearance of body - through diseases.

*[வேறு → வேற்று + உடம்பு]*

**வேற்றுத்தாய்** *vēṟṟu-t-tāy,* பெ.(n.) நற்றாயல்லாத மாற்றாந்தாய்; step-mother.

*[வேறு → வேற்று + தாய்]*

வேற்றுநர் *vēṟṟunar,* பெ.(n.) மாறுவடிவங் கொண்டவர்; persons in disguise. *"நாற்றுவர் முற்றி வேற்றுந ராகென" (பெருங். மகத. 1, 94).*

*[வேறு → வேற்று → வேற்றுநர்]*

வேற்றுநிலைமெய்ம்மயக்கம் *vēṟṟu-nilai-mey-m-mayakkam,* பெ.(n.) க்,ச்,த்,ப் வொழிந்த பதினான்கு ஒற்றுக்களும் தம்முடன் பிறமெய்கள் வந்து மயங்குகை (நன். 110, உரை); (Gram) coalescence of a consonant except k.c.t.p with a consonant other than itself, in conformity with the rules, as in *paṅku*, opp. to *utaṉilai-meymmayakkam.*

*[வேறு → வேற்று + நிலை + மெய் + மயக்கம்]*

வேற்றுப்புலம் *vēṟṟu-p-pulam,* பெ.(n.) 1. தனக்கு அன்னியமான விடம்; strange place, foreign place. 2. பகையிடம்; enemy's country. *"வேற்றுப் புலத்திறுத்து" (புறநா. 31).*

*[வேறு → வேற்று + புலம்]*

வேற்றுப்பொருள்வைப்பு *vēṟṟu-poruḷ-vaippu,* பெ.(n.) சிறப்புப் பொருளைச் சாதிப்பதற்குப் பொதுப் பொருளையும், பொதுப்பொருளைச் சாதிப்பதற்குச் சிறப்புப் பொருளையும் அமைத்துக் கூறும் அணி (தண்டி. 46); a figure of speech in which a particular notion is substantiated by a general notion or vice versa.

*[வேறு → வேற்று + பொருள் + வைப்பு]*

வேற்றுமணாளன் *vēṟṟu-maṇāḷaṉ,* பெ.(n.) அயலான் (யாழ்.அக.); paramour.

*[வேறு → வேற்று + மணாளன்]*

வேற்றுமனிதன் *vēṟṟu-maṉitaṉ,* பெ.(n.) அன்னியன்; stranger.

*[வேறு → வேற்று + மனிதன்]*

வேற்றுமுகம் *vēṟṟu-mugam,* பெ.(n.) 1. அன்னியமுகம்; face of a stranger, unfamiliar face. *'அந்தக் குழந்தைக்கு வேற்றுமுகமில்லை'.* 2. விருப்பு வெருப்பைக் காட்டும் மாறுமுகம்; altered face, indicating one's displeasure.

*[வேறு → வேற்று + முகம்]*

வேற்றுமுனை *vēṟṟu-muṉai,* பெ.(n.) பகைப்படை; enemy's army. *"வேலூன்று பலகை வேற்றுமுனை கடுக்கும்" (அகநா. 67).*

*[வேறு → வேற்று + முனை]*

வேற்றுமை *vēṟṟumai,* பெ.(n.) 1. வேறுபாடு; difference. *"வேற்றுமையின்றிக் கலந் திருவர் நட்டக்கால்" (நாலடி. 75).* 2. முரண்; antipathy. *"காமம் புகர்பட வேற்றுமைக் கொண்டு பொருள்வயிற் போகுவாய்" (கலித். 12).* 3. ஒப்புமையின்மை; dissimilarity, disagreement. 4. ஒரு பொருளின் வேறு பாடு காட்டற்குரிய தன்மை; characteristic mark distinguishing an in dividual or species. 5. செயப்படு பொருண் முதலாயின வாகப் பெயர்பொருளை வேறுபடுத்துவது (தொல். சொல். 62); (Gram.) case. 6. வேற்றுமை யுருபு பார்க்க (நன்.420); see (Gram) *vēṟṟumai-yurubu.* 7. வேற்றுமைப் புணர்ச்சி பார்க்க (நன். 151); see *vēṟṟumai-p-puṇarcci.* 8. வேற்றுமையணி பார்க்க (தண்டி. 49); see *vēṟṟumai-y-aṇi.*

*[வெறு → வேறு → வேற்றுமை] (வே.க.பக். 146)*

**வேற்றுமைகாட்டு-தல்** *vēṟṟumai-kāṭṭu-*, செ.கு.வி.(v.i.) வேறுபாடு காட்டுதல் (யாழ்.அக.); to differentiate, to make a difference, to make invidious distinction.

*[வேற்றுமை + காட்டு-,]*

**வேற்றுமைத்துணை** *vēṟṟumai-t-tuṇai*, பெ.(n.) படை பொருள் முதலிய புறப் பொருள்களால் அரசர்க்கு அமையுந் துணை (குறள், 861, உரை); external help derived by a king from his army, wealth, etc.

*[வேற்றுமை + துணை]*

**வேற்றுமைத்தொகை** *vēṟṟumai-t-togai*, பெ.(n.) வேற்றுமையுருபு தொக்கு வருந் தொடர் (நன். 363); a compound in which the case-ending is elliptical.

*[வேற்றுமை + தொகை]*

**வேற்றுமைநயம்** *vēṟṟumai-nayam*, பெ.(n.) வேறுபடுத்திப் பார்க்கும் முறை (நன். 451); view point of diffrentiation, opp. to *oṟṟumai-nayam*.

*[வேற்றுமை + நயம்]*

**வேற்றுமைநிலை** *vēṟṟumai-nilai*, பெ.(n.) பொருளணிவகை (யாப். வி. பக. 511); a figure of speech.

*[வேற்றுமை + நிலை]*

**வேற்றுமைப்புணர்ச்சி** *vēṟṟumai-p-puṇarcci*, பெ.(n.) வேற்றுமையுருபுகள் இடையில் விரிந்து தொக்கும் வரு சொற்கள் புணர்வது (நன். 152, உரை); (Gram.) combination of two words, the case-ending of the first of which is either expressed or understood.

*[வேற்றுமை + புணர்ச்சி]*

**வேற்றுமைமயக்கம்** *vēṟṟumai-mayakkam*, பெ.(n.) ஒரு வேற்றுமையுருபு வேறொரு வேற்றுமைப் பொருளில் வருகை; (Gram.) antiptosis, use of one case for another.

*[வேற்றுமை + மயக்கம்]*

**வேற்றுமையணி** *vēṟṟumai-yaṇi*, பெ.(n.) ஒப்புமையுடைய இருபொருளை ஒரு பொருளாக வைத்து இவற்றை தம்முள் வேற்றுமைப்பட அழகுறக் கூறுவது வேற்றுமையணியாம்; a figure of speech in which the difference between the things compared is mentioned explicitly.

*[வேற்றுமை + அணி]*

**வேற்றுமையுருபு** *vēṟṟumai-y-urubu*, பெ.(n.) இரண்டு முதல் ஏழு வரையிலுமுள்ள ஆறு வேற்றுமைகளை உணர்த்தும் உருபுச்சொல் (நன்.); (gram.) case endings of the six cases from the accusative to the locative.

*[வேற்றுமை + உருபு]*

**வேற்றமைவிரி** *vēṟṟumai-viri*, பெ.(n.) வேற்றுமையுருபு விரிந்து நிற்குந்தொடர்; (gram.) compound in which the case ending is expressed.

*[வேற்றுமை + விரி]*

**வேற்றுரு** *vēṟṟuru*, பெ.(n.) மாற்றுருவம்; disguised form or shape. *"யாவரும் விளைபொரு ளுரையார் வேற்றுருக் கொள்கென" (மணி. 26, 69).*

*[வேற்று + உரு]*

**வேற்றுவன்** *vēṟṟuvaṉ,* பெ.(n.) அயலான்; stranger. *“வேற்றுவ ரில்லா நுமரூர்க்கே செல்லினும்” (சீவக. 1550).*

*[வேறு → வேற்று → வேற்றுவன்]*

**வேற்றுவேடம்** *vēṟṟu-vēḍam,* பெ.(n.) மாறுவேடம்; disguise.

*[வேறு → வேற்று + வேடம்]*

**வேற்றொலிவெண்டுறை** *vēṟṟoli-veṇ-ḍuṟai,* பெ.(n.) முன்பிற் சில அடிகள் ஓரோசையாயும் பின்பிற் சில அடிகள் மற்றோரோசையாயும் வரும் வெண்டுறை வகை (காரிகை. செய். 7, உரை); a kind of *veṇ-tuṟai* in which the first few lines have one kind of rhythm and the succeding lines have a different kind of rhythm.

*[வேறு → வேற்று + ஒலி + வெண்டுறை]*

**வேற்றோன்** *vēṟṟōṉ,* பெ.(n.) வேற்றுவன் பார்க்க; see *vēṟṟuvaṉ.* *“வேற்றோன் போல மாற்றம் பெருக்கி” (பெருங். இலாவாண. 8, 147).*

*[வேறு → வேற்று → வேற்றோன்] (வே.க.பக். 146)*

**வேறா-தல்** *vēṟā-,* செ.கு.வி.(v.i.) 1. பிரிதல்; to be separated, disunited. 2. பிறிதாதல்; to be different. *'உடல் உயிரின் வேறாயது'.* 3. மாறுபடுதல்; to become different or altered. *“வளம் பெறினும் வேறாமோ சால்பு” (பு.வெ. 8, 31).* 4. மனம் மாறுபடுதல்; to change in one's mind. *“வினை வகையான் வேறாகு மாந்தர் பலர்” (குறள், 514).* 5. முன்னைய தன்மை குலைதல்; to be spoilt, as in quality. *“வெறி கொள் வியன் மார்பு வேறாகச் செய்து” (கலித். 93).* 6. சிறப்புடையதாதல்; to be distinguished or particularised; to be special. *“நிமித்தஞ் சொல்வார் பலருள்ளும் நின்னை வேறாகக் கொண்டு” (திணைமாலை. 90, உரை).* 7. ஒதுக்காதல்; to be away from. *“வேறாகக் காவின் கீழ்ப்போதரு” (கலித். 94).* 8. தனியாதல்; to be alone. *“சீவக சாமி வேறா விருந்தாற்கு” (சீவக. 1872).*

*[வேறு + ஆ]*

**வேறிடம்** *vēṟiḍam,* பெ.(n.) தனியிடம் (யாழ்.அக.); solitude, retreat.

*[வேறு + இடம்]*

**வேறு** *vēṟu,* பெ.(n.) 1. பிறிது; other, that which is different. *“வேறோர் பரிசிங்கொன்றில்லை” (திருவாச. 33, 5).* 2. பிரிந்தது; that which is separated. 3. கூறுபாடு; class, kind. *“இருவே றுலகத்தியற்கை” (குறள், 374).* 4. பகைமை (சீவக. 755); enmity, opposition. 5. எதிரிடையானது; that which is opposite. 6. தீங்கு; evil. *“அறிந்ததோ வில்லைநீ வேறோர்ப்பது” (கலித். 95).* 7. புதிது; that which is new. *“யாம் வேறியைந்த குறும்பூழ்ப்போர் கண்டேம்” (கலித். 95).* 8. சிறப்புடையது; that which is special or distinct; that which is distinguished or particularised. *“அவ்விருதிறத்தார்க்கும் இவ்வறம் வேறாகச் சிறந்தமையின்” (குறள், 120, உரை), “வேறாக நின்னை வினவுவேன்” (திணைமாலைநூற். 90).* 9. தனி (சீவக. 1872); solitariness. 10. காவியம் முதலியவற்றில் செய்யுள் வேறுபாட்டினைக் குறிப்பதற்கு இடும் தலைப்புச் சொல்; a word used as a heading in poems, to indicate change of metre.

*[விறு → வெறு → வேறு] (வே.க.பக். 145)*

**வேறுகொள்(ளு)-தல்** *vēṟu-koḷ(ḷu)-*, செ. குன்றாவி.(v.t.) 1. தனிமையான இடத்தைச் சேரவிடுதல்; to remove to a secluded place. *"கொடிய வல்வினையேன் றிறங் கூறுமின் வேறுகொண்டே" (திவ். திருவாய். 6, 1, 9).* 2. சிறப்புடையதாக மதித்தல்; to mark out, to treat with special regard. *"வேறு கொண் டும்மையா னிரந்தேன்" (திவ். திருவாய். 6, 1, 10).* 3. மாறாகக் கொள்ளுதல்; to understand differently. *"வெளிறிலாக் கேள்வியானை வேறு கொண்டிருந்து சொன்னான்" (சீவக. 200).*

*[வேறு + கொள்(ளு)-,]*

**வேறுசெய்-தல்** *vēṟu-šey-*, செ.குன்றாவி. (v.t.) 1. பகை விளைத்தல்; to cause dissensions, to create enmity. *"வேந்த னும்மையும் வேறுசெய்து" (சீவக. 755).* 2. வேறுகொள்-, 2 பார்க்க; see *vēṟu-koḷ-*. *"வீரனார் வேறுசெய்து தம்முளென்னை வைத்திடாமையால்" (திவ். திருச்சந். 116).*

*[வேறு + செய்-,]*

**வேறுநினை-த்தல்** *vēṟu-niṉai-*, செ.கு.வி. (v.i.) 1. திரிபாக நினைத்தல்; to think differently to isunderstand. 2. உதவி செய்தவர்க்கு தீங்கு செய்ய எண்ணுதல்; to be ungreateful and think of doung evil.

*[வேறு + நினை-,]*

**வேறுநினைவு** *vēṟu-niṉaivu*, பெ.(n.) கருத் தின்மை; absence of mind, inattention.

*[வேறு + நினைவு]*

**வேறுபடு¹-தல்** *vēṟu-paḍu-*, செ.கு.வி.(v.i.) வேறா-, பார்க்க; see *vēṟā*. *"வேறுபட் டாங்கே கலுழ்தி" (கலித். 91).*

*[வேறு + படு-,]*

**வேறுபடு²-த்தல்** *vēṟu-paḍu-*, செ.குன்றாவி. (v.t.) வேறுபடுத்து-, பார்க்க; see *vēṟu-paḍuttu-*.

*[வேறு + படு-,]*

**வேறுபடுத்து-தல்** *vēṟu-paḍuttu-*, செ. குன்றாவி.(v.t.) 1. மாற்றுதல்; to change, alter. 2. வேற்றுமை; to make different. 3. நட்புப் பிரிவினை செய்தல் (குறள், 467, உரை); to sow discord between, to alienate. 4. பிரித்தல் (சங்.அக.); to separate.

*[வேறு + படுத்து-,]*

**வேறுபண்ணு¹-தல்** *vēṟu-paṇṇu-*, செ. குன்றாவி.(v.t.) வேறுபடுத்து-தல் பார்க்க; see *vēṟu-paḍuttu-*.

*[வேறு + பண்ணு-,]*

**வேறுபண்ணு²-தல்** *vēṟu-paṇṇu-*, செ.கு.வி. (v.i.) 1. மன வருத்தங் கொள்ளச் செய்தல்; to create misunderstanding. *'அவன் அண்ணனுக்கும் தம்பிக்கும் வேறு பண்ணுகிறான்'.* 2. எதிரிடை செய்தல்; to do the very opposite. *'தகப்பன் சொன்னதற்குப் பிள்ளை வேறு பண்ணுகிறான்'.*

*[வேறு + பண்ணு-,]*

**வேறுபாட்டொழிப்பு** *vēṟu-pāṭṭoḻippu*, பெ.(n.) அவநுதியணிவகை (யாழ்.அக.); a variety of avanuti.

*[வேறு + பாட்டொழிப்பு]*

**வேறுபாடு** *vēṟupāḍu*, பெ.(n.) 1. வேற்றுமை; difference. *"மேலைக் கிளவியொடு வேறுபாழலிவே" (தொல். சொல். 217).* 2. மன மாறுபாடு; disagreement. *"சுண்ணத்திற் றோன்றிய வேறுபாடு" (சீவக. 903).* 3. வேற்றுமை 2 பார்க்க; see *vēṟṟumai* 2.

*"காமதன் மங்குற்றப் படும்படி அதனோடு வேறு பாடுகொண்டு" (கலித். 12, உரை).*

**வேறுமருந்து** *vēṟu-marundu,* பெ.(n.) ஒரு மருத்துவரிடம் மருந்து சாப்பிடுங்காலத்தில் அதை விட்டு மற்றொருவரிடம் வாங்கி சாப்பிடும் மருந்து; to take medicine from another physician while taking from one.

*[வேறு + மருந்து]*

**வேன்** *vēṉ,* பெ.(n.) மிகுதி (வின்.); excess.

*[வியன் → வேன்]*

**வேன்காண்(ணு)-தல்** *vēṉ-kāṇ(ṇu)-,* செ.கு.வி. (v.i.) அளவில் அதிகமாயிருத்தல்; to be in excess. *'நெல்லை யளந்ததில் இரண்டு மரக்கால் வேன்கண்டது'.*

*[வேன் + காண்(ணு)-,]*

**வேன்மகன்** *vēṉ-magaṉ,* பெ.(n.) முருக பூசை செய்பவன்; the sacrificing priest. *"வெறியவர் வெங்களத்து வேன்மகன்" (நாலடி, 16).*

*[வேன் + மகன்]*

**வேனல்**[1] *vēṉal,* பெ.(n.) 1. வெப்பம்; heat. *"வேனன்மல்கி வெண்டேர் சென்ற வெந்நிலம்" (சீவக. 2578).* 2. வேனிற்காலம்; hot season. *"நீடிய வேனிற்பாணி" (சிலப். 8, வெண்பா. 2).* 3. சினம்; anger. *"வேனலானை யுரித்த வீரட்டரே" (தேவா. 960, 5).*

*[வேனில் → வேனல்]*

**வேனல்**[2] *vēṉal,* பெ.(n.) கானல்; glare.

*[வேனில் → வேனல்]*

**வேனற்கட்டி** *vēṉaṟ-kaṭṭi,* பெ.(n.) வேனிற் காலத் துண்டாஞ் சிரங்கு; summer boil.

*[வேனல் + கட்டி]*

**வேனிகா** *vēṉikā,* பெ.(n.) கத்தூரி; musk.

**வேனில்**[1] *vēṉil,* பெ.(n.) 1. வேனிற்காலம் பார்க்க; see *vēṉiṟ-kālam. "வேனிலாயினுந் தண்புனலொழுகுந் தேனூர்" (ஐங்குறு. 54).* 2. இளவேனில்; spring season. 3. வெப்பம்; heat. *"வேனி னீடிய சுரனிறந்தோரே" (அகநா. 201).* 4. கானல் (பிங்.); mirage.

*[வே → வேனில்]*

**வேனில்**[2] *vēṉil,* பெ.(n.) 1. ஒப்பனை; decoration. 2. அழகு; beauty. 3. பொலிவு; splendour.

*[வேய் → வேனில்]*

**வேனில்**[3] *vēṉil,* பெ.(n.) 1. வெயிற்காலம்; summer season. 2. எச்சிலுமிழ் நீர்; saliva-sputum.

*[வே → வேனில்]*

**வேனில்நீர்** *vēṉil-nīr,* பெ.(n.) 1. எச்சில் நீர்; spit. 2. உமிழ் நீர்; saliva.

*[வேனில் + நீர்]*

**வேனிலவன்** *vēṉilavaṉ,* பெ.(n.) வேனிலான் பார்க்க; see *vēṉilāṉ. "வேனிலவன் மேனுதல் விழித்தவன்" (பாரத. முதற்போர். 63).*

*[வேனில் + அவன்]*

**வேனிலாளி** *vēṉilāḷi,* பெ.(n.) வேனிலான் பார்க்க (பிங்.); see *vēṉilāṉ.*

*[வேனில் + ஆளி]*

**வேனிலான்** *vēṉilāṉ,* பெ.(n.) காமன்; *kāma,* as god of spring. *"வேனிலான் வருநெறி வெண்முள் வித்தினார்" (சீவக. 2635).*

*[வேனில் + ஆன்]*

**வேனிற்காலம்** *vēṉiṟ-kālam,* பெ.(n.) கோடைக்காலம்; hot season, summer.

*[வேனில் + காலம்]*

**வேனிற்பச்சை** *vēṉiṟ-paccai,* பெ.(n.) தேட்கொடுக்கி பார்க்க; see *tēṭ-koḍukki.*

*[வேனில் + பச்சை]*

**வேனிற்பள்ளி** *vēṉiṟ-paḷḷi,* பெ.(n.) நிலாமுற்றம்; open terrace of a house, as a place for resting and enjoying the moon light during summer. *"மேனிலை மருங்கின் வேனிற் பள்ளியேறி" (சிலப். 8, 18).*

*[வேனில்' + பள்ளி]*

**வேனிற்பாசறை** *vēṉiṟ-pāśaṟai,* பெ.(n.) போர் மேற் சென்ற அரசன் வேனிற் காலத்துத் தங்கும் படை வீடு (தொல். பொ. 76); summer camp of a king waging war, dist. fr., *kīrtiṟ-p-pācaṟai.*

*[வேனில் + பாசறை]*

**வேனின்மாலை** *vēṉiṉ-mālai,* பெ.(n.) நூற்றொகுதி (பிரபந்தம்) தொண்ணூற்றாறனுள் இளவேனில் முதுவேனில் என இருதிறப்பட்ட பருவங்களையும் சிறப்பித்துக் கூறும் நூல் (வீரசிங்காதன. அகளங்க. 7); a poem describing the two divisions of the hot season, *iḷa-vēṉil* and *mudu-vēṉil,* one of 96 pirapantam.

*[வேனின் + மாலை]*

**வேனீற்று** *vēṉīṟṟu,* பெ.(n.) வேனிற்பச்சை பார்க்க; see *vēṉiṟ-paccai.*

*[வே → வேனீற்று]*

# வை

**வை¹** *vai,* பெ.(n.) தமிழ் நெடுங்கணக்கில் 'வ்' என்ற மெய்யெழுத்தும் 'ஐ' என்ற உயிரெழுத்தும் சேர்ந்து உருவான உயிர் மெய் எழுத்து; the compound of 'v' and 'ai'.

*[வ் + ஐ = வை]*

**வை²–தல்** *vai-,* செ.குன்றாவி.(v.t.) 1. பழித்தல்; to abuse, revile. *"வைதா னொருவ னொருவனை" (நாலடி, 325).* 2. சினந் துரைத்தல்; to curse. *"வைத வைவின்" (கம்பரா. சிறப். 5).* 3. ஏய்த்தல்; to deceive. *"வையாது வழக்குரைத்தன்று" (பு.வெ. 1, 18, கொளு.).*

**வை³–த்தல்** *vai-,* செ.குன்றாவி.(v.t.) 1. இடுதல்; to put, place. *"வழக்கினுள் வைக்குந் தன்னாளை" (குறள், 776).* 2. அளித்தல்; to bestow. *"ஓர் கண்மணி நிற்கென வைத்ததும்" (கம்பரா. சூளா. 81).* 3. இருக்கச் செய்தல்; to seat. *"புறங்கடை வைத்தீவர் சோறும்" (நாலடி, 293).* 4. பள்ளிக்கு அனுப்புதல்; to put to school. *"பள்ளிக்கு வைத்திலனே தந்தையாகிய பாதகனே" (தனிப்பா.).* 5. வேலை முதலியவற்றில் அமர்த்துதல்; to appoint. 6. சேமித்தல்; to lay by, deposit, store up. *"வைத்த பொருளும்" (நாலடி, 273).* 7. பாதுகாத்தல்; to keep in custody, to guard. 8. தனியாக ஒதுக்குதல்; to reserve, set apart. *"வைத்தனன் றனக்கே தலையுமென்னாவும்" (தேவா. 351, 1).* 9. சிறையிலிடுதல்; to detain, as in prison. 10. உடைத்தாயிருத்தல்; to possess, have, keep, hold in possession. *"புன்னை*

*நித்திலம் வைப்பவும்" (சிறுபாண். 149), 'நிரம்பப் பணம் வைத்திருக்கிறான்'.* 11. அமைதல்; to obtain. *'இது எத்தனை அறை வைத்த பெட்டி?'.* 12. ஒரு ஆண் தன் மனைவியல்லாத பெண்ணையும், ஒரு பெண் தன் கணவனல்லாத ஆணையும் வைப்பாக வைத்துக் கொள்ளுதல்; keep company with, to keep, as mistress. 13. நிலை மாறாதபடி செய்தல்; to allow to remain unaltered. 14. உண்டாக்கல்; to create, set up. *"வைத்தானை வானோருலக மெல்லாம்" (தேவா. 384, 8).* 15. உருவாக்குதல்; to prepare. *'குழம்பு வை'.* 16. நடத்துதல்; to conduct or maintain for profit. *'கடை வைத்திருக்கிறான்'.* 17. மதித்துப் போற்றுதல்; to pay due regard to. *'தந்தை தாயாரை வைத்திருப்பதிலிருந்து ஒருவன் குணத்தை அறியலாம்'.* 18. உண்மையென்று கொள்ளுதல்; to imagine, suppose. 19. வரையறுத்தல்; to fix, determine. *"வைத்த நாள்வரை யெல்லை" (திவ். திரவாய். 3,3,10).* 20. கணக்கு முதலியன எழுதி வருதல்; to maintain, as accounts. 21. எடுத்துச் சொல்லுதல்; to mention. *"கண்மணி நிறற்கென வைத்ததும் வைப்பாய்" (கம்பரா. சூளா. 81).* 22. மனத்திற் கொள்ளுதல்; to consider. *"மற்றையான் செத்தாருள் வைக்கப்படும்" (குறள், 214).* 23. வழிபடல்; to meditate upon. *"சிந்தை யிலவன்றன் சேவடி வைத்து" (சிலப். 11, 106).*

*[வை → வை–த்தல்]*

வை⁴–த்தல் *vai-*, பெ.(n.) ஒரு துணைவினை; an auxiliary verb. *'அங்கே போட்டு வை'.*

வை⁵–த்தல் *vai-*, செ.கு.வி.(v.i.) 1. (போட்டி, தேர்வு முதலியவற்றை) நடத்துதல்; conduct, hld (an event). *'பொதுக்குழுக் கூட்டத்தை அடுத்த முறை மதுரையில் வைத்துக் கொள்வது என்று முடிவு செய்யப்பட்டது'.* 2. (ஒன்றை நடத்துவதற்காக நாள்) தேர்ந்தெடுத்தல், முடிவு செய்தல்; fix (a date). *'உங்கள் பெண் திருமணத்தை எந்த மாதம் வைத்திருக்கிறீர்கள்?'* 3. (உணவுப் பொருள் முதலியவற்றை உண்ணத்) தருதல்; provide (sth. as food), feed. *'பசிக்கிறது, சீக்கிரம் சாப்பாடு வை'.* 4. (கடை) ஏற்படுத்துதல், அமைத்தல், நடத்துதல்; have or run (ashop). *'அவர் வெகு நாளாகக் கடை வைத்து நடத்தி வருகிறார்'.* 5. (தொலைக் காட்சி, வானொலி, இசைத்தட்டு முதலிய வற்றை) இயங்கச் செய்தல்; switch on (a radio), play (a record, etc.). *'அந்த இசைத்தட்டை இன்னொரு தடவை வை'.*

*[வை → வை–த்தல்]*

வை⁶ *vai*, பெ.(n.) கூர்மை (தொல். சொல். 387); sharpness, keenness, point.

*[வள் → (வய்) → வை] (மு.தா.28)*

வை⁷ *vai*, பெ.(n.) 1. வைக்கோல் பார்க்க; see *vai-k-kōl*. *"வைத்துறு போலக் கெடும்" (குறள், 435).* 2. புல் (பொதி. நி.); grass.

வை⁸ *vai*, இடை.(part.) தொழிற்பெயர் ஈறுகளுள் ஒன்று; suffix of verbal nouns. *'போர்வை'.*

வை⁹–த்தல் *vai-*, செ.குன்றாவி.(v.t.) 1. கடினமான நோய்; severe disease. 2. வையென்னெவல்; put.

வைக்கோல் *vai-k-k-kōl*, பெ.(n.) நெற் பயிரின் உலர்ந்த தாள்; straw of paddy.

*[வை⁵ + கோல் ¹]*

மறுவ. வைக்கல் (யாழ்.அக.)

**வைக்கோல்மெத்தை** *vaikkōl-mettai,* பெ.(n.) நோயாளிகள் படுப்பதற்காக மருத்துவ மனைகளில் அமைக்கும் ஒரு வகைப் படுக்கை அமளி; straw bed-lectus stramineus.

*[வைக்கோல் + மெத்தை]*

**வைக்கோல்வாரி** *vaikkōl-vāri,* பெ.(n.) கம்பம் பயிர்வகை (யாழ்.அக.); a kind of kampu crop.

*[வைக்கோல் + வாரி]*

**வைக்கோற்கந்து** *vaikkōṟ-kandu,* பெ.(n.) நெற்களத்தைச் சுற்றி வைக்கப்படும் வைக்கோல் வரம்பு; heap of straw enclosing the threshing floor.

*[வைக்கோல் + கந்து]*

**வைக்கோற்குதிரை** *vaikkōṟ-kudirai,* பெ.(n.) வெள்ளத்தைத் தடுக்கக் கரையுடைப் பிலிடும் மண்பொதிந்த வைக்கோற்புரியின் கட்டு (வின்.); bundle of straw and earth to stop the breach of a bund.

*[வைக்கோல் + குதிரை]*

**வைக்கோற்கூளம்** *vaikkōṟ-kūḷam,* பெ.(n.) வைக்கோற்பதர்; chaff of straw.

*[வைக்கோள் + கூளம்]*

**வைக்கோற்துரும்பு** *vaikkōṟ-turumbu,* பெ.(n.) காய்ந்து உலர்ந்த நெற்பயிர்த்தாள்; straw of paddy.

*[வைக்கோல் + துரும்பு]*

**வைக்கோற்பழுதை** *vaikkōṟ-paḻudai,* பெ.(n.) வைக்கோற்புரி பார்க்க (யாழ்.அக.); see *vaikkōṟ-puri.*

*[வைக்கோல் + பழுதை]*

**வைக்கோற்பாம்பு** *vaikkōṟ-pāmbu,* பெ.(n.) 1. வைக்கோற்குதிரை பார்க்க (வின்.); see *vaikkōṟ-kudirai.* 2. மாறு வேடம் (யாழ். அக.); disguise. 3. மாயை; illusion.

*[வைக்கோல் + பாம்பு]*

**வைக்கோற்புரி** *vaikkōṟ-puri,* பெ.(n.) வைக்கோலை முறுக்கிய திரி; large, twisted stand of straw, hay-band.

*[வைக்கோல் + புரி]*

**வைக்கோற்பொம்மை** *vaikkōṟ-pommai,* பெ.(n.) வைக்கோற் பழுதுகளை வைத்து செய்யும் ஒரு பொம்மை; man of straw.

*[வைக்கோல் + பொம்மை]*

**வைக்கோற்போர்** *vaikkōṟ-pōr,* பெ.(n.) வைக்கோற்குவியல்; straw stack or haystack.

*[வைக்கோல் + போர்]*

**வைக்கோலட்டை** *vaikkōl-aṭṭai,* பெ.(n.) வைக்கோலால் செய்யப்படும் ஒருவகைத் தட்டி; straw board.

*[வைக்கோல் + அட்டை]*

**வைகச்சம்** *vaigaccam,* பெ.(n.) மேலாடை (யாழ்.அக.); upper garments.

*[மெய் → வை + கச்சம்]*

**வைகசரம்** *vaigaśaram,* பெ.(n.) இலவங்கப் பத்திரி; cinnamon leaf.

**வைகமூலி** *vai-kamūli,* பெ.(n.) சல்லிக்கொடி; naval cord.

வைகல் *vaikal,* பெ.(n.) 1. தங்குகை (பிங்.); dwelling, staying. 2. கழிகை; passing. *"மத்துக் கயிறடா வைகற்பொழுது நினையூஉ" (பதிற்றுப். 71, 16).* 3. வைகறை 1 பார்க்க (சூடா.); see *vaikarai.* 4. நாள்; day. *"இன்னா வைகல் வாரா முன்னே செய்ந்நீ முன்னிய வினையே" (புறநா. 363).* 5. கழிந்த நாள் (பிங்.); day that has passed away. 6. வேளை; instant, moment. *"மாதவி தன்னோ டணைவுறு வைகலி னயர்ந்தனன்" (சிலப். 3, 173).*

*[வை + கல்]*

வைகலம் *vai-kalam,* பெ.(n.) வைகல் 4 பார்க்க (அக.நி.); see *vaikal.*

*[வை + கலம்]*

வைகலும் *vai-kalum,* வி.எ.(adv.) நாடோறும்; daily, everyday. *"அடிசில் பிறர்நுகர்க வைகலும்" (பு.வெ. 10, 8).*

*[வைகல் → வைகலும்]*

வைகறை[1] *vai-karai,* பெ.(n.) 1. விடியல்; daybreak. *"வைகறைமலரு நெய்தல்" (ஐங்குறு. 188).* 2. வைகறையாமம் பார்க்க (அக.நி.); see *vaikarai-yāmam.*

*[வை + கறை]*

வைகறை[2] *vai-karai,* பெ.(n.) தங்குமிடம்; residential place.

*[வை + கறை]*

வைகறைப்பாணி *vaikarai-p-pāṇi,* பெ.(n.) அதிகாலையிற் கொட்டும் இசைக்கருவி வொலி; sound of the drum played early in the morning. *"கிணை நிலைப் பொருநர் வைகறைப் பாணியும்" (சிலப். 13, 148).*

*[வைகறை + பாணி]*

வைகறையாமம் *vaikarai-yāmam,* பெ.(n.) விடியும் முன்னுள்ள இரவுப் பொழுது; the last *yāmam* or period of three hours preceding day break. *"வைகறை யாமந் துயிலெழுந்து" (ஆசாரக். 5).*

*[வைகறை + யாமம்]*

வைகாபூர் *vaigāpūr,* பெ.(n.) திருவைகாவூர் என்று, தஞ்சாவூர் மாவட்டத்தில் உள்ள ஊர் இது; this vinage *tiru-vaigāvūr* in *tañjāvūr* district.

கொள்ளிட ஆற்றங் கரைத்தலம் இது. திருஞான சம்பந்தர் இவ்வூரின் சிறப்புக் குறித்து பாடியுள்ளார்.

*[வைகு + கா + ஊர் = வைகாவூர் → வைகாபூர்]*

வைகார்ப்பு *vai-kārppu,* பெ.(n.) இடையறாத ஆரவாரம்; unceasing, lumultuous noise. *"வைகார்ப் பெழுந்த மைபடு பரப்பின்" (பதிற்றுப். 41, 22).*

*[வைகு + ஆர்ப்பு]*

வைகாலம் *vai-kālam,* பெ.(n.) சாயங்காலம் (யாழ்.அக.); evening.

*[வை + காலம்]*

வைகிருள் *vai-kiruḷ,* பெ.(n.) விடியற்காலத் திருள்; darkness-immediately before dawn.

*[வை + கிருள்]*

வைகு-தல் *vaiku-,* செ.கு.வி.(v.i.) 1. தங்குதல்; to halt, stay, tarry; to reside dwell. *"நெடுந்திமிற் றெழிலொடு வைகிய தந்தைக்கு" (அகநா. 60).* *"மாலெரியாகிய*

*வரதர் வைகிடம்" (தேவா. 467, 9).* 2. போது கழிதல்; to pass, as time. *"அமுது செய்கைக்குப் போது வைகிற்று" (ஈடு. 7, 10, 4).* 3. வற்றுதல்; to dry up, as a river. *"காவிரி வைகிய காலத்தினும்" (தஞ்சைவா. 71).* 4. விடிதல்; to dawn, as the day. *"வைகுறு மீனின்" (பெரும்பாண். 318).* 5. புணர்தல்; to cohabit. *"காசுகண் பரிய வைகி" (சீவக. 586).*

*[வை → வைகு-தல்]*

வைகுசுடர் *vaigu-cuḍar,* பெ.(n.) விடியுமளவும் எரியும் விளக்கு; light that burns all night. *"வைகுசுடர் விளங்கும் வான்றோய் வியனகர்" (அகநா. 87).*

*[வைகு + சுடர்]*

வைகுபுலர்விடியல் *vaiku-pular-viḍiyal,* பெ.(n.) வைகுறுவிடியல் பார்க்க; see *vaikuṟu-viḍiyal. "வைகுபுலர் விடியல் வயவர் சூழ்வர" (பெருங். உஞ்சைக். 56, 149).*

*[வைகு + புலர் + விடியல்]*

வைகுறா *vaikuṟā,* பெ.(n.) தும்பை; a plant-leucas aspeva.

*[வை + குறா]*

வைகுறு *vaikuṟu,* பெ.(n.) 1. வைகறையாமம் பார்க்க; see *vaikaṟai-yāmam. "வைகுறு விடியல்" (தொல். பொ. 8).* 2. விடியல் (தொல். விருத். 38); day break.

*[வைகு + உறு]*

வைகுறுமீன் *vaikuṟu-mīṉ,* பெ.(n.) விடிவெள்ளி; morning star. *"வைகுறு மீனிற் றோன்றும்" (அகநா. 17).*

*[வைகுறு + மீன்]*

வைகுறுவிடியல் *vaikuṟu-viḍiyal,* பெ.(n.) காலம்; early dawn. *"வைகுறுவிடியலியம்பிய சொல்லே" (புறநா. 233).*

*[வைகுறு + விடியல்]*

வைகை *vaikai,* பெ.(n.) வையை பார்க்க; see *vaiyai.*

*[வையை → வைகை]*

வைகைத்திருமலை *vaikai-t-turumalai,* பெ.(n.) வைகானூரை அடுத்திருந்த ஊர்; its next village *vaikāṉūr.*

வட ஆர்க்காட்டில் திருமலை என்னும் குன்றம் ஒன்றுண்டு. அது வைகானூரை அடுத்திருத்தலால் வைகைத் திருமலை எனவும் வழங்கும். மன்னரால் மதிக்கப்பெற்ற சமண முனிவர்கள் அம் மலையில் வாழ்ந்ததாகத் தெரிகின்றது. இராசராச சோழன் காலத்தில், *"கொலை புரியும் படையரசர் கொண்டாடும் குண வீரமா முனிவன்"* என்று புகழப் படுகின்ற ஒரு முனிவர் திருமலை யேரிக்குக் கலிங்குகட்டி, வைகை மலையின் இரு மருங்கும் நெல் விளையக் கண்டு களித்தார் என்று அம்மலைக் கல்வெட்டொன்று கூறுகின்றது.

*[வைகை + திருமலை]*

வைகைத்துறைவன் *vaikai-t-tuṟaivaṉ,* பெ.(n.) பாண்டியன் (பிங்.); the *pāṇḍya* king as lord of the vaikai region.

*[வைகை + துறை + அன்]*

வைச்சிரம் *vaicciram,* பெ.(n.) வச்சிரம் பார்க்க; see *vacciram.*

வைச்சுப்பாடு-தல் *vaiccu-p-pāḍu-,* செ. குன்றாவி.(v.t.) வைத்துப்பாடு-, பார்க்க; see *vaittu-p-pāḍu-.*

*[வை + பாடு]*

வைச்சூற்றி *vai-c-cūṟṟi,* பெ.(n.) நீர்மப் பொருள் ஊற்ற உதவும் கருவி (Funnel), வைத்தூற்றி; funnel.

*[வைத்து ஊற்றி → வைச்சூற்றி]*

வைசந்தி *vai-candi,* பெ.(n.) முன்னை மரம்; a tree, Its root is used in medicine, leaves, edible - premana integrifolia.

வைசயந்தி *vaicayandi,* பெ.(n.) தபதாழை; a medicinal shrub, used for rheumatism-cleodendron phlomoides.

*[வை + சயந்தி]*

வைசயாதி *vaišayādi,* பெ.(n.) தழுதாழை; a tree-cleodendron phlomoides.

*[வை + சயாதி]*

வைசனி *vaišaṉi,* பெ.(n.) 1. ஆமிரம்; mango tree. 2. புளியமரம்; tamarind tree.

*[வை + சனி]*

வைசாரிணம் *vai-šāriṇam,* பெ.(n.) மீன்; a fish.

வைசிகம்[1] *vaišigam,* பெ.(n.) 1. உயிருடன் கூடிய உடலை அறுத்து அறிவது; to learn by cutting the living organism. 2. உடலையும் உயிரையும் பிரித்து அறியும் வல்லமை; a supernatural power of separating body from the soul.

வைசிகம்[2] *vaišigam,* பெ.(n.) 1. தளிர்; tender leaf. 2. காரணம் (யாழ்.அக.); cause.

வைத்தகண்வாங்காமல் *vaitta-kaṇ-vāṅgāmal,* வி.எ.(adv.) (பார் என்ற வினையுடன்) ஒருவரின் அல்லது ஒன்றின் மீது பதித்த பார்வையைச் சிறிதும் விலக்காமல்; gazing fixedly at (sth.). *'வந்ததிலிருந்து அவளையே வைத்த கண் வாங்காமல் பார்த்துக் கொண்டிருக்கிறான்'.*

*[வைத்த + கண் + வாங்காமல்]*

வைத்தியநாததேசிகர் *vaittiyanāda-dēšigar,* பெ.(n.) 17-ம் நூற்றாண்டினரும் இலக்கண விளக்கம் முதலிய நூல்கள் இயற்றியவருமான ஆசிரியர்; *vaittiyanāta-tecikar,* the author of *ilakkaṇa-viḷakkam* and other works, 17th C.

*[வைத்தியநாத + தேசிகர்]*

வைசூரி *vaicūri,* பெ.(n.) பெரியம்மை நோய்; small-pox.

*[வை + சூலி → சூரி]*

வைசூலி = கூர்மையான சூலப்படையையுடைய பெண் தெய்வம்.

வைசூரிக்காய்ச்சல் *vaišūri-k-kāyccal,* பெ.(n.) அம்மையினாலுண்டாகுங் காய்ச்சல்; variolous fever.

*[வைசூரி + காய்ச்சல்]*

வைசூரிசுரம் *vaišūri-šuram,* பெ.(n.) அம்மைக் காய்ச்சல்; variolous fever.

*[வைசூரி + சுரம்]*

வைசூரித்தடிப்பு *vaišūri-t-taḍippu,* பெ.(n.) அம்மை நோய் தடிப்பு; red spots preseding the pustulation in small-pox.

*[வைசூரி + தடிப்பு]*

வைசூரிப்பால் *vaišūri-p-pāl,* பெ.(n.) அம்மைப்பால்; cow-pox vaccine - virus of cow-pox.

*[வைசூரி + பால்]*

**வைத்தங்கி** *vai-t-taṅgi,* பெ.(n.) கற்றாழை; aloe.

*[வை + தங்கி]*



**வைத்தநிதி** *vaitta-niti,* பெ.(n.) வைத்தமாநிதி பார்க்க; see *vaitta-mā-niti.* *"வைத்தநிதியே மணியே யென்று வருந்தி" (தேவா. 983, 5).*

*[வை + நிதி]*

**வைத்தமாநிதி** *vaitta-mā-niti,* பெ.(n.) சேமித்து வைக்கப்பட்ட பொருட்குவை; hoarded wealth. *"வைத்தமாநிதியா மது சூதனையே யலற்றி" (திவ். திருவாய். 6, 7, 11).*

*[வை + மா + நிதி]*

**வைத்தூற்றி** *vaittūṟṟi,* பெ.(n.) கூம்பு வடிவமுள்ள புனல்; funnel.

*[வைத்து + ஊற்றி]*

**வைத்து**[1] *vaittu,* இடை.(part.) ஓர் அசைச் சொல்; an expletive. *"இப்பாதகத்தைக் கண்டு வைத்தும்" (சீவக. 681, உரை).*

*[வை → வைத்து]*

**வைத்து**[2] *vaittu,* இடை.(part.) (ஒருவரை) கருவியாக அல்லது (ஒன்றை) காரணமாகப் பயன்படுத்து; using (the services of one), taking advantage of (sth.). *'இவனை வைத்து எல்லா வேலைகளையும் முடித்து விட்டேன்'.* 2. (இயல்பாக அறிந்திருக்க வேண்டியதையும் அறிந்திராத நிலையில்) முறையாகப் பயன்படுத்தி; using properly. *"காதை வைத்துக் கேள் உனக்கே தெளிவாகப் புரியும்'.* 3. (இட வேற்றுமை – இல் என்பதன் பின்) ஒருவரைக் குறிப்பிடும் இடத்தோடு தொடர்புபடுத்திக் கூறப் பயன்படுவது; associating the action with the place strongly. *'அவரை மதுரையில் வைத்துப் பார்த்தேன்'.*

*[வை → வைத்து]*

**வைத்துக்கொண்டு** *vaittu-k-koṇḍu,* இடை.(part.) ஓர் அசைச்சொல்; an expletive. *"பௌத்த மதங்களில் வைத்துக் கொண்டு வைபாஷிகள்" (ஈடு. அவ.).*

*[வைத்து + கொண்டு]*

**வைத்துக்கொள்(ளு)**[1]**–தல்** *vaittu-k-koḷ(ḷu)-,* செ.குன்றாவி.(v.t.) 1. உரிமையாகக் கொள்ளுதல்; to keep for one's self. 2. நிகழ்ச்சிக்காக உண்மைபோல் ஒப்புக் கொள்ளுதல்; to suppose, take for granted. *'நீ சொன்ன படியே வைத்துக் கொள்'.* 3. வைப்பாட்டியாக அல்லது கள்ளக் கணவனாக அமர்த்திக் கொள்ளுதல்; to keep as a mistress or concubine.

*[வைத்து + கொள்(ளு)–,]*

**வைத்துக்கொள்**[2]**–தல்** *vaittu-k-koḷ-,* செ.குன்றாவி.(v.t.) (தருக்கம் முதலிய வற்றுக்காக ஒன்றை) ஏற்றல்; suppose (for the sake of argument) assume. *'அவர் சொன்னது உனக்குப் புரியவில்லை என்றே வைத்துக் கொள்வோம்'.*

*[வைத்து + கொள்–,]*

**வைத்துக்கொள்³–தல்** *vaittu-k-koḷ-,* செ.கு.வி.(v.i.) 1. கவனித்துக் கொள்ளுதல், புரத்தல்; treat, take care of, look after. *'அவர் என்னை நன்றாகத்தான் வைத்துக் கொண்டார்'.*

*[வைத்து + கொள்–,]*

**வைத்துப்பாடு–தல்** *vaittu-p-pāḍu-,* செ. குன்றாவி.(v.t.) மணப்பெண் முதலானவர்களை ஒப்பனை செய்து மணையில் வைத்து நலம்பாடுதல்; to decorate and seat on a platform, as a bride, pregnant woman, etc., and sing auspicious songs.

*[வைத்து + பாடு–,]*

**வைத்தூறு** *vaittūṟu,* பெ.(n.) வைக்கோற் குவை; straw-stack. *"எரிமுன்னர் வைத்தூறு போலக் கெடும்" (குறள், 435).*

*[வை + தூறு]*

**வைதகிகம்** *vaidakigam,* பெ.(n.) திப்பிலி; long pepper-piper longum.

**வைதர்ப்பம்** *vai-darppam,* பெ.(n.) பல்நோய்; disease of the root of tooth.

*[வை + தர்ப்பம்]*

**வைதளாலம்** *vai-taḷālam,* பெ.(n.) காரல் கத்திரி; apbint.

*[வை + தளாலம்]*

**வைந்நுதி** *vai-n-nudi,* பெ.(n.) கூரிய நுனி; sharp point. *"வேற்றலையன்ன வைந்நுதி" (பெரும்பாண். 87).*

*[வை + நுதி]*

**வைந்நுனை** *vai-n-nuṉai,* பெ.(n.) வைந்நுதி பார்க்க; see *vai-n-nudi.* *"வைந்நுனைப் பகழி" (முல்லைப். 73).*

*[வை + நுனை]*

**வைநாகணத்தி** *vai-nāgaṇatti,* பெ.(n.) காக்கட்டான்; a twiner plant-cliforia ternatea (typica).



**வைநாகதம்** *vai-nāgadam,* பெ.(n.) கறியுப்பு; common salt.

*[வை + நாகதம்]*

**வைநாகப்பூ** *vai-nāgappū,* பெ.(n.) சிறுநாகப்பூ பார்க்க; see *śiṟu-nāgappū.*

*[வை + நாகப்பூ]*

**வைநாகமல்லி** *vai-nāga-malli,* பெ.(n.) நாகமல்லிகை பார்க்க; see *nāga-malligai.*

*[வைநாகம் + மல்லி]*

**வைநாகமாலி** *vaināga-māli,* பெ.(n.) காஞ்சிரை; nux-vomica.

*[வை + நாகமாலி]*

**வைநாகமுட்டி** *vaināga-muṭṭi,* பெ.(n.) விசமட்டி; nux-vomica.

*[வை + நாகமுட்டி]*

**வைப்பகம்** *vai-p-pagam,* பெ.(n.) 1. வங்கி (பணம் கொடுக்கல் வாங்கல் நிதி மனை); bank. 2. ஆற்றங்கரை, ஏரிக்கரை; land along each side of a river (or) lake.

*[வைப்பு + அகம்]*

**வைப்பரிதாரம்** *vai-p-paridāram,* பெ.(n.) வைப்பு நஞ்சு முப்பத்திரண்டனுளொன்று; a prepared arsenic, one of 32 *vaipp-p-pāsānam.*

*[வைப்பு + அரிதாரம்]*

**வைப்பிலக்கணம்** *vai-p-pilakkaṉam,* பெ.(n.) ஓமசிங்கி, கெந்தி, பச்சைக் கற்பூரம், செய்நஞ்சு வகைகள் முதலான சரக்குகளில் வைப்பு முறையைக் கூறும் மச்சமுனி கலை ஞானம் எண்ணூற்றின் ஐந்து கண்டங் களிலோர் காண்டம்; processes of prepared various drugs. They are given in one of five parts of Machamuni kalaignanam.

**வைப்பன்** *vaippaṉ,* பெ.(n.) எய்ப்பினில் வைப்பு போன்றவன்; one who is a treasure. *“தொழும் பாள ரெப்ப்பினில் வைப்பனே” (திருவாச. 5, 392).*

*[வைப்பு + அன்]*

**வைப்பாட்டி** *vaippāṭṭi,* பெ.(n.) கூத்தியாள்; concubine.

*[வைப்பு + ஆள்]*

**வைப்பிடம்** *vaippiḍam,* பெ.(n.) பண்டம் முதலியன வைக்குமிடம்; place of deposit. *“நின் சேவடிகளிரண்டும் வைப்பிடமின்றியே கலங்கினேன்” (திருவாசக. 30, 3).*

*[வைப்பு + இடம்]*

**வைப்பிருக்கை** *vaippirukkai,* பெ.(n.) பண்டசாலை (நாமதீப. 490); store-house.

*[வைப்பு + இருக்கை]*

**வைப்பு¹** *vaippu,* பெ.(n.) 1. வைக்கை; placing. *“பிற பொருள் வைப்போடு” (சிலப். 10, கட்டுரை, 17).* 2. வைப்பு; deposit, hoard, treasure. *“நல்லடியார் மனத் தெய்ப்பினில் வைப்பை” (தேவா. 818, 2).* 3. புதையல்; buried treasure, treasure-trove. *“செண்டெறிந்து வைப்பெடுத்த செயலும்” (திருவிளை. மேருவை. 1).* 4. இடம் (பிங்.); place. 5. நிலப்பகுதி; land. *“கண்ணகன் வைப்பிற்றாயினும்” (புறநா. 18).* 6. ஊர்; town. *“வேறு பல் வைப்பும்” (திருமுரு. 224).* 7. உலகம்; world. *“வேத முற்றியங்கு வைப்பின்” (கம்பரா. பிணிவீட். 113).* 8. செயற்கையானது; that which is artificial. 9. செயற்கைச் சரக்கு; artificial preparation. *“வைப்புப் பாசாணம்”.* 10. கொலை செய்யும் நினைப்பு; witchcraft causing evil, sorcery, black art. 11. பாழ்ப் பொருள்; articles of witch craft. 12. கூத்தியாள் வைத்துக் கொள்கை; concubinage. 13. வைப்பாட்டி பார்க்க; see *vaippāṭṭi.* 14. கலிப்பா வகையின் இறுதி யுறுப்பு (தொல். பொ. 448); (Pros.) short, final lines of certain kinds of kali verse.

*[வை → வைப்பு]*

**வைப்பு²** *vaippu,* பெ.(n.) மருந்துகளை மருத்துவ முறைப்படி செய்தல்; preparation of medicines according to the rules prescribed in the medical science.

*[வை → வைப்பு]*

**வைப்புக்கட்டு** *vaippu-k-kaṭṭu,* பெ.(n.) பொய்யான கட்டுமானம் (வின்.); fabrication, concoction.

*[வைப்பு + கட்டு]*

**வைப்புச்சரக்கு** *vaippu-c-carakku,* பெ.(n.) 1. மருத்துவ முறைப்படி செய்யப்பட்ட மருந்துச் சரக்கு; prepared drugs as opposed to (இயற்கைச் சரக்கு) Natural drugs. 2. செய் நஞ்சு வைப்பு, சிவப்பு சவ்வீர வைப்பு, வீரவைப்பு, மலையுப்பு, சூடன் (இரச கற்பூரம்), பச்சைக் கற்பூரம், மான் மதம், கம்புகம் (அபினி), பளிங்கு கற்பூர வைப்பு, பெருங்காய வைப்பு, வைர வைப்பு, செம்பு வைப்பு, நாற்பச்சை வைப்பு; (in mantric science) to put certain articles in the house or compound of the enemy to do him farm; (in medicine) artificial substistutes or prepared substitutes for natural substances.

*[வைப்பு + சரக்கு]*

**வைப்புச்செப்பு** *vaippu-c-ceppu,* பெ.(n.) 1. அணிகலன்கள் முதலிய உடைமைகள்; jewels and utensils, belongings. 2. பண்டங்கள் வைக்கும் பெட்டி முதலியன; receptacle for articles.

*[வைப்பு + செப்பு]*

**வைப்புத்தொகை** *vaippu-t-togai,* பெ.(n.) இருப்புச் செல்வம்; செலுத்தப்பட்ட முன் பணம்; deposit (in a bank or paid to an agency, etc.). *'வைப்புத் தொகையிலிருந்து வைப்பகங்கள் கணிசமான ஊதியம் பெறுகின்றன'.*

*[வைப்பு + தொகை]*

**வைப்புப்பவளம்** *vaippu-p-pavaḷam,* பெ.(n.) செயற்கைப் பவளம் (சினேந். 76); artificial coral.

*[வைப்பு + பவளம்]*

**வைப்புப்பாசாணம்** *vaippu-p-pāšāṇam,* பெ.(n.) முப்பத்திரண்டு வகைப்பட்ட செயற்கை நஞ்சு வகை; prepared arsenic, of which there are 32 kinds.

*[வைப்பு + பாசாணம்]*

**வைப்புப்பு** *vaippuppu,* பெ.(n.) செயற்கை யுப்பு; artificial salt.

*[வைப்பு + உப்பு]*

**வைப்புப்புழுகு** *vaippu-p-puḷugu,* பெ.(n.) புழுகுப் பூனையினின்று வெளிவரும் புழுகு (வின்.); civet discharged by the civet cat.

*[வைப்பு + புழுகு]*

**வைப்புப்பொருள்** *vaippu-p-poruḷ,* பெ.(n.) நற்செல்வம் (சேமநிதி); reserve fund.

*[வைப்பு + பொருள்]*

**வைப்புநிதி** *vaippu-nidi,* பெ.(n.) (வைப்பகம், நிறுவனம் போன்றவை) வைத்திருக்கும் அல்லது (குறிப்பிட்ட காரணத்திற்காக) ஒதுக்கியிருக்கும் தொகை; reserves (of money in a bank); allotted fund. *'ஆண்டு இறுதியில் இந்த வங்கியின் மொத்த வைப்புநிதி முந்நூறு கோடி ரூபாய்'.*

*[வைப்பு + நிதி]*

**Skt.** Nidi > த. நிதி.

**வைப்புமுத்து** *vaippu-muttu,* பெ.(n.) செயற்கைமுத்து (சினேந். 103, உரை); artificial pearl.

*[வைப்பு + முத்து]*

**வைப்புமுறை** *vaippu-muṟai,* பெ.(n.) மருந்துகளைச் செய்ய, தூய்மை (சுத்தி) ஈடு, கூட்டு முதலாகிய நெறிமுறைகள்; rules of preparing in several courses.

*[வைப்பு + முறை]*

**வைப்புவை-த்தல்** *vaippu-vai-,* செ.குன்றாவி. (v.t.) 1. வைப்பாட்டியாக ஒருத்தியைக் கொள்ளுதல்; to keep as a concubine. 2. இன்மை இல்பொருள் (சூனியம்) வைத்தல்; to cause evil by witch craft.

*[வைப்பு + வை-,]*

**வைப்புழி** *vaippuḻi,* பெ.(n.) பொருள் முதலியன சேமித்து வைக்கும் இடம்; store house. *"பொருள் வைப்புழி" (குறள், 226).*

*[வைப்பு + உழி]*

**வைம்புரசு** *vai-m-purašu,* பெ.(n.) 1. கரும் புரசு; the sation wood-chloroxylon swietenia. 2. வைமறை பார்க்க; see *vaimarai.*

*[வை + புரசு]*

**வைமரை** *vaimarai,* பெ.(n.) உடம்பு வலியைப் போக்கும் ஒரு மரம்; a tree useful in removing bodily pain - chloroxylon swietenia.

**வையகம்** *vaiy-a-gam,* பெ.(n.) 1. நிலப்பகுதி; earth, world. *"வையகம் வணங்க வாளோச்சினன்" (பு.வெ. 3, 7).* 2. வையம் 2,3,4,5,7 பார்க்க (யாழ்.அக.); see *vaiyam.*

*[வன் → வய் → வை + அகம்]*

**வையகமூலி** *vaiyaka-mūli,* பெ.(n.) கொடி வகை (மூ.அ.); a kind of creeper.

*[வையகம் + மூலி]*

**வையங்காரை** *vaiyaṅ-kārai,* பெ.(n.) காரை பார்க்க; see *kārai.*

*[வையம் + காரை]*

**வையஞ்சேர்-தல்** *vaiyañ-cēr-,* செ.கு.வி. (v.i.) 1. நிலத்தில் விழுதல்; to fall to the ground. 2. இறத்தல்; to-die. *"வையஞ் சேர்வான் அழைத்தது (கம்பரா. உருக்காட்டுப். 74).*

*[வையம் + சேர்-,]*

**வையம்** *vaiyam,* பெ.(n.) 1. நிலப்பகுதி; earth. *"வையங்காவலர் வழிமொழிந்தொழுக" (புறநா. 8).* 2. குதிரை பூண்டிழுக்கும் தேர் (சிலப். 6, 120) (பிங்.); chariot drawn by horses. 3. கூடாரவண்டி; covered cart. *"மானமர் நோக்கியும் வைய மேறி" (சிலப். 6, 120).* 4. பல்லக்கு (சீவிகை) (சூடா.); palanquin. 5. ஊர்தி; conveyance. 6. எருது; bullock. 7. உருள் (உரோகிணி) (பிங்.); the 4th naksatra. 8. விளக்கு; lamp. 9. யாழ் (அக.நி.); *yāḻ.*

*[வள் → வய் → வை → வையம்]*

**வையமகள்** *vaiya-magaḷ,* பெ.(n.) நிலமகள்; the goddess of earth. *"வையமகளை யடிப்படுத்தாய்" (பு.வெ. 9, 3).*

*[வையம் + மகள்]*

**வையவித்து** *vaiya-vittu,* பெ.(n.) கடுக்காய்; gall-nut-myrobalam.

*[வையம் + வித்து]*

**வையாபுரி** *vaiyā-puri,* பெ.(n.) பழனி; *Paḻaṉi,* in the madura district. *'வையாபுரிக்குளம்'.*

*[வை + ஆவி + புரி]*

கடையெழு வள்ளல்களில் ஒருவனாகிய பேகன் அரசாண்ட ஊர் வைகாவூர் என்றும் வையாபுரி என்றும் வழங்கிற்று.

**வையாரிகம்** *vaiyārigam,* பெ.(n.) கிளியூரற் பட்டை; a fragrant drug.

**வையாவிக்கோப்பெரும்பேகன்** *vaiyāvi-k-kōp-perumbēgan,* பெ.(n.) கடையெழு வள்ளல்களில் ஒருவர் (புறநா. 141); a chief famed for his liberality.

*[வையாகி + கோப்பெரும்பேகன்]*

**வையாளி** *vaiyāḷi,* பெ.(n.) 1. குதிரை செல்லும் நீண்ட சாலை; pathway for horses. *"வையாளியலங்கரித்து" (திருவாலவா. 27, 69).* 2. குதிரையேற்றம்; riding on horse-back.

**வையாளிவிடு-தல்** *vaiyāḷi-viḍu-,* செ. குன்றாவி.(v.t.) குதிரை பாய்ந்தோடும்படி ஓட்டுதல் (வின்.); to gallop a horse.

*[வையாளி + விடு-,]*

**வையாளிவீதி** *vaiyāḷi-vīdi,* பெ.(n.) வையாளி 1 பார்க்க (திவா.); see *vāiyāḷi 1.*

*[வையாளி + வீதி]*

**வையிஞ்சி** *vaiyiñji,* பெ.(n.) நிலப்பனை; ground palm-curculigo orchioides.

**வையை** *vaiyai,* பெ.(n.) மதுரை மாவட்டத்தில் ஓடும் ஆறு; the vaigai river in the Madura district. *"வையை சூழ்ந்தவளங்கெழு வைப்பின்" (புறநா. 71, 10).*

*[வைகை → வையை] (தே.நே.பக்.159)*

வைகை = தங்கிச் செல்லும் ஆறு. தங்கிச் செல்லுதலாவது மெல்லச் செல்லுதல்.

**வையைத்துறைவன்** *vaiyai-t-tuṟaivan,* பெ.(n.) பாண்டியன் (திவா.); the *Pāṇḍya* king, as ruling the vaigai region. *"வையைத் துறைவன் மதுராபுரித் தென்னன்" (பெருந்தொ. 1410).*

*[வையை + துறைவன்]*

**வைரி** *vairi,* பெ.(n.) பகைவன்; enemy.

*[வயிர் → வயிரி → வைரி] (மு.தா. 246).*

**வைவச்சுதம்** *vaivaccudam,* பெ.(n.) மஞ்சள்; turmeric-curcumalonga.

**வைவு** *vaivu,* பெ.(n.) 1. வசவு; abuse. 2. சாவிப்பு (சாபம்); curse. *"வைத வைவின்" (கம்பரா. சிறப். 5).*

*[வை → வைவு]*

# வொ

**வொ** *vo,* பெ.(n.) தமிழ் நெடுங்கணக்கில் 'வ்' என்ற மெய்யெழுத்தும் 'ஒ' என்ற உயிரெழுத்தும் சேர்ந்து உருவான உயிர் மெய் எழுத்து; the compound of 'வ்' and 'ஒ'.

*[வ் + ஒ]*

# வோ

**வோ** *vō,* பெ.(n.) தமிழ் நெடுங்கணக்கில் 'வ்' என்ற மெய்யெழுத்தும் 'ஓ' என்ற உயிரெழுத்தும் சேர்ந்து உருவான உயிர் மெய் எழுத்து; the compound of 'வ்' and 'ஓ'.

*[வ் + ஓ]*

# வெள

**வெள**[1] *vau,* பெ.(n.) தமிழ் நெடுங்கணக்கில் 'வ்' என்ற மெய்யெழுத்தும் 'ஔ' என்ற உயிரெழுத்தும் சேர்ந்து உருவான உயிர் மெய் எழுத்து; the compound of 'வ்' and 'ஔ'.

*[வ் + ஔ]*

**வெள**[2]**(வு)–தல்** *vau,* செ.குன்றாவி.(v.t.) வெளவு பார்க்க; see *vauvu.*

**வெளவால்** *vouvāl,* பெ.(n.) வவ்வால் பார்க்க; see *vavvāl.*

**வெளவால்வலை** *vauvāl-valai,* பெ.(n.) மீன் பிடிக்கும் வலை வகை; a kind of fishing net.

*[வவ்வால் + வலை]*

**வெளவாலோட்டி** *vauvāl-ōṭṭi,* பெ.(n.) வவ்வாலோட்டி பார்க்க; seee *vauvalōṭṭi.*

*[வெளவால் + ஓட்டி]*

**வெளவானத்தி** *vouvāṉatti,* பெ.(n.) மண்டபத்தின் ஒருவகை மேல் முகடு (பெருங். மகத. 4, 16, குறிப்புரை); a kind of vaulted roof.

*[வெளவால் + நத்து + இ]*

**வெளவு–தல்** *vouvu-,* செ.குன்றாவி.(v.t.) 1. கைப்பற்றுதல்; to seize, snatch. 2. ஆறலைத்தல்; to commit highway robbery. *"வெளவுநர் மடிய" (அகநா. 1).* 3. திருடுதல் (யாழ்.அக.); to steal. 4. கவர்தல்; to rivet attention, fascinate. *"கண்வெளவு காட்சிய" (சீவக. 1774).* 5. பாவம் பேய் முதலியன பற்றிக் கொள்ளுதல்; to attack as sin; to possess, as an evil spirit. *"பொய்யா நின் வாயில்சூள் வெளவல்" (பரிபா. 8, 84).* 6. மேற் கொள்ளுதல்; to undertake. *"அவ் விரதத்தை வெளவுவோர்" (விநாயகபு. 38, 9).* 7. வவ்வு[3] பார்க்க; see *vavvu*[3].

*[வ் + ஔ + உ]*

**வெளவுலம்** *vouvulam,* பெ.(n.) மரவகை (சுக்கிரநீதி, 228); a kind of tree.

# ழ்

**ழ்** *ḻ,* தமிழ் நெடுங்கணக்கில் பதினைந்தாம் மெய்யான இடையெழுத்து; the 15th consonant, a liquid medial.

# ழ

**ழ** *ḻa,* தமிழ் நெடுங்கணக்கில் 'ழ்' என்னும் இடையின மெய்யெழுத்தும் 'அ' என்னும் உயிரெழுத்தும் சேர்ந்து உருவான உயிர் மெய்யெழுத்து; the compound of ழ் and அ.

*[ழ் + அ]*

# ழா

**ழா** *ḻā,* தமிழ் நெடுங்கணக்கில் 'ழ்' என்னும் இடையின மெய்யெழுத்தும் 'ஆ' என்னும் உயிரெழுத்தும் சேர்ந்து உருவான உயிர் மெய்யெழுத்து; the compound of ழ் and ஆ.

*[ழ் + ஆ]*

# ழி

ழி /ḻi, தமிழ் நெடுங்கணக்கில் 'ழ்' என்னும் இடையின மெய்யெழுத்தும் 'இ' என்னும் உயிரெழுத்தும் சேர்ந்து உருவான உயிர் மெய்யெழுத்து; the compound of ழ் and இ.

[ழ் + இ]

# ழீ

ழீ /ḻī, தமிழ் நெடுங்கணக்கில் 'ழ்' என்னும் இடையின மெய்யெழுத்தும் 'ஈ' என்னும் உயிரெழுத்தும் சேர்ந்து உருவான உயிர் மெய்யெழுத்து; the compound of ழ் and ஈ.

[ழ் + ஈ]

# ழு

ழு /ḻu, தமிழ் நெடுங்கணக்கில் 'ழ்' என்னும் இடையின மெய்யெழுத்தும் 'உ' என்னும் உயிரெழுத்தும் சேர்ந்து உருவான உயிர் மெய்யெழுத்து; the compound of ழ் and உ.

[ழ் + உ]

# ழூ

ழூ /ḻū, தமிழ் நெடுங்கணக்கில் 'ழ்' என்னும் இடையின மெய்யெழுத்தும் 'ஊ' என்னும் உயிரெழுத்தும் சேர்ந்து உருவான உயிர் மெய்யெழுத்து; the compound of ழ் and ஊ.

[ழ் + ஊ]

# ழெ

ழெ /ḻe, தமிழ் நெடுங்கணக்கில் 'ழ்' என்னும் இடையின மெய்யெழுத்தும் 'எ' என்னும் உயிரெழுத்தும் சேர்ந்து உருவான உயிர் மெய்யெழுத்து; the compound of ழ் and எ.

[ழ் + எ]

# ழே

ழே /ḻē, தமிழ் நெடுங்கணக்கில் 'ழ்' என்னும் இடையின மெய்யெழுத்தும் 'ஏ' என்னும் உயிரெழுத்தும் சேர்ந்து உருவான உயிர் மெய்யெழுத்து; the compound of ழ் and ஏ.

[ழ் + ஏ]

# ழை

ழை /ḻai, தமிழ் நெடுங்கணக்கில் 'ழ்' என்னும் இடையின மெய்யெழுத்தும் 'ஐ' என்னும் உயிரெழுத்தும் சேர்ந்து உருவான உயிர் மெய்யெழுத்து; the compound of ழ் and ஐ.

[ழ் + ஐ]

# ழொ

ழொ /ḻo, தமிழ் நெடுங்கணக்கில் 'ழ்' என்னும் இடையின மெய்யெழுத்தும் 'ஒ' என்னும் உயிரெழுத்தும் சேர்ந்து உருவான உயிர் மெய்யெழுத்து; the compound of ழ் and ஒ.

[ழ் + ஒ]

# ழோ

ழோ *lō*, தமிழ் நெடுங்கணக்கில் 'ழ்' என்னும் இடையின மெய்யெழுத்தும் 'ஓ' என்னும் உயிரெழுத்தும் சேர்ந்து உருவான உயிர் மெய்யெழுத்து; the compound of ழ் and ஓ.

*[ழ் + ஓ]*

# ழௌ

ழௌ *lau*, தமிழ் நெடுங்கணக்கில் 'ழ்' என்னும் இடையின மெய்யெழுத்தும் 'ஔ' என்னும் உயிரெழுத்தும் சேர்ந்து உருவான உயிர் மெய்யெழுத்து; the compound of ழ் and ஔ.

*[ழ் + ஔ]*

# ள்

ள் *l*. தமிழ் நெடுங்கணக்கில் பதினாறாம் மெய்யான இடையெழுத்து; the 16th consonant, a liquid medial.

# ள

ள *la*, தமிழ் நெடுங்கணக்கில் 'ள்' என்னும் இடையின மெய்யெழுத்தும், 'அ' என்னும் உயிரெழுத்தும் சேர்ந்து உருவான உயிர்மெய் யெழுத்து; the compound of ள் and அ.

*[ள் + அ]*

# ளா

ளா *lā*, தமிழ் நெடுங்கணக்கில் 'ள்' என்னும் இடையின மெய்யெழுத்தும். 'ஆ' என்னும் உயிரெழுத்தும் சேர்ந்து உருவான உயிர்மெய் யெழுத்து; the compound of ள் and ஆ.

*[ள் + ஆ]*

# ளி

ளி *li*, தமிழ் நெடுங்கணக்கில் 'ள்' என்னும் இடையின மெய்யெழுத்தும், 'இ' என்னும் உயிரெழுத்தும் சேர்ந்து உருவான உயிர்மெய் யெழுத்து; the compound of ள் and இ.

*[ள் + இ]*

# ளீ

ளீ *lī*, தமிழ் நெடுங்கணக்கில் 'ள்' என்னும் இடையின மெய்யெழுத்தும், 'ஈ' என்னும் உயிரெழுத்தும் சேர்ந்து உருவான உயிர்மெய் யெழுத்து; the compound of ள் and ஈ.

*[ள் + ஈ]*

# ளு

ளு *lu*, தமிழ் நெடுங்கணக்கில் 'ள்' என்னும் இடையின மெய்யெழுத்தும், 'உ' என்னும் உயிரெழுத்தும் சேர்ந்து உருவான உயிர்மெய்யெழுத்து; the compound of ள் and உ.

*[ள் + உ]*

# ளூ

ளூ /a, தமிழ் நெடுங்கணக்கில் 'ள்' என்னும் இடையின மெய்யெழுத்தும், 'ஊ' என்னும் உயிரெழுத்தும் சேர்ந்து உருவான உயிர்மெய் யெழுத்து; the compound of ள் and ஊ.

*[ள் + ஊ]*

# ளெ

ளெ /e, தமிழ் நெடுங்கணக்கில் 'ள்' என்னும் இடையின மெய்யெழுத்தும், 'எ' என்னும் உயிரெழுத்தும் சேர்ந்து உருவான உயிர்மெய் யெழுத்து; the compound of ள் and எ.

*[ள் + எ]*

# ளே

ளே /ē, தமிழ் நெடுங்கணக்கில் 'ள்' என்னும் இடையின மெய்யெழுத்தும், 'ஏ' என்னும் உயிரெழுத்தும் சேர்ந்து உருவான உயிர்மெய் யெழுத்து; the compound of ள் and ஏ.

*[ள் + ஏ]*

# ளை

ளை /ai, தமிழ் நெடுங்கணக்கில் 'ள்' என்னும் இடையின மெய்யெழுத்தும், 'ஐ' என்னும் உயிரெழுத்தும் சேர்ந்து உருவான உயிர்மெய் யெழுத்து; the compound of ள் and ஐ.

*[ள் + ஐ]*

# ளொ

ளொ /o, தமிழ் நெடுங்கணக்கில் 'ள்' என்னும் இடையின மெய்யெழுத்தும், 'ஒ' என்னும் உயிரெழுத்தும் சேர்ந்து உருவான உயிர்மெய் யெழுத்து; the compound of ள் and ஒ.

*[ள் + ஒ]*

# ளோ

ளோ /ō, தமிழ் நெடுங்கணக்கில் 'ள்' என்னும் இடையின மெய்யெழுத்தும், 'ஓ' என்னும் உயிரெழுத்தும் சேர்ந்து உருவான உயிர்மெய் யெழுத்து; the compound of ள் and ஓ.

*[ள் + ஓ]*

# ளௌ

ளௌ /au, தமிழ் நெடுங்கணக்கில் 'ள்' என்னும் இடையின மெய்யெழுத்தும், 'ஔ' என்னும் உயிரெழுத்தும் சேர்ந்து உருவான உயிர்மெய் யெழுத்து; the compound of ள் and ஔ.

*[ள் + ஔ]*

# ற்

ற் /ṟ, தமிழ் நெடுங்கணக்கில் பதினேழாம் மெய்யான வல்லெழுத்து; thee 17th consonant, a hard medial.

# ற

ற *ṟa*, தமிழ் நெடுங்கணக்கில் 'ற்' என்னும் இடையின மெய்யெழுத்தும், 'அ' என்னும் உயிரெழுத்தும் சேர்ந்து உருவான உயிர்மெய் யெழுத்து; the compound of ற் and அ.

*[ற் + அ]*

# றா

றா *ṟā*, தமிழ் நெடுங்கணக்கில் 'ற்' என்னும் இடையின மெய்யெழுத்தும், 'ஆ' என்னும் உயிரெழுத்தும் சேர்ந்து உருவான உயிர்மெய் யெழுத்து; the compound of ற் and ஆ.

*[ற் + ஆ]*

# றி

றி *ṟi*, தமிழ் நெடுங்கணக்கில் 'ற்' என்னும் இடையின மெய்யெழுத்தும், 'இ' என்னும் உயிரெழுத்தும் சேர்ந்து உருவான உயிர்மெய் யெழுத்து; the compound of ற் and இ.

*[ற் + இ]*

# றீ

றீ *ṟī*, தமிழ் நெடுங்கணக்கில் 'ற்' என்னும் இடையின மெய்யெழுத்தும், 'ஈ' என்னும் உயிரெழுத்தும் சேர்ந்து உருவான உயிர்மெய்யெழுத்து; the compound of ற் and ஈ.

*[ற் + ஈ]*

# று

று *ṟu*, தமிழ் நெடுங்கணக்கில் 'ற்' என்னும் இடையின மெய்யெழுத்தும், 'உ' என்னும் உயிரெழுத்தும் சேர்ந்து உருவான உயிர்மெய் யெழுத்து; the compound of ற் and உ.

*[ற் + உ]*

# றூ

றூ *ṟū*, தமிழ் நெடுங்கணக்கில் 'ற்' என்னும் இடையின மெய்யெழுத்தும், 'ஊ' என்னும் உயிரெழுத்தும் சேர்ந்து உருவான உயிர்மெய் யெழுத்து; the compound of ற் and ஊ.

*[ற் + ஊ]*

# றெ

றெ *ṟe*, தமிழ் நெடுங்கணக்கில் 'ற்' என்னும் இடையின மெய்யெழுத்தும், 'எ' என்னும் உயிரெழுத்தும் சேர்ந்து உருவான உயிர்மெய் யெழுத்து; the compound of ற் and எ.

*[ற் + எ]*

# றே

றே *ṟē*, தமிழ் நெடுங்கணக்கில் 'ற்' என்னும் இடையின மெய்யெழுத்தும், 'ஏ' என்னும் உயிரெழுத்தும் சேர்ந்து உருவான உயிர்மெய்யெழுத்து; the compound of ற் and ஏ.

*[ற் + ஏ]*

# றை

றை ṟai, தமிழ் நெடுங்கணக்கில் 'ற்' என்னும் இடையின மெய்யெழுத்தும், 'ஐ' என்னும் உயிரெழுத்தும் சேர்ந்து உருவான உயிர்மெய் யெழுத்து; the compound of ற் and ஐ.

*[ற் + ஐ]*

# றொ

றொ ṟo, தமிழ் நெடுங்கணக்கில் 'ற்' என்னும் இடையின மெய்யெழுத்தும், 'ஒ' என்னும் உயிரெழுத்தும் சேர்ந்து உருவான உயிர்மெய் யெழுத்து; the compound of ற் and ஒ.

*[ற் + ஒ]*

# றோ

றோ ṟō, தமிழ் நெடுங்கணக்கில் 'ற்' என்னும் இடையின மெய்யெழுத்தும், 'ஓ' என்னும் உயிரெழுத்தும் சேர்ந்து உருவான உயிர்மெய் யெழுத்து; the compound of ற் and ஓ.

*[ற் + ஓ]*

# றௌ

றௌ ṟou, தமிழ் நெடுங்கணக்கில் 'ற்' என்னும் இடையின மெய்யெழுத்தும், 'ஔ' என்னும் உயிரெழுத்தும் சேர்ந்து உருவான உயிர்மெய் யெழுத்து; the compound of ற் and ஔ.

*[ற் + ஔ]*

# ன்

ன் ṉ, தமிழ் நெடுங்கணக்கில் பதினெட்டாம் மெய்யான மெல்லெழுத்து; the 18th consonant, a nasal.

# ன

ன ṉa, தமிழ் நெடுங்கணக்கில் 'ன்' என்னும் இடையின மெய்யெழுத்தும், 'அ' என்னும் உயிரெழுத்தும் சேர்ந்து உருவான உயிர்மெய் யெழுத்து; the compound of ன் and அ.

*[ன் + அ]*

# னா

னா ṉā, தமிழ் நெடுங்கணக்கில் 'ன்' என்னும் இடையின மெய்யெழுத்தும், 'ஆ' என்னும் உயிரெழுத்தும் சேர்ந்து உருவான உயிர்மெய் யெழுத்து; the compound of ன் and ஆ.

*[ன் + ஆ]*

# னி

னி ṉi, தமிழ் நெடுங்கணக்கில் 'ன்' என்னும் இடையின மெய்யெழுத்தும், 'இ' என்னும் உயிரெழுத்தும் சேர்ந்து உருவான உயிர்மெய் யெழுத்து; the compound of ன் and இ.

*[ன் + இ]*

# னீ

னீ *ṉī*, தமிழ் நெடுங்கணக்கில் 'ன்' என்னும் இடையின மெய்யெழுத்தும், 'ஈ' என்னும் உயிரெழுத்தும் சேர்ந்து உருவான உயிர்மெய் யெழுத்து; the compound of ன் and ஈ.

*[ன் + ஈ]*

# னு

னு *ṉu*, தமிழ் நெடுங்கணக்கில் 'ன்' என்னும் இடையின மெய்யெழுத்தும், 'உ' என்னும் உயிரெழுத்தும் சேர்ந்து உருவான உயிர்மெய் யெழுத்து; the compound of ன் and உ.

*[ன் + உ]*

# னூ

னூ *ṉū*, தமிழ் நெடுங்கணக்கில் 'ன்' என்னும் இடையின மெய்யெழுத்தும், 'ஊ' என்னும் உயிரெழுத்தும் சேர்ந்து உருவான உயிர்மெய் யெழுத்து; the compound of ன் and ஊ.

*[ன் + ஊ]*

# னெ

னெ *ṉe*, தமிழ் நெடுங்கணக்கில் 'ன்' என்னும் இடையின மெய்யெழுத்தும், 'எ' என்னும் உயிரெழுத்தும் சேர்ந்து உருவான உயிர்மெய்யெழுத்து; the compound of ன் and எ.

*[ன் + எ]*

# னே

னே *ṉē*, தமிழ் நெடுங்கணக்கில் 'ன்' என்னும் இடையின மெய்யெழுத்தும், 'ஏ' என்னும் உயிரெழுத்தும் சேர்ந்து உருவான உயிர்மெய் யெழுத்து; the compound of ன் and ஏ.

*[ன் + ஏ]*

# னொ

னொ *ṉo* தமிழ் நெடுங்கணக்கில் 'ன்' என்னும் இடையின மெய்யெழுத்தும், 'ஒ' என்னும் உயிரெழுத்தும் சேர்ந்து உருவான உயிர்மெய் யெழுத்து; the compound of ன் and ஒ.

*[ன் + ஒ]*

# னோ

னோ *ṉō*, தமிழ் நெடுங்கணக்கில் 'ன்' என்னும் இடையின மெய்யெழுத்தும், 'ஓ' என்னும் உயிரெழுத்தும் சேர்ந்து உருவான உயிர்மெய் யெழுத்து; the compound of ன் and ஓ.

*[ன் + ஓ]*

# னௌ

னௌ *ṉau*, தமிழ் நெடுங்கணக்கில் 'ன்' என்னும் இடையின மெய்யெழுத்தும், 'ஔ' என்னும் உயிரெழுத்தும் சேர்ந்து உருவான உயிர்மெய்யெழுத்து; the compound of ன் and ஔ.

*[ன் + ஔ]*

